# ஸ்ரீ ராம தூதன்

## கம்பன் கலை நா... ம்



சுவ... ரங்க பாரதியார்

உ

# ஸ்ரீ ராம தூதன்

## கம்பன் கலை நாடகம்

[கிஷ்கிந்தா காண்டம்—கார்காலப் படலம் முதல்
சுந்தரகாண்டம் முடிய]



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது






**அன்பு நிலயம்**
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

பதிப்புரிமை] 1942 [விலை ரூ. 1

அண்ணாமலை முதலியார் தமையனாராகிய அருணா சல முதலியார் கால்வழிகள் இன்றும் அங்கங்கே வளர்ந்து விளங்கி வருகின்றன.

அருணாசல முதலியாருக்கும், பச்சை முத்தம்மா ளுக்கும் ஆண்மக்கள் ஐவரும், பெண்மக்கள் இருவரும் பிறந்தனர். ஆண் மக்கள் ஐவர்: அருணகிரிநாத முதலியார் சோணகிரி முதலியார், திருவண்ணாமலை முதலியார், அண்ணாமலை முதலியார், வேதாசல முதலியார் என்பவர்கள். பெண்மக்கள் இருவர் உண்ணாமுலையம்மாள், கருணாலய அம்மாள் என்பவர்கள். இப்பெண் மக்களில் கருணாலய அம்மாள் புதல்வியார் சரவணம்மாள் என்பவரே என் தாயார் என்பதைக் குறிப்பிடுகின்றேன். உண்ணாமுலையம்மாளுக்கு மகப் பேறில்லை. ஆண்மக்கள் ஐவர்களில் கடைப்பிறந்தவ ராகிய வேதாசல முதலியார் தவிர மற்றைய நால்வர் களுக்கும் நிரம்ப மகப்பேறுகள் இருந்தன. அவர்களுள் முதல்வராகிய அருணகிரிநாத முதலியார் மகனாரே நம் சோணாசல பாரதியார்.

அருணகிரிநாத முதலியார், காஞ்சிபுரத்திற்கு அண் மையில் பாலாற்றின் தென் கரையை அடுத்துள்ள பல்லவபுரம் கிராமத்தில் மணியக்காரரர் வீடு எனப் பெயர் பெற்ற குடும்பத்தில் தோன்றிய சோலையப்ப முதலியார் மகளார் அமிர்தம்மாள் என்பவரை மணம் செய்து கொண்டார். அக்குடும்பத்திற்கு நிலபுலங்கள் மிகுதி யாய் இருந்தன. சோலையப்ப முதலியார் மகனார் பெரியண்ண முதலியார் என்பவர் அப்பொழுது சிறுவ ராய் இருந்தமையால், அந்நிலபுலங்களைச் செம்மையாகப் பாதுகாப்பதற்குத் தக்கவர்கள் இல்லை. அதனால், சோலையப்ப முதலியார் விருப்பத்தின்படி அவர் மருக ராகிய அருணகிரிநாத முதலியார் தங்கள் ஊராகிய புலிவாயை விடுத்துப் பல்லவபுரத்தை அடைந்து தம்

மாதுலர் வீட்டில் இருந்து கொண்டு, நிலபுலங்களைப்பாது காத்து வந்தார்.

அவ்வாறு இருக்கும் நாட்களில் அருணகிரிநாத முதலியாருக்குத் தணிகாசல முதலியார், சோணசல முதலியார், அருணசல முதலியார் என்னும் மூவர் ஆண் மக்கள் பிறந்து வளர்ந்தனர். அருணகிரிநாத முதலியாருக்குப் பெண் மகவு இல்லை. மூவர் ஆண் மக்களும் தம் தந்தையாருடன் ஒத்துழைத்துத் தம் தாய்ப் பாட்டனர் வீட்டு நிலத்தில் வேளாண்மை செய்து வந்தனர். அவர்களில் நடுப் பிறந்தவராகிய 'சோணசல முதலியார்' என்பவரே நம் பாரதியார்.

பல்லவபுரம் சோலையப்ப முதலியார், தம் மகள் அமிர்தம்மாளுக்குத் தம் நிலத்தில் ஒரு பகுதியைப் பெண்காணியாக்கி எழுதிக் கொடுத்தார். சோலையப்ப முதலியார் மகனர் பெரியண்ண முதலியாருக்குப் பிறந்த மகனர்க்கும் சோலையப்ப முதலியார் என்றே பெயரிட்டனர். ஆயினும் அவரைப் பெரும்பாலும் துரைசாமி முதலியார் என்றே அழைத்தனர். அவர் மகனர் கோப்பாமலை முதலியார் என்பவர். அவருக்கு விஸ்வநாத முதலியார், செந்தில்நாத முதலியார், தணிகைநாத முதலியார் என்னும் மூவர் புதல்வர்கள் இருக்கின்றனர். முதல்வர் தம் குடும்ப வழக்கப்படி பல்லவபுர மணியக்காரராய் இருக்கின்றார்.

எனவே, நம் பாரதியாரும், அவர்தம் உடன் பிறந்தவர்களும் தம் அம்மான் மகனராகிய துரைசாமி முதலியாருடன் இளமையிலிருந்தே அளவளாவிக் கூடி மகிழ்ந்து, கல்வியிலும் கருத்தைச் செலுத்தி வந்தனர் என்க.

இந்நிலையில் அருணகிரிநாத முதலியாருக்கு மனைவியார் (அமிர்தம்மாள்) காலமாகி விட்டார்.

அதனுல், அவருக்கு வேட்டகத்தில் இருந்த தொடர்பு குறையத் தலைப்பட்டது. அதனை உணர்ந்த அருணகிரி நாத முதலியார், தம் மக்கள் மூவரையும் அவர்கள் பாட்டனுர் பாட்டியாரிடம் ஒப்புவித்துவிட்டுத் தம் ஊராகிய புலிவாய்க்கு அருகில் உள்ள புத்தளி என்னும் கிராமத்தில் ஒருவர் மகளாரை இரண்டாம் தாரமாக மணந்து கொண்டு, அவ்வூரிலே இருந்தார். அவ்வம்மை யார் பெயரும் அமிர்தம்மாள் என்பதே. அந்த இரண் டாம் மனைவியாரும் 'அண்ணுமலை முதலியார்' என்ற ஒரு மக னுரைப் பெற்று வைத்துவிட்டுக் காலமாகி விட்டார். அதனுல் வாழ்க்கையில் வெறுப்புக் கொண்ட அருணகிரி நாத முதலியார் குழந்தையை மனைவியாரது உறவின ரிடம் விடுத்துத் துறவு பூண்டு திருவண்ணுமலையில் சென்று, அங்குள்ள 'ஸ்ரீ அருணசலேசுரர் தேவஸ்தானம்' என்னும் பெரிய கோயிலில் ஒரு பகுதியாய் உள்ள ஸ்ரீ கல்யாண சுந்தரேசுரர் ஆலயத்தில் தங்கி, அப்பெருமானுக்கும் ஸ்ரீ அருணுசலேசுரருக்கும் தொண்டு செய்து கொண்டி ருந்து, அவ்வருணுசலேசப் பெருமானது திருவடி நிழலை அடைந்தார்.

அருணகிரிநாத முதலியார் அருணகிரிநாத சுவாமி களாகித் திருவண்ணுமலையில் தங்கியிருந்தபொழுது, அங்கு அவருக்குப் பல மாணுக்கர்கள் உளராயினர். அவர்களில் சிலரது உதவியால், திருவண்ணுமலை வடக்கு மாடவீதிச் சின்ன கடைத் தெருவை அடுத்த செட்டித் தெருவில் ஒரு பெரிய இடத்தை வாங்கித் திருமடம் ஒன்று தம் இனத்தவர் அனைவர்க்கும் பொதுவாக அமைத்து, கார்த்திகைத் திருநாளில் அவர்கள் தங்கி அடியார் பூசை செய்ய ஏற்பாடு செய்தார். அக்கட்ட டத்திற்குப் பொருளுதவி செய்தவர்கள் அவர்தம் இனத்தவர்களே. அம்மடத்தின் வடபகுதி இப்பொழுது,

அருணகிரிநாத சுவாமிகளது முன்னே ஆச்சிரமத்துத் தம்பி பெயரார் மேற்பார்வையில் உள்ளது. ஆனுல், அது நல்ல நிலையில் இல்லாமல் சீரழிந்து கிடக்கின்றது. அப்பகுதியைச் செப்பம் செய்து பாதுகாப்பது, அதனை மேற்பார்வை செய்து வருபவருக்கும், அவர்தம் இனத்தவர்க்கும் தலையாய கடனுகும். அம்மடத்தின் தென் பகுதி மட்டும் அவர் இனத்தவருள் மேல்நாட்டார் என்பவர்களால் ஓரளவு நல்ல நிலையில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

அருணகிரிநாத சுவாமிகள் இறைவன் திருவடியடைந்தபின் அவரது பூதஉடலைத் தகித்து அஸ்திகளை மட்டும் எடுத்து அக்கினி தீர்த்தத்திற்கு அருகில் சமாதியமைத்து, ஒரு குடும்பத்தினர் வழிபாடு செய்து வருகிருர்கள். அச் சமாதியில் நல்ல கல்வெட்டு ஒன்று சில செய்திகளைத் தெரிவித்துக்கொண்டு நிற்கின்றது. இவ்வாறு 'அஸ்திகளையே சமாதியில் அமைக்க வேண்டும் என்று சுவாமிகளே கட்டளையிட்டிருந்தார்' என்றும், 'அவர் பூதஉடலை நீக்கிச் சென்றபொழுது, அண்ணுமலையின் உச்சியில், தீபம் ஏற்றும் இடத்தில் ஒரு பேரொளி தோன்றிற்று' என்றும் கூறுகின்றனர்.

அருணகிரிநாத சுவாமிகளும், அவர் உடன் பிறந்தவர்களும் மற்றும் அவரோடு நெருங்கிய உறவாய் உள்ள குடும்பத்தினரும் கல்வியுடையவர்களாயே இருந்தனர். சுவாமிகளது குடும்பம் தொன்றுதொட்டே திருவண்ணுமலைப் பெருமானுக்கு ஆட்பட்ட குடும்பம். அதனுல், அக் குடும்பத்து ஆடவர்கள் திருமணம் ஆகப் பெற்றபின்னர்த் திருக்கார்த்திகைத் தீபதரிசனத்திற்குத் தவருது செல்லும் கடப்பாட்டினை இன்றும் உடையவர்களாய் இருக்கின்றனர். அவ்வகையில், புலிவாய்க் கிராமத்திலிருந்து, திருவண்ணுமலைக்குக் கால்நடை

யாய்ச் சென்ற அருணகிரிநாத சுவாமிகள் இல்லறத்தி லிருந்த பொழுதே 'திருவண்ணுமலே வழிநடைப் பதம்' என்ற பெரிய கீர்த்தனம் ஒன்றைப் பாடியுள்ளார். மற்றும் திருவண்ணுமலேக்கு இயற்றமிழாகவும், இசைத் தமிழாகவும் அவர் பாடிய நூல்களும் தனிப் பாடல் களும் பல. அவை எழுதப்பட்ட சுவடியையும், அவற்றுள் அச்சாகிய சிலவற்றையும் நான் மிகச் சிறுவயதில் படித்துள்ளேன்; அவை எங்கே எப்படிப்போயின என்பது இப்பொழுது எனக்குத் தெரியவில்லே.

அருணகிரிநாத சுவாமிகள் இல்லறத்தில் இருக்குங் கால் திருவண்ணுமலேக்குப் போகும் பொழுதும் திரும்பி வரும்பொழுதும், இப்பொழுது திருவண்ணுமலேயில் வாழ்கின்றவரும், முத்தமிழ்ப் பெருஞ் சொற்கொண்டல்' என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கும் நாடறிந்த புலவரும் ஆகிய உயர்திரு. புரிசை. சு. முருகேச முதலி யார் தம் பாட்டனுரோடு தொடர்பு கொண்டார். அதனுல், அவர், அருணகிரிநாதரை, 'புரிசை' என்னும் தமது ஊருக்கே வரவழைத்துப் பள்ளிக்கூடம் ஒன்றை அமைத்து அதில் ஆசிரியராய் இருக்கச் செய்தார். அதனுல் அங்கு அருணகிரிநாதரை 'அருணகிரி உபாத்தி யாயர்' என்றே அனைவரும் அழைத்தனர். அந் நாட் களில் ஒருசமயம் மழையில்லாது அவ்வூரார் வருந்திய பொழுது அவ்வூரில் உள்ள 'அகத்தீசுரர், அகிலாண்டேசுவரி' என்னும் பெருமான்மீதும் பெருமாட்டிமீதும் ஒவ்வொரு பஞ்சரத்தின நூலே அருணகிரி உபாத்தியாயர் பாட, மழை பொழிந்து, ஊர் செழித்தது என்னும் வரலாறு கேட்கப் பட்டு வருகின்றது. அந்த இருபஞ்சரத்தின நூல்களின் அச்சிட்ட பிரதிகள் மட்டும் இப்பொழுது கிடைத் துள்ளன.

பல்லவபுரத்தில் வாழ்ந்த அருணகிரிநாத முதலியார் அதனை விடுத்துச் சென்றபின்னும் அவர்தம் மக்கள்

மூவரும் தம் அம்மான் மகனுரோடு ஒன்றுபட்டுச் சில காலம் வாழ்ந்தனர். பின்பு திருமணம் முதலியன செய்யப்பெற்று வேறு வேறு குடும்பத்தினராகி, தம் தாய்க்குக் கொடுக்கப்பட்ட நிலபுலங்களில் வேளாண்மை செய்து வாழ்ந்தனர்.

அருணகிரிநாதரது குடும்பம் தொன்றுதொட்டே அண்ணுமலைப் பெருமானுக்கு ஆட்பட்ட குடும்பமாதலின், அப் பெருமானது பெயரையும், உண்ணுமலையம்மை பெயரையும் மாற்றி மாற்றி அக்குடும்ப மக்களுக்கு இடுவர் அதற்கு மாருக இரண்டொருவருக்கு வேறு பெயர் இட்டனர். அதனுலோ, என்னவோ அவ்வாறு வேறு பெயர் இடப்பட்டவர்கள் நல்வாழ்வு வாழாமலே போயினர். அவர்களில் அருணகிரிநாத முதலியார் மூத்த புதல்வரும், சோணுசல பாரதியார் தமையனுரும் ஆகிய **தணிகாசல முதலியார்** என்பவரும் ஒருவர்.

சோணுசல பாரதியாரது குடும்பத்தினர் பலரும் இயற்கைக் கவிஞரேயாவர். ஆயினும், அவர்கள் இலக்கணக் கல்வியும், இலக்கியங்கள் பலவற்றில் பயிற்சியும் பெறுதலை விடுத்து, இயற்கையில் வாய்த்த வாய்ப்பு அளவிலே புலவராய் இருந்து மறைந்தனர். அதனுல், அவர்கள் அறிஞர் உலகத்தில் நின்று நிலவும் புகழுடையரானுர் இல்லை. சோணுசல பாரதியார் அவ்வாறின்றித் தமது பேருக்கத்தாலும் பெருமுயற்சியாலும், கற்றவர் பலரை அடைந்து அவர்களிடம் தக்க முறையில் பழகிச் சிறந்த இலக்கிய இலக்கணப் பயிற்சியைப் பெற்றுத் தம் இயற்கைப் புலமையைச் செம்மையுற வளர்த்துக் கொண்டார். அதனுல் அளவற்ற பல செய்யுள் நூல்களுக்கு ஆசிரியராயும், சைவ புராண இதிகாசங்களைச் சிறந்த முறையில் பிரசங்கிக்கும் சிறந்த பிரசங்கியாரா

யும் தமிழுலகம் நன்கு மதிக்கும் பெரும் புலவராய் விளங்கி, என்றும் அழியாது நின்று நிலவும் புகழுடைய ராயினர்.

இவரது குடும்பத்தினர் இயற்கைக் கவிஞராய் இருந்தனர் என்பதற்கு, இவர் தந்தையாரைப் பற்றி மேலே கூறிய வரலாறே போதிய சான்ருகும். எனினும் இவர் தமையனர் தணிகாசல முதலியாரது கவித்திறம் பற்றிச் சிறிது கூறுதலும் இன்றியமையாததாய் உள்ளது.

தணிகாசல முதலியாருக்கு வெண்பாப் பாடுதல் மிக எளிதாய் வரும் என்பர். எடுத்துக் காட்டாக, அவர் காஞ்சிபுரம் தேர்த் திருவிழாவிற்குச் சென்று சத்திரத்தில் அருந்திய உணவைப்பற்றி,

"ஈர்க்குப் பொருந்தா இலுப்பைச் சருகிலைசாண்
வேர்க்கீரைத் தண்டு விதம்மூன்று—சார்க்குழம்பு
காரம் புதுமிளகாய் காஞ்சித்தேர்ச் சத்ரஉப
சாரமதை என்சொல்வேன் தான்"

எனவும், மற்ருெரு சமையத்தில்,

"பொத்தலிலை குத்தலிலா புதுக்கா ரரிசிச்சோர்
சொத்தைக்கத் தாரிக்காய் சுண்டைக்காய்-வத்தல்
குழம்போ வெகுநேர்த்தி குடலைப் புரட்டுநெய்
முழம்போம் இலையைவிட்டு மோர்"

எனவும் பாடினர் என்ப. இவையாப்பு வகையிலும், எழுத்துச் சொல் வகையிலும் குறைபாடுடையவாய்க் காணப்படினும், உள்ளக் கருத்தை எவ்வளவு தெள்ளத் தெளிய எளிய நடையில் இயற்கையாய்ப் புலப்படுத்து கின்றன என்பது நோக்கத்தக்கது.

இன்னும் அவர் ஒருசமையம் கன்னிகள் கோயில் ஒன்றில் நடந்த சிறப்பில் தேங்காயைச் சிறுதுண்டுகளாக

நற்றுக்கி மக்களுக்கு ஒருவர் வழங்கிய போது, வழங்கியவர் மீது சென்று பலர் வீழ்ந்து வாங்கினர். அதனுல் ஒருவரே பலமுறை திரும்பத் திரும்ப வாங்குவதும், இருந்த இடத்திலே இருந்தவர்களுக்குத் தேங்காய் கிடைக்காததுமான ஒரு நிலே ஏற்பட்டது. அதனுல் சிலர் வருத்தத்தோடும் சென்றனர். அதைக் கண்ட தணிகாசல முதலியார்,

"வாங்கினுர் வாங்கினபேர் வாங்காமல் நின்றவர்கள்
ஏங்கினுர் தேங்காயை எண்ணிஎண்ணி-வீங்கினுர்
அழிந்த இலேகொண்டு ஆற்றுவமென் றெண்ணிக்
கழிந்துவிட்டார் வந்தசனங் காண்"

என்று ஒரு பாடலேப் பாடினுர் என்பர். மற்றும் இவை போல அவர் பாடிய பாடல்கள் பலவற்றைப் பலர் சொல்ல நான் கேட்டது உண்டு. இவரது குடும்பத்தினருள் மற்றும் சிலரைப் பற்றி இப்படிப்பட்ட வரலாறுகள் பல உள. எனவே சோணுசல பாரதியார் கல்வி கற்றுக் கவிபாடும் திறன்பெருது, இயற்கையிலே அமைந்த கவிபாடும் திறனேக் கல்வி கேள்விகளால் செம்மை செய்துகொண்டார் என்பது நன்குபுலனுகும்.

சோணுசல பாரதியார் சாலிவாகன சகம் 1779-க்குச் சரியான பிங்கள ஞு மாசி மாதம் (கி. பி, 1858 மார்ச்சு) உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தார். மேற்கூறியவாறு பல்லவபுரத்திலே அக்காலத் தொடக்கக் கல்வியைக் கற்றுச் சில இலக்கியங்களிலும், சிறிது இசையிலும் பயிற்சியுடையவராய் இருந்து, உழவுத் தொழிலிலே ஈடுபட்டிருந்தார். இந்நிலேயிலே பதினுருவது வயது முற்றுப் பெற்றுவிட்டது. பதினேழாவது வயதிலேதான் சோணுசல பாரதியார் பேரிலக்கிய இலக்கணங்களேக் கற்கும் அவாமிக்குடையராய், அடிக்கடி காஞ்சிபுரத்தை அடைந்து அறிஞர் பலரிடம்

பாடங்கள் பலவற்றைக் கேட்டார். அவருக்குப் பாடம் சொல்லியவர்களுள், காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் **பூசை. நமச்சிவாய முதலியார்** என்பவரும் ஒருவர். அவர் காஞ்சிப்புராணத்தைப் பாடமாகச் சொல்லியவராவார். மற்றும் இலக்கியங்களையும், இலக்கணங்களையும் பாரதியார் யார்யாரிடம் கற்ருர் என்பது இப்போது அறியக் கூடவில்லை. பல்லவபுரத்திற்கு மிக அண்மையில் உள்ள **'கணிகிலிப்பை'** என்னும் கிராமத்தில் ஓர் ஆசிரியரிடம் பாரதியார் பாடங்கேட்டார் என்கின்றனர். அவரிடம் கேட்ட பாடங்கள் யாவை என்பதும் அறியக்கூடவில்லை.

சோணசல பாரதியார் காஞ்சிபுரத்தில் திருக் குமரகோட்டப் பெருமானை அன்புடன் வழிபட்டு வந்தார் என்பதும், முருகக்கடவுள் அருளாலே தமக்கு நல்ல தமிழ்ப்புலமை வாய்த்தது என அவர் உறுதியாக எண்ணினர் என்பதும் பல சான்றுகளால் அறியப்படு கின்றன. அவர் நூல்கள் சிலவற்றில், **'குருவணக்கம்'** என்னும் தலைப்பின்கீழ் **'ஆறுமுகதேசிகனே'** என அவர்பாடிய தனிப் பாடல்கள் உள்ளன. இவற்ருல் கச்சிக் குமர கோட்டப் பெருமானையே அவர் கல்வி பற்றி வேண்டிப் புலமை பெற்ருர் எனக் கருதுதல் பொருந்துவதேயாகும். அவருக்கு ஆசிரியராக மக்களுள் 'ஆறுமுகனர்' எனப் பெயரிய ஒருவர் கேட்கப்படாமை இங்குக் கருதத் தக்கது.

இங்ஙனம் சோணசல பாரதியார் கல்விகற்று வரும் நிலையிலே பல்லவபுரத்தில் அவருக்குத் திருமணம் செய்விக்கப்பெற்றது. இவர் தமையனர் தணிகாசல முதலியாருக்கு வாழ்க்கை நன்கு அமையவில்லை என்பது முன்பே சொல்லப்பட்டது. அவருக்கு மனைவியார் வாய்ப்பு உடையவராய் இல்லாமை காரணமாக அவர் காஞ்சிபுரத்திலே தங்கித் தனிவாழ்க்கை நடத்திவந்தார்.

அதனால் சோணாசல பாரதியார் அடிக்கடி காஞ்சியில் சென்று தம் தமையனாருடன் தங்கும் வாய்ப்பினைப் பெற்றுக் காஞ்சியில் பலருக்கு நண்பராயினார். பல இடங்களில் இனிய இசையோடு கூடிய பிரசங்கங்களை யும் செய்துவந்தார்.

தம் தமையனாரைப்போலவே இவருக்கும் மனைவி யார் இவரது போக்கிற்கு ஏற்றவராய் அமையவில்லை. கற்று வல்ல சிலருக்கு மனைவியர் இவ்வாறு மாறாக அமைவதும் உலகில் இயல்பாய் உள்ளது. அதனால் பாரதியார் இல்வாழ்க்கையில் சிறிது வெறுப்புற்றுக் காஞ்சியில் தம் தமையனாருடனே இருந்தார். சில ஆண்டுகளுக்குள் தமையனார் தணிகாசல முதலியார் காலமானார். புலமையினாலும் பிறவற்றாலும் தம்மிடம் பேரன்பு கொண்டிருந்த தமையனாரது பிரிவு இவருக்குப் பெருந்துயரத்தை விளைத்தது. அதனால் மேலும் இவருக்கு இல்வாழ்க்கையில் வெறுப்பு மிகுவதாயிற்று. ஆகவே பல்லவபுரத்திற்குத் தம் இல்லம் நோக்கிச் செல்வதையே நிறுத்திக்கொண்டு, காஞ்சியிலே தங்கித் தம் கையால் தாமே உணவு சமைத்து உண்டு வாழ்ந் தார். இவரது துயரத்தையும், வாழ்க்கை வெறுப்பு இடர்ப்பாடு முதலிய பலவற்றையும் மறக்கச் செய்தது புலமை வாழ்க்கை ஒன்றே. இந்நிலையில் பாரதியார் தம் தந்தையாரைப் போலவே துறவு பூணநினைத்தார். ஆயினும் இவரது கல்வியறிவு இளமைத் துறவின் அருமையை எடுத்துக்காட்டித் தடுத்தது. எனவே சிறிது வயது சென்றபின்னரே அதனை மேற்கொள்ளுதல் நன்று என்ற முடிவிற்கு வந்தார். அம்முடிவின்படி யிருக்கும் நாளில், அக்காலத்தில் பெருங்குற்றமாகக் கருதப்படாத பரத்தைமையைச் சிறிதே உடையராய் இருந்தார். ஆயினும் அப்பொழுது தம் குலவொழுக்கம்,

சமய ஒழுக்கம் முதலியவற்றினின்றும் வழுவுதலும், அதனால் தம் பெருந்தகுதியை இழத்தலும் சிறிதும் உடையராயினரில்லை.

அப் பரத்தைமையால் தோன்றிய புதல்வர் ஒருவரும் இவருக்கு இருந்தார். அவருக்கு 'சோதி' என்று பெயரிட்டுக் கல்வி கற்பித்து, தாம் பிரசங்கிக்கும் பொழுது தமக்குச் சிறந்த வகையில் நல்ல இசையுடன் ஏடு வாசிப்பவராக்கினர். பின்பு அவருக்கு உரியவகையில் திருமணம் செய்வித்து அவரைத் தனிக் குடும்பத்தவராக்கினர். அதன் பின்பு அவரே தனிப் பிரசங்கியாராக விளங்கினமை காஞ்சி நகரமும், மற்றும் பல இடங்களும் நன்கறியும்.

'சோதி' என்னும் மகனரைப் பெற்று அவர்பால் அன்பு செலுத்தி வந்த பாரதியாருக்கு, முறைப்படி மணந்த மனைவியார்பால் அவர்போன்ற மகனரைப் பெறும் வாய்ப்பு இல்லையே என்ற ஒரு சிறுகுறை மனத்தில் அவ்வப்போது தோன்றுவதாயிற்று. அது நாளடைவில் முதிர, முதல் மனைவியாரை முன்பே துறந்தமையால், சென்னைக்கு அடுத்துள்ள சைதாப் பேட்டையில் வாழ்ந்த சண்முக முதலியார் என்பவரது மூத்த மகளார் இராஜாம்பாள் அம்மாளை இரண்டாம் மனைவியாராக மணந்து, காஞ்சிபுரத்தில் இல்லறத்தை மேற்கொண்டார். எனினும் மனைவியார்பால் பெறும் மகப்பேறு இல்லாக்குறை இறுதிவரையிலும் அவருக்கு நீங்காததாயே இருந்துவிட்டது. இக்குறை அவர் மனத்தைச் சிறிது வருத்தியே இருந்ததென்பது, அவர் திருவருணைக்கு இயற்றியுள்ள நூல்களில் இரண்டோரிடங்களில் அறியக்கிடக்கின்றது.

மகப்பேறில்லையாயினும், இரண்டாம் மனைவியார் தமக்கு ஏற்ற குணநலம் வாய்ந்தவராய் இருந்தமை

பாரதியாருக்குப் பெருமகிழ்ச்சியை உண்டாக்கியது. முதல் மனைவியாரிடம் இருந்த குறைபாடுகள் குறுகிய மனம், பொருளாசை, இவறன்மை முதலியவை காரணமாக எஞ்ஞான்றும் பிறருடன் கடுஞ்சொற் பேசுதல், பூசல் விளைத்தல், விருந்தினரையேயன்றிக் கடப்பாடாய் உள்ள நெருங்கிய கிளைஞரையும் ஓம்பாமை முதலியனவாம். புலமையிலும், அதற்கேற்ற வாழ்க்கையிலும் விருப்பங்கொண்ட பாரதியாருக்கு அப்படிப்பட்ட மனைவியாருடன் ஒருங்குகூடி வாழ்தல் சிறிதும் இயலாதாயிற்று. அவர் அவ்வம்மையார்க்கு உரைத்த அறிவுரைகள் அனைத்தும் விழலுக்கிறைத்த நீராயின. அதனுல்தான் அவர் இல்வாழ்க்கையையே விட்டொழிப்பது என்ற முடிவிற்கு வந்தார். எனினும், முதல் மனைவியார் உணவு, உடை, உறையுள் முதலியவற்றிற் சிறிதும் குறைவின்றியிருப்பதற்குத் தக்க ஏற்பாடுகளைப் பல்லவபுரத்தில் தம் இறுதிநாள் வரையிலும் செய்து வைத்தார். அதாவது, தம் தாயாருக்குக் கிடைத்த நிலத்தில் தமக்குப் பங்காக வந்த நிலங்களில் சிறு வருவாயும் தாம் விரும்பாமல் முழுவதையும் அவ்வம்மையார் வாழ்க்கைக்கே பயன்படச் செய்து வந்தார். தம் மறைவுக்குச் சில ஆண்டுகளுக்கு முன்புதான் அவைகளை விற்று ஒரு பகுதியை அவ்வம்மையார்க்கும் மற்றைப் பகுதியை தம் நல்வாழ்க்கைக்கு உரியவராய் இருந்த இரண்டாம் மனைவியார்க்கும் கொடுத்தார்.

இரண்டாம் மனைவியார், பாரதியார்க்கு ஏற்ற வகையில் தாராள மனப்பான்மை, உறவினர் விருந்தினர் முதலியவர்களை அவரவர்கட்குத் தக்கபடி வரவேற்று உபசரித்தல், வெளியூர்க்குப் பாரதியார் சென்று தொடர்ச்சியாகப் பிரசங்கம் செய்யும் இடங்களில் உள்ளவர்களிடம் அன்பாய் அவரவர்களுக்கு ஏற்ற

மரியாதையுடன் நடந்து கொள்ளுதல் முதலிய பண்பு கள் வாய்ந்தவர். அவர் இப்பொழுது இருக்கின்றார். அவருக்கென்று பாரதியார் வாங்கிவைத்த இல்லம் அவருக்கு உரியதாய் இருக்கின்றது. அதில் பாரதியாரது பெரிய படம் ஒன்றை வைத்து அவர் வழிபட்டு வருகின் றார். பாரதியாரது நினைவு நாளை ஆண்டு தோறும் சிறப்பாகக் கொண்டாடி, புலவர் பலரை வருவித்துப் பேரவை ஒன்றை நடாத்தி, பாரதியாரது வரலாறு பற்றியும், அவரது நூல்கள் பற்றியும் சொற்பொழிவுகள் ஆற்றுவித்து வருகின்றார். அப்பேரவைகளில் புலவர்கள் அவ்வப்பொழுது பேசிவந்த பேச்சுக்களின் விளைவே, அவரது நூல்கள் இப்பொழுது ஒரு திரட்டாகி வெளி வருவது.

அவ்வம்மையாருக்கு உடன் பிறந்த இளவலார் ஒருவரே இருக்கின்றார். அவர் பெயர் ஆறுமுக முதலியார். அவர் தம் தமக்கையாரது சொற்குச் சிறிதும் மாறு சொல்லாது நடக்கும் தன்மையுடையார். அதனால், அவர் தம் தமக்கையார் செயலுக்குப் பெரிதும் ஒத்துழைத்துப் பாரதியார் விழாநாள் சிறந்து விளங்கத் துணைபுரிந்து வருகின்றார். பாரதியார் நூல் திரட்டு முழுவடிவத்தைப் பெறுதற்கு அவர் கொண்டுள்ள ஊக்கம் மிகவும் பாராட்டற்பாலது. அவர் தம் பழைய ஊராகிய சைதாப்பேட்டையை விடுத்துப் பல்லவ புரத்தில் பாரதியார் நிலத்தை விலைக்கு வாங்கி, அவ்வூரிலேயே வாழ்ந்து வருகின்றார்.

## புலமைச் சிறப்பு

சோமசுந்தர பாரதியார் தமது பதினேழு வயதிற்கு மேல்தான் செவ்விய கல்வியைக் கற்கத் தொடங்கினார் என்றாலும், வியக்கத்தக்க வகையில் மிக விரைவில் பல

கலைகளையுங் கற்றுப் புலமை நிரம்பிப் புதியனவாகப் பல வகைக் கவிகளையும் விரைந்து பாடும் ஆற்றலும், சிறந்த நாவன்மையும் உடையவராயினர். அதனால் காஞ்சியில் அவர் பல இடங்களில் இனிய புராணப் பிரசங்கங்களைச் செய்துவந்தார்.

பாரதியார் பிறந்து வளர்ந்து வாழ்ந்தது பல்லவபுரமாயினும், தம் முன்னோரது உரிமை பற்றித் தம்மை, 'புலிசை சோணாசல முதலியார்' என்றே முதலில் சொல்லி வந்தார். அவர் தொடக்கத்தில் இயற்றிய நூல்களுக்குச் சாத்துகவி கொடுத்த புலவர்களும் அக் கவிகளில் அவரை, 'புலிசைச் சோணாசலனார்' என்றே குறித்திருத்தல் இங்கு நினைக்கத் தக்கது. 'புலிசைச் சோணாசல முதலியார்' என்று முதலில் காஞ்சியில் வழங்கப்பட்ட அவர், பின்பு 'புராணிகர் சோணாசல முதலியார்' என அழைக்கப்பட்டார். பின்பு '**கவிராயர்**' என்றே அவரை அனைவரும் அழைக்கலாயினர். 'சோணாசலக் கவிராயர்' என்று சிறப்பாகக் குறிப்பிடுவர். இக்காலங்களிலும் அவர் முதலில் புலிசையையும், பின்பு சிலகாலம் பல்லவபுரத்தையும், இறுதியில் காஞ்சியையும் தமது ஊராகக் குறித்து வந்துள்ளார்.

இவரது புலமைத் திறனும், பிரசங்கத்தின் நலமும் எங்கும் பரவ, இவரைப் பல இடங்களில் உள்ளவர்கள் தங்கள் இடங்களில் வருவித்து இவரது பிரசங்கத்தைக் கேட்டு மகிழ்ந்தனர். பாரதப் பிரசங்கங்களை இவர்பல இடங்களில் பிறரிடம் இல்லாத சிறப்புத் தன்மையுடன் ஆற்றினர். இவற்றால் பொருளும் புகழும் இவரைத் தேடிவந்தடைந்தன. இந்நிலையில் இராய வேலூரில் தோட்டப்பாளையம் என்னும் பகுதியில் வாழ்ந்த சுப்பராய முதலியார் மகனார் '**அருணாசல முதலியார்**' என்பவர் இவரை வருவித்துப் பலநாள் வைத்திருந்து பல

பிரசங்கங்களைச் செய்வித்துப் பலரையும் கேட்கச்செய்து நிரம்பப் பரிசுகளைத் தாமும் வழங்கினார்; பிறரையும் வழங்கச் செய்தார். அங்கு அவருடைய நன்முயற்சியால்தான் நம் புலவருக்கு, 'பாரதி' என்ற பட்டம் வழங்கப்பட்டது. அப்பொழுது, 'தோடா' என்று சொல்லப்படும் கைக் கங்கணத்தைப் பொன்னாலும் மணிகளாலும் ஆக்கி இவரது கைக்கு அணிந்து, இவரைப் பெருமைப் படுத்தினார்கள். இவ்வணிகலம் அக்காலத்தில் ஒருவெற்றி விருதுபோலக் கருதப்பட்டது, இதைச்செய்து கொண்டு வந்து, 'பாரதி' என்னும் பட்டம் அளித்து, கையில் அணிவிக்கச் செல்லும்போது அச்சபையில் ஒருவர், ஒரு சிறிய ஓலை நறுக்கில் துளை ஒன்று செய்து, அதன் பக்கத்தில்,'சி' என்னும் எழுத்தை எழுதி, 'இதை இவர் சரியானபடி படித்துக் காட்டினால்தான் இந்தத் தோடாவை அணிவிப்பதும் 'பாரதி' என்னும் பட்டம் அளிப்பதும் இவருக்குத் தகும்' என்று கூறினார். உடனே பாரதியார் அந்நறுக்கினை வாங்கி, 'துளைசி' என்று படித்தார். அதனைக் கொண்டு வந்தவர் வாயடங்கி அமர்ந்தார். பட்டமும் பரிசும் தடையின்றி அளிக்கப்பட்டன.

பாரதியாருக்குச் சமயோசித புத்தியும், அதற்கேற்ப நயம்படப் பேசும் சொல்லாற்றலும் மிக்கிருந்தன. காஞ்சிபுரத்துக் கடைத் தெருவில் உள்ள ஜவுளிக்கடைச் சத்திரத்தில் இவரது பிரசங்கத்தினை ஜவுளிக்கடைக்காரர்கள் வைத்து ஆவலோடு கேட்டு வந்தனர். அத்தகைய பிரசங்கங்களில் ஒரு நாள் பிரசங்கத்தின் இடையில் பாரதியார் ஏதோ ஒரு வடமொழிச் சுலோகத்தினைச் சொன்னார். சபையில் இருந்தவர்களில் சின்ன காஞ்சிபுரத்து ஐயங்கார் ஒருவர், எழுந்து, 'சமஸ்கிருத சுலோகங்களை நீங்கள் இவ்வாறு சொல்வது நன்றாயில்லை' என்று சொன்னார். உடனே பாரதியார், 'நீங்கள் தமிழ்ச்சொற்

களை இப்படிச் சொல்வது நன்றும் இல்லை! நன்றும் இல்லை!' என்று கூறினர். சமஸ்கிருதம் பிராமணர் அல்லாதார்க்குச் சொல்ல வராது என்று சொல்ல வந்த ஐயங்காரை, தமிழ் பிராமணருக்குச் சொல்ல வராது என்று அறிந்து கொள்ளச் செய்தார் பாரதியார்.

ஒரு சமயம் காஞ்சிபுரம் ஏகாம்பரேசுரர் கோயிலில் அர்ச்சனை செய்விக்கும்பொழுது அர்ச்சகருக்குத் தக்ஷிணை கொடுக்கத் தமது மேல் துண்டிலிருந்த முடிப்பைப் பாரதியார் அவிழ்த்தபொழுது, சில சில்லறைக் காசுகள் கீழே விழுந்தன. கூட்டம் அவைகளை எடுக்க முடியாதபடி நிறைந்திருந்ததனால், சிறிது தொல்லை ஏற்பட்டது. உடன் இருந்தவர்களில் ஒருவர், 'முடியவில்லையோ?' என்று கேட்டார். அதற்குப் பாரதியார், முடியாமல்தான் விட்டுவிட்டேன்' என்று இருபொருள்படக் கூறினர்.

காஞ்சிபுரத்தில் உள்ள வேதாந்த மடமாகிய ஸ்ரீ நிச்சலராமானந்த சுவாமிகள் மடத்தில் ஆண்டு விழா, சென்னை கோ. வடிவேல் செட்டியார் தலைமையிலே ஆண்டுதோறும் நடைபெறும். ஒருமுறை பாரதியாருக்கு அவ்விழாவில் ஒரு சொற்பொழிவு அமைக்கப்பட்டிருந்தது அதற்குப் பாரதியார் சென்றார். சென்றபொழுது முன்பு நிகழ்ந்த சொற்பொழிவிற்கு, வடிவேல் செட்டியார் முடிவுரை சொல்லிக் கொண்டிருந்தார். அதில் சொற்பொழிவாளரது கருத்துக்களில் இரண்டொன்றை மறுக்கும் முறையில் பேசினர். அவ்வமையம் பாரதியார் வருகையைக் கண்டு வணக்கம் செலுத்தி, 'அடியேன்'; வர வேண்டும்' என்றார். அதில் செட்டியார், 'இவரது பேச்சை அடித்துப் பேசுவதுபோல உம்முடைய பேச்சை அடித்துப் பேசமாட்டேன்' என்றும் பொருள் தொனிக்குமாறு கூறினர். உடனே பாரதியார் 'அடியேன்; வருகின்றேன்' என்று, 'என்னுடைய பேச்சு

அடிக்கக் கூடியதாய் இராது' என்னும் பொருள் தொனிக்கக் கூறினர். செட்டியாரும் பிறரும் பாரதி யாரது திறனை அறிந்து வியந்தனர்.

இராயவேலூரில் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானி யார் சுவாமிகள் தலைமையில் நிகழ்ந்த விழா ஒன்றில் நம் பாரதியாருக்கு, 'தொண்டு' என்னும் பொருள் பற்றி ஒரு சொற்பொழிவு அமைத்திருந்தார்கள். அதற்கு அரை மணி நேரம் ஒதுக்கியிருந்தனர். விழா நிகழ்ச்சிகளில் பல நேரத்தைக் கவர்ந்து விட்டமையால், பாரதியார் பேச்சை அறிமுகப்படுத்துங்கால், சுவாமிகள், அதனைக் கால் மணியில் முடித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள் வதாகக் கூறினர்கள். பாரதியார் தமது முன்னுரையில், 'தொண்டு செய்வதற்குரியது காலேயன்றி, அரையன்று; இதனை நான் முக்காலும் சொல்வேன்' என்று சொல்லித் தொடங்கினர். மக்கள் பாரதியார் பேச்சினைக் குறைக்க வேண்டா என்று சுவாமிகளைக் கேட்டுக்கொண்டார்கள். மக்கள் விருப்பத்தின்படியே சொற்பொழிவு நடைபெற் றது.

பாரதியார் தம் குடும்ப வழக்கப்படி ஆண்டுதோறும் திருக்கார்த்திகைத் தீப தரிசனத்திற்குத் தவருது செல் வார். அப்பொழுது காஞ்சி நகர அன்பர்கள் தங்கள் தங்கள் நிலைக்கேற்ப அவருக்கு அன்பளிப்புக்களை வழங்கு வார்கள். அம்முறையில் பெருநகர் என்னும் ஊரினரும், தமிழறிவு சான்றவருமாகிய 'தில்லை முதலியார்' என்பவர் கால் ரூபாயைக் கொடுத்து, 'இதனை ஏற்றுக் கொள்ளு தல் வேண்டும்' என்று கூறினர். அதற்குப் பாரதியார், 'தில்லையைக் கண்டால் அது ஒருகால் தானே காட்டும்? என்று நயம்பட மொழிந்து ஏற்றுக் கொண்டார். இதனை மேற்படி முதலியாரவர்கள் பாரதியாருக்குப் பின்னும் பலமுறை சொல்லி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இங்ஙனம் மற்றும் பல நிகழ்ச்சிகள் உள.

எதுகை நயம்படப் பேசும் பேச்சுக்கள் பாரதியாருக்கு மிக எளிதில் வரும். திருவண்ணுமலையில் திருக்கார்த்திகை தினத்தன்று அம்மலையை வலம் வருதல் வேண்டும் என்பது முறை. சிலர் அதைச் செய்வதில்லை. அது பற்றி அவர் கூறுங்கால், 'இலை சுற்ற வந்தவர்கள் மலை சுற்றமாட்டார்கள்' என்பார். **யமகம், திரிபு, சிலேடை சொற்பின் வருநிலை, சொற்பொருட்பின் வருநிலை** முதலிய சொல் நயங்களில் பாரதியார் பெரிதும் ஈடுபடுதலை அவரது பாடல்களில் நிரம்பக் காணலாம்.

இப்பொழுது காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராய் அலுவல் பார்த்து வருபவரும், ஆங்கிலம் தமிழ் வடமொழி என்னும் மும்மொழிகளும் வல்லவராய், '**தருமை ஆதீனத் தமிழ்ப் புலவர்**,' '**சித்தாந்த ஞான பானு**' முதலிய பட்டங்களைப் பெற்று, சைவ சித்தாந்த நுண்பொருள்களைத் தமது சொல்லாலும் எழுத்தாலும் பரப்பி, காசி முதல் இலங்கை வரையிலும் உள்ளவர்களால் நன்கறியப்பட்ட புகழ் வாய்ந்த பெரும் புலவராகிய என் ஆருயிர் நண்பர் காஞ்சிபுரம் **திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T.,** அவர்கள் சிறுவயதில் நம் சோணுசல பாரதியாரிடம் கந்த புராணச் சுருக்கம் முதலிய சில இலக்கியங்களைப் பாடம் கேட்டும், அவர் பிரசங்கங்களில் இனிய இசையோடு கையேடு படித்தும் அவருடன் பழகினவர்கள். அவர்கள் பாரதியார் இலக்கியங்களில் உள்ள சொல்நயங்களில் பெரிதும் ஈடுபட்டமையை—நேரில் கண்டு அனுபவித்ததைப் பலமுறை கூறியிருக்கிருர்கள். அவர்களது தலைமையில்தான் பாரதியாரது நினைவுநாள் விழா பெரும்பாலும் நடைபெறும். பாரதியாரது நூல் திரட்டு வெளியீட்டிற்கு உதவிய நன்கொடையாளர்களிலும் ஒருவராய் அவர்களும் விளங்குகிருர்கள். பாரதி

யாரது நினைவுநாள் விழாவை அவர் மனைவியார் இராஜாம்பாள் அம்மாளது பேருதவியைக் கொண்டு காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகச் சார்பில், அதன் அமைச்சர் புலவர்மாமணி திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள் நடத்துகிறார்கள்.

சோமசுந்தர பாரதியாரது வாக்குப் பலிதமுடைய உண்மை வாக்கு என்று பலரும் கொண்டு, அவர்பால் சிறிது அச்சமும் கொண்டிருந்தனர். அதற்குக் காரணங் களாய் இருந்த நிகழ்ச்சிகளில் ஒன்றாக அவரது பாடலால் மகமதிய இளைஞன் ஒருவன் அகால மரணம் உற்றனன் என்று கூறுவர். அவ்விளைஞன் பெயர் 'தாதாபாய்' என்பது. அவன் பெரிதும் செருக்குக் கொண்டவன்; பிறரைக் காரணம் இன்றியும் வைவான். அவன் ஒருநாள் நமது பாரதியார் காஞ்சிபுரம் கடைத்தெருவினரால் உபசரிக் கப்பெற்று இனிது செல்லுதலைக் கண்டு இகழ்ச்சியாய் ஒருமையில் அமைந்த சில சொல்களால் பேசியது நம் பாரதியார் காதில் விழுந்து, மன வருத்தத்தை உண் டாக்கியது. அதனால் அவர்,

"சோதாவாய்த் தான்திரியும் சோம்பேறிப் பையலுக்குத்
தாதா எனும்பெயரைத் தந்தவரார்—தீதாக
வெட்டி யெறியாரோ வேலிதனிற் போடாரோ
மட்டி யெனவே மதித்து."

என்ற ஒரு பாடலை மிகவும் மனம் நொந்து பாடினார். அதன்படியே அன்று தொட்டு எட்டாம் நாளில், சங்கூசா பேட்டை மைதானம் மஞ்சள்நீர்க் கால்வாய்ப் பாலத் தின் அருகில் அவன், தலைவேறு உடல்வேறாக வெட்டி எறியப்பட்டுக் கிடந்ததைப் பலரும் பார்த்தனர். பாரதி யார் போன்றவர்களையே காரணமின்றி வைபவன் மற் றைய கொடியோரிடத்தில் எப்படி நடப்பான் என்பது





சொல்ல வேண்டுவது இன்று. அதனால், அத்தகையோர் அவனுக்குத் தக்க பரிசினை வழங்கினர்.

மற்றுமொரு நிகழ்ச்சி உண்டு. காஞ்சிபுரத்திற்கு அண்மையில் உள்ள ஐயங்கார் குளம் என்னும் கிராமத்தில் நடைபெற்ற ஒரு திருமணத்திற்கு அதனை நடத்தியவர்கள் பாரதியாரை வருவித்துப் பிரசங்கிக்கச் செய்தனர். பிரசங்க முடிவில் அவர்கள் சரியானபடி பரிசு அளிக்காது, ஒரு ரூபாயைத் தட்டில் தாம்பூலத்தில் வைத்துக் கொடுத்தார்கள். அது பாரதியாருக்குச் சிறிது அவமானத்தையும், வருத்தத்தையும் உண்டாக்கியது. அதனால் அவர் உடனே,

> "ஆயிரத்தில் தானு அதுகுறையத் தந்தார்கள்
> மாயிரத்ன வேலு மணமதனில்"

என்று ஒரு வெண்பாவைப் பாடிவிட்டுத் திரும்பி வந்துவிட்டார். அப்பாடல் முழுவதாக இப்பொழுது என் நினைவில் இல்லை. 'இரத்தினவேலு' என்பது மணமகன் பெயர். 'மாயிரத்தினவேலு' எனக் கூறியதில், 'மாய்கின்ற இரத்தினவேலு' என்னும் பொருள் அமைந்து, அவன் ஓராண்டிற்குள் காலமானுன் என்பர். 'அயிரம்' என்னும் எண் தமிழில் க, த-என்ற இரண்டெழுத்தும் சேர்த்து எழுதப்படும். அதில் 'த' என்னும் எழுத்தை எடுத்துவிட்டால், 'க' என்பது, 'ஒன்று' என்னும் எண்ணுகும். அதனால் ஒரு ரூபாய் கொடுத்ததை, ஆயிரத்தில் தானு அது குறையத் தந்தார்கள் என்ருர். எனினும் 'ஆயிரம் செல்வங்கள் அவர்களுக்கு இருக்கின்றன, அது வளரும் முறையில் பரிசிலர்க்கு மகிழ்ச்சியுண்டாக வழங்காமல், அச்செல்வம் உலோபத்தனம் காரணமாகத் தானுகவே குறையுமாறு இப்படி ஒரு ரூபாயைக் கொடுத்தார்கள்' என்னும் பொருளே அமையப் பாடினர் என்க.

பாட்டென்பது பாரதியாருக்கு மிக எளிதில் தானுக வரும். சந்தப் பாடல்களாகவும் பல பாடல்கள் பாடி யுள்ளார். அளவற்ற பிரபந்தங்கள் அவரால் இயற்றப் பட்டன. அவற்றுட் பல கிடைத்துள்ளன; பற்பல கிடைக்கவில்லை. சில நூல்கள் அவரது கையெழுத்துப் பிரதியில் முற்றுப் பெருமலும் இருக்கின்றன. அவற்றுள் **'பாரதச் சுருக்கம்'** என்பது ஒன்று. அதில் முந்நூறு பாடல் களுக்கு ஏறக்குறைய இருக்கின்றன. அவரது நூல்களாக நான் சிறுவயதில் அச்சுப் பிரதியில் படித்த புத்தகங்க ளுள்ளே சில இப்பொழுது கிடைக்கவில்லை. அவை; **அருணைப் பிட்சாடனர் அற்புத மாலை, திருவணைத் தியான பஞ்சகம், தீபாட்டகம், அண்ணுமலை நாமாவளி, குளத்தூர் வல்லபை கணேசர் மாலை** முதலியன. இப்பொழுது கிடைத்துள்ள பிரபந்தங் களும் இன்னும் சில நாட்களில் கிடைக்காது மறைந்து விடக்கூடும் என்பதை எண்ணிப் பாரதியார் பால் அன்பு கொண்ட காஞ்சி நகர வாசிகளும், பிறரும் அவரது நூல்களைத் திரட்டி அச்சிட்டு வெளியிட முன்வந்தது பெரிதும் மகிழ்ச்சிக்குரிய ஒன்ருகும்.

இப்பொழுது கிடைத்துள்ள நூல்களில் **கம்பைச் சந்நிதிமுறை, உண்ணுமுலையம்மை பிள்ளைத்தமிழ், திருக்கச்சி யேகம்பர் திரிபந்தாதி** என்பவை சிறப்புடையன. இவைகளை யேனும் மக்கள் பாதுகாக்கக் கடமைப்பட்டவர்கள்.

பாரதியாரது குடும்பம் அண்ணுமலைப்பெருமானுக்கு ஆட்பட்ட குடும்பம் என்பதும், அதனுல் திருக்கார்த்தி கைத் தீப தரிசனத்தை ஆண்டு தோறும் அவர் சென்று தவருது தரிசித்து வருவது என்பதும் பல இடங்களிற் சொல்லப்பட்டன. அம் முறையில் பாரதியார் தமக் குரிய சிறப்புத் தொண்டாக ஆண்டுதோறும் ஒவ்வொரு பிரபந்தத்தை அண்ணுமலையாருக்கு இயற்றி அதனை அச்சிட்டுத் தீபதரிசன காலத்தில் அரங்கேற்றிப் பலருக்

கும் இலவசமாக வழங்குவது என்பதை மேற்கொண்டு, அவ்வாறே நாற்பத்தொரு வருடம் தொடர்ந்து செய்து வந்தார். அவர் இரங்கூனில் இருந்த ஆண்டில், தாம் இந்தியா வர முடியாமையால், பிரபந்தத்தை மட்டும் செய்து அச்சிட்டு இவண் உள்ளார்க்கு அனுப்பிச் சமர்ப் பிக்கச் செய்தார். அப் பிரபந்தங்களில் முதலாவதே 'திருவருணைப் பதிற்றுப்பத்தந்தாதி' என்பது. அது அதிவீரராம பாண்டியர் இயற்றிய திருக்கருவைப் பதிற்றுப்பத்தந் தாதியை அடியொற்றியது. அதுவே பாரதியார் முதலில் இயற்றிய பெருநூல். அதனை அவர் இயற்றுங் கால் புலிசையில் தம் அத்தை கணவர் ஐயாசாமி முதலி யார் வீட்டில் இருந்து, புலிசைக்கோனேரி விநாயகருக்கு ஒரு பதிகத்தை இயற்றி வழிபட்டுப் பின்னர்த் தொடங் கினார். ஐயாசாமி முதலியார் என்தாய் வழிப்பாட்டனார். அவர் சிறிது வேதாந்தம் கற்றவர். அவர் படித்த கைவல்ய நூலை இன்றும் நான் வைத்திருக்கின்றேன். பாரதியாரது பதிற்றுப்பத்தந்தாதியில் அவர் ஒரு பாடலை இயற்ற விரும்பி அவ்வாறே செய்துள்ளார். அது, அந்நூலின் ஒன்பதாவது பாடலாகிய, "ஆமேளனிதிற் கைவல்யம்" எனத் தொடங்குவது. அந் நூலைப் பாடி முடித்தபின் புலவர் பலரிடம் சென்று சாத்துக் காட்டிக் கவிகள்வாங்கி அச்சிட்டு சாலிவாகனசகம் 1805-க்குச் சரியான தாரண ஆண்டுக் கார்த்திகைத் திங்கள் தீபதரிச னத்தில் திருவண்ணுமலையில் அரங்கேற்றி வெளியிட்டார்.

இவரது புலமைச் சிறப்பு பின்னர்ப் பலராலும் அறியப்பட்டது. பல பெரிய இடங்களில் இவரை அழைத்துத் தொடர் சொற்பொழிவுகள் வைத்துக் கேட்டனர். திருப்பத்தூர், பெங்களூர், தேவக்கோட்டை முதலிய இடங்களில் மாதக் கணக்கில் தங்கிச் சொற்பொழி வாற்றியிருக்கின்ருர். இவரது நிறம் கறுப்பு. எனினும்

அதில் ஓர் அழகு அமைந்திருந்தது. உயரமான வடிவமும் கம்பீரமான தோற்றமும் உடையவர். கண்கள் சிறிது சிவப்பு நிறம் வாய்ந்தவை. பிரசங்க மேடையில் அலங் காரத்துடன் அமர்வாரே யாயின் சபை நிறைந்து காணப்படும். தோற்றத்திற்குத் தக்கவாறு மிடுக்கான நடையும் பேச்சும் உடையவர். சபையில் பாரதம் முதலிய காவியங்களை வீரம் முதலிய சுவைகள் வரும் இடங்களில் அவற்றிற்கு ஏற்றவகையில், அனைவரும் அவற்றில் ஈடுபடுமாறு பிரசங்கிப்பார். அதனால் இவரது பிரசங்கத்தை அனைவரும் கேட்க விரும்பினர்.

இவர் மைசூர் மகாராஜாவிடம் சென்று அவர் சபையில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்து, அவ் வரசர்மீதும் கவி பாடினர். அதனால், அவர் இவருக்குப் பெரும்பொருள் பரிசில் வழங்கியதுடன், விலையுயர்ந்த பொன்னுடை ஒன்றும் போர்த்துக் கௌரவித்தார்.

முதற்கொண்டே காஞ்சி நகர வாசிகள் இவரது பெருமையை உணர்ந்து இவரை நன்கு போற்றினர். சிறப்பாக ஜவுளிக்கடைக்காரர்கள் இவரிடம் பெரு மதிப்புக் கொண்டு இவருக்கு வேண்டிய நலங்களை எல்லாம் செய்துவந்தனர். காலையிலும் மாலையிலும் காஞ்சிபுரத்தில் 'காந்தி ரோடு' என்று இப்பொழுது சொல்லப்படும் ஆடிசன்பேட்டைக் கடைவீதிக்குச் செல்வார். அவ்வாறு செல்லும் பொழுது யாருடைய கடையிலேனும் நுழைவார். அவர்கள் அவரது வருகை யைப் பெரும்பேருக நினைத்து நல்வரவேற்று நன்கு உபசரித்து, வேண்டுவனவற்றை விருப்பத்துடன் செய் தனுப்புவார்கள். அந்தப் பொழுது அன்று அங்கேயே அவருக்குக் கழிந்துவிடும். கடைக்காரர்களுக்கு அவ் வமையம் நல்ல செவி விருந்து கிடைக்கும். மேலும் இவர் சென்று அமருங்கடையில் அன்று வாணிகமும்

மிகுதியாகும் என்பர். அதனால் கடைவீதியில் இவர் செல்லும்பொழுது ஒவ்வொரு கடைக்காரரும் தங்கள் கடைக்கு வருவாரா என்றே எதிர்பார்ப்பார்கள். பாரதியார், 'ஆடிசன்பேட்டை ஒரு காமதேனு; அது எனக்குக் கேட்டதை எல்லாம் தரும்' என்று மகிழ்ச்சியுடன் கூறுவார்.

காஞ்சிபுரம் ஜவுளிக்கடைக்காரர்கள், தங்கள் அனைவருக்கும் பொதுக்கட்டிடமாகிய ஜவுளிக்கடைச் சத்திரத்தில், கடைகட்கு விடுமுறை நாளாகிய அமாவாசை தோறும் இவரது சொற்பொழிவை வைத்துக்கேட்டு மகிழ்ந்தனர். அதன் வழியாக இவருக்கு வருவாயும் கிடைக்கச்செய்தனர்.

இத்தகைய ஜவுளிக்கடைக்காரருள் கோட்டராம் பாளையம் இராமலிங்க முதலியார் என்பவர் முதன்மையானவர் ஆவார். அவர் நம் பாரதியாரிடத்தில் பேரன்பு கொண்டு அவருக்கு வேண்டுவனவற்றைச் செய்ததோடு. ஆண்டுதோறும் அவரது குடும்பத்திற்கு வேண்டும் நெல்லையும் அனுப்பிவந்தார். அப்பொழுது காஞ்சிபுரம் கடைத் தெருவில் இருந்த சிற்றுண்டிச்சாலை ஒன்றே. இராமச்சந்திர ஐயர் என்பவருடையது. அதில் காலை, மாலைகளில் பாரதியாருக்கு வேண்டிய சிற்றுண்டியைத்தர இராமலிங்க முதலியார் ஏற்பாடு செய்திருந்தார். அதனால், பாரதியார் அங்குச் செல்லும்போது இராமச்சந்திர ஐயர் அவரை நன்கு வரவேற்று உபசரிப்பார். பாரதியார் சிற்றுண்டி அருந்திக் கணக்கில் குறித்து விட்டு வருவார். மாத முடிவில் இராமலிங்க முதலியார் பணத்தைக் கொடுத்துவிடுவார். இதுபற்றிப் பாரதியார், "இராமச்சந்திர மாதா; இராமலிங்க தாதா" என்று கூறுவார்.

இப்பொழுது காஞ்சிபுரத்தில் சிறந்த பிரமுகராய் விளங்குகின்ற, சுந்தவிலாஸ் வாணிகம் கோட்டராம்

பாளையம் திரு. A. K. தங்கவேல் முதலியார் அவர்கள் மேற்படி இராமலிங்க முதலியார் மருமகரே. கந்தசாமி முதலியார் புதல்வராகிய அவர்கள் இளமையில் நம் பாரதியாரிடம் தமிழ் கற்ருர். அவருடன் இருந்து அவருக்குத் தொண்டுகள் செய்திருக்கிருர். அதனுல் இப்பொழுதும் அவரை மறவாத சிந்தையால், அவரது நூல் வெளியீட்டுக் குழுவிற்குத் தலைமை ஏற்று முதற் கண் ரூபாய் ஐந்நூறு நன்கொடையாகக் கொடுத்தார். மற்றும் ஜவுளிக்கடைக்காரரும் அவரது நன்முயற்சியின் மேல், பாரதியாரது பழைய அன்பினைப் பாராட்டிப் பொதுவில் ஐந்நூறு ரூபாய் வழங்கியிருக்கிருர்கள். இன்னோரன்னவர்களது நல்லெண்ணத்தாலும், நன் முயற்சியாலும் பாரதியாரது நூல் ஒரு திரட்டாக வெளிவருவது மகிழ்ச்சிக்குரியது.

காஞ்சியில் இத்தகைய சிறப்பினைப் பெற்ற பாரதியார் அங்குள்ள திருக்குமர கோட்டத்தில் பேரன்புடைய வராய் இருந்து சில சில பணிகளைச் செய்துவந்தார். அதனுல், இவருக்கு திருக்குமரகோட்ட தேவஸ்தான வித்துவான் என்பதும் பெயராயிற்று. மிகவும் பழுதுற்றிருந்த அத் திருக்கோயிலை, இராமநாதபுரம் ஜில்லா கண்டனூர் வயி. ராம. வயிரவச் செட்டியார் திருப்பணி செய்து சிறந்த கோயிலாக்கிக் கும்பாபிடேகம் செய்வித்த பொழுது பாரதியார் திருவடி மாலை என்னும் நூலை அங்குள்ள முருகப்பெருமான் மீது இயற்றி அரங்கேற்றி ஞர். அதனுல், அச் செட்டியார் பாரதியாருக்கு முதல் மரியாதை செய்து பொன்னுடையும் போர்த்துக் கௌரவித்தார்.

பாரதியார் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளும் முன் இத்திருக்குமரகோட்டத் தேவஸ்தானத் திற்குக் கிராமம் ஒன்று வாங்கி வைக்கவேண்டும் என்று

விரும்பி, இரங்கூனில் பிரபல வாணிகம் செய்யும் தன வணிகர்களை நாடி, இரங்கூனுக்குச் சென்றார். அங்கு இப்பொழுது நம்நாட்டில் 'தாழ்த்தப்பட்ட வகுப்பினர்' என்று சொல்லப்படுகின்ற வகுப்பினைச் சேர்ந்த 'மதுரைப் பிள்ளை' என்ற ஒரு பிரமுகர் இருந்தார். அவரது தயவு இன்றி அங்கு ஒருவரும் நுழைதல் இயலாது; அதனால் பாரதியார் அவர் மீது 'மதுரை பிள்ளை சதகம்' என்ற ஒரு பிரபந்தத்தை இயற்றி அவரது அன்பினைப் பெற்று அந்நாட்டில் சென்று தங்கினார்.

பின்பு, பாரதியார் தன வணிகர் பலரிடம் சென்று தம் புலமையால் அவர்கள் உள்ளங்களைக் கவர்ந்து, தமது கருத்தைத் தெரிவித்தார். அவர்கள் அவரது நன் முயற்சியைப் பாராட்டிப் பதினாயிர ரூபாய் சேர்த்துக் கொடுத்து, மேலும் இருபதினாயிர ரூபாய் சேர்த்துக் கொடுப்பதாகக் கூறினார்கள். அவர்கள் அந்நாட்டில் திருக்கச்சிக் குமரகோட்டம் போல நினைத்து வழிபட வேண்டி, 'கம்பை' என்னும் ஊரையும் அதில் ஒரு முருகன் திருக்கோயிலையும் அமைத்து, பூசையும் விழாக்களும் செய்து வழிபட்டு வந்தார்கள். அதனால், அம் முருகக் கடவுள்மீது பிள்ளைத் தமிழ் ஒன்று பாடித் தருமாறு அவர்கள்பாரதியாரை வேண்டினர். அது பாரதியாருக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் ஆயிற்று. இயல்பாகவே குமரகோட்டப் பெருமான்மீது இத்தகைய பிரபந்தங்களைப் பாடுவதில் விருப்பம் உடைய அவருக்கு, அது அப்பெருமான் திருப்பணிக்கு நேரே துணைசெய்யும் வகையில் அமைந்துவிட்டமையால், அவர் பெருமகிழ்வு கொண்டு, பிள்ளைத் தமிழோடு நிறுத்தாமல்; மற்றும் பல பிரபந்தங்களின் தொகுதியாகிய சந்நிதி முறையாகக் கம்பைச் சந்நிதிமுறை என்னும் பெயரால் பாடி அரங்கேற்றி னார். அந்நூல் சிதம்பர சுவாமிகளது திருப்போரூர்ச்

சந்நிதிமுறை போன்றது அது. கம்பை முருகனுக்கு உரிய நூலாயினும், கச்சிச் குமரகோட்டத்து முருகனுக்கு உரிய நூல்களே விளங்குதல் அறிந்து இன்புறத் தக்கது.

தனவணிகர்கள் கொடுத்த பொருளைத் திருக்குமர கோட்டத்திற்குச் 'சிறு வேடல்' என்னும் கிராமத்தை வாங்க உதவினர் என்ப. இன்னபிற செயல்களால் சோணசல பாரதியார் காஞ்சியில் பெருஞ் சிறப்புடன் வாழ்ந்தார். சில சிறப்புக் காலங்களில் பாரதியார் பட்டுடையைக் கச்சமாகக் கட்டிப் பொன்னுடையை மேலே போர்த்துக் கொண்டு, வலக்கையில் தோடா அணிந்து, கைவிரல்களில் கற்கள்இழைத்த மோதிரங்கள் செறித்து, கையில் வெள்ளிப் பூண் கட்டிய கரிய செங் கோலைப் பிடித்து, காலில் மரப்பலகையா லாகிய மிதியடி தொட்டு நடப்பாரேயாயின், அவரது நெடிய தோற்ற மும், புன்னகை பூத்த முகமும், நயம்பட்ட இனிய சொற் களும், பாடல்களும், கம்பீரமான நடையும் கண்டாரைப் பெரிதும் வசீகரிக்கும் தன்மை யுடையனவாய் விளங்கும்.

அவரது வரலாற்று நிகழ்ச்சிகளை நானே முழுவதும் அறிந்திலேன். அதனைப் பிறர் அறியச் செய்ய முயலுங் கால், எனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் இங்கு எழுத வும் முடியவில்லை. எழுதின் இன்னும் விரியும். அவரது வரலாற்றை என்னினும் அறிந்தார் பலர் இருந்தனர்; இருக்கின்றனர். அவர்கள் அறிந்தவை இன்னும் பெரிய வாம். பாரதியாரது வயதோடு எனது வயதை நோக் கின் நான் அவருக்குப் பெயரனுகலாம். ஆகவே, நான் அறிந்தவை மிகச் சிலவே. அவற்றுள் ஏற்புடைய சில வற்றையே இங்குக் கூறினேன்.

தமது தோற்றத்தாலும், பாடல்களாலும், பிரசங் கங்களாலும் காஞ்சி நகரத்தை அலங்கரித்துத் தாமும்

பெருமை பெற்றவர் சோணசல பாரதியார். அவர் மேற் குறித்த இரண்டு சமயங்கள் தவிர பிற சமயங்களில் மக்களைப் பாடியது இல்லை. காஞ்சி நகரத்தில் நிகழும் சிறந்த செயல் எதுவும் அவர் இன்றி நடைபெறுது. அவர் மறைந்த பின்னர் அவரது இடம் இதுகாறும் ஒருவராலும் நிரப்பப்படவில்லை. கால இயல்பும் இப் பொழுது மாறிவிட்டது.

இங்ஙனம் காஞ்சிக்கு ஓர் கல்விமணியாய் விளங்கி, அந்நகரத்தையும் அணிசெய்து, தாமும் பெருமையுற்று வாழ்ந்த சோணசல பாரதியார் சாலிவாகன சகம் 1847க்குச் சரியான (கி. பி. 1925) குரோதன ஆண்டு ஆடித் திங்கள் அமரபக்கம் திரயோதசி திதி வெள்ளிக் கிழமை இரேவதி நட்சத்திரம் விடியல் 4 மணிக்கு, தமது அறுபத்தெட்டாம் வயதில், பெரிய காஞ்சிபுரம் எண்ணெய்க்காரத் தெருவில் உள்ள தமது இல்லத்தில் இறைவன் திருவடி நிழலை எய்தினர். அவரது பூத உடல் மறையினும், அவரது புகழுடலும் அதற்கு ஏதுவாய அவரது அரிய பாடல்களும் இன்று இலங்குகின்றன: என்றும் அவை நின்று நிலவும்.

அவரது நூல்களைத் திரட்டி அச்சேற்றிப் போற்று தல் வேண்டும் என்னும் பேரார்வத்துடன் அச்செயலில் ஈடுபட்டுவரும், 'சோணசல பாரதியார் நூல் வெளி யீட்டுக் குழுவினர்'—அவற்றிற்குப் பதிப்பாசிரியனுகவும், குறிப்புரை ஆசிரியனுகவும் அமர்த்தி என்னை அப்பணியில் ஈடுபத்தினர். அதனை யான் ஒரு பெரும் பேருகவே எண்ணி, பதிப்பிற்கு வேண்டிய பொருள்நிலையை ஒட்டிக் குறிப்புரை முதலியவைகளை என்னுல் இயன்றவரையில் எழுதியும், பதிப்புச் செம்மையாய் விளங்குதற்கு வேண்டு வனவற்றைச் செய்தும் ஒருவாறு முடித்துள்ளேன். குறைபாடுகள் இருப்பின் பொறுக்க வேண்டுவதுடன்,

இன்றியமையாதவற்றை அடுத்த பதிப்பிற்கு உதவியாகத் தெரிவிக்கவும் அறிஞர்களை வேண்டிக் கொள்ளுகின்றேன்.

இந்நல்லதொரு பணியை எனக்கு அளித்த சோமசுந்தர பாரதியார் நூல் வெளியீட்டுக் குழுவினருக்கு எனது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

வாழ்க சோமசுந்தர பாரதியார் புகழ்!
வாழ்க அவரது வளம்நிறைந்த நூல்கள்!

இங்ஙனம்,
அடியேன்,
**சி. அருணைவடிவேல்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# புலிசைக் கோனேரி விநாயகர் பதிகம்

காப்பு

நேரிசை வெண்பா

பொன்கொண்ட மாடப் புலிசைப் பதிவளரும்
மின்கொண்ட பூங்கோயில் வீற்றிருக்கும்—தென்கொண்ட
கோனேரி யைந்துகரக் கோனேயென் றோதருள்வான்
தானே ரியைந்துவரம் தான்.

நூல்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருவளர் முடியும் வேழமா முகமும்
திப்பிய வெண்பொடி நுதலும்
குருவளர் கண்கள் மூன்றும்ஓர் மருப்பும்
குலவுநால் வாயும்அங் குசமும்

உருவளர் பேழை வயிறும்முந் நூலும்
உபயதாள் களுங்கண்டு வணங்க
மருவளர் சேவை யருளுவாய் புலிசை
வள்ளல்கோ னேரியைங் கரனே. (க)

ஆரண வடிவே ஆகமப் பொருளே
அகிலமே அகிலமன் னுயிரே
காரண குருவே கதிதரு மொழியே
கண்ணருள் நிறைந்தகற் பகமே
வாரண முகனுய் வந்துல களிக்கும்
வல்லபை தலைவனே சரணம்
பூரண விபவம் பொருந்திய புலிசைப்
புனிதகோ னேரியைங் கரனே. (உ)

பூவரும் அயனும் பூவைநேர் வணனும்
பூதநா யகனெனும் இவர்கள்
மூவரு நினது திருவரு ளாலே
முத்தொழில் புரிகுவ ரென்றால்
மேவரு நினது பெருமிதம் கண்டு
விளம்புதல் யார்தரம் ஐயா
தேவரும் புகழும் சீர்பெறும் புலிசைத்
தேவகோ னேரியைங் கரனே. (ங)

சங்கட மெனுமோர் கடலிடை வீழ்ந்து
தவித்திடும் ஏழையேன் றன்னை
இங்கடம் புரியா தெடுத்தரு ளாயேல்
இனியெவர் உலகினில் ஐயா
நங்கடந் துணையே நற்குணக் கடலே
நண்ணினர்க் கருளும்ஐங் தருவே
கொங்கடர் மலர்சேர் பொங்கர்சூழ் புலிசைக்
குலவுகோ னேரியைங் கரனே. (ச)

வெஞ்சம ரிழைத்த சூரடு வேற்கை
வேள்புவி வலஞ்செயு முன்னர்
நஞ்சமர் களத்துத் தந்தைமாங் கனியை
நல்கநல் வலஞ்செய்த நின்னை
நெஞ்சமர் களிப்பாய் வலஞ்செய்வார்க் களிப்பாய்
நீகனி கரங்கொடு பொய்யோ
மஞ்சமர்ந் தரிபோல் வளர்மதிற் புலிசை
வரதகோ னேரியைங் கரனே. (௫)

ஆதியிற் கயிலைக் காவணத் திடையே
ஆண்கலை பெண்கலை யாகச்
சோதியிற் பொறித்த பிரணவத் துதித்த
தோன்றலே தோன்றல்நின் கடனே
வீதியிற் சிறுவர் சிலையினை நிறுவி
விழைவுறு கணபதி யென்றே
நீதியிற் றெழுஞ்சீர் ஓவுருப் புலிசை
நிமலகோ னேரியைங் கரனே. (சு)

மோதகம் தோசை அவல்பணி யாரம்
முக்கனி சுண்டல்எள் ளுண்டை
ஏதகம் மகிழ்ந்து படைக்கினும் நுகர்ந்தே
எண்ணிய வரமெலாங் கொடுக்கும்
போதக முகனே ஏழையேன் யாது
புரிகுவேன் பரிவின்வந் தருளாய்
பாதகந் தவிர்க்கும் மகத்துவப் புலிசைப்
பரமகோ னேரியைங் கரனே. (எ)

காலையில் எழுந்து தடத்துநீ ராடிக்
கழறும்நன் னியமங்கள் முடித்துன்
ஆலயம் புகுந்து வலம்பல புரிந்தே
அன்பினொ டாக்கரம் செபித்து

மூலகா ரணனே என்றுதோத் திரங்கள்
மொழிந்துவாழ் வாழ்க்கையை அளிப்பாய்
சீலநன் னெறிகள் பிரிந்திடாப் புலிசைச்
செல்வகோ னேரியைங் கரனே. (அ)

அருடரும் பொருளே உனதுசந் நிதியை
அடுத்தவர்க் கொருகுறை யுண்டோ
கருடனைக் கண்ட அரவுபோற் பிணியும்
கட்டமும் விட்டகன் றிடுமே
புருடர்பூ வையர்கள் தருமமே புரியப்
புயல்மதி மும்மழை பொழிய
வருடம்முப் போகம் வயல்விளை புலிசை
மன்னுகோ னேரியைங் கரனே. (கூ)

பொன்னும்மா மணியும் நெல்விளை நிலனும்
புண்ணிய மனைவியும் சுதரும்
மன்னுமா ளிகையும் தருமமும் இனிய
மனமுமோர் மறுப்படா வயதும்
துன்னும்இம் மையினில் ஈந்துநற் பரத்துச்
சொல்லரு முத்தியும் அளிப்பாய்
என்னுடைத் துணையே சரண்சரண் புலிசை
இனியகோ னேரியைங் கரனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

——

## குறிப்புரை

'புலிசை' என்பது, இந்நூலாசிரியர்தம் முன்னோர் வாழ்ந்த ஊராகிய புலிவாய். இவ்வூர் விநாயகர் பெயரே கோனேரிவிநாயகர் என்பது. இவ்வூர் ஏரி, 'கோனேரி' என வழங்கப்படுகின்றது. அதன் கரைக்கண் கோயில் கொண்டிருத்தல் பற்றி இவ்விநாயகர் கோனேரி விநாயகர் என்னும் பெயருடையவராய் இருக்கின்றார். இவ்வூரிலும் சுற்றுப் புறங்களிலும், 'அருளாற்றல் மிகுந்தவர்,' என, இவருக்கு ஒரு தனிப்பெருமை இருந்துவருகின்றது. இது பற்றியே போலும், இந்நூலாசிரியரும் தாம் பாடல் இயற்றும் வன்மை பெற்றுப் பாடத்தொடங்கிய பொழுது, முதற்கண் இவருக்கு இப் பதிகத்தைப் பாடினார்!

**காப்பு:** மாடம்—மேல் அடுக்கினை உடைய மாளிகை. மின்—ஒளி. பூங் கோயில்—அழகிய கோயில். தென்கொண்ட—அழகைக் கொண்டிருக்கின்ற; இது கோனேரிக்கு அடைமொழி. 'கோனேரி' என்பது ஆகுபெயராய் அதன் கரையைக் குறித்தது. கோன்—தலைவன். 'ஓது; தான் நேர் இயைந்து வரம் அருள்வான்' என இயையும். இயைந்து—பொருந்தி, தோன்றி. இறுதியில் உள்ள 'தான்' அசை. இறுதி இரண்டடிகளில், 'திரிபு' என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காண்க. இவரது பிற நூல்களிலும் காப்புச் செய்யுட்களில் பெரும்பாலும். இவ்வாறே இவ்வணி யமைந்துள்ளமை காணலாம்.

### நூல்

௧. திரு—அழகு. காப்புச் செய்யுள், 'பொன்' என்னும் மங்கலச் சொல்லாலும், இம் முதற் செய்யுள் 'திரு' என்னும் மங்கலச் சொல்லாலும் தொடங்கப்பெற்றுள்ளன. இவைகளில் முறையே 'பாலன், அரசன்' என்னும் தானப் பொருத்தமும் அமைந்துள்ளமை காண்க. வேழம்—யானை. வேழமா,

இருபெயரொட்டு. 'திவ்யம்' என்னும் ஆரியச்சொல், 'திப்பியம்' எனத் தற்பவமாயிற்று. வெண்பொடி—திருநீறு. நுதல்—நெற்றி. குரு—நிறம். மருப்பு—தந்தம். குலவு—விளங்குகின்ற. நால் வாய்—தொங்குகின்ற வாய். பேழை—பெரிய. உபயம்—இரண்டு. தாள்கள்—பாதங்கள். மரு—மருவுதல்; சேர்தல்; முதனிலைத் தொழிற் பெயர். 'உயர்ந்தோர் மருவுதல் மிகுகின்ற சேவை' என்க. சேவை — பணிதல்; அஃது ஆகுபெயராய், பணியப்படும் தோற்றத்தினைக் குறித்தது. 'புலிசை' என்பதும், வள்ளல் என்பதும், 'விநாயகன்' என்பதனோடு இயையும்.

இது விநாயகரது முடி முதல் அடிகாறும் உள்ள எழிலினைக் கூறும் செய்யுளாய் இருத்தல் காணலாம். இவ்வாறே இவ்வாசிரியரது பிறநூல்களினும் உள்ள முதற்செய்யுட்களில் பெரும்பாலன இத்தன்மையனவாகவே அமைந்திருக்கின்றன.

2. ஆரணம்—வேதம். அகிலம்—உலகம். மன்—பல. காரணகுரு—முதல் ஆசிரியர். கதி—மேலான நிலை; வீடு பேறு. அதனைத் தருகின்ற மொழியை அருளிச் செய்பவனை அம்மொழியாகக் கூறினர். கண் அருள்—கண்ணால் தரும் அருள்; அது, கடைக்கண் பார்வையானே எல்லாவற்றையும் அருளுதல். கற்பகம்—கற்பகத் தரு. வாரணம்—யானை. அளிக்கும்—காப்பாற்றுகின்ற. வல்லபை, விநாயகர்க்குத் தேவி. பூரணம்—நிறைவு. விபவம்—சிறப்புத் தோற்றம்; பெருமை.

௩. பூ வரும்—திருமால்தன் உந்தித் தாமரையில் தோன்றிய. அயன்—பிரமதேவன். பூவை நேர் வணன்—காயாம் பூப் போன்ற நிறத்தையுடையவன்; திருமால். பூத நாயகன்—பூதப் படைகட்குத் தலைவன்; உருத்திரன். முத்தொழில்—உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல். மேவரு—பொருந்துதற்கரிய. பெருமிதம்—பெருமை. தரம்—அளவு. சீர்—புகழ்.

ச. சங்கடம்—துன்பம். தவித்தல்—தாபம் உறுதல் என்னும் பொருட்டாகிய தபித்தல் என்பதன் சிதைவு. ஏழையேன்—எளியேன்; பற்றுக்கோடில்லாதவன். இங்கு—இப்பொழுது. அடம்—வன் செயல். 'எவர்' என்னும் எழுவாய்க்குரிய 'உளர்' என்னும் பயனிலை எஞ்சி நின்றது. 'நங்கள் தம்' என்றது, எல்லா அடியவர்களையும் உளப்படுத்த. ஐந்தரு—கற்பகம், அரிசந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்னும் தேவ தருக்கள்; இவை விரும்பிய பொருள்களையெல்லாம் விரும்பியவாறே அளிப்பன. கொங்கு அடர்—மணம் நிறைந்த. பொங்கர்—சோலை.

ரு. வெம் சமர்—கொடிய போர். சூர்—சூரபதுமனை. அடு—அழித்த. வேள்—முருகக் கடவுள். புவி—பூமி. நஞ்சு அமர்—விடம் பொருந்திய. களம்—கண்டம்; கழுத்து.

'சிவபெருமான், தமக்கு வருணன் கொடுத்த ஒரு மாங்கனியை, இவ்வுலகம் முழுவதையும் சுற்றி வருவோர்க்குக் கொடுப்பதாகச் சொல்ல, முருகப்பெருமான் மயிலில் ஏறிச் சென்று சுற்றி வருவதன் முன்பே விநாயகர் உலக முதல்வராகிய அம்மையப்பரை வலம் செய்து, அக்கனியைப் பெற்றார்' என்னும் வரலாறு இதன்கண் குறிக்கப்பட்டது. 'நின்னை வலஞ்செய்வார்க்கு நீ நின் கரங்கொடு கனி அளிப்பாய்' எனக் கூட்டுக. 'கொண்டு என்பது 'கொடு' என மருவிற்று. 'கனி' அளிப்பாய்' 'என்றது, நன்மைகளை அளிப்பாய்' என்னும் குறிப்புடையது. மஞ்சு—மேகம். அமர்ந்து—தவழ்தலால். அரி—திருமால்.

சு. காவணம்—மண்டபம். 'ஆண், பெண்' என்றது சிவம் சத்திகளை. கலை—கூறு. சோதி—ஒளி. பொறித்த—எழுதிய. தோன்றலே—மகனே. தோன்றல் — (எங்கள் கண்முன்) தோன்றுதல்.

'சிவபெருமானும் உமையம்மையும் திருக்கைலையில் சித்திர மண்டபத்தில் உள்ள சித்திரங்களைக் கண்டு வருங்கால்,

சிவத்திற்கும் சத்திக்கும் உரிய பிரணவ மந்திரங்களை எழுதியுள்ள சித்திரங்களை நோக்கிய பொழுது, அவை இரண்டும் ஆண் யானையும் பெண் யானையுமாகிக் கலந்ததனால் அவற்றினின்று விநாயகர் தோன்றினார்' என்ற புராண வரலாறு இதிற் குறிக்கப்பட்டது. சிலை—கல். விழைவு—விருப்பம். சீர்—அழகு. ஓவுதல்—ஒழிதல். நிமலன்—தூயவன்.

எ. ஏது—எதனை. அகம்—மனம். நுகர்ந்து—உண்டு. போதகம்—யானை. ஏழையேன்—எளியேன். பரிவு—அன்பு; அருள். மகத்துவம்—பெருமை. புனிதன்—பரிசுத்தன்.

அ. தடம்—குளம். கழறும்—(நூல்கள்) சொல்லுகின்ற. நியமங்கள்—கடமைகள். ஏகாக்கரம்—பிரணவம். சீலம்—நல்லொழுக்கம்.

கூ. கட்டம்—துன்பம். புருடர்—ஆடவர். பூவையர்கள்—பெண்டிர். புயல்—மேகம். மதி—மாதம். போகம்—விளைவு. மன்னு—நிலைபெற்ற.

க0. மணி—இரத்தினம். சுதர்—மைந்தர். மறு—குற்றம்; இடையூறு. துன்னும்—பொருந்திய. பரம்—மறுமை; இஃது இங்கு இவ்வுடம்பு நீங்கும் நிலையைக் குறித்தது. சரண்—அடைக்கலம்.

[இந்நூல் இறுதியில் வாழ்த்துச் செய்யுள் ஒன்று இருந்திருத்தல் வேண்டும்; அதனை ஒருவரும் ஓதக் கேட்டிலேன்.]

——

# கம்பைச் சந்நிதிமுறை

## முதற்பதிப்பின் முகவுரை

திருத்தொண்டைநாட்டின்கண் பிரதான க்ஷேத்திரமாகிய ஸ்ரீ காஞ்சிமாநகரத்தில் ஸ்ரீ ஏகாம்பரநாதர் திருவாலயத்துக்கும் ஸ்ரீ காமாட்சியம்மையார் திருவாலயத்துக்கும் நடுவில் சேமாஸ்கந்த சொரூபமாய் விளங்கும்ஸ்ரீ குமரகோட்டத்துள் அடியார்கள் உய்யும்பொருட்டு வீற்றிருந்தருளும் ஸ்ரீ வல்லி கல்யாணசுந்தரராகிய ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமானுக்கு நித்தியநைமித்திக பூசை முட்டின்றி நடந்தேறும்படி செந்நெல் விளையும் நன்னிலக் கிராமம் ஒன்று பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று எண்ணி, யான் இரங்கோன் நகரத்துக்கு வந்து, அந்நகரத்திற் கனதன வியாபாரஞ்செய்கின்றவரும், பாண்டி நாட்டில் வசிக்கும் எழுகுலவணிகோத்தமர்களென்று பெயர் பெற்றவரும், சிவாலயத் திருப்பணி கும்பாபிஷேகம் நித்திய நைமித்திக பூசை கிராமம் திருவிழா சொர்ன விமானம் வெள்ளி வாகனம் தங்க வாகனம் முதலான பல தருமங்களைத்தலங்களினும் புரிகின்றவரும், சிவபத்தி குருபத்தி அடியார் பத்தி பூதிசாதன ஒழுக்க முடையவருமாகிய நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களென்னும் நகரத்தாரை அடுத்து வினவிக்கொள்ள, நகரத்தாரும் அன்புகொண்டு முயற்சி செய்து பதினாயிர ரூபா சேகரித்து, இன்னும் பதினாயிர ரூபா சேகரித்துக் கிராம பிரதிட்டை செய்யச் சிரத்தை யுடையவர்களாயிருக்கின்றனர். இத்தகு புண்ணிய சீலர்கள் இரங்கோன் நகரத்திற்கு அடுத்த ஸ்ரீ கம்பையென்னும் நகரத்தில் ஸ்ரீ காஞ்சிக் குமரகோட்டம்போல் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள்

திருவாலயம் நூதனமாக அமைத்து அற்புத கோபுர முதலான அளவில்லாத திருப்பணியும் நித்திய பூசை திருவிழாவும் இனிது நடத்திக்கொண்டு வருகின்ற தரும வான்கள் ஆதலால், அவர்கள் அத் திருக்கம்பை முருகப் பிரான்மீது பிள்ளைத் தமிழ் ஒன்று பாடவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, அவர்களது அன்பை நோக்கி அக் கந்தபிரான் திருவருளால் எனது சிற்றறிவுக்கு எட்டிய மட்டும் சந்நிதிமுறையாகப் பாடி யச்சிடுவித்தனன். அதில் சொற்குற்றம், பொருட்குற்றம், அச்சுக் குற்றம் இருந்த போதினும் அறிஞர்கள் பொறுத்துத் திருத்திக்கொள்ளு வதுமன்றித் தயைகூர்ந்து தெரிவிப்பார்களாயின், பின் வரும் பதிப்பில் சேர்த்து அச்சிடுவிக்கின்றனன்.

வந்தனம்.

இங்ஙனம்,

காஞ்சிபுரம் குமரகோட்டம்

**சோணாசல பாரதி.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கம்பைச் சந்நிதிமுறை

## சிறப்புப் பாயிரம்

திருவாரூர் பண்டாரத்தையா ஸ்ரீமத் சாமிநாத தேசிகர் அவர்கள்
இயற்றியது

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

1 மதிவளருந் திருக்குலத்து மாமலயத் துவசனெனு
மாறன் செய்த
துதிவளருந் தவத்துதித்த மீனுட்சி யுமைசோம
சுந்த ரேசர்
நுதிவளரும் வேற்றடக்கை யுக்கிரபாண் டியனென்ன
நுவலு மூவர்
பதிவளரு மரசுபுரி பாங்குபெறு மதுரைவளர்
பாண்டி நாட்டில், (க)

2 சீரோங்கு மெழுநகர வணிகரென வெவ்வவருஞ்
சிறப்பித் தோதும்
பேரோங்கு முத்தமர்க ணுல்வரருந் தமிழ்ப்பாடற்
பிணையல் பூண்ட
பாரோங்கு சிவதலங்க ளெங்கணுநற் பணிபூசை
பகர்வி ழாவு
மேரோங்கு வணம்புரிந்தோ ரிவர்புரியும் பெருந்தரும
மென்சொல் வாமால், (உ)

3 சொன்னகரம் பலவினுக்குஞ் சுவர்க்கநக ரம்பெரிதாச்
சொல்வா ரந்தப்
பொன்னகர மீதென்னு மிரங்கோனுந் திருநகரப்
பூவை பெற்ற
மன்னகர மெனுங்கம்பை மாநகரில் வீற்றிருக்கும்
வடிவே லண்ணல்
நன்னகர வெழுகுலத்து வணிகர்மகிழ் திருவருளை
நல்க வன்னோர், (ங)

4 அருளீட்டின் வயத்தாலே யணியார்ந்த விரங்கோனி
லடைந்து மிக்க
பொருளீட்டி வளர்கம்பை நகர்முருகக் கடவுளுறை
பொற்பார் கோயிற்
றெருளீட்டும் பேரன்பின் றிருப்பணியுற் சவம்பூசை
சிறப்பிற் செய்து
மருளோட்டிச் சுகநீட்டி வாழ்தேட்டின் வணிகர்செயும்
வண்மை தேர்ந்தே, (ச)

5 உலகுபுகழ் திருத்தொண்டை நாடென்னுஞ் சேயிழையி
னொளியார் நெற்றித்
திலகநிகர் காஞ்சிநகர் தனிலடியார்க் கெளிதருளச்
சிறப்பின் வைகிப்
பலகலைதேர் கச்சியப்பர் தமைக்கந்த புராணமது
பகரச் செய்தே
நலகருணை வேள்குமர கோட்டமுறை குகன்பூசை
நடத்தல் வேண்டி, (ரு)

6 செந்நெல்லுஞ் செம்பொன்னும் விளைகிராம
திட்டை செய்ய [மொன்றுபிர
நன்னலஞ்சேர் குமரகோட் டம்புகழ்சோ ணாசலபா
ரதிநா வல்லோ

னென்னயன மணியனையா னிரங்கோனி னகரத்தார்க்
    கின்பி னோத
வன்னவரு மன்னவனுட் பத்தியையும் புத்தியையு
    மன்பி னுய்ந்தே. (சா)

7 ஒருபதினு யிரரூபாய் முயன்றளித்தத் தொகையின்னு
    முயன்று சேர
விருபதினு யிரமளித்தோர் கிராமமது பதிட்டிக்க
    வின்பு கொண்டு
வருபதிவா ணிபர்காஞ்சி வண்குமர கோட்டம்போல்
    வளருங் கம்பைக்
குருபதிநா யகுகன்மேற் சேய்தமிழொன்
    கூறக் கேட்டே, [றிசைக்கவெனக் (எ)

8 உருக்கமுட னவருரைத்த மொழியமுதைச் செவி
    னுண்டு மேன்மேற் [வாயா
பெருக்கமுறு மன்பினொடு மப்பிள்ளைத் தமிழ்முதலாப்
    பேசும் பாவின்
வருக்கமமை கம்பைச்சந் நிதிமுறையென்
    மகிழ்ந்து போற்ற [றெவ்வெவரு
மருக்கமழுஞ் செங்கழுநீர் மாலையணி வேளாளர்
    மரபில் வந்தோன், (அ)

9 சோலைவளர் திருவண்ணு மலையருணு சலநாதர்
    தூய பாதங்
காலையினு மாலையினு மறவாது நெய்த்தீபங்
    களிப்பி னேற்றும்
வேலையெனுந் தொண்டினரு ளடையருண கிரிநாதன்
    விழைசேய் தேனுப்
பாலையுமுக் கனிபிழிந்த சாற்றையுநேர் மதுரகவி
    பாட வல்லோன், (கூ)

10 மாரதிநா யகன்றுதிகாஞ் சிக்குமர கோட்டகுகன்
மகிழும் பூசைச்
சீரதிகி ராமமது பதிட்டிக்க நகரத்தார்
செழிக்க வீசன்
சாரதிசூழ் செல்வநிறை கம்பைச்சந் நிதிமுறைசெந்
தமிழைச் சொற்ருன்
பாரதிசோ ணசலன்சொற் பாரதியுண் மகிழ்வளினிப்
பகர்வ தென்னே! (ம)

——

## சாத்துக் கவிகள்

சென்னை-புரசை ம-ா-ா-ஸ்ரீ.
இராமலிங்க முதலியார் குமாரரும்
புராணிகருமாகிய
**இ. வி. ஆரணி. அண்ணுமலை முதலியார் அவர்கள்**
இயற்றிய

**எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

11 கங்கையங் கதிரார் திங்கள்செஞ் சடிலன்
கற்றவர் வளைத்திடுங் கரத்தன்
மங்கையோர் பாகன் மாலயற் கரியன்
மறையகத் துறையரும் பொருள்சேர்
மங்கலப் பதிக்கெண் மங்கலப் பதியின்
வளந்தருங் கம்பையங் காஞ்சிப்
பொங்கொளிக் குமரப் புண்ணியக் கோட்டப்
புலவர்தம் முளம்புகுங் குகனே, (க)

12 குகன்சத மகன்மான் மகன்முதற் சுரர்தங்
கொடுந்துயர் சூருரங் கிழிவேன்
மகன்மல ரடிக்காம் பணிநில விருத்தி
வழங்கிவண் வருமகா கவிஞன்
சகம்புகழ் முருகன் சரோருகப் பதத்தே
சாற்றருஞ் சொன்மலர் புனைவை
திகந்திக ழமுதக் கவிமழை பொழிசீர்ச்
செல்வனு மிவனெனத் தேர்ந்தே, (உ)

13 சிவமணங் கமழுந் திருவெழுத் தைந்திற்
றிருமக டரும்பதத் தெட்டிற்
பவமெனுந் திரைக்கோர் புணையெனப் பகரும்
பதமுதற் கரத்தவ ரெனுஅத்
தவமுறு மெந்தை சங்கரன் றலத்தே
தரும்பணி தம்பணி யெனமா
நவமுறும் பொருளா லறப்பயிர் விளைக்கு
நற்றவர் நகரத்த ரவரே; (ங)

14 மண்டலத் திழைத்த வறப்பயன் விளைப்ப
வளம்படு போகங்க ளனைத்தும்
விண்டலத் துறுவ ரென்னுமிஃ தோர்ந்தே
மேலவ ருரையுரை சான்றும்
எண்டலத் துயிர்க்கு மிடந்தரு மிரங்கோ
னிரும்பதிச் செல்வர்தம் பயனைக்
கண்டலங் களிப்ப வித்தலந் துய்த்தல்
கண்டனங் கடவுண்மா நகரே. (ச)

15 அத்தகு தலத்தே மலருகு நறவ
மருந்தளி முரல்பல பொதும்பர்
வித்தகங் கமழச் சூழ்தருங் கம்பை
வியன்பதி வேன்முரு கையன்

இத்ததி யெவர்க்குந் திருவருள் சுரக்கு
மெம்பிரான் சந்நிதி முறைமுன்
சித்திரம் பெருக வியற்றுபு தருமா
செப்பினர் சீரிய ரவரே. (௫)

16 அவ்வுரை யமுத மஞ்செவி மடுத்தே
யணிபெறச் சொன்மல ராய்ந்தோர்
தெவ்வர்தம் மாயா வரையுரங் கிழித்தே
தேவர்கோற் கரும்பதி யளித்தங்
கெவ்வெவர் தமக்கு மிருந்துயர் துடைத்த
வெம்பிராற் கின்சுவை மணக்கு
மிவ்வுரை திரைசூ ழிருநிலத் திலங்க
விசைத்தன னிணையிலி யெனவே. (௬)

17 அன்னவ னெந்தாய் வள்ளிதெய் வானை
யருளொடு மிருபுறத் தொளிர்செய்
முன்னவன் முருக னெளிதரு ளெந்தை
மொய்ம்மலர்ப் பதமதே சதமென்
றுன்னருந் தூய பூதிசா தனமா
மொண்கலன் கலையெணி லுணர்ந்தோன்
பன்னருங் கவிசோ ணுசல சுசீல
பாரதி பாரதி வாழி. (௭)

—

இரங்கோன் ராயி பஹதூர் ஸ்ரீமான் பெ. மா.
மதுரைபிள்ளை யவர்களது ஹைஸ்கூல் தமிழ்த்
தலைமைப் பண்டிதரும் செந்தமிழ்
நாவலரும் சபாப்பிரசங்க
ரத்நாகரமுமாகிய
ம-௱-௱-ஸ்ரீ. பு. த. செய்யப்ப முதலியார் அவர்கள்
இயற்றிய

அகவற்பா

18 காசினி புகழுங் கனதன வாணிபர்
வைசிய குலத்துள் வளரெழு நகரோர்
தென்னா டெங்கணுஞ் சிறந்திட வாலய
மன்னிடக் கட்டிட மனவலி கொண்டோர்
வெள்ளியங் கிரியோன் விழுமிய கான்முளை
கள்ளவிழ் தாண்மலர் கனவிலு மறவார்
விருப்புறக் காஞ்சி மிளிர்தரு பதியோன்
அருணகிரி நாத னருள்சேய் குமர
கோட்ட சோணா சலபா ரதிதான்
தேட்டமா யுரைத்த திகழ்பெறு செய்யுள்
கம்பைச்சந் நிதிமுறை காணுவோ ரதன்பொருள்
செம்மையே நுகர்கால் செகதல மீதில்
என்னையா நந்த மிதயங் குவிய
இந்நில மிசைகொண் டேத்துவ ரென்கொலோ
கற்பனை யலங்கா ரக்கவி நயமும்
அற்புத விலக்கிய விலக்கண நயமும்
எப்படி யமைந்தன வென்போ மன்னே.

---

இரங்கூன் கமிஷன் வியாபாரம்

ம–௱–௱–ஸ்ரீ. சி. சொக்கநாதபிள்ளையவர்கள்

இயற்றிய

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

19 மதிதவழ் குடுமிப் பொங்கர்
மருங்குடுத் தெழில்சூழ் கம்பைப்
பதிதவழ் நுதிவே லெம்மான்
பன்னிரு புயஞ்செம் மாப்பத்
துதிதவழ் பனுவன் மாலை
சூட்டினன் றுறைசேர் சைவ
விதிதவழ் முதுநூற் கேள்வி
மேதகு புலமை யாளன், (க)

வேறு

20 அவியமையா வலினமரா ரேற்பமகம்
புரிகாஞ்சி யகத்து வந்தோன்
சுவையமைமென் மொழிவலவன் சோணுச
லப்பெரியோன் சுதையோ ரன்ன
கவியமைவுற் றுணர்ந்துசிர கம்பனஞ்செ
யாரெவர்கட் செவிவேந் தற்குச்
செவியமையா திருந்ததுவு முலகினிலை பெற
நிறுத்துஞ் செயன்மேற் கொண்டே. (உ)

———

ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணுக்கருளொருவராகிய
காரைக்குடி ம-ா-ா-ஸ்ரீ.
ராம. கு. ராம. சொக்கலிங்கச் செட்டியாரவர்கள்
இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

21 கைம்மலையிற் பொன்மலைவண் கனகமலை
யமலைமர கதமா மேனிப்
பைம்மலைநாப் பண்மலையாய்ப் பவளமலை
நிறக்குகன்கம் பைவாழ் செவ்வே
ளம்மலைவே லவற்கின்சொ லம்பொனிடைப்
பொன்மணிவைத் தலங்க றந்தான்
செம்மலையென் பொருள்புலமை தேற்றுசோ
ணுசலப்பேர் திகழ்நா வல்லோன்.

---

கண்டனூர் ம-ா-ா-ஸ்ரீ.
சி. வீர. வீரப்பச் செட்டியாரவர்கள் இயற்றியது.

வெண்பா

22 கம்பைநகர் வள்ளி கணவனுக்குச் சேய்கவியை
நம்பு மகிழ்வா னவின்றிட்டா—னம்புவியோ
ரெல்லாரு மெந்நலமு மெய்தவெழிற் கச்சிநகர்
நல்லாணுஞ் சோணு சலன். (க)

கட்டளைக் கலித்துறை

23 செல்வத் திருக்கம்பை மாநகர் வாழ்செந்தில்
வேலவற்குச்
சொல்வைத்த பிள்ளைக் கவியைப் பெருங்கவி
யாகச்சொற்ருன்
வில்வைத்த காஞ்சியுட் சோணு சலப்பெயர்
மேயநல்லோ
னல்வைத்த சித்தியும் புத்தியும் வந்தெய்த
நானிலமே. (உ)

---

புதுவயல் ம-௱-௱ஸ்ரீ.

நா. அ. சுப்பிரமணியச் செட்டியாரவர்கள்

இயற்றிய

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

24 கம்பைநதி நகருருவா யுற்றதனு லந்நகரங்
காஞ்சி யாகுங்
கும்பமுனிக் கருள்குமர னுறைகோயி லேகுமர
கோட்ட மாகு
நம்புமுரு கன்பிள்ளைத் தமிழ்கந்த புராணமென
நவில லாகு
மிம்பரினூல் சொல்சோணு சலன்கச்சி யப்பனென
வெண்ண லாமே. (க)

## வேறு

25 பிரம னாய்ந் தறியவொண்ணுப்
பெருஞ்சீர்க் கம்பை நகருறையு
முருகன் பிள்ளைத் தமிழுரைத்து
முன்னே னருண கிரிதனெடு
சரிய னெனுஞ்சோ ணசலப்பேர்
தாங்கு மிவனைத் தாங்குமிடம்
பெரிய காஞ்சிப் பதிக்குமர
கோட்ட மென்றே பேசுவரே. (உ)

———

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேலுமயிலுந்துணை

# கம்பைச் சந்நிதிமுறை

## பிள்ளைத் தமிழ்

### காப்பு

26 மாமேவு கயிலாய மலைமேல் வசந்தமணி
மண்டபத் தோவியத்துள்
வரைபிரண வக்கலைக டம்மைநம் மையநெடு
மாதேவி கண்கணோக்கக்

காமேவு களிறுபிடி யாய்க்கலந் துழியுலகு
காதலித் துய்யும்வண்ணங்
கருணையுரு வங்கொண்ட ஞானமத வைங்கரக்
கற்பகத் தைப்பரவுவாந்

தூமேவு சமயங்க ளோராறு மேத்துமோர்
சோதிமெய்ஞ் ஞானவடிவாய்த்
தோன்றுநங் குமரனைக் கொற்றவேல் வீரனைத்
தோகைமயி லேறுகுகனைப்

பூமேவு தெய்வதப் பிடியொடு குறக்கொடி
புணர்ந்துமகிழ் மணவாளனைப்
பொன்பொலி வளங்குலவு கம்பைவளர் முருகனைப்
போற்றுவண் டமிழ்தழையவே.





## காப்புப் பருவம்

### திருமால்

27 உலகனைத்து முழுதாகி யுயிர்களுக் குயிராகி
யோங்கரன் றனதுதொல்லை
யோராறு வதனநுதல் விழியாறு தீப்பொறியி
னுற்றெரியும் வாயுவுங்கொண்
டிலகவரு சுரநதியின் விடவநதி சரவணையி
னினிதுய்க்க வாறுமகவா
யின்பின்வளர் நங்கார்த்தி கேயனைக் கம்பைவள
ரினையோனை நனிபுரக்கத்
திலகநுதன் மாதிலக் குமிமின்ன வொண்கரச்
செந்தா மரைக்கணமருந்
திண்பாஞ்ச சன்னிய பிடிக்கநற் சார்ங்கமது
திகழோங்கு வான்வில்லிடக்
கலகவினை வெங்கோடை தணியமன் னுயிரெனுங்
கவினோங்கு பயிர்தழைப்பக்
கருணைமழை பொழிகட்க தண்டசக் கரதரண
கருமுகிலை வாழ்த்துதுமரோ. (க)

### நருமதேச்சுரர்

வேறு

28 இமகிரண மதியுமெரி விடவரவு முறவுகொடு
வினிதுவாழ் செஞ்சடைத் தோற்றனை
யிமையவர்கண் முறையிடமு னலைகடலில் வருகடுவு
ணெழிலுலா வுங்களத் தேற்றனை
நமபயம தகலுமென வழிபடுநன் மதலையெதிர்
நமனைவீ சும்பதக் கூற்றனை
நவநிலையின் மிசைநிலவு சிவனையடி யவர்பரவு
நருமதே சன்றனைப் போற்றுவாம்

விமலமுறு சதுமறையி னுளபொருளை யறிவரிய
விதியின்மே லுந்துநற் சீற்றனை
வியனுலகு கதியடைய வருளுமுயர் பிரமனென
மிளிரவே நின்றமெய்ச் சாற்றனை
யமரர்முனி வரர்நரர்கள் குமரகுரு வெனுமொலியி
னழகுசேர் கம்பையுட் பேற்றனை
யயிலவனை மயிலவனை யமலைதரு திருமகனை
யருளுமா கந்தனைக் காக்கவே. (உ)

சௌந்தரநாயகி யம்மை

வேறு

29 பாணுற்ற தும்புருவி னோடுற்ற தண்டுமுனி
பாடப் பணிந்தடியர் நின்றுமிக் கேத்தவே
பாதத் தணிந்தசதுர் வேதச் சிலம்பொலிகள்
பாரச் செழும்புவன மெங்குமுற் றார்க்கவே
தாணுற்ற வின்பநட மேவிக்க ணுண்டுயிர்க
டாமற்பி னுய்ந்திடமெ யின்பினிற் சேர்க்கவே
சாலப் பெருங்கருணை யேலப் பொழிந்திடுமோர்
தாயைச் சவுந்தர மடந்தையைப் போற்றுவா
மாணுற்ற வைந்தருவின் மேலுற் றருங்கனிகள்
வானத்தர் நுங்கவுத வும்பொழிற் சேக்கை
மாலுற்று வந்துதிரு மானிற் பிறந்தகுற [மேன்
மானைப் புணர்ந்தமுரு கன்றனக் கேற்றசீர்
காணுற் றகன்றிலது வாழ்வுற் றனன்பொருவு
காருற் றமர்ந்துதுயில் சுந்தரக் காட்சிசேர்
காதற் றலங்களினு மேருற்ற கம்பைவளர்
காளைக் குழந்தையையொர் கந்தனைக்
[காக்கவே. (ந)

## சித்தி விநாயகர்

வேறு

30 நலனுறு துதிக ணவின்றடி வணங்கி
நயந்துரு குழுவலன் பினர்க்குப்
பலன்மிக வளிக்குங் கம்பையம் பதிவாழ்
பாலவேற் குமரனைக் காக்க
இலகுவெண் கோடு மதம்பத மொன்றுன்
றிரண்டொடு கைகளு லொன்றும்
வலனுற மிகுந்து மறைந்திடக் குறமான்
வணங்கமுன் வருசித்தி யிபமே. (ச)

## திருநீறு

வேறு

31 மயர்வறு ஞான மாமணி விளக்கை
மன்னுசீர் மோனமெய்ந் நிலையை
வரத்தொடு போக்கி லாதநற் கதியை
வணங்குநர்க் களிக்குமொண் ணிதியைச்
செயமுறும் வடிவே லேந்துமெம் மரசைத்
தேவர்கள் சேனைநா யகனைத்
திகழ்பெறு கம்பை நகருறை கருணைச்
சேயனைத் தூயனைப் புரக்க
வுயர்சிவ மறையோன் விமலைபார்ப் பனியா
யூழியின் வெள்ளநீ ராக
வுலப்பிலா வண்ட மண்டப மாக
வுரைதரை வேதிகை யாமா
லயன்முத றேவ ரவிகளா வுயிர்க
ளாக்களா நுதற்கணுங் குண்டத்
தக்கினி யாற்செய் வேள்வியி லுதித்த
வற்புத பரமவெ ணீறே. (ரு)

### உருத்திராக்கம்

வேறு

32 மன்மணி யெனக்கொடு கவுத்துவ மணிந்தமணி
வண்ணனெண் கண்ணன்முதலாம்
வானவரு மணிமணி கிரீவசர ணசுரவிருண்
மாய்த்தெமைக் காக்குஞான
நன்மணி யளித்தியென் றேலிடக் கண்ணுத
னயந்துதவு குமரமணியாய்
நகரமணி யாங்கம்பை மேவுசுப் பிரமணிய
நாதனை யுவந்துகாக்க
பொன்மணி பளிங்குமணி சங்குமணி பவளமணி
புத்திரத் தீபமணியம்
புயமணி துழாய்மணியி ரசமணிவெண் முத்துமணி
பொலியுமா மணியாதியாம்
பன்மணி களுக்குஞ் சிரோமணிய தாகிப்
பரிந்தணிந் தார்கள்பாவம்
பாற்றியிக பரசுகந் தந்திடநிறைந்திடும்
பரசிவன் கண்ணின்மணியே. (சு)

### பஞ்சாக்கரம்

வேறு

33 மறப்பெருஞ் சூர்மா மரனட்ட வேலு
மயிலுமென் றேத்துநர் வாழுஞ்
சிறப்பெலா நிறைந்த கம்பையம் பதிவாழ்
திகழ்சடக் கரன்றனைப் புரக்க
பிறப்பெனுங் கடற்கோர் பெரும்புணை யாகிப்
பேரின்ப முத்தியங் கரைசேர்த்
தறப்பெருந் தாயை யப்பனைக் காட்டு
மஞ்செழுத் தாயமந் திரமே. (எ)

## திருமகள்

வேறு

34 மாயவனை மாகினக் காசையார் மீதென்ன
மாலுமென் புகல்வன்மற்றென்
மார்பினுறை பூமங்கை நீயென்ன மண்ணுண்ட
வாய்ச்சொனிச் சயமதாமே
யேயவனை வண்டுழாய்க் காட்டினிற் கார்வமிலை
யேயென விருந்தைக்குமே
லினியைநீ யென்றுநகை புரியுமால் சொற்சுவைக்
கிளகுபொன் மகளைநினைவா
மேயவனை முத்துவெண் சாந்தாற்றி நவமணி
விளங்குநவ நிலைசெய்துமா
மேருகிரி நிகரோங்கு சிகரிமுகி லிரவிமதி
மீன்மண் டலத்தளாவி
நேயவனை மார்களாங் கார்த்திகைப் பெண்களை
நெருங்கிமுரு கையனெண்சீர்
நிகழவுரை செயவடைந் தென்னவளர் கம்பையுண்
ணிமலனைக் காக்கவென்றே. (அ)

## கலைமகள்

35 கள்ளையுண் டளியினங் கானஞ்செய் வெள்ளையங்
கஞ்சா தனத்தினுஞ்செங்
கஞ்சா தனக்கிழவ னுவா தனத்தினுங்
காதலி னுறைந்துகவினுர்
வெள்ளையணி வெள்ளையுடை பூண்டுடுத் தொளிர்
வெள்ளையாய்க் கொண்டவதனன் [மேனி
வெள்ளைமதி யினனென்று தள்ளாதெ னுள்ளமும்
விரும்பியமர் தாயைநினைவாம்
பிள்ளைமதி வேணியணி பித்தருக் கினியவோர்
பிள்ளையா யவதரித்தும்
பிரணவ மகாமந்தி ரோபதே சஞ்செய்த
பெரியகுரு நாதனுகிக்

கிள்ளையை யகற்றல்போற் கூய்ப்புனத் துறைகுறக்
கிள்ளையைக் களவுசெய்த
கிழவனைக் குமரனைக் கம்பைவரு பாலனைக்
கேண்மையொடு காக்கவென்றே. (சு)

பிரமன், சத்தமாதர், இந்திரன், பலதேவர்.

வேறு

36 செப்பத்து விதப்பொருளாய்க் காஞ்சி காசி
திருநகர்வா ழும்மையப்பர் திகழுங் கண்ணே
யொப்பத்துப் பிதழ்மடவார் பாட லோவா
வுயர்கம்பை யுறைகுகனை யுவந்து காக்க
விப்பத்துத் திசைப்புவனம் படைக்கும் வேத
னெழுமாதர் சதகோடி யேந்துங் கையான்
முப்பத்து முக்கோடி தேவர் யார்க்கு
முகமலர்ந்து பலகோடி முகமன் சொல்வாம். (ம)

காப்புப் பருவம் முற்றிற்று.

---

## செங்கீரைப் பருவம்

37 பொங்கார வாரக் கடற்கடுவுண் மூர்த்திமெய்ப்
புளகார வணைபிராட்டி
புனிதநீ ராட்டிவெண ணீற்றிநெடு நெற்றியிற்
பொட்டிட்டு முச்சிமுடிமேற்

றங்கார வண்சுட்டி நாற்றிவிழி கட்குமை
தரித்தொளிர் செவிக்கரதனத்
தங்கக் குதம்பைசாத் திப்பொன்னி னரைஞாண்
டயங்குறப் பூட்டிமதுரக்

கொங்கார மலரடிக் காரணப் பரிபுரங்
கூட்டியா லத்திசுற்றிக்
கொங்கையமு தூட்டிநற் றெட்டிலிட் டாட்டவிசை
கூர்ந்துகேட் டமர்குழந்தாய்
தெங்கார வளர்சோலை சூழ்கம்பை வாழ்குமர
செங்கீரை யாடியருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடியருளே. (கக)

38 வசையுற்ற வசுரர்தலை கீழாக வானாட்டு
வாழ்சுரர்க டலையெடுப்ப
மதலையங் குதலைமொழி வேட்டெம்பி ராட்டியிம
மலையாட்டி தலையாட்டிமிக்
கசையுற் றகங்களிக் கத்தலை யெடுத்துமோ
தலையுற்ற கடலுடுத்த
வவனிமட மங்கைகைம் மலரேந்த விருகைமல
ரமையவூன் றித்தமுடிமே
னசையுற்ற வன்பாளர் கரமலர் குவித்துமுக
நளினமலர் வுற்றுநோக்க
நவில்வேத முடிமே னடிக்குமடி களினென்றை
நன்குற முடக்கியொன்றைத்
திசையுற்ற தவமல்க நீட்டிவளர் கம்பைவேள்
செங்கீரை யாடியருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடியருளே. (கஉ)

39 நன்காஞ் சிவாகமமெ யன்பாய் வினவியுமை
நவிலரிய கயிலைநீங்கி
நண்ணிமறை மாவடி முளைத்தருள் பரஞ்சோதி
நாதனைச் சைகதத்தான்

முன்காஞ்சி யங்கம்பை யாற்றிடை யமைத்துரை
முறைப்படி புரிந்தபூசை
முடியுமுன் கம்பேச னேவவந் நதிமாது
முடுகிவர லோர்ந்தச்சுருப்
பொன்காஞ்சி யலையுற வெழுந்தேல வார்குழலி
பூங்கரத் தாலணைக்கப்
பூண்குருகு மென்முலைக் குருகுகம் பேசர்மேற்
புலவியிற் கம்பையனைசேர்
தென்காஞ்சி யிதெனக் கம்பையமர் குமரவேள்
செங்கீரை யாடியருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடியருளே. (கரு)

பார்கொண்ட மன்பதைகள் பத்தியொடு மூழ்கவவர்
பவமெலாம் பாற்றுகங்கை
படியுற்று மாசொரீஇப் பரிசுத்தை யாயுறப்
பாலிக்கு மான்மியத்தாற்
பேர்கொண்ட கச்சிவளர் கம்பைகம் பன்பாற்
பிணக்குற்றி விடையடைந்த
பெற்றியது கண்டவர நதியிவணோர் நதியெனப்
பிரியாது வைகினளென
வேர்கொண்ட விசுவேச னருள்விசா லாட்சியு
மிசைந்தீண்டை மருவினர்கொலா
மென்றறியு மயனுமா கண்டலனு மண்டர்களு
மியல்வரு நரருநண்ணுஞ்
சீர்கொண்ட காசியாங் கம்பைவளர் குமரவேள்
செங்கீரை யாடியருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடியருளே. (கசு)

41 உண்மையறி வானந்த வுருவாய சிவபிரா
னுமையம்மை யிருவருந்தா
மோரைந்து கத்தரா யைஞ்சத்தி யாய்விரிந்
துலகெலா மைந்தொழில்செயும்

வண்மையான் வேதாகம மாதிய புராணங்கள்
வாய்மையி னெடுத்துரைக்கு
மற்றந்த மாதேவ தேவிகண் மைந்தனுய்
மத்தியி னமர்ந்தெமக்கே

யண்மையா யானந்த மயமா யிரண்டற
வகண்டமாம் வடிவினேங்கு
மப்பனீ யம்மைநீ வேறில்லை யென்பதை
யறிந்தியா முய்யும்வண்ணந்

திண்மையாய்க் காட்டிவண் கம்பைவளர் குமரவேள்
செங்கீரை யாடியருளே
சிங்கார வள்ளிக் கலங்கார மணவாள
செங்கீரை யாடியருளே. (கரு)

வேறு

42 மஞ்ஞையை யஞ்சர வந்தந் தன்ன
மணிச்சுட் டியதாட
வதன சரோருக மார்கதிர் நேர்குழை
வண்கா தினிலாட

விஞ்சிய நகையொளி நிகர்முத் தாரம்
வியன்மார் பினிலாட
விரியுல கங்குடி கொண்டிடு பண்டி
விளங்கி யசைந்தாட

வெஞ்சலின் மேரு வளைந்த மணிப்பணி
யெனவரை வடமாட
வெய்த்தய ஹுதையுண் டந்தன கிண்கிணி
யிருசர ணத்தாட
வஞ்சலி செய்தன் பாளர்க ளாடிட
வாடுக செங்கீரை
வம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
ஞடுக செங்கீரை. (கஉ)

43 செய்யபொன் மேனி விபாகர ஞெளியிற்
செறிவல் லிருளிறவே
திகழ்முக மதிபொழி திருவமு தால்வெந்
தீவினை விடமறவே
வெய்யவர் கெடவளர் புயமலை யாலிம்
மேதினி யெழில்பெறவே
மிளிர்செவ் வாயூ றலினதி யாலருள்
விளைவுகண் மிகவுறவே
துய்ய கடைக்கணி ஞேக்கான் மன்னுயிர்
தொல்பசி தான்றெறவே
சுகநிலை தந்திடு கந்த மஞேகர
தொண்டர்க டம்முறவே
யைய மஞேகர வற்புத வறுமுக
ஞடுக செங்கீரை
யம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
ஞடுக செங்கீரை. (கஎ)

44 இன்பி னெடுத்து வளர்த்த விளம்பிடி
யென்னரு மந்தமகட்
கேற்ற மணுள னிருந்திரு நாட்டி
னிருந்திடு மன்னுயிர்காள்

வன்பிற வித்துயர் தீர்க்கு மருந்தவன்
வண்பத ரேணுவெனு
வாய்மை யறிந்து வணங்குதிர் நும்மிடை
வண்மை புரிந்திடுவா

னன்புல னுடுக வென்றயி ராவதி
நதியென வுற்றதெனு
ஞானியர் மோனியர் சித்தர்கள் பத்தர்க
ளுடொறு மூழ்கவொலித்

தன்பொடு பெருகயி ராவதி நாட்டவ
னுடுக செங்கீரை
யம்பரர் சூழ்சுக கம்பையுள் வாழ்குக
னுடுக செங்கீரை. (கஅ)

வேறு.

45 திண்புய வேடுவர் தந்தவ நங்காய் சென்றேவார்
சிந்துவி னார்புன லுண்டு செறிந்தே தையம்பாலாய்
நண்புயன் மேன்மை யடைந்தது கண்டே நன்றுய்வா
னம்பிய சோமன் முகம்பெற நின்று னண்பாய்நீ
வண்புன மூடெனை யின்பொ டணைந்தா ளன்பாய்நான்
வந்தனை யேவல் புரிந்திடு கின்றே னென்றேகான்
கண்புனை மானை யணைந்தவ செங்கோ செங்கீரை
கம்பையுண் மேவி யமர்ந்தவ செங்கோ செங்கீரை.(சுக)

46 இந்திரி யாடவி வென்றவர் சென்றே றும்பாரே
யின்புட னுடுற முந்துறு முந்தே முந்தாறே
யந்தர மாதிய வெங்கு மணஞ்சூ ழும்பூவே
யன்புடை யாருணர் வின்சுவை தந்தூறுந்
[தேனே

பைந்தொடி தாயுமை சிந்தை யெனும்பூ வண்டே
　　பங்கினன் வீணையி னின்றெழு தண்சேர் [யோர்
கந்த தயாபர சுந்தர செங்கோ செங்கீரை [பண்சீரே
　　கம்பையுண் மேவி யமர்ந்தவ செங்கோ
　　　　　　　　செங்கீரை. (உ०)

செங்கீரைப் பருவம் முற்றிற்று.

---

## தாலப் பருவம்

47 கருதற் கரிய வல்விடத்தைக்
　　களத்தி னடக்கு மிறைமாறன்
களிப்பி னளித்த முளையனத்திற்
　　காதல் புரிந்தா னவன்கண் வந்தே

நிருதக் கடுவைக் களத்தடக்கி
　　நிமலற் கமிழ்தொவ் வாதென்றே
நீண்மைப் பகட்டு வயிரவல
　　நிகழேர் பூட்டிப் பயிர்செய்யப்

பொருதக் கயற்க ணரம்பையரைப்
　　புலவர் தம்மைப் போகிவிட்டாற்
போலு முழத்தி மாருழவர்
　　புனிதச் சாலி விளைவிக்கு

மருதப் பணைசூழ் கம்பைநகர்
　　வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
　　மதலாய் தாலோ தாலேலோ. (உக)

48 புனிதச் சாலி யதைச்சாறு
பொழியுங் கருப்பஞ் சோலையதைப்
பொலியுங் கதலிச் சோலையதைப்
பூகச் சோலை யதையிளநீ
ரினிதுற் றுயர்தெங் கஞ்சோலை
யெழிலா வதைமாஞ் சோலையுஞ்சூழ்ந்
திசைவே லியதாய் வளர்ந்தோங்கி
யிருங்கற் பகச்சோ லையையண்மி
வனிதைப் பிடியைக் குறக்கொடியை
மருவி யரசா யெங்கிழலின்
வதிந்தான் முருகன் புகழெமக்கோ
மற்று முமக்கோ வெனவசையு
மனிதச் சுவர்க்க மெனுங்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. (உஉ)

49 துய்ய பளிக்கு மேடையிடைத்
துலங்கு மணிப்பொற் றம்பமிசைத்
தூக்குந் துவச வெண்படம்போய்ச்
சுவர்க்கத் தலத்தி னுலவல்கண்டே
யுய்ய னமக்கென் வையமதி
யுற்ற தெனவான் மதிமதிகெட்
டோடி மேலைக் கடற்பாய
வுதனை யழைத்தாங் கதுவசையச்
செய்ய சுடரை யங்காளிற்
றேடு மெகின மெனமறுநாட்
டிரும்பிச் சீலை யெனநாணுந்
திங்கண் மருவி யுடற்பொதிந்த

மைய லகல மகிழ்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. (உரு)

50 சுகந்த மலர்ச்சேக் கையின் முயங்கத்
துணையோ டமர்ந்த வரசவன்னத்
தோற்ற மனையான் மற்றொருத்தி
சுகத்தை நினைத்தா னெனவனையா
ளுகந்த துரைத்தி யெனவெவர்தன
முறச்சிந் தித்தே னெனவுளதிங்
குணர்க வெனக்காட் டெனச்சுவர்க்க
மோர்தி யெனவம் மகவானும்
புகுந்த துளதோ வெனநீயே
போகி யெனச்சான் றியாதெனப்பின்
பொருந்துங் கண்க ளெனநகைத்துப்
பூவை வண்டாய்ப் புணர்ந்தனன் போன்
மகிழ்ந்து பலர்வாழ் மனைக்கம்பை
வரதா தாலோ தாலேலோ
வரைவேந் துதவு பரையேந்து
மதலாய் தாலோ தாலேலோ. (உச)

51 மயங்கு மிரவா மடமாதை
மருட்டிப் பகலாங் காரிகையை
மணந்து நளின மகப்பூத்து
மகிழ்செஞ் சுடரோன் வான்வழியி
னியங்கு முருளை யொன் றுடைத்தே
ரிவுளி நிறத்தை யுறநோக்கி
யிமையோர் வேந்து வெண்புரவி
யீதே தென்னப் பாகனுந்தான்

றியங்கு நீயார் தினகரனே
திகழு மதியோ செப்புகெனச்
சிந்தை மருள வெண்சாந்து
தீற்றிக் குளிர்மை செயுமாடம்

வயங்கும் வளஞ்சேர் கம்பைநகர்
வரதா தாலோ தாலேலோ
வரைநீவந் துதவு பரையீந்து
மதலாய் தாலோ தாலேலோ. (உரு)

வேறு

52 பெத்த மகன்றவ ருக்கரன் வைத்த
பெருங்கரு ணைத்திருவே
பேருல குய்ந்திட வம்மை வளர்த்த
பெருந்தரு மத்துருவே

கைத்தல மேல்வளை வைத்திடு மாமடி
கட்கொர் கவுத்துவமே
கஞ்ச மலர்த்திரு வாகிய மாமி
களித்திழை மெய்த்தவமே

யத்திசை மாமுக னேச்சிறை வைத்துல
கருளிய விதிநெறியே
யைங்கர கரியின் பின்வரு மீரா
றங்கர கோளரியே

சத்துவ நிதியே கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீப கலார சுகந்தா
தாலோ தாலேலோ. (உசு)

53 இமய மடக்கொடி செய்தவ மாற்றுதி
யென்றெனை நன்றேவி
யிளகி யவட்கரு ளிச்சுவ டுற்றன
னேகம் பேசனெனத்
தமியள் புலந்தலை வாரியின் வீழ்ந்திடு
தன்மை யறிந்தனையே
சார்குவ னின்னெ டெனப்புகு சரவண
சாமியை யேந்தியடைந்
தமையவொர் நன்னக ராகி யமர்த்தி
யடுத்தவர் வல்வினை தீர்த்
தார்ந்தனள் கம்பை யெனக்கா மாட்சியு
மையனு மகிழ்பதியாந்
தமிழொலி குலவிய கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீப கலார சுகந்தா
தாலோ தாலேலோ. (உஎ)

54 ஆதியு மத்தியு மந்தமு மில்லதோ
ரற்புத பரவெளியே
யன்பர்கள் கண்டு மகிழ்ந்திட நாடக
மாடிய சுகவொளியே
வேதமொ டாகம மார்க்கமி தென்ன
விளம்புறு பைங்கிளியே
விழைசக வாழ்வு நிலாதென விட்டவர்
விட்டு விடாத்தெளியே
யோது மிரண்டற வொன்றுபு நின்றவ
ருற்றிட வருளளியே
யொப்பறு பத்தி யெனப்படு மெய்ப்பொரு
ளுய்த்திடு பொற்றளியே

தாதவிழ் நந்தன கம்பைக் கரசே
தாலோ தாலேலோ
சம்பக நீப கலார சுகந்தா
தாலோ தாலேலோ. (உஅ)

வேறு

55 பூதாதி தந்த வபூதா போதா தாலேலோ
போதா ரயன்றுதி போதா மேதா தாலேலோ
தீதான விண்ட வதீதா வீதா தாலேலோ
சீதா மகிழ்ந்துறை சீதா நீதா தாலேலோ
தாதார் கடம்பணி தாதா கீதா தாலேலோ
சாதா பலந்தெறு சாதா வேதா தாலேலோ
வாதாளர் கண்ட விவாதா சூதா தாலேலோ
மாதான கம்பையுண் மாதா நாதா தாலேலோ. (உகூ)

56 சூலா யுதன்றரு பாலா தாலோ தாலேலோ
தோலாத செந்தமிழ் நூலா தாலோ தாலேலோ
மாலா ரணன்றுதி காலா தாலோ தாலேலோ
வாலாயர் தொண்டனு கூலா தாலோ தாலேலோ
சீலா கரம்பெறு கோலா தாலோ தாலேலோ
சேலார்க ணங்கொடி மாலா தாலோ தாலேலோ
வேலா யுதங்கர லீலா தாலோ தாலேலோ
மேலான கம்பையுண் மூலா தாலோ தாலேலோ (நய)

தாலப் பருவம் முற்றிற்று.

---

## சப்பாணிப் பருவம்

57 மழைவயிறு கடல்வயிறு கீண்டமாக் கீண்டெம்மை
வாழ்வித்த வேற்பாணிதன்
வன்புயக் கந்திெனுரு பெண்யா னையைக்கட்டி
வைத்தகன் மார்பைவடுவிற்

குழைவுறச் சமர்செயச் செய்வனென் றேபுயங்
கொட்டுகுலி சப்பாணிமுன்
கூர்ந்துதவு தெய்வயா னையைமணந் தவளுங்
குலாவிழி கொட்டாதுசேர்
விழைவொடு தினைப்புனத் தெயினர்கள் வளர்த்
மென்முலைக் கோட்டானை தன் [துய்த்த
மெய்யழகு நாரதன் விளம்புமுன் சளவியலின்
வேட்டிடுவ னினிதினென் றுத்
தழைவுறு தடம்புயங் கொட்டுவன சப்பாணி
சப்பாணி கொட்டியருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே. (நக)

58 ஒண்சார்ங்க பாணியுங் கரகபா ணியும்விண் ணி
னுறுகுலிச பாணியுந்தாழ்ந்
தோவாம லஞ்சலிசெய் பாணியொடு துதிகயிலை
யுற்றகல் லாணிழற்கீ
ழெண்சார்ந்த சனகாதி நால்வருக் கறநெறி
யினைப்பாணி காட்டியிசையா
திசைசூல பாணிக்கு மகவாயு முபதேச
மினிதுரைசெய் வடிவுமாற்றி
மண்கூர்ந்த கிழவுருத் தண்டபா ணியினண்மி
மகிழுமங் குசபாணியா
மால்யானை யான்மருட் டித்தெளித் தருள்கூர்ந்து
மற்றுமொ ரிராவள்ளிமான்
தண்காந்த ளம்பாணி பற்றுவன சப்பாணி
சப்பாணி கொட்டியருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே. (நஉ)

59 மண்டல மடந்தைதமுக மண்டல மெனுங்காஞ்சி
வளநகர்க் கண்ணின் மணியா
வளர்மணிக் குமரகோட் டத்தருச் சகராய
மாக்கச்சி யப்பமறையோர்

கொண்டநன் கனவிடைத் திகடசக் கரமெனக்
கூறுமொழி முன்கொடேத்திக்
குதுகலித் துத்தினமொர் நூறுகவி செய்தருள்
குலாவத்த சாமத்தினிற்

கண்டவர்கள் பவநீக்கு சந்நிதியின் வைத்துமெய்க்
காப்பிட் டகன்றிடப்பின்
கற்பவர்கள் கேட்பவர்கள் யாவர்களு முய்ந்திடக்
கந்தப் புராணமெனுமத்

தண்டமிழ் சிறப்பத் திருத்துவன சப்பாணி
சப்பாணி கொட்டியருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே. (நரு)

60 மதுமுகம் பில்கிமது கரம்விருந் துண்டுண்டு
மழலையம் பாண்மிழற்றும்
வண்கடம் பணிபன் னிரண்டுமலை சிறிதசைய
மாமேரு மலையுமலையும்

விதுமுகக் ககனமும் பெரிதசைய லக்கர்நவ
வீரரொடு விளையாடுநாள்
வெண்கயிலை மலையினிம மலையுதவு விமலைமகிழ்
மேவுசெம் மலைவணங்கிப்

புதுமுக னெனப்போது மவனைநீ யாரெனப்
போதனென மறைபோமெனிற்
புகலென்று புகலுமுன நிற்றியப் பிரணவப்
பொருள்பகர்தி யெனவிழிக்குஞ்

சதுமுகன் றலையினிற் குட்டுவன சப்பாணி
சப்பாணி கொட்டியருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே. (நச)

61 ஒப்பாரு மிக்காரு மில்லாத பொற்பாரு
முமையம்மை திருவுளங்கூர்ந்
தோவாது கண்மலர் பரப்பியின் புறமுனிவ
ரோரிருவர் தம்பொருட்டான்

வைப்பான சிற்சபையி னற்பாத மலர்நோவ
மற்றுநட் டுவனிலாதே
வள்ளலெந் தாதைபுரி திருவருட் கூத்துக்கு
வன்பொய்முன் சொற்றதன்றிச்

செப்பா ரணப்பொரு டெரிக்காமை யாலுஞ்
சிவப்பான தலையன்கொலாஞ்
சீர்த்தாள மார்ப்பது தகாதுநா லுசான்
சிறப்பா யமைப்பேனெனுத்

தப்பாம னன்குமின பொற்பாணி யொற்றல்போற்
சப்பாணி கொட்டியருளே
சம்பகா டவிமருவு கம்பைமா நகர்முருக
சப்பாணி கொட்டியருளே. (நரு)

வேறு

62 மஞ்சுநிற வஞ்சருட னஞ்சுகுடர் பிஞ்சலற
மட்டிலுதி ரத்தாறுபோய்
மண்டிய கருங்கடலொர் செங்கட லெனும்படி
வகுக்குமயி லுெட்டேவுசேய்

விஞ்சுபல வண்டமு மடங்கலு மதிர் திங்ட
விசைக்குமயி லுற்றூருவோன்
விண்டுடுவை வெண்பொரி யினுங்கிமகிழ் செஞ்
மிக்கொளிர் கொடிச்சேவலோ [சுடிகை

னெஞ்சலில் கடுந்திறல்கொ ளொன்பதின்மர் நன்
யிலக்கரோ டடற்பூதர்கோ [றுணை
னின்பமுறு மன்பர்சுர ரிந்திரன் முகுந்தனய
னிச்சைதரு மிக்கானவேள்

குஞ்சரி செழுங்குறவர் வஞ்சியணை யுங்குமர
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுதி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. (௬௬)

63 எங்கடவு ளுங்கடவு ளென்றமர் செயும்பலரு
மிக்கடவுண் மெய்த்தேவெனு
வின்புடன ணைந்துபல நன்றுதிபு கன்றுமன
மெத்தனை நினைத்தாலுமே

யங்கவைகள் சங்கையில தங்கைநெலி யங்கனியி
னற்பினெடு பெற்றேயுய்வா
னங்கயிலை யின்கணுறை சங்கரர் பெருங்கருணை
யச்சண்முக முற்றேகியோர்

நங்கள்புவ னங்குலவு தென்றிசை மகிழ்ந்துபுரி
நற்றவனின் வெற்பூரெலா
நங்கைசுரர் தம்பிடியும் வெங்குறவர் பைங்கொடியு
நட்டகட வுட்டாருநேர்

கொங்கலர் கடம்பலர நின்றென விளங்குருக
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுதி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. (௬௭)

64 அந்தணன ரும்பதமு மஞ்சனவ ணன்பதமு
மற்புறு சுவர்க்காதியா
மங்கவையும் வந்திடினு மங்கவை சிறந்தவென
வற்பமு நினைப்போமலோ
மெந்திட மிருந்திடினு மெங்கண்முரு கன்பத
மிசைப்பது மறக்கோமெனு
மின்பநிலை நின்றவென தன்பர்பத கஞ்செய்கில
ரெய்ப்பிலவ ரிப்பாரின்மே
னந்துவினை பின்செயினு நன்றென வுவந்திடுது
நற்குறவர் பொற்பாவையே
நம்பிவரை விண்டிடென வெம்பழி புகன்றிடினு
நட்புமிக வைப்பேனெனுக்
கொந்தலர்க ரம்பொர விளம்பரு ளிளங்குமர
கொட்டியருள் சப்பாணியே
கும்பமுநி துங்கர்துதி கம்பைவதி யெங்கள்பதி
கொட்டியருள் சப்பாணியே. (௩அ)

வேறு

65 கங்கா தரசிவ வென்றே பலகலை
கற்றவர் சொற்றாரேல்
கஞ்சா னனமமு தஞ்சேர் நகையின
கத்திடர் பட்டேயோர்
பங்கா ருமையுறி லெங்கோ னெடியது
பற்றறு விப்பானோர்
பஞ்சா ரடியின் வணங்கா முனமமை
பக்க மிகுத்தாய்தா
னங்கா சறவணை யுஞ்சீ ரிதுவென
வற்புட னுற்றோரீ
ரந்தா மரைக ளுடன்றார் கடலை
யளித்திரெ னைப்பாநீள்

கொங்கார் கரமலர் கொண்டே குருபர
கொட்டுக சப்பாணி
கும்பா ரியன்மகிழ் கம்பா புரகுக
கொட்டுக சப்பாணி. (௩௯)

66 வன்று ரகனை யவன்சார் மலையை
வடித்த புலத்தோனே
மங்கா தெதிர்புகு சிங்கா னனனை
மடித்த வலத்தோனே
யன்றூர் கலியிடை வன்கூ ரழிய
வடர்த்த சலத்தோனே
யண்டா திபனை மகிழ்ந்தே சுரரோ
டளித்த நலத்தோனே
துன்று ரணநெறி நின்றுய் குநர்தம
சுத்த குலத்தோனே
தொண்டாய் வருமவ ரன்பாய் மருவு
சுவர்க்க தலத்தோனே
குன்று டறுமுக வென்றூர் தமதருள்
கொட்டுக சப்பாணி
கும்பா ரியன்மகிழ் கம்பா புரகுக
கொட்டுக சப்பாணி. (௪0)

சப்பாணிப் பருவம் முற்றிற்று.

---

## முத்தப் பருவம்

67 அடாதன புரிந்தவசு ரக்குழுவை வாரிமுன
மயில்வேற் கருத்துமழகற்
கருளினங் குஞ்சரியை மற்றுமென் சீதன
மளிப்பதென் ருேர்ந்துமகவான்

கொடாநின் றநிதிகாம தேனுசிந் தாமணி
குளிர்ந்தகற் பகமேகமுங்
கூடிவள னுதவவயி ராவதமொர் நதியிற்
குலாவுகென வுதவுநாட்டின்
விடாமகிழ்வி னுழவர்கள் படாமுலை யுழத்தியர்
விருப்பின்முட் கோலெடாமன்
மேவியேர் பூட்டியவர் மென்றூளை வெல்லவயல்
விளைசெங் கரும்பொடித்துக்
கடாமுதுகின் முத்துறச் செய்யுழுங் கம்பைவேள்
கனிவாயின் முத்தமருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்தமருளே. (சஎ)

68 ஈராமை தாங்கமே லீரர விருப்பமிசை
யிருமந் தரங்களோங்க
விணையிலா விருகட லிருந்துமிசை யோரமுத
மேற்குமெளி யேன்களிக்கத்
தாராமை யென்கொலோ தையனல் லாயுனைத்
தஞ்சடைந் தேனென்னநற்
சதிர்பேசி யொத்தமன திற்கூடு கணவனென்
றனைவிடுத் தேகியின்னும்
வாராமை யான்வந்து சேராமை யான்மனம்
வருந்துவன் வருந்தாமைநீ
மணவாள னுக்கோதி வருகென்னு முன்னோதி
வருசுகச் சொல்லின்மகிழ்கூர்
காராமை யோதியிற் பலர்குலவு கம்பைவேள்
கனிவாயின் முத்தமருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்தமருளே. (சஅ)

69 தெளிகொண்ட சரியையுங் கிரியையு மியோகமுந்
தேர்ந்துமேன் ஞானமரபாற்
சேராது தீமைபுரி யாராயி னுஞ்சரி
சிரத்தையொடு சிறிதுநேர

மொளிகொண்ட கைலாய கிரிமேய வரநேய
வுமைசேய கார்த்திகேய
வோஞ்சரவ ணேற்பவா வென்றருண கிரிநாத
னேதுபுக ழோதுவாரே

லளிகொண்ட வாடவர்கள் கற்பினுயர் மாதருட
னன்பினொடு மவரையண்மி
யார்ந்துபணி விடைபுரிந் துணவாதி நல்கியவ
ரருள்பெற்று மகவாதிசேர்க்

களிகொண்ட மனையறம் பேணிவாழ் கம்பைவேள்
கனிவாயின் முத்தமருளே
கச்சியே கம்பர்தரு சச்சிதா னந்தகுரு
கனிவாயின் முத்தமருளே. (சா)

வேறு

70 வயங்கும் பொன்னார் சடைப்பெருமான்
வலக்க ணாகிப் பகற்கதிராய்
வருபாற் கரனுக் கினியனென
வளரும் பெருமை யுரைக்ககிலேன்

றயங்குந் திரைநீர்ப் பூக்களுக்குத்
தனிவேந் தாகி முத்துயிர்க்குந்
தன்மை யுடையே னெனக்கொருநீ
சரியன் றெனுந்தா மரைக்குடைந்து

மயங்குங் குமுத மதியுடன்போய்
　　வருந்தித் தவஞ்செய் துன்னருளான்
மகிழ்வுற் றடைந்த பெருவாழ்வின்
　　மாண்பி தென்றே யடியர்கண்கண்
முயங்கும் வதனச் செவ்வாயின்
　　முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
　　முத்தே முத்தந் தருகவே.　　(சுசு)

71 போந்து காரைக் காற்கனிக்குப்
　　புதுமாங் கனியொ ரிரண்டளித்த
புனித னல்வாய்த் தமையனுக்குப்
　　புசிக்க வொருமாங் கனிகொடுத்து
மாந்து கென்று தனக்கியாதும்
　　வழங்கா மையினக் கனிமரத்தை
மாய்ப்பான் போலச் சூர்மாவை
　　மாய்க்க மகிழ்ந்து கைம்மாருக்
காந்து குலிசப் பாணிதன
　　கற்ப தருவிற் கனிந்தவத்திக்
கனியொன் றளிப்ப மிசைந்துபினுங்
　　களவிற் புனமாக் கனியைவெளவி
மோந்து சுவைத்த செங்கனிவாய்
　　முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
　　முத்தே முத்தந் தருகவே.　　(சுரு)

72 தில்லை யரும்புஞ் சிற்சபையிற்
　　றிருக்கூத் தரும்புந் திருத்ாதை
சிவகா மித்தா யிருவோருஞ்
　　சிந்தை மகிழ மிருதலனைக்

குல்லை யரும்பும் புயமாமக்
கொண்ட லமரு மொருநிலனைக்
கோதை மாரு மாடவருங்
கூட வளைந்து நறையரும்பும்

வில்லை யரும்பு முவகையிற்கொள்
வேண்மைத் துனனார் படைக்கலனா
விரும்பத் திணைப்பூம் புனத்தெயினர்
விரும்பி வளர்த்த கொடிக்குமுத

முல்லை யரும்ப வரும்புநின் வாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. (சசு)

73 ஈனம் பழுத்த வைம்பாசத்
திடராற் றிடராப் பவக்கடல்வீழ்ந்
தேறுந் துறையொன் றறியாதே
யிச்சை யலையா னெற்றுண்டே

யூனம் பழுத்த வெழுவகையா
முருவுற் றுழலு மவர்நிற்ப
வுருவு மருவு முருவருவு
மோரோன் பானுங் கடந்தப்பான்

ஞானம் பழுத்த திருவாளர்
நானீ யென்னா துணர்ந்துவந்த
நயமாய் நிறைந்த பரமசிவ
நம்ப னார்தந் திருச்செவியின்

மோனம் பழுத்த செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர் (௬எ)
முத்தே முத்தந் தருகவே.

74 அம்மை மடியி னமருநினை
யமலக் கமலத் தணங்குவந்தே
யாசை மருக நின்றூறற்
காசை யுடையே னருளுகெனச்
செம்மை நிறத்துத் திருமாமி
செய்வ னவ்வா றெனக்கென்னே
திரும்பக் கைம்மா றளிப்பதுநீ
செப்பு கெனநின் றிருமார்பிற்
கொம்மை முலையின் ஞெமுங்கவணை
குறப்பெ ணளிப்ப னெனக்கள்ளக்
குறவற் பிடித்த குறத்திகொலோ
கோகனகையோ வெனக்கைதட்டி
மும்மை யுலகும் வெளுக்கநகை
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவுங் கம்பைவளர்
முத்தே முத்தந் தருகவே. (௬அ)

வேறு

75 அண்ட ரண்ட முந்து லங்க
வவிர்ம குடசி ரத்தனே
யங்க தங்க டங்கி டங்கொ
ளமல விருப தத்தனே
யெண்டி கந்த மும்பி றங்க
விசைப னிருபு யத்தனே
யின்பு னம்பு ரந்த நங்கை
யிளக வணையு ரத்தனே

கண்டு கொண்ட தொண்ட ரன்பு
கமழ வளர்சு கத்தனே
கந்த வண்க டம்பி னென்சொல்
கருது கருணை யத்தனே
முண்ட கன்ப ணிந்து கெஞ்சு
முதல்வ தருக முத்தமே
முந்து கம்பை வந்துகந்த
முருக தருக முத்தமே. (சகூ)

76 வன்பு லன்க ளைந்தெறிந்து
வனனின் மருவி நித்தமே
மண்டு மஞ்சி ஞென் றி நின் று
மதியி னமுது துய்த்துமே
லென்பு டப்பு கொண்டி ருந்த
விணையி லவரு மெட்டொணு
திங்கு மங்கு மெங்கு மொன்ற
தெனுமொர் சொருப வத்துவே
நன்பு னங்கொ ணங்கை கொங்கை
நயன வயிலே நத்தியே
நம்பு மன்பு கொண்ட ணைந்து
நலனை யுதவு நித்தனே
முன்பு தொண்டர் கண்டு கொண்ட
முதல்வ தருக முத்தமே
முந்து கம்பை வந்து கந்த
முருக தருக முத்தமே. (ருO)

முத்தப் பருவம் முற்றிற்று,

———

## வருகைப் பருவம்

77 அம்பொன்மணி நூபுரக் கிண்கிணி பரிக்குர
லடிக்கமல வண்டிஞர்ப்ப
வரையிலணி மணிகிண்கி ணெனுமோசை
யுலகுயிர்க ளஞ்செவிக் கமுதம்வார்ப்பச்
செம்பொன்மலை யருவியின் முத்தார வணிமாலை
திகழ்சன்ன வீரமிளிரச்
செவிமகர குண்டலம் புயகிரி யுதித்தவா
தித்தமண் டலம்விளக்கப்
பைம்பொன்மலர் வதனச்செ வாம்பறரு குழவியிற்
பான்முல்லை நிலவெறிப்பப்
பட்டமுஞ் சூழியச் சுட்டியுந் திலதமும்
பன்னிருகண் மலருமொளிரக்
கம்பன்மடி காமாட்சி யம்மைமடி யிற்குலவு
கந்தநா யகன்வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வருகவே. (௫௧)

78 பனிமா மலைக்கரசு தந்தவுமை யம்மையும்
பரமனும் விரும்பிநோக்கிப்
பரிவின்மக் காள்வருக வென்றலும் விகடகண
பதிபெரிய ஞனுதலா
னனியாசை கொண்டுசெல் வன்செல்வன் முன்னென
நடக்கவண் ணலுனதுசொன்
னன்றுநீ பெரியன்வத னத்திஞே கையிஞே
நயனத்தி ஞேவாயிஞே
முனியாது கூறுகென வாறுமுக வயதினே
மொழிவதென் னெனவயிற்று

முக்கியம் பெரியனுன் றந்தைக்கு முபதேச
மொழிராய குருயாரெனுக்
கனிவா யதுக்கிழு வருமகிழ விளநகைசெய்
கந்தநா யகன்வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வருகவே. (ருஉ)

79 அங்கைமிசை வருகென்ன மலைமாது மலைமாது
மன்புட னழைக்கவழையா
தார்வமொடு நோக்குபு விருக்குமை யன்கரத்
தண்மியிள நகைசெய்நின்னை
யெங்கைமேல் வந்துமடி மேற்குலவு மறிவுள்ள
வேந்தலிவ் வன்னைமார்க
ளிருவரி னினக்காசை யார்மீது கூறுகென
வெம்பிரான் யான்சொல்வதென்
சங்கையில் லாதறன் மாதாவின் மேலெனத்
தாய்மாரும் யான்யானெனச்
சமர்செய விராறுகண் பன்னிரா யிரமெனத்
தழைவுறக் கண்டுகளிகூர்
கங்கைமக னம்பிகை மகன்பரமன் மகனெங்கள்
கந்தநா யகன்வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வருகவே. (ருங)

80 அலசற வுலகையொரு நொடியின்வலம் வருமவற்
கருள்வனென வெனையகற்றி
யடிவலஞ் செய்தா னெனப்பெரு வயிற்றனுக்
கன்பின்மாங் கனியளித்தி

குலசயில மெட்டூர்ந்து கண்டநா வற்பழங்
கொய்தருந் துவனெனுமேற்
குதிகொளு நினக்கது கொடுங்காஞ் சிரங்காய்
குமட்டுமெனு மாளையையா
சிலசமய நின்னுசை மகனேச வருமுனது
தின்னுயிர் விடுப்பனென்னுச்
சீக்கிரம் போய்க்களம் பற்றவிக் கிப்பரன்
றிக்குமுக் காடவம்மை
கலசமாங் கனியமுதி துண்கென விடுத்துவரு
கந்தநா யகன்வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வருகவே. (ருச)

81 தண்ணங் கடுக்கையணி யண்ணற்கு வேதத்
தனிப்பொருளு மம்மையார்க்குச்
சந்தோட முங்கரி முகத்தமை யனுர்க்குத்
தடம்புய பராக்கிரமமுநீண்
மண்ணன் றளந்தமாற் காழியும் பிரமற்கு
வையம் படைக்குமுறையு
மகவான் றனக்கரசு மிந்திரா ணிக்குநன்
மங்கிலிய முஞ்சுரர்க்கு
விண்ணகமு முனிவர்க்கு ஞானமும் வள்ளியெனு
மெல்லிக்கு மமரர்யானை
மின்னுக்கு மிருபாலு முருககுரு பரகுமர
வேளென்னு மன்புளோர்க்குக்
கண்ணருட் டிருவடியு முறைமையி னளித்திடுங்
கந்தநாயகன் வருகவே
கந்தமலர் நந்தவன சுந்தர மிகுந்தகன
கம்பைவாழ் குகன்வருகவே. (ருரு)

வேறு

82 கஞ்சத் தவிசிற் றிருவன்னர்
கனஞ்சேர் குழற்கூட் டகிற்புகையுங்
கழனி விளையுங் கழைச்சாறு
காய்ச்சும் புகையு மனைதோறு
நெஞ்சத் துவப்பின் விருந்தோம்பி
நிதமுஞ் சுவைச்சோ றடுபுகையு
நிகமா கமத்தின் முறைமறையோர்
நீட்டும் வேள்விப் புகையுடன்பாய்த்
தஞ்சத் தருள்சண் முகப்பெருமான்
சந்நி தானத் தன்பரிடுந்
தகுகுங் குலியப் புகையுமொன்ருய்த்
தழைத்து முகிலாய்ப் பொழிவதென
மஞ்செப் பொழுதும் பொழிகம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. (ருசு)

83 தளஞ்சால் வனச முகங்காட்டத்
தண்ணங் குமுதம் வாய்காட்டத்
தரள நிரைக ணகைகாட்டத்
தயங்கு நீலங் கண்காட்ட
வளஞ்சால் வள்ளை செவிகாட்ட
வப்பு நிலைநன் கவுள்காட்ட
வளையுங் குமிழி முலைகாட்ட
வவிரும் பாசி குழல்காட்ட
வுளஞ்சா லன்பி னீராட
வுற்ற மடவார் தங்கணவர்க்

குயிரன் ஞர்வா ழுறையுளென
ஆடி யுடன்று லெனத்திளைக்கும்
வளஞ்சால் குளஞ்சால் புனற்கம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. (ருஎ)

84 முருகா வென்றோர் காற்சொலுமுன்
முக்கா லெனத்தன் னிருகாலின்
முகிண்மென் முலையாள் வள்ளியம்மை
மோகத் தினும்வே கத்தவர்க
ளருகா வடைந்து வேண்டியவா
றருளிச் சேவன் மயிலயிலு
மவரைக் காக்க வெளிநிறுவி
யகத்தா மரைபூம் புனமாகப்
பெருகார் வமதாம் வள்ளியுடன்
பிரியாப் பிரிய முடனுறையும்
பெருஞ்சீர்க் கருணைத் திறன்றெரிந்த
பெரியோ ரன்பா யுருகியரி
மருகா முருகா வெனுங்கம்பை
வள்ளால் வருக வருகவே
மதுரைச் சங்கப் புலவர்சிகா
மணியே வருக வருகவே. (ருஅ)

வேறு

85 அலகி லுலக முழுது மொளிர
வன்பி னுதய பருதியே
யரனு மரியு மயனு மகிழு
மந்த ணமுத மதியமே

யிலகு மிமய குமரி யுதவு
மின்ப நிறையு மதலையே
யினிய துதிசெ யடியர் நிதமு
மெங்கு மறியு முருவமே
வலிய வெனது கொடிய மனதின்
வந்து நிலவு சொருபமே
வனனின் மருவு குறவர் தமது
வண்டு நுகரு நறவமே
கலவ மயில்க ளகவு பொழில்கொள்
கம்பை முருக வருகவே
கருணை வடிவி னடன மிடுமோர்
கந்தன் வருக வருகவே. (ருக)

86 அதுலன் வருக வபயன் வருக
வண்ட ரதிபன் வருகவே
யமலன் வருக குமரன் வருக
வன்ப ரிறைவன் வருகவே
சதுரன் வருக தருணன் வருக
சம்பு குரவன் வருகவே
சரசன் வருக சுகுணன் வருக
சண்ட மயிலன் வருகவே
புதியன் வருக பழையன் வருக
பொங்கு மமுதன் வருகவே
புனிதன் வருக புலவன் வருக
புந்தி முதல்வன் வருகவே
கதியை யருண னகர சிகர
கம்பை முருகன் வருகவே
கருணை வடிவி னடன மிடுமோர்
கந்தன் வருக வருகவே. (சூவ)

வருகைப் பருவம் முற்றிற்று.

## அம்புலிப் பருவம்

87 தேனூர் கடுக்கையணி செஞ்சடைத் தாதையின்
றிகழ்விழியின் வளர்வ தாலோ
தீக்கடவுண் மைந்தனென வந்ததோர்ந்
சேரும்வடி வங்குறித்தோ [தோகலைகள்
வானுட ருக்கமுத முதவுவது நோக்கியோ
மாலையுங் காலையுந்தான்
மலைமேவு வாழ்க்கைகண் டோவுலகெ லாமுய்ய
வண்ணிழல்செய் சீர்மைகொண்டோ
மானூர்க ளாயகார்த் திகைவிசா கமுமன்பு
மருவவரு வதுநாடியோ
வடிவேற் குமாரனுந் தன்னைநிகர் நண்பனென
மற்றுனை யழைக்கலுற்ற
ஞானு னின்செல்வ மென்செல்வ மாதலா
லம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுக)

88 கனகமலை நித்தன்மரு கோனிவனு நீயுமோ
கனகமலை நித்தன்மருகோன்
கயவல்லி கண்மன்ற லோனிவனு நீயுமோ
கயவல்லி கண்மன்றலோன்
பனகமிசை யுறவிருந் தோனிவனு நீயுமோ
பனகமிசை யுறவிருந்தோன்
பருவத்து வந்தமெய் யோனிவனு நீயுமோ
பருவத்து வந்தமெய்யோன்
வனகலா தாரிசே யோனிவனு நீயுமோ
வனகலா தாரிசேயோன்

வரதவப யக்கரத் தோனிவனு நீயுமோ
வரதவப யக்கரத்தோ
னனகனிவ னுக்குநீ சொல்லொத்தி பொருளல்லை
யம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுஉ)

89 வெம்பரிதி கொளவீந்த கலைகள்பின் கவர்தியிவன்
வேண்டியீந் தனகவர்வுருன்
மேவுகுன் ருென்றிரண் டுண்டுனக் கிவனுக்கு
விளையாட வெண்ணில்குன் ருந்
தம்பமாய்க் கடைகடலி ஞெந்தசைந் தாயிவன்
றன்னிலையி லணுவுமசையான்
ருயின்வா யலறவரு வாயிவன் ருயர்க
டழைத்துவாய் வாழ்த்தவருவா
னம்பன்முக் கண்ணிஞெரு கண்ணு யிருத்தியிவன்
ஞானக்கண் மணியாயிஞ
ஞடிநின் னினுமதிக னிவனென்று யாநின்று
நவில்வதொரு பொருளன்றுகா
ணம்பொன்மலை நங்கையரு மந்ததிரு மைந்தனுட
னம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுங)

90 மைம்முக விராகினை விடாவவ் விராவிவனை
வாழ்த்துமவ ரையுமடைவுரு
வானிரவி யைக்கண்டு கூசுதியவ் விரவிவன்
வடிவே லொளிக்கஞ்சுமால்

பைம்முக வராவினுக் கஞ்சுதியவ் வரவிவன்
பரியினுக் கஞ்சுநாளும்
பயவாரி நீந்துதிய வாரியிவ னடிபரவு
பண்ணவற் கோருமுந்தா
நைம்முக களங்கநீ யகளங்க னிவனிவை
நயர்ந்துணர்தி மதியல்லையோ
நங்கள்சேய்க் கெவ்வழியு மெள்ளளவு மொப்பல்லை
நாடினொரு கோடிசான்ற
மைம்முகக் கடவுண்மகி ழறுமுகக் குருமணியோ
டம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுச)

91 தேய்மதிய னுகென்ன நின்னுடைய சின்னமதி
தேர்ந்துவெஞ் சாபமிட்ட
சிறுவிதியை முன்றரும் பெருவிதியை யன்றருஞ்
சிரமதிற் குட்டியன்னன்
றாய்மதி முகங்கவிழ வவமதி புரிந்துபின்
சுமதிவர வருள்செய்தவித்
தோன்றனீ சற்குரு துரோகியென் றேநன்கு
தோற்றியு மழைக்கவேயுங்
காய்மதி லெரித்தவன் றலைமே லிருந்திடுங்
கனசெல்வ முடையேனெனுக்
கருமங்கொ ணீயிவன் காலுதையி னுலொரு
கறங்கிற் சுழன்றுவீழ்தி
யாய்மதிகெ டுதியுனது பேய்மதிவி டுதிசடுதி
யம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுரு)

92 மயலகன் றோர்க்குமரி தானவிக் குருராசன்
வாவென நினைக்கூவியும்
வரவில்லை யென்றுசின வுந்தோறும் வேடுவர்
மடக்கொடியென் மாமடிகளார்
கயலகன் கண்மாமி மகிழநட மாடினர்
கடுப்பநின தாடலியானுங்
காண்குற விரும்பின னெனப்பிணங் கிடிலுனது
காட்சிவத னப்பகைஞனே
முயலக னெனப்பதத் தூன்றியா டும்பொழுது
முதுகிறு மெனப்பயந்தே
முன்வரற் கஞ்சின னெனத்தப்பு வித்தனம்
மோசம்வரு மினிநிற்றியே
லயலகன் பழிபடுதி யன்பரன் புக்கெளிய
னம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (௯௨)

93 சிவனென்ன வரியென்ன வயனென்ன விந்திரன்
றேவர்முனி வோர்களென்னச்
செகதலத் தோரென்ன விவரெலாஞ் சந்ததஞ்
சிந்தித்து வந்திக்குமோ
ரிவனென்ன நீயென்ன விவனுனை யழைத்திடற்
கென்னமா தவமிழைத்தா
யேனென்ன விதுவரையும் வந்துகேட் டாயில்லை
யென்னநின் னிறுமாப்புகா
ணுவனென்ன நின்றநவ வீருண் முதல்வீர
னுற்றுனைக் காலாலுதைத்
தொருசகட் டினினுருட் டிக்கொண்டு வருவனிது
வுண்மைநீ யுய்யவெண்ணி

னவனென்ன வவளென்ன வதுவென்ன நின்றவனொ
டம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுஎ)

94 கமலமட மங்கைவத னத்தழகு காண்பளக்
கரியமுகில் வண்ணனுஞ்செங்
கண்ணழகு காண்பன்வளர் கலைவாணி சொல்லழகு
காண்பண்முக் கட்டாதையும்

விமலமுறு சொற்பொருளி னழகுகாண் பன்விதி
வியன்கரத் தழகுகாண்பான்
வீறுதோ ளழகிந்தி ராணிகாண் பாளும்பர்
வேந்துவே லழகுகாண்பா

னிமலமன வடியரடி யழகுகாண் பார்கவுரி
நின்றுபின் னழகுகாண்பா
ணின்னொத்த வாதித்தன் வடிவழகு காண்பனொரு
நீயுமவ ரொடுகுழுமியே

யமலமென் னகையழகு காணலாஞ் சமயமீ
தம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுஅ)

95 சொற்கால மிருமூன்று மன்பர்க ளழைக்குமுன்
றுன்னுற வணங்கிமிக்க
துதிசெய்து கதியெய்து சந்நிதா னப்பெருமை
சொல்லுதற் கெளியதலநீ

முற்கால முற்றமா பாபமுஞ் சாபமும்
மோயாத கயரோகமும்
முயலெனுங் கறையும்வரு கோட்கஞ்சு குறையு
முதுகூனு நீங்கவென்றூற் [மெய்ம்

றற்காலம் வந்திடுக வுய்யலாஞ் சரவணத்
தனயனு மழைக்கலுற்ருன்
ருதைபா லஞ்சுதலை யுண்டிவன் பாலாறு
தலையுண் டமர்ந்துவாழ்வா
யற்கால மதியுனது நற்கால மிக்கால
மம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சுகூ)

96 முகிலாண்ட வண்ணமா துலனிதய மாமியா
முளரிமா னெடுபாற்கடன்
மொய்யழற் றந்தைமுக மன்பனைமத்திரி
முனித்தகை விழிக்கண்வந்தாய்
நிகிலாண்ட பிண்டமு நிறைந்தசங் கரபிதர
நேத்திரத் தினுமமர்ந்தாய்
நின்னையம் முறையினெம் முறையினு யினுமன்பி
னீவா வெனக்கூவினுன்
புகிலாண்ட லைத்துவச வெமதாண் டவன்கருணை
பூண்டள வளாவிவாழ்வாய்
புலனறி கலாநிதி மதிக்கடவு ளுன்பெரும்
புண்ணியத் தவமென்கொலோ
வகிலாண்ட கோடிபிர மாண்டநா யககுகனெ
டம்புலீ யாடவாவே
யம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (எ0)

அம்புலிப் பருவம் முற்றிற்று.

——

## சிற்றிற் பருவம்

97 பிறக்கும் வயிரச் சிலையடுப்பும்
பெருஞ்செம் மணிதீக் கனல்விறகும்
பெட்பி னுயர்பொன் பாத்திரமும்
பெய்யு முலைநற் பனிநீரு

நிறக்கும் வெண்முத் தரிசியுமாய்
நீடுஞ் சிறுசோ றட்டுமற்றை
நீல மணியா தியகறியாய்
நிலவ வண்மைத்து வல்லிருளைத

துறக்கும் பவள விளக்கேற்றிச்
சுரிமென் குழலே மணல்வீட்டிற்
சுவாமி நினக்கே படைத்திடுவேஞ்
சுரக்குங் கருணை புரிந்தெமக்கே

சிறக்கும் விருந்தாய் வருஞ்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எக)

98 வேதத் தனிமா வடிமுளைத்த
விமலச் சுடரை வெண்மணலான்
விதியி னமைத்தா கமப்படியே
விரும்பிக் கவுரி பூசைசெயும்

போதத் ததனை யழிப்பதற்குப்
பொங்கி யெழுநின் னகரன்னை
புரிந்தி யாஞ்செய் மணல்வீட்டைப்
பொள்ளென் றழிக்கப் போதியென

வோதத் தடையின் மழவிடைபோ
ஓற்ருய் கொல்லோ வுளத்தாலு
முனக்கு முன்ருய் தனக்குமந்தோ
வொருபுன் பிழையுஞ் செய்தறியோஞ்
சீதத் தளிர்ச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எஉ)

99 உன்ரு யுமையிவ் வுலகமெலா
முவந்தோர் சிற்றி லெனவயர
வுந்தை கணத்தி னழிக்குமவ்வா
றெருநீ முறையிற் புகுந்தாயே
னன்ருய்க் குறவர் வளர்த்தகொடி
நாகர் வளர்த்த விளம்பிடியு
நாடி யிழைக்கும் வண்டன்மனை
யோடி யழித்தி நவில்வார்யா
ரின்ரு யத்தோ டியாமிழைத்த
வெழிலார் மனையை யழிப்பதனுக்
கென்ன முறையோ நினைப்புனைந்திங்
கினிது விடுத்த வன்னையின்பாற்
சென்ருய்ந் தறிதி யருட்குழந்தாய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எங)

100 ஆசு படியு மசுரமின்ன
ரல்லே நினக்கே யகம்படிமைக்
கன்பு படியு மனமுடையே
மமைக்கு மணல்வீ டழிப்பாயேற்

பாசு படியு மிலேக்காவிற்
பமரம் படியு மலர்க்கடம்பின்
பைந்தார் மணக்குந் திருமேனி
படியும் விசும்பு மாசுபட

மாசு படியு மைப்படியும்
வாட்க ணீலி யுன்னுடைய
மாதா வறிந்தா லெப்படியோ
மற்றப் படியாம் படிப்பதென்னே

தேசு படியுஞ் சிவப்படியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எச)

101 ஒருத்தி மணநா யகனாக
வொருத்தி மணப்பெ ணாகவமைத்
துள்ள பலரு மவரவருக்
குவந்த படியே முறையியற்றி

யருத்தி யுடன்யாம் வண்டன்மண
மயர விழைக்குஞ் சிறுவீட்டை
யழித்த லழகா வுலகேழு
மளித்தா ளளித்த வழகாநீ

யிருத்தி மணநா யகனாக
யாங்க ணினக்கே மணமுடிப்பே
மெல்லாச் சிறப்புஞ் செய்கின்றே
மெயின மடவாட் குரைக்ககிலேங்

திருத்தி மனையை யலங்கரிப்பேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எரு)

102 அற்ப முடையே மணல்வீட்டி
னமைக்கும் பவள விளக்கவித்தே
யகல்கின் ருயை யென்புரிவோ
மனந்த மறைக்கு மெட்டரியாய்

பற்பஃ றிசையுங் காணுகின்ருய்
பாட லாடல் புரிகின்ருய்
பண்ணுக் குறும்பும் பண்ணுகின்ருய்
பார்வை யுள்ளு நுழைகின்ருய்

கற்ப தருவே மலர்மருவே
கனியே கனியி னறுஞ்சுவையே
கண்ணீ ராரு வுடையை யெமைக்
கண்ணீ ராருச் செயனன்ரே

சிற்ப குமர குருசரணஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எசு)

103 சூரவா ரணிமுன் மணந்திருப்பத்
தூய வமுதங் கிடைத்திருப்பத்
தொழுவோர் பலருஞ் சூழ்ந்திருப்பச்
சொல்லா தகன்று தினைப்புனத்திற்

குரவா ரணிமைக் குழற்குறத்தி
கொடுத்த தினைமா வுண்டுமதன்
கோபந் தணித்தி யென்றுகரங்
கூப்பி மருவி யொருவிமற்ரே

ரிரவா ரணியந் தனினடந்தவ்
வெயின மானைத் திருடினையென்
றிகழ்ந்த துளதோ வன்றியுமென்
னிழைத்தோம் பிழைத்தோ மெனினழித்தி

திரவா ரணிதன் சிறுகுமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எஎ)

104 காரார் மலக்கா டறுத்தவர்தங்
கரண மொருப்பட் டினிதமரக்
கவின்செய் பனிரு கரக்கன்றே
கனன்றெஞ் சிற்றி லழித்தியெனிற்

போரார் சூரு ரழித்ததுவும்
பொன்னு டமரர்க் களித்ததுவும்
பொய்யாய் முடியு மையாநீ
புலவர் பெருமா னறியாயோ

நீரார் பெருக்கா னிதநிதமு
நீண்மீன் வான்மீ னெடுமோதி
நிழல்செய் மதியைத் தன்னிடத்தே
நிறுத்த முயலும் விதமுகளுஞ்

சீரா ரயிரா வதிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எஅ)

105 தறைசூழ் கலையின் வளைசிந்தா
சமனம் புரிந்து வளர்விந்தா
சலத்தை யடக்கி யுயர்சந்தா
சலத்தி னமர்ந்த முனிக்கிந்தா

வுறைதி யெனத்தா ள்கந்தந்தா
யுனது பெருமைக் கினிதுவந்தா
முனுற்று மெமது மனையுந்தா
வுதைக்கத் தகுமோ வுரையெந்தாய்

மறையோன் றொழுஞ்சங் கரன்மைந்தா
மலைமா னளித்த வுயர்சிந்தா
மணியே நெடுமான் மகிழ்செந்தா
மரையாண் மருகா வானந்தா
சிறைதீ ரமரர் புகழ்கந்தா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எசு)

106 வில்வச் சடையோன் வெள்ளிமலை
விளங்கு மதன்பாற் கந்தமலை
மேரு மலைமந் தரமலையவ்
விமய மலைவேங் கடமலைசெங்
கல்வத் தணிகை மலைவேடர்
களிப்பி னமரும் வள்ளிமலை
கனஞ்சேர் மயிலை மலைமுதலாக்
கணக்கின் மலையுஞ் செழுநகரு
நல்வைப் பிடங்க டொறுநாளு
நயந்து நனிவீற் றிருந்தருணீ
நங்கள் சிறுவீ டழிப்பதென்னே
நவிலும் படைவீ டாறுவந்துஞ்
செல்வக் குமர கோட்டமமர்
சேயே சிற்றில் சிதையேலே
திருவார் கம்பா புரிவேளே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (அ0)

சிற்றிற் பருவம் முற்றிற்று.

---

# சிறுபறைப் பருவம்

107 பெருநா டவிர்ந்திடா தான்றமெய்ப் புண்ணியம்
பெட்பினெடு செய்யினுந்தாம்
பேணுமுடல் விட்டுத் தனிப்புகுந் தின்புறும்
பேறுதரு பெருமைபெறுமைந்

தருநாடு போலாது சூற்குழவி கைக்குழவி
தனயர்மனை வியர்நட்பினோர்
தம்மொடுந் தங்களைப் பொந்தியொடு கொண்டுதிரி
சங்குகண் டாவல் கொள்ள

வருநா டொறுங்கலன் விமானத்தி னேற்றியவ்
வாழிவா யொலிமுழங்க
வருவித்து வரிசைதந் தோங்குபொன் னுடென்ன
வளமிக்க வயிராவதித்

திருநாட வருள்கூட மகிழ்நீட வற்புதச்
சிறுபறை முழக்கியருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கியருளே. (அக)

108 காவெலாம் பூவெலாம் வண்டெலாங் கள்ளுண்டு
கானஞ்செய் கனமுழக்குங்
கனியெலாங் கிளியெலாந் தின்றுநற் பேச்செலாங்
கழறிமகிழ் பெருமுழக்குந்

தீவெலா மணம்வீசு நளினமலர் தடமெலாஞ்
செறியும்வெள் வளைமுழக்குஞ்
செய்யெலாம் பயிரெலாஞ் செய்யுழவ ரேரோட்டு
சீர்ப்பாட்டி னிசைமுழக்கு

மாவெலாங் குடிகொண்ட மனையெலாங் கல்யாண
வாழ்த்துவாச் சியமுழக்கும்
வாய்ந்தவயி ராவதத் திருநாட வென்றன்பர்
வாயெலாந் துதிமுழக்குந்
தேவெலாம் புகழ்முழக் குஞ்செவி யெலாங்கொண்டு
சிறுபறை முழக்கியருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கியருளே (அஉ)

109 நீர்பூத்த மகுடகோ டீரதாண் டவமூர்த்தி
நீடமரு கத்தினொலியு
நீனிறக் கொண்டல்வண் ணக்கண்ணன் மத்தள
நிரப்பொலியு நளினசனத்
தேர்பூத்த நான்முகக் கிழவனெண் டாளத்தி
னெழுமொலியும் வீரவாண
னீரா யிரங்கையிற் குடமுழ முழக்கொலியு
மிணையிலாப் பானுகம்பன்
பேர்பூத்த சங்கொலியு மிருவர்நல் யாழிற்
பிறங்கொலியு மேனை யொலியும்
பிரணவா சாரிநின் சிறுபறையி னொலியிற்
பிறந்தபர மாணுவொலிபோற்
சீர்பூத்த பேரொலிக் கவதியுண் டோமெலச்
சிறுபறை முழக்கியருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கியருளே. (அங)

110 நுந்தாதை யம்பலத் தாடுமா னந்தநட
நோக்காது நோக்கிமகிழ்கூர்
நுண்ணிடைப் பெருமுலைப்பெருமாட்டி நஞ்சேய்
நொடிக்கும் பறைக்கிணங்க

வந்தா ளெடுத்தாட வருமே நுமக்கென்ன
வன்பினுரை யாடநகைசெய்
தாரியன் கல்விசீ டன்றெரிவ னறிதியென
வரனுட வயனுமாலுந்
தந்தாள மத்தளந் தடுமாறி நிற்கநீர்
சண்முகக் குருவையண்மித்
தான்கற்று வருதிரென வந்துன தருட்சந்நி
தானத்தி னேத்துகின்றூர்
செந்தா மரைச்சிறு கரங்கொடு பயப்பயச்
சிறுபறை முழக்கியருளே
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கியருளே. (அச)

111 அத்தனீ யெமதருமை யன்னைநீ தெய்வநீ
யாபத் தகற்றியன்பா
யாதரிக் குங்கருணை வள்ளனீ மாரனீ
யாண்மையுள விசயனீயென்
றெத்தனை விதஞ்சொலி யுலோபரைத் தண்டமி
ழியற்றினு மிரக்கஞ்செயா
ரிலக்கண விலக்கியக் கற்பனைக் கவியா
விறைஞ்சியெனை யேத்தவேண்டா
பித்தனெடு நீலியும் பெறுதகப் பன்சாமி
பெருவயிற் ருன்றம்பியப்
பேய்ச்சிமுலை யுண்டகள் வன்மருகன் வேடுவப்
பெண்மணவ னென்றேசினுஞ்
சித்தமகி ழருள்செய்து மென்றே முழக்கல்போற்
சிறுபறை முழக்கியருளே.
செம்பொனக ருக்கினிய கம்பைநக ருக்கிறைவ
சிறுபறை முழக்கியருளே. (அரு)

வேறு

112 போதி லயன்சம வேதியர் நீதி
பொருந்துநல் வேந்தர்பெரும்
புண்ணியம் வளரப் பொருள்வளர் வாணிபர்
பூமி திருத்துபுவெண்
மாதிர மகிழ்வுற நெற்பயிர் முதல
வளர்ப்பவ ரேனையரு
மன்னி வளர்ந்திடு சீரயி ராவதி
வளநா டுடையரசே
வாதி லெதிர்ந்திடு மைம்புல வேடரை
வாட்டுமெய்ஞ் ஞானமெனும்
வாளுடை யோகியர் காதின் மடுக்குறும்
வண்டச நாதமெனக்
கோதில் குஞ்சர சோதி தயாபர
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. (அகூ)

113 பஞ்சர வஞ்சுக நாடொறு மன்பர்கள்
பாடு திருப்புகழைப்
பழகிய வண்ணம் பாட வதற்குப்
பமரம திசைகூட்ட
வஞ்சர ளப்பொழி லமர்முகின் முழவ
மதிர்த்திட மயிலாட
வழகித ழித்தலை யசையாப் பொன்சொரி
யயிரா வதிநாடா

வெஞ்சர வவுணரை வென்றொரு குஞ்சர
மெல்லி மணங்கொடுபோய்
மிக்குள வந்தரது துந்துபி வினவியவ்
விண்ணகர் வீதியின்வெண்

குஞ்சர மிவருங் கடவுட் கோளரி
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. (அஎ)

114 மண்டல நரமங் கையர்நீ ரெங்களை
மானுவி ரோவென்று
வான்மட வார்சொல வானர மங்கையிர்
மற்றுமை யொப்பலமென்

றண்ட மடந்தையர் நாணுற நகைசெய்
தரிவைய ரமரநிவந்
தரமிய மாடம் பொன்னுட் டுயருந
லயிரா வதிநாடா

பண்டரு கிளவி யுழத்திகண் மோகப்
பள்ளர்கள் பண்ணைதொறும்
பன்மலை யொப்பிட நென்மலை குவியப்
பயிரிட மழைபொழியக்

கொண்டன் முழக்கென மயில்க ணடிக்கக்
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே (அஅ)

115 வானே வளியே கனலே புனலே
மண்ணே வளைகடலே
மலையே பொழிலே தருவே மலரே
மதுவே பரிமளமே

யூனே யூனின துடலே யுடலின
துயிரே யுயிருணர்வே
யுணர்வுக் கொளியே யொளியினு ளொளியே
யோங்கிய பூரணமே
தானே தானய் வளர்தரும் வாழ்வே
சத்தே சிற்சுகமே
சட்சம யங்களு மற்புறு மற்புத
சண்முக வருள்வடிவக்
கோனே நின்னுரு வுலகதி ராமே
கொட்டுக சிறுபறையே
கோபுர முயர்கம் பாபுர குமரன்
கொட்டுக சிறுபறையே. (அசு)

வேறு

116 சென்டார் முலையமு துண்டார் கெனுமுமை
செங்கர மலர்மருவே
சிந்தா மணிநிதி யைந்தா ருவுநினே
திப்பிய சுரதருவே
கண்டா தரவொடு தொண்டா யமர்நெறி
கற்றவ ரடைதிருவே
கஞ்சா தனவிதி மஞ்சார் நிறவரி
கட்கொளி தருகருவே
திண்டா னவரெனும் விண்டார் கெடவரு
செற்றம துளவுருவே
செஞ்சே வடிகொடு செஞ்சே மெனநடி
சிற்பர சிவகுருவே

கொண்டா டுநர்மகிழ் தண்டா யுதகர
கொட்டுக சிறுபறையே
கும்பாய் நலனிறை கம்பா புரகுக
கொட்டுக சிறுபறையே. (கூ0)

சிறுபறைப் பருவம் முற்றிற்று.

---

## சிறுதேர்ப் பருவம்

117 எட்டிக்கு மொளிவீசும் வச்சிரச் சகடச்சு
மெழினில கோமேதகத்
திலகுபார் தட்டுவயி டூரியப் போதிகை
யிசைந்தபவ ளக்கால்களுந்

திட்டிக்கு விந்தையாம் பச்சைக் கொடுங்கையுந்
திகழ்புட்ப ராகமொட்டும்
செம்மணிக் கலசமுந் தரளவெண் கவிகையுஞ்
செய்யபொன் கொடுசமைத்தே

சிட்டிக்கு மயனுக்கு மரிதான பெரிதான
சித்திர மெலாங்குயிற்றிச்
சேவலங் கொடியுயர்த் தையநின் பொன்னிரத
சேவைகண் டார்வினவிஞர்

செட்டிக் குமாரனுக் கழகெனப் புகழுநீள்
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கூக)

118 மாரதி மணளனுக் கைம்படை யளித்தகா
மாட்சியென் மகவுசிறுதேர்
மானுதே ரில்லையென வேகம்ப னெனதுதேர்
மானுமென வஃதிவன்சூழ்

பாரதிற் பூட்டாழி யிளவலாற் பயநீங்கு
பானுவாம் பரியென்னிலோ
பகர்பொருட் கிடனுய வூமைமொழி யைத்தாங்கு
பரசுருதி யேநடத்துஞ்
சாரதி யிவன்கையிற் குட்டுண்ட கதையையான்
சாற்றவேண் டுவதோவெனச்
சங்கர னகைக்கவூர் நகைசெய்யு நிற்கிது
தகுந்ததென வுமையைநோக்கிச்
சீரதிக நின்மகன் றேரென்று பரமன்மகிழ்
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கூஉ)

119 ஐயநீ சிறுதேரை யிம்மென வுருட்டினு
லவனிமா னதிருமுடையா
மலைகட லதிர்ந்துமேற் பொங்குமவள் கொங்கையா
மசலங்க ளதிருமவடன்
றுய்யமண் டபமான வாகாய மதிருந்
துளங்காத தீபமான
சூரிய னதிர்ந்திடுந் தகழியா மவனெடுஞ்
சோதியந் தேரதிருமே
லொய்யெனத் தனியாழி யெழுபுரவி யரவுகயி
றொழியுநிலை விட்டகன்றே
யோடிநிலை செய்யமுட வலவனென் செய்வன்மன
மோயுநீ யறியாததோ
செய்யவண் டாமரைக் கையவை வருந்தாது
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கூ௩)

120 மருவார் சடைப்பிரான் கயிலாச கிரியென்ன
மாதிமய சயிலமென்ன
மாலா லெனக்கமல வல்லிபாற் கடலென்ன
மலரயன் வேதமென்னத்
தருவாணி சங்கமென விந்திரன் வண்பரன்
சயில்மென விந்திராணி
தண்கற்ப தருவென்ன மாரனென் கணையெனத்
தக்கரதி யின்புருவென
வொருவாத முனிவர்மக வேதியென வவர்மாத
ரொண்மணித் தீபமென்ன
வுயர்தெய்வ யானைவெள் ளானையென வள்ளிமா
ஞெளிர்புனத் திதணமென்னத்
திருவாள ரெமதுபெரு வாழ்வென்ன வொளிருநின்
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கூ௪)

121 குண்டுகண் வெண்பற் றிரங்குகொங் கைப்பெருங்
குழிவயிற் றுய்ப்பேயழுங்
குட்டியல கையையுதிர வாற்றுட்டி வெம்பிணக்
குன்று தனத்திருத்தித்
துண்டுபடு தலைகளைக் குடராற் றொடுத்தினிது
சூட்டியவு ணர்களுடம்பிற்
றுன்னமுக் காற்றிலக மிட்டுவீழ் கேடகச்
சோரிநீர்த் திட்டிசுற்றி
மண்டுபசி நீங்கநிண வமுதூட்டி யென்செல்வ
மகவுகண் வளர்கவென்று
வள்ளனின் புகழ்பா டமர்க்களத் திற்றவர்கள்
வரவமுத மலைதந்தகூர்

திண்டுவச ரதநிற்க நோக்குசித் தச்சாமி
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கரு)

122 எங்கண்முக மலரவரு மிறைவகாத் தருள்கவென
விந்திரன் கவரிசாய்ப்ப
விமையோர்க ளாலவட் டம்வீச மதிகதிர்க
ளெழில்செய்வெண் கவிகைதாங்க
வங்கமுக வசுரருயிர் நுங்குமந் தகனன்பி
னருகினுடை வாள்பிடிக்க
வளகைவாழ் தனபதி யடைப்பையேந் திடவருண
ஞர்ந்துபடி யகமெடுக்கத்
துங்கமுக மன்சொல்லி மாலயனு மருகுறச்
சோதிதரு தேரூர்ந்துபோய்ச்
சுட்ருதய மலைமீது முதர மாமலையினுந்
துன்னுபூ தரைமீட்டுவன்
சிங்கமுக னைச்செற்ற சண்முகச் சரபமே
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கசு)

123 நாவேழு கொண்டகன லாண்டலைக் கொடியாக
நன்மருத் துய்க்குமுயர்தேர்
நம்பர்தர வூர்ந்திரண் டாயிர வெளம்பூதர்
நவவீரர் துணைவரொடுபோய்
மேவேழு கடலெட்டு மலையொன்ப தொண்கண்ட
மிளிர்பதிற் றுசையுலக
மேலேழு கீழேழு புவனண்ட முற்றுமமர்
விளையாடி வடிவுகாட்டி

மூவேழு பதினு யிரஞ்சிங்க மாளிபேய்
மூட்டுதேர்ச் சூரபன்மன்
முனேயோய்ந்து மாவாக வேலினிரு கூறுக்கி
மூள்சேவன் மயிலாய்வரத்
தேவேழு மாரதன் போற்றவேற் றூர்ந்தவேள்
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை (கஎ)
சிறுதே ருருட்டியருளே.

124 தந்தைநண் புளகுபே ரன்றனய னண்புறத்
தந்தபுட் பகவிரதமோ
தான்பிழை செயிற்சிறை செயாதருள் கெனுவிதி
சமைத்துதவு பிரமரதமோ
விந்தையாய் மருகன்விளே யாடலுக் கிந்திரன்
விடுத்தவொரு தெய்வரதமோ
விந்தைமெய்த் தவமிழைத் தறுமுகற் கிந்தினிமை
மேவுநல் விநோதரதமோ
விந்துசே கரன்விலாய் வளேயாத படிமேரு
வெண்ணியமை கனகரதமோ
வென்னென்று சொல்லுகே மென்றுநின்
ளேத்திநோக் கிக்களிக்கச் [றிமையோர்க
சிந்தைமலர் திருவாணே யுலகெலாஞ் செய்குமர
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கஅ)

125 தித்திக்கு மானந்த வெள்ளமே கோதிலாச்
செங்கரும் பேசினியே
திகழ்தரும் பாற்கட்டி யேகனிச் சுவையே
தெவிட்டாத வானமுதமே

பத்திக் குவந்தபதி யேகருணை நிதியமே
பரிபுரண சாந்தமதியே
பரமவே கம்பர்கா மாட்சிமகிழ் செல்வமே
பாவாணர் துதிவள்ளலே
முத்திக்கு வித்தே யருந்தவர் தமக்குமெய்ம்
மூலமே தேவசேனை
மூர்த்தியே குஞ்சரி குலாவுமலை யேவள்ளி
மோககற் பகதாருவே
சித்திக்கு மன்பர்குல தெய்வமா ணிக்கமே
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கூகூ)

126 அருள்சுரக் குஞ்சோம கிரணமுக கமலமு
மபாங்கநய னவிலாசமு
மணிமுத்து வண்சுட்டி யசைநெற்றி யிற்பொட்டொ
டற்புதப் பொற்பட்டமும்
பொருள்சுரக் குஞ்சுருதி மணமிக்க குமுதவாய்ப்
பொலியுமென் மூரனிலவும்
பொற்புநவ ரத்தினக் குண்டலக் கன்னமும்
புயகனக மேருகிரியும்
மருள்சுரக் குங்கடிய மலநீக்கு மொளிவீசு
மாணிக்க மாலைமார்பும்
மனவுகிண் கிணிபொன்னி னரைஞாணு
வடிவான சீர்பாதமுந் [மெய்ஞ்ஞான
தெருள்சுரக் குங்காட்சி தெரிசிக்க வருண்முருக
சிறுதே ருருட்டியருளே
செகராசர் புகழ்கம்பை நகர்வாச மகிழெந்தை
சிறுதே ருருட்டியருளே. (கOO)

சிறுதேர்ப் பருவம் முற்றிற்று.

**கம்பை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.**

உ

சிவமயம்

# கம்பைச் சந்நிதிமுறை

## அலங்காரம்

### காப்பு

#### கட்டளைக் கலித்துறை

127 மாவலங் கார மலர்ப்பொழில் சூழ்கம்பை
மாநகர்வாழ்
தேவலங் கார சிகாமணி சண்முக
தேசிகன்மேற்
பாவலங் கார மலங்கார மாகப்
பகர்ந்தணியக்
காவலங் கார கடவிக டாசலக்
கற்பகமே.

### நூல்

128 பூங்கற் பகநிழல் வண்டா மரைநற்
புணரியென்னு
மோங்கற் பகமொரு மூன்றையு மன்பர்க்
குவந்துநல்கி
யீங்கற் பகலு மெழிற்கம்பை வாழ்குக
னெங்கள்பிதா
வாங்கற் பகத்தெய்வ யானையும் வள்ளியு
மன்னையரே. (க)

129 கந்தா குமரா கவுரி சுதாமணி
கண்டர்பெற்ற
மைந்தா குவலய மானிடர் மாதவர்
வானவர் தஞ்
சிந்தா குலமற வந்தெழிற் கம்பைத்
திருநகர்வா
ழெந்தாய் குணக்குன்ற மேநம்பி னேனுன்
னிணையடியே. (உ)

130 தீர்த்திகை யாய சரவணை தன்னிற்
செனித்தருளிக்
கார்த்திகை பாலுண் டரற்குப தேசங்
கழறியந்த
மூர்த்திகை வேல்கொண் டசுரனைவென்ற
முருகனகர்
பார்த்திகை யெட்டும்வந் தேத்திக்கை கூப்புங்கம்
பாபுரமே. (ந)

131 வேதா சரணம் புகுந்தேத்துங் கம்பையுண்
மேயகுரு
நாதா சரணங் குமரா சரண
நளினமலர்ப்
பாதா சரணம்வை வேலா சரணம்
பரமவருட்
டாதா சரணங் குகேசா சரணஞ்
சரணுனக்கே. (ச)

132 ஓங்கார மெய்ப்பொருளைப்பர மேசற்
குரைத்தவுண்மை
யீங்கா ரறிகுவர் சேயே னறிகுவ
தெப்படியோ

பாங்கார வண்கம்பை வாழ்பர மாரிய
பாசவினை
யாங்கார வல்வினை நீங்குமெய்ஞ் ஞான
மருளுகவே. (ரு)

133 எத்தனை யெத்தனை யன்பர்வந் தாலு
மினிமையொடு
மத்தனை யத்தனை யன்பர்க்குங் காட்சி
யருளுங்கம்பை
முத்தனை முத்தனை யம்மூரல் வள்ளிமின்
மோகனைச்சே
ரித்தனை யித்தனை வேண்டுகொ லோவென்ற
னேழைநெஞ்சே. (சா)

134 வேலுண்டு வெற்றி மயிலுண்டு சேவல்
விலோதனமு
மேலுண் டுபயநற் றுயருண் டன்பர்
மிகவுமுண் டு
பாலுண்டு மைந்தர் விளையாடுங் கம்பைப்
பதிகுகன்பூங்
காலுண்டு கண்டுகொண் டார்க்கரு ளுண்டிவை
கட்டுரையே. (எ)

135 பேயோ டுறவுகொண் டாடிய பித்தப்
பெயர்தெரிக்கப்
போயோடு கொண்டிரந் தாரூரர் வெம்பசி
போக்குமரன்
சேயோ டுவந்திடிற் றீங்கில்லை யென்றுனைத்
தேர்ந்தடைந்தேன்
றுயோ டுவமைகொள் கம்பா புரியுறை
சண்முகனே. (அ)

136 ஈகையுந் தூய்மையும் வாய்மையுஞ் சாந்தமு
மின்புமன்பு
மோகையும் புத்தியுஞ் சித்தியு முத்தியு
மூங்கருளாய்
பாகையும் வெல்லு மொழியார் பயில்கம்பைப்
பண்ணவநின்
ரேகையும் வேலும் பதாகையுந் தோத்திரஞ்
சொல்லுவனே. (கூ)

137 முன்னையும் பின்னையு மேதொன்றுந் தேராத
மூடனிவன்
றன்னையு மாதரிக் கத்தகு மோவெனச்
சற்றுமெண்ணான்
றென்னையும் வாழையு மோங்குங்கம் பாபுரிச்
சேந்தன்வந்தே [வ
யென்னையுந் தொண்டுகொண் டானென்னை யோவ
னின்னருளே. (ω)

138 மாலு மயனுஞ் சுரேசனுந் தேவரு
மாதவரு
நாலு மறையும் புகழ்கம்பை வாழ்கந்த
நாயகன்பூங்
காலு மனமுங் கலக்கநின் றூர்தமைக்
காணுறின்வாய்
வேலு மயிலுமென் றேபல காலும்
விளம்புநரே. (கக)

139 தாயிரங் காவிடிற் சேயென்ன செய்யுமத்
தன்மையைப்போ
னீயிரங் காவிடில் யானென்ன செய்வ
னியமமுட

ஞாயிரங் காவடி கொண்டன்பர் சூழ்கம்பை
யண்ணலெனைக்
கூயிரங் காயடி யேனுன் னடைக்கலங்
கூடினனே. (௧௨)

140 மாமக வண்புகை யேமழை யாக
வழங்குங்கம்பைக்
கோமகள் பாலகன் சற்குரு நாதன்
குளிர்மலர்த்தா
டாமகம் வைத்திடு மெய்யன்ப ரெவ்விடைச்
சார்ந்திடினும்
பூமக ளுமக ணீங்கா தவரைப்
பொருந்துவரே. (௧௩)

141 சூரவா ரணியைப் பரங்குன்றில் வேட்டுச்
சுகம்பெற்றநீ
யிரவா ரணியத் தொருகுற மானை
யிசைந்ததென்னே
கரவா ரணிவளர் கம்பைக் குகேச
கலைமதியோ
டரவா ரணிசடை யப்பன் செயனின்
னருஞ்செயலே. (௧௪)

142 மழவடி வங்கண்டு தேவேந் திரன்றந்த
மாதிருந்துங்
கிழவடி வங்கொண்டு வள்ளியைச் சேர்ந்தவொர்
கேண்மையைப்போன்
முழவடி யோசை பதினு லுலகு
முழங்குங்கம்பைப்
பழவடித் தொண்டருட் புத்தடி யேனையும்
பார்குகனே. (௧௫)

143 செம்பாதி கொண்டு சிவனோடு கூடிச்
செகமளித்த
வம்பா திருமகன் வள்ளிக்கு நாயக
னாறுமுகன்
கம்பா திபன்சுபன் வைபவன் கந்தன்
கமலபத
நம்பா திருப்பவர்க் கேதுண்டு காணிந்த
நானிலத்தே. (கசா)

144 பெரும்பேதை யேன்மனு வொன்றுண்டு கேட்டியெ
பேசிடினுந் [ன்
திரும்பே னெனவென்றன் பாழான நெஞ்சந்
திரிவதுட
னிரும்பே நிகர விருப்பதற் கென்செய்வ
னீரறுகட்
கரும்பேகம் பாபுரி வாழ்வே சிறிது
கடைக்கணியே. (கஎ)

145 கடையான நாளிற் கடர்மிசை யேறிவன்
காலன் வந்து
படையான் மருட்டிவெம் பாசத்திற் கட்டிப்
படுநரகிற்
றடையாது மின்றி யிடுவனே யாருகன்
குருசனென்று
லடையான் விடையுடை யான்மக னேகம்பை
யாண்டவனே. (கஅ)

146 ஆரண மோதியெ ஞகமந் தேர்ந்துமெ
னம்புவியுட்
பூரண வாயுள் படைத்துமென் கீர்த்தி
பொருந்தியுமென்

ரோண வீதி யலங்காரக் கம்பையுட்
சோதிருக
ஞாணன் றன்மரு கன்முரு கன்பத
நாடலரே. (கக)

147 குணக்கே யுதித்திட்ட சூரியன் சென்று
குடகடல்வீழ்
கணக்கேயித் தேகம் வருவதும் போவதுங்
கண்டிருந்து
முணக்கேட் பவர்க்கன்ன மீயாவு லோபர்க்கு
முய்வுமுண்டோ
மணக்கே தகையல்லி வாய்ச்சோறு பெய்கம்பை
வாழ்குகனே. (உ0)

148 மாயக் கிரவுஞ்ச வெற்பைப் பிளந்தண்ட
வாணர்தம்மைக்
காயக் கிரமஞ்செய் வன்று ரகனைக்
கடந்தவைவேற்
றாயக் கிருபா கரகம்பை வாழ்கந்த
சோதியுன்றன்
சேயக் கிரணச் சரணா விந்தமென்
சென்னிவையே. (உக)

149 ஆதார மாறுங் கடந்தப் புறத்தே
யமர்ந்தவொன்றே
போதா ரணன்றனைக் குட்டிச் சிறையிற்
புகுத்தகுன்றே
காதார வீசற் குபதேசஞ் செய்த
களபக்கன்றே
மாதா ரணிபுகழ் கம்பையுண் மேயநின்
வண்மை நன்றே. (உஉ)

150 பித்துத் தலைக்கொண்டு சானகி யைச்சிறைப்
பெய்தவஞ்சன்
பத்துத் தலையும் பனங்குலை போலப்
பறிந்தமரிற்
செத்துத் தலைமை யிழந்திடச் செற்றவன்
சீர்மருகன்
வித்துத் தலைமழை யாங்கம்பை யம்பதி
மேவுநர்க்கே. (உந)

151 தண்ணிய நந்த வனஞ்சூழ்கம் பாபுரிச்
சண்முகனார்
நண்ணி யனந்த னடைகற்கும் வண்ண
நடக்கும்வள்ளி
யெண்ணி யனந்தம் பிழைசெய் தவனிவ
னென்றிடினும்
புண்ணிய நந்தமன் பன்புரிந் தானெனப்
போற்றுவரே. (உச)

152 சேலு மயிலு நிகர்விழி யார்புகழ்
தீங்கனியும்
பாலு மயிலுஞ் சுவையாய் நினைத்திவண்
பைம்பொழில்வா
யாலு மயிலுக் களிபாடுங் கம்பை
யமர்முருகன்
வேலு மயிலும் விடமாய் நினைத்தியென்
வெள்ளறிவே. (உரு)

153 வயிராக் கியத்தொடு காட்டி னெருப்பின்
மலைக்குகையி
னுயிரா வணமுற் றியோகுசெய் வார்க்கு
மொளித்தகள்வன்

பயிராம் வயலுக்குத் தேன்பாயுஞ் சோலை
பலன்றருஞ்சீ
ரயிரா வதிநதி சூழ்கம்பை யின்வெளி
யாயினனே. (உசு)

154 வெம்பா தகஞ்செய்த வஞ்சக ராயினும்
வேலவனை
யம்பா சுதனை யறுமா முகனை
யடியவர்க்குச்
செம்பாத நல்குஞ் சிவகுரு நாதனைச்
சிந்தைசெய்தே
கம்பா புரியை யடுத்தவரேமுத்தி
கண்டவரே. (உஎ)

155 அம்பா ருலகி லறமே வளர்க்கு
மவரெனினும்
வெம்பாவஞ் செய்யு மவுணக் கடல்வற்ற
வேல்விடுத்த
கும்பா ரியர்க்கொரு ஞான சிரியக்
குகனையுன்னிக்
கம்பா புரியை யடையா தவர்கொடுங்
கன்மிகளே. (உஅ)

156 வானாட ரிப்பெரு மண்ணாடர் மற்றையர்
வாழ்த்துங்கம்பை
ஞான கரகுரு நாத குகேசநின்
ஞண்மலர்த்தா
டான தரவென நம்பிவந் தேற்குத்
தயைசெய்கிலா
யானலு மென்வினைக் குன்னை வெறுப்ப
தழகல்லவே. (உகூ)

157 பேறு முகத்தினே வேண்டினு மல்லது
பேருலகில்
வீறு முகத்தொடு போகத்தை வேண்டினு
மெய்த்துதியே
கூறு முகத்துட னெண்ணுக கம்பைக்
குகேசனரு
ளாறு முகன்றிரு மந்திர மாகிய
வாறெழுத்தே. (ரு0)

158 கரித்திர ளாலழி வுற்றிடுந் தீங்கன்னற்
காடென்னவே
பரித்திர வும்பக லும்வினே யிற்படும்
பாடுரைக்கின்
விரித்திரண் டாயிர நாவுடை யானும்
விளம்பருமோர்
சரித்திர மாகுமை யாகம்பை மேவிய
சண்முகனே. (ருக)

159 நல்வேன் மயிலென்று நாடொறு மன்புட
ணுத்தடிக்கச்
சொல்வேன் றிருக்கம்பை வாழ்குக வித்திடங்
கொண்டவென்னேக்
கொல்வே னெனவரச் சண்டனுக் கிங்ஙனங்
கூடுங்கொலோ
வெல்வே னவனேக் கடாவும் படரும்
வெருண்டிடவே. (ருஉ)

160 வாய்க்கும் பெருஞ்செல்வக் கம்பா புரியில்
வளர்குகனேப்
போய்க்கும் பிடுகின்ற மெய்யடி யார்களிப்
பூதலத்து

ஞேய்க்கும் பசிக்கும் விடத்துக்குங் கள்ளர்க்கு
நுந்தழற்கும்
பேய்க்கும்பின் னே துக்கு மஞ்சா ரறிந்துகொள்
பேதைநெஞ்சே. (ரு௫)

161 ஆசாரவீன னடக்கஞ் சிறிதில
னன்புமிலன்
காசார வெங்குந் திரிபவ னென்றெனைக்
கைவிடிலோ
பூசார மிக்குள கம்பா புரியுறை
புண்ணியனே
வேசார னீக்கி யருள்புரி வாரிங்கு
வேறில்லையே. (ரு௪)

162 கோலா லெழுகட லெய்தான் மருகன்
குகன்கம்பைவேள்
வேலா லெழுகடல் வற்ற விடுத்தல்
வியப்பன்றன்னே
பாலா லெழுகட லுண்டேனை யன்பினிற்
பார்த்தவன்பூங்
காலா லெழுகடல் வற்றச்செய் தானிது
காண்வியப்பே. (ரு௫)

163 இன்பக்க ணீரபி டேகநற் சாந்த
மினியசந்த
மன்பர்ச்சித் தேத்து மலர்பசு போத
மமுதமென்றே
நன்பத்தி மான்க ணிணைக்கலப் பார்கம்பை
நாயகனே
துன்பத்தி னேனுனை யெவ்வா றடைவது
சொல்லுகவே. (ரு௬)

164 காலையு மாலையு மாலயஞ் சென்று
கசிந்துபசும்
பாலையு மாலையுங் கொண்டாட்டிச் சூட்டிப்
பணிந்துகன்னற்
சோலையு மாலையுஞ் சூழ்கம்பை வேலற்குத்
தொண்டுபட்டா
மேலையு மாலையுந் தீர்ந்துய்ய லாமிது
மெய்ம்மொழியே. (௩௭)

165 அத்தனை வேலணி யத்தனைத் தோகைவை
யத்தனைமெய்ச்
சத்தனைக் கோழித்து சத்தனைப் பத்திவ
சத்தனைச்சீர்க்
கத்தனை யன்பர கத்தனைக் கம்பைய
கத்தனைமா
சித்தனை முன்னருச் சித்தனை யோர்தரி
சித்தனையே. (௩௮)

166 நேருங் கடகரி யும்பரி மாவுஞ்
செறிமறுகி
ரூருங் கடகமுஞ் சாந்தமுங் குப்பைசெய்
தண்கம்பையா
மூருங் கடவுணின் பேருங் கருதி
யுரைப்பவர்க்குச்
சாருங் கடலன்ன செல்வமுண் டாமிது
சத்தியமே. (௩௯)

167 இருள்வா ரிருங்குழன் மாதர்கள் கட்கய
லேன்றுகன்னத்
தெருள்வாரி யாடக்கண் டாடவ ராடித்
திளைப்பதுடன்

பொருள்வாரி யேழைகள் பாற்பொழி கம்பையுட்
புண்ணியகின்
னருள்வாரி யாடுவ தெந்நாளிந் நாளென்
றருளுகவே. (சo)

168 காமன் கொடிக்கயல் போற்றட மீனுகள்
கம்பையின்க
ணீமன்னு தன்மையிற் சேயேன் மனத்து
நிதமுறைவாய்
பூமன் படைப்பதும் போர்ப்பக டூர்ந்து
புகுந்துபொல்லா
வேமன் பிடிப்பது மாகிய தீமை
யெனக்கில்லையே. (சக)

169 முன்பது மாதனத் தச்ச னெனது
முயல்பொருள்கொண்
டென்பது வேமுத லோரெழு தாதுவி
னேய்ந்தவண்ண
மொன்பது வாயின் மனைசெய் தளித்தன
னுள்ளிருப்பேன்
பின்பது வீழுமுன் கம்பைக் குகாநல்கு
பேரகமே. (சஉ)

170 புவியார வீழ்ந்து பணிபவ ருன்றன்
புகழ்முழுதுஞ்
செவியாரக் கேட்பவர் கண்டு தரிசனஞ்
செய்பவர்நற்
கவியாரச் சொல்பவர் கம்பைக் குகேச
கடனிலத்துற்
பவியாரத் தூயர் பதத்தூள்பட் டாலும்
பவமில்லையே. (சந)

171 அன்பே நிறைந்தவென் ஞருயி ரேயறி
வேயமைந்த
வின்பே மனுதி கடந்தவொன் றேசொல்
லிரண்டறவே
நன்பே றளிக்குந் தயாநிதி யேகம்பை
நாயகனே
நின்பேரி லோர்பெய ரேயருள் கூட்டு
நினைப்பவர்க்கே. (சச)

172 ஓராழித் தேரவன் றிக்குப் பிழைக்க
வுரகமஞ்ச
நீராழி பொங்கக் குலகிரி யோரெட்டு
நீறுபடப்
போராழித் தானவர் நெஞ்சங் கலங்கப்
புலவருய்யப்
பாராழி வட்ட மிடுங்கம்பை வேலன்
பரிமயிலே. (சரு)

173 ஒன்று விரண்டா வொருகோடித் துன்ப
மொருங்குபற்றித்
தின்றுலென் செய்வது மன்றுடி நின்னிடஞ்
செப்பவந்தே
னன்றுய் மறித்தைவர் நின்றுர் திருக்கம்பை
நன்னகர்வா
ழென்றுய் முருகைய னேதுய்ய னேயெனை
யேன்றுகொளே. (சசூ)

174 கருவினை யாடல் புரிந்தன்னை நோவவிக்
காசினிமேற்
றெருவினை யாடலுந் தீவினை யாடலுஞ்
செய்யுமென்றன்

பெருவிளை யாடற்குங் கம்பைப் பிரானின்
பெருங்கருணைத்
திருவிளை யாடற்கு மொப்பில்லை தப்பில்லை
செப்பிடினே. (சஎ)

175 ஊக்க மதுகை விடேலென்னு நீதி
யுணரகில்லா
தேக்க மதுகொண் டுளைமறந் தேன்சினை
யின்மிசைமீ
னோக்க மதுநிகர் நாயேனை யன்புட
னோக்கியரு
ளாக்க மதுநிறை கம்பா புரியுறை
யாண்டவனே. (சஅ)

176 பாலா யுதசிவன் பாதத்திற் கண்ணைப்
பறித்தணிந்த
மாலா யுதமொன்றை மாலையிற் சூடிய
வஞ்சகனை
வேலா யுதங்கொண்டு வென்ற பிரான்கம்பை
மேயகுகன்
காலா யுதனுவ கையா யுதவுவன்
கான்மலரே. (சகூ)

177 பூப்பிட்டுச் சங்கர தற்பர வேத
புராணவென்றே
கூப்பிட்டுக் கூப்பிட்டு மாறேட வஞ்சித்துக்
கூடல்வந்தி
மாப்பிட்டுக் காளென வந்தான் றருங்கம்பை
மைந்தனையுட்
காப்பிட் டியாப்பிட் டுணத்தந்த தந்தக்
கரணநன்றே. (ரு0)

178 மாகாத் திரகண நாதருந் தேவரு
மாதவரும்
வாகாத் திரள்கம்பை வள்ளால் பரத
மயிலின்மிசை
மோகாத் திரவள்ளி குஞ்சரி யோடென்றன்
முன்னணைந்து
நீகாத் திரவும் பகலுமென் னெஞ்சி
னிலாவுகவே. (ருக)

179 வருமந்தி நேரத் தரங்கிடை மத்தள
மாமுழக்கைக்
கருமந்தி கண்மழை யென்றுவிண் பார்க்கும்வண்
கம்பையிடைத்
தருமந் திகழ வளர்முரு காநின்
சடக்கரமாந்
திருமந் திரமுப தேசித்தென் றீவினை
தீர்த்தருளே. (ருஉ)

180 நண்பொ டிராவும் பகலுஞ் சகலரு
நண்ணிநண்ணிக்
கண்பொடி யாமற் றரிசிக்குங் கம்பைக்
கடம்பநின்கை
வெண்பொடி தாரா விடினுநின் காற்பட்டு
வீழுமொரு
நுண்பொடி யிற்பொடி யேனும் படும்படி
நோக்குகவே. (ருரு)

181 ஐயா யிரஞ்சொல்லி யாவதென் னன்பில்லை
யஞ்சலிக்கக்
கையா யிரமில்லை கண்ணு யிரமில்லை
காணவிழ

மெய்யா யிரமில்லை வாயா யிரமில்லை
விண்ணப்பிக்கப்
பையா யிரங்கொண்ட சேடன் புகழ்கம்பைப்
பண்ணவனே. (ருச)

182 மண்ணுள வெண்ணுவர் வாளுள வெண்ணுவர்
மாழ்கிமனப்
புண்ணுள ராகிப் புலம்புவர் பொய்யுடல்
போக்கறியார்
தண்ணுளப் பங்கயத் தன்ன முலாங்கம்பைச்
சண்முகனென்
கண்ணுளன் கிண்கிணிக் காலாள வெண்ணிலர்
கன்மிகளே. (ருரு)

183 ஆக்கிய வண்டத்துட் புண்ணியர் நிற்க
வருவினையான்
வீக்கிய பாதகர்க் கெல்லாந் தலைமை
விளக்கிமருள்
தேக்கிய சிந்தையி னென்வாக் கியத்தின்
சிறப்புணரேன்
பாக்கிய மென்னசொல் வேன்கம்பை வேலனைப்
பாடுதற்கே. (ருசு)

184 உண்முக மாக வெளிமுக மாக
வொருமுகத்தா
லெண்முக மாகத் துதிமுக மாக
விறைஞ்சுநரைக்
கண்முக மாகக் கருணைசெய் யுந்திருக்
கம்பைநகர்ச்
சண்முக மாகந்த சாமி சிவானந்த
சற்குருவே. (ருஎ)

7

185 முருகனென் றுங்கந்த னென்றுங் குகனென்று
மோகனமான்
மருகனென் றுங்கும ரேசனென் றுங்கம்பை
வாசனென்றும்
உருகனென் றுஞ்சற்று முன்னனென் றுஞ்சுக
மோங்கமுதம்
பருகனென் றும்வஞ்ச நெஞ்சே யிருத்தியென்
பண்ணுவனே. (ருஅ)

186 அண்டரண் டம்மண்ட லந்துன்பங் கொண்டிட
வண்டியண்டி
மிண்டகண் டம்புரி கண்டகர் மண்டி
வெருண்டமரிற்
கண்டகண் டம்படக் கண்டுசெண் டன்றெழுக்
கண்டனன்சூழ்
கொண்டல்விஞ் சுந்தண் டலைக்கம்பை நன்குடி
கொண்டவனே. (ருகூ)

187 காயாத வன்மர மீதே யெறிந்திடுங்
கல்லெனவே
யீயாத லோப ரிடஞ்சென்று செந்தமி
ழின்கவிதை
யோயா தனேகம் புகன்றிளைத் துன்புக
ழோதலுற்றேன்
சேயா தயாநிதி யேகம்பை மேய
சிவாரியனே. (சூ0)

188 மாம்பழ மண்ணற்கு நல்கியிம் மண்வலம்
வந்தநினக்
காம்பழம் வேறென்னை நீபழ மென்றரா
ஞடுரையென்

பூம்பழனச்செந்நெல் முப்பழச் சாற்றிற்
பொலியுங்கம்பை
யோம்பழ மெய்ப்பொரு ளேயரு ளாயெனக்
குண்மையையே. (சூக)

189 ஓம்பாகு வாகனன் றம்பிகம் பாபுரி
யுற்றநம்பி
பாம்பாகு மாபர ணத்தான் மகன்புகழ்
பாடுமென்வாய்
தேம்பாகு கற்கண்டு சர்க்கரை பால்பழந்
தெள்ளமுதை
வேம்பாகு மென்று வெறுக்கின்ற வாறென்ன
விந்தையதே. (சூஉ)

190 அன்பா லரன்பா லுமையம்மை பாலெங்கை
யண்ணலின்பா
லுன்பா லலது பிறர்பா லடைந்தொன்று
மோதகிலே
னென்பா லருள்செய்ய வேணு தடைபிழை
யேதுசெய்தேன்
றென்பா லகத்தியன் றன்பா லருள்கம்பைத்
தேசிகனே. (சூங)

191 பதிதரு மிக்க நிதிதருஞ் சற்குண
பண்ணிதரு
மதிதரும் புத்திர செல்வந் தருமுடல்
வன்மைதருந்
துதிதருந் தொண்டர்க் கிகத்திற் பரத்திற்
சுகாதிதமாங்
கதிதருங் கம்பைச் சடக்கர சண்முகக்
கற்பகமே. (சூச)

192 மாகாந்த ளங்கர குஞ்சரி வேடுவர்
வஞ்சியுட
னேகாந்த மாகக் கணப்போதென் னுள்ளத்
திருக்கின்மல
மோகாந்த கார மகன்றிடுங் கம்பையுண்
முன்னவபின்
யோகாந்த சித்தாந்த ஞானனந் தக்கதி
யுற்றிடுமே. (௬௫)

193 வண்மூன்று மூன்றுடைக் காலமும் பூசை
வழுவலின்றிப்
பண்மூன்று மூன்று தொழிலாளர் மன்னுகம்
பாபுரத்தி
லெண்மூன்று மூன்றுநன் னுளின் விசாகத்
தினிதுதித்த
கண்மூன்று மூன்றுங் கரும்பினிற் பன்னிரு
கட்கரும்பே. (௬௬)

194 இகானந்த மன்றியொ ரானந்த மில்லையென்
றெண்ணியெண்ணி
மிகானந்தங் கொள்ளு மறிவிலி யென்றனை
விட்டுவிடேல்
குகானந்த மெய்து மென்னுங் குறிப்பினர்
கூடுங்கம்பைச்
சுகானந்த சண்முக சுந்தர ஞான
சுதாகரனே. (௬௭)

195 ஆணவ சத்தி புரிகின்ற வஞ்ச
மளவிலையான்
வீணவ சத்தி லுழலவிட் டாளந்த
மெல்லிமிக

நாண வசத்தி யினளா யகலமெய்ஞ்
ஞானநல்காய்
காண வசத்தின் மயிலின் வருங்கம்பைக்
காவலனே. (சூஅ)

196 வித்துவ ஞானங் கடந்தப் புறத்தே
விளங்கவருந்
தத்துவ ஞானந் தவிர்ந்ததன் மேலுந்
தழைத்தவருட்
சத்துவ ஞான மடைந்தவர் சூழ்கம்பைச்
சற்குருநீ
யத்துவ ஞானத் தொருபர ஞான
மருளுகவே. (சூகூ)

197 ஞானந்த முள்ளிடைத் தாமடங் குற்றிட
நாளுந்தம்முட்
டானந்த வின்ப மடங்குற வேறென்றுஞ்
சாரலின்றி
யானந்த நித்திரை செய்யுநி னன்பர்க்
கடிமைசெய்தென்
னீனந் தபவரு ளாய்கம்பை மேய
விறையவனே. (எ0)

198 நேர்வந் தனைய ராறுவரும் வாரி
நினையெடுத்து
மார்வந் தனைய விளையா டுகவென வைத்து
நின்சொற்
கார்வந் தனைவைத்துப் பாறந்ததா லந்த
வாரனன்ஞட்
சீர்வந் தனைவிர தந்தருவாய் கம்பைத்
தேசிகனே. (எக)

199 ஓரலை மேலொ ரலைவரும் வாரியி
னுள்ளிழிந்து
நீரலை நின்றபின் மூழ்குற வெண்ணு
நினைவினன்போற்
பாரலை துன்ப மொழிந்தபின் கம்பைப்
பதியுறையுஞ்
சீரலை வாய்க்குகன் பாதந் தொழவெண்ணல்
சீலமன்றே. (எஉ)

200 நீரசங் காரள கக்குழ லார்முக
நேர்மலரப்
பாரசங் கார நகைபோ லுயிர்ப்பப்
பமரமிக்க
சாரசங் கார மிசைவிழி யாகத்
தயங்குங்கம்பைச்
சூரசங் காரசிங் காரகெம் பீர
துணைசெய்கவே. (எங)

201 வாடினன் வாடினன் வல்வினை யாலது
மாற்றும்வழி
தேடினன் றேடின னல்வினை யாற்கம்பைச்
சீர்நகரைக்
கூடினன் கூடினன் கந்தப் பிரான்றிருக்
கோலங்கண்டே
யாடின னுடினன் பாடின னீடின
னனந்தமே. (எச)

202 சொல்லுந் திருவடி வேதா கமங்க
டொடர்வினையை
வெல்லுந் திருவடி மெய்ந்நெறி யன்பர்கள்
வேண்டிநிதம்

புல்லுந் திருவடி வள்ளியை நாடியப்
பூம்புனத்திற்
செல்லுந் திருவடி காண்கம்பை நாதன்
றிருவடியே. (எரு)

203 கூறுந் திருவடி யெண்ணற்ற வண்டாண்ட
கோடியெல்லா
நாறுந் திருவடி வீர விநோத
நடனமயி
லேறுந் திருவடி யின்பத் திருவடி
யேத்துமன்பர்
தேறுந் திருவடி காண்கம்பை நாதன்
றிருவடியே. (எசு)

204 எங்கே யிருந்தன்ப ரெப்படி யெப்படி
யெண்ணுகினு
மங்கே யணைந்தவர்க் கப்படி யப்படி
யார்ந்தளிக்குஞ்
செங்கே தகைமணஞ் சேர்பொழிற் கம்பைத்
திருநகர்ச்சேய்
பங்கே ருகமணி நூபுரக் கிண்கிணிப்
பாதங்களே. (எஎ)

205 பாசாந்த கார மறுத்தோங்கு மெய்ஞ்ஞான
பானுவொக்கு
மாசாந்த யோக வமுதஞ் சொரியு
மதிநிகர்க்குங்
கேசாந்த முத்தி யளித்தொளிர் கச்சியிற்
கீர்த்திபெறுந்
தேசாந்தண் கம்பைத் திருநகர் வாழ்குகன்
சேவடியே. (எஅ)

206 கண்டேன்கம் பாபுரக்கோபுரக் காட்சி
கரங்குவித்துக்
கொண்டே னடைந்துபொற் கோயிலுண் ஞானக்
குமரவள்ளல்
தண்டேன் மலர்ப்பதஞ் சேவித்தன் பாளர்க
டம்மொடமு
துண்டேனுண் டேன்பவம் விண்டேன்வின்
வுண்மையதே. [டேனிது (எகூ)

207 அல்லும் பகலுந் திருக்கம்பை யம்பதி
யாண்டவன்சீர்
சொல்லும் பயன்பெறு நல்லடி யார்க்கும்வன்
றுன்பமெல்லாம்
புல்லும் பவமுடை யேனுக்கு மென்னை
புகலுவகா
ணெல்லும் பதருமென் றுலுமோவ் வாதிந்த
நீணிலத்தே. (அ0)

208 வீறுங் கொடிவச் சிரமங் குசங்கணை
வேலபய
மீறும் வலத்தி லிடத்தின் வரத
மிளிர்நளினந்
தேறும் மணிமழுத் தண்டுவில் லுங்கொடு
செங்கரமீ
ராறுந் துலங்க வருவான் றிருக்கம்பை
யாண்டவனே. (அக)

209 பாரிய கம்பையுள் வாழ்முரு கையன்
பதம்பணிந்தாற்
சூரிய னுதிய கோள்களு நாள்களுஞ்
சூழ்ந்துநிதஞ்

சீரிய நன்மையை யேதரும் வேறொரு
தீங்குஞ்செயா
தேரிய மெய்த்துணை யாமயின் மாமயில்
சேவலுமே. (அஉ)

210 காட்டினி லுய்க்கினுந் தீயினிற் றள்ளினுங்
கார்கொண்மலைக்
கோட்டினி லேற்றி யுருட்டினும் வஞ்சக்
குழிநரகின்
வாட்டினு நான்மற வேனயி ராவதி
மாநதிசூழ்
நாட்டினுட் சிர்க்கம்பை வேற்கரன் பாத
நளினத்தையே. (அங)

211 மட்டார் மலர்ப்பொழிற் கம்பைக் குகேசன்
மலர்முகமுங்
கட்டா மரையு மிளமூ ரலுஞ்செங்
கனியிதழு
மொட்டாரை வென்றகை வேலும் புயமு
முடுத்தவரைப்
பட்டாடை யுந்திருப் பாதமுங் கண்டனன்
பாக்கியமே. (அச)

212 கோழிக்கு மோர்கவி குஞ்சுக்கு மோர்கவி
கூறுவதோ
வாழிக் குமரவென் றோதிய வாணனே
வன்மையிற்பின்
பாழிக் குளிர்புய முட்டையென் றோதியோர்
பாடல்பெற்றாய்
தாழிக் குழந்தைசொற் றள்ளுதி யோகம்பைச்
சண்முகனே. (அரு)

213 விண்ணேவிண் ணுதிய பூதங்க ளாகி
விரிந்தவொன்றே
யெண்ணே யெழுத்தே யிரும்பொரு ளேயுயி
ரின் னுணர்வே
பண்ணேபண் ணின்சுவை யேபர மானந்தப்
பாற்கடலே
கண்ணே மணிக்கம்பை வேலவ னேயெனைக்
காத்தருளே. (அசு)

214 நீயே கதியென்று கம்பைக் குகேச
நினைவணங்கித்
தாயே யருட்டந்தை யேயிரங் காயெனச்
சார்ந்தவெனைச்
சேயே வருகென் றழையா விடினுஞ்
சினத்தசொல்லால்
நாயேபே யேயென்று வைதாலுஞ் சாலு
நலமெனக்கே. (அஎ)

215 வில்வச் சடைக்கம்பர் காமாட்சி யம்மை
விரும்பநடு
வெல்வச்ச வீருரு வோருரு வாக
விளைந்தருள்செங்
கல்வச் சயிலக்கம் பாபுர வேலநின்
காட்சியைக்காண்
செல்வச் சபையடி யாருட னென்னையுஞ்
சேர்த்தருளே. (அஅ)

216 கண்மலர் முத்தஞ் சொரிந்துகம் பைக்குகன்
கான்மலரிற்
றண்மல ரிட்டுப் பணிந்துகும் பிட்டுத்
தலைவணங்கி

யுண்மல ரன்பிற் கசிந்தென்பு நெக்க
வுருகினின் று
பண்மலர் தோத்திரஞ் செய்குவ தன்பர்
பணிவிடையே. (அகூ)

217 நாயினும் கீழ்ப்பட்ட வென்பொருட் டாயிங்கு
நண்ணியருட்
டாயினு நற்றயை கூர்ந்தாண்டு கொண்டவொர்
தன்மையினுற்
சேயினு மிக்க சுதந்திரம் பெற்றனன்
சீர்க்கம்பைவேள்
காயினு நன்மையல் லாலெனக் கேதுங்
கலக்கமின்றே. (கூ0)

218 மண்ணும் புனலுங் கனலு மனிலமும்
வானமும்வா
னண்ணும் பரிதியுஞ் சோமனு மாவியு
நாலிரண்டா
வெண்ணும் வடிவ நவந்தரு பேத
மியைந்தனனென்
கண்ணும் மணியு மெனக்கம்பை மேவிய
கந்தையனே. (கூக)

219 வினையே யுருவுகொண் டன்னமின் னார்விழி
வேலையில்வீழ்ந்
தெனையே மறந்தழுந் திப்பல நாளு
மிடருறுவே
னுனையே தியானிப்ப தெங்ஙனங் கூடு
முவந்துவந்திங்
கனையே நிகர்கம்பை நாதநின் றருட்புணை
யாலனையே. (கூஉ)

220 பாடாத தீங்கும் பணியாத தீங்கும்
பரிந்துனையே
நாடாத தீங்குந் திருவாளர் தம்மை
நயந்துதொண்டு
கூடாத தீங்குங் குறையாத மெய்யன்பு
கொண்டுமகிழ்
நீடாத தீங்குந் தவிர்த்தாள்க கம்பையு
ணித்தியனே. (கூங)

221 எங்குந் தலமெனக் கொண்டா யெனினு
மினியவன்பு
பொங்குந் தலமெழிற் கம்பா புரமெனப்
புக்கிருந்தா
யிங்குந் தலமுடை யேற்கருட் சண்முக
வின்பமுடன்
றங்குந் தலநின் னடித்தல மாமித்
தலந்தனிலே. (கூச)

222 சீரார் திருக்கம்பை நாதனின் கோயிற்
செழும்பணியு
மாராத மெய்யன்பின் மூவிரு காலத்
தருச்சனையு
மேராரும் வாகன முற்சவ மாதிய
வின்பொடுசெய்
பேராள ரெங்குல தெய்வமன் னோர்புகழ்
பேசுவனே. (கூரு)

223 தமராய்ப் பிதாகுரு தெய்வமு மாகித்
தயைசெய்கம்பைக்
குமரா திருத்தணி காசல னேவள்ளிக்
குன்றவனே

சமரா புரித்தலை வாமயி லத்துறை
சண்முகனே
வமரா பதிக்கர சேயடி யேனுன்
னடைக்கலமே. (௬௬)

224 நன்று பரங்கிரி வாழ்முருகா செந்தி
ஞயகனே
யென்றுந் திருவாவி னன்குடி யாயுய
ரேரகத்தாய்
குன்றுதொ ருடிய கோவே பழமுதிர்
சோலைக்குகா
வன்றுமின் றும்பினுஞ் சேயே னுனக்கே
யடைக்கலமே. (௬௭)

225 புத்தியும் யுத்தியும் பூரண வாயுளும்
பொன்மணியும்
நத்தியுள் ளும்பல சித்தியு நல்கி
நயந்துசிவ
பத்தியுஞ் சாதுசங் கத்தினிற் கூடும்
பரமசுக
முத்தியுந் தந்திடுங் கம்பையுள் வாழு
முருகையனே. (௬௮)

226 மெய்யன்பி ஞற்பெரி யோர்கள்சொற் பாடலின்
மேன்மைகண்டும்
பொய்யன்பி ஞலடி யேன்விளை யாட்டிற்
புனைதமிழை
யுய்யன்பி ஞலிவன் சொற்றதன் ருயினு
மோங்குங்கம்பை
யையன் பிணையலென் றேபொறுப் பார்க
ளறிஞர்களே. (௬௯)

227 சேணுடர் சூழ்கதிர் காமங்குன் ருக்குடி
தென்பழனி
சோணு சலங்கும ரக்கோட்ட மாதிய
தாய்தலங்க
ணுளும் வாழ்கம்பை நாதநின் பூங்கழ
னங்கையர்கண்
மாணு ரடியவர் வேன்மயில் கோழியும்
வாழியவே. (க00)

கம்பை முருகர் அலங்காரம் முற்றிற்று.

---

கணபதி துணை

# கம்பைச் சந்நிதிமுறை

# வெண்பா மாலை

## காப்பு

228 அருக்கன் குளிர வலர்பூம் பொழில்சூழ்
திருக்கம்பை வாழ்கருணைச் செவ்வேட் - குருக்கமுட
னற்பகவெண் பாமாலை நன்கு தொடுத்தணியக்
கற்பகவி நாயகன்றாள் காப்பு.

## நூல்

229 அருள்சுரக் குங்காட்சி யாறுமுகங் கண்டு
தெருள்சுரக்குந் தோத்திரங்கள் செய்யப்—
பொருளளிப்பாய்
தந்தையா யன்னையாய்ச் சற்குருவாய்த் தெய்வமுமாங்
கந்தையா கம்பைமுரு கா. (க)

230 அபய மபயமென் றேயளிபோல் யானுன்
னுபயபதத் தாமரையி னுற்றேன்—விபவத்
திருமணியே செம்பொன்னே தெள்ளமுதே யென்கட்
கருமணியே கம்பைமுரு கா. (உ)

231 ஓதி யுணர்ந்தாரை யுற்றவர்க்குத் தொண்டுசெய்து
நீதி யுணர்ந்து நிலையறிந்தி—யாதொன்றும்
பெற்றறியே னுய்வதெவன் பேதையேன் ஞானமுறை
கற்றறியேன் கம்பைமுரு கா. (ங)

232 ஐயவுன தொண்சீ ரருளா லடிநாயேன்
வெய்ய வெழுநரகின் வீழ்ந்தாலு—மையல்
விலங்குவேன் பாவத்தால் வீழ்ந்தான் மிகவுங்
கலங்குவேன் கம்பைமுருகா. (௪)

233 பெற்றார் வெறுப்பாரேற் பிள்ளைதனைப் பேருலகின்
மற்றார் மகிழ்ந்து வளர்ப்பார்கள் - சற்றேனும்
பொய்விடே னுயினுநின் புத்திரனன் றோவெனைநீ
கைவிடேல் கம்பைமுருகா. (௫)

234 வேளை யெரித்தெழுப்பும் வித்தகனார் கண்ணின்வரு
காளையுன தாளைக் கதியென்றிந் - நாளடைந்தேன்
விண்பாராய் நின்ற விமலனே நின்கருணைக்
கண்பாராய் கம்பைமுருகா. (௬)

235 சிங்கார வேலிருக்கச் சீரார் மயிலிருக்க
வுங்காரச் சேவ லுயர்த்திருக்க - விங்காரச்
சிந்திக்கு நெஞ்சிருக்கத் தீங்குண்டோ சோலையெங்குங்
கந்திக்குங் கம்பைமுருகா. (௭)

236 கந்தா குமரா கதிர்வேலா காங்கேயா
வெந்தாய் குகனே யெளியேனை - வந்தாள்
பிரமனே மாப்படங்கப் பேரருளாற் குட்டுங்
கரமனே கம்பைமுருகா. (௮)

237 மோன முடிவே முழுமுதலே பேசருமெய்ஞ்
ஞான வடிவே நவநிதியே - யானவுனை [ய்
யண்ணியனே யென்றென் றருச்சிக்கும் வாழ்வருளா
கண்ணியனே கம்பைமுருகா. (௯)

238 பாசவலை யிற்பட்டுப் பாவமது மேலிட்டு
மாசவலைப் பிள்ளையென வாடுகின்றேன்—நேசவமு
தூட்டுவாய் காப்பாய்மே லுய்யுநெறி யீதென்று
காட்டுவாய் கம்பைமுருகா. (௧௦)

239 அதிகாலை மூழ்கி யலரெடுத்துச் சாத்தித்
துதியாடிக் கோயில்வலஞ் சூழ்ந்து—கதியென்பார்
தொண்டுகொண்டே மேலாஞ் சுகமளிக்கு நின்னியதி
கண்டுகொண்டேன் கம்பைமுரு கா. (கக)

240 சுகந்தமலர்த் தாமரைக்குச் சூரியனல் லாம
லுகந்ததலை வன்பிறிது முண்டோ—சகந்தனிலே
நித்தநேயத்துடனே நினையடை யென்றனுக்கியார்
கத்தனே கம்பைமுரு கா. (கஉ)

241 இஞ்ஞாலக் கங்கு லிரியக் கடலுதிக்குஞ்
செஞ்ஞாயி றொப்பவன்பர்ச் சேருமுயர்-மெய்ஞ்ஞான
விண்மணியே யுள்ளம் விகசிக்கப் பாரரனார்
கண்மணியே கம்பைமுரு கா. (கங)

242 பழவடியார் கூட்டத்துட் பாலகனேன் கூடித்
தொழவடியை யென்முடிமேற் சூட்டாய்-கிழவடிவங்
கொண்டவனே யன்பிற் குறமானைக் கூடியின்பங்
கண்டவனே கம்பைமுரு கா. (கச)

243 பாலுந்தண் ணீரும் பதார்த்தமிரண் டாகவிருந்
தாலுங் கலந்தா லபேதமாம்—போலுமிந்த
வெய்யனே னன்பர்தமை மேவிடினொன் றுவேன்வேற்
கையனே கம்பைமுரு கா. (கரு)

244 மோனநிலை யந்தமாய் மூன்றுமனுட் டித்தவர்க்கே
ஞானநிலை கிட்டுமென்பர் நல்லோர்க—ளானதனை
லீங்கேயா னென்புரிவே னின்பஞா னந்தருவாய்
காங்கேயா கம்பைமுரு கா. (கசா)

245 எத்திசையு மன்பர்குழா மேத்தியிறைஞ் சக்களித்துப்
பத்திநெறி காட்டிப் பணிகொண்டு—முத்திதரு
நிற்கண்டே னென்குறையை நீகண்டே யின்னருள்
கற்கண்டே கம்பைமுரு கா. [செய் (கஎ)

246 சாடுகின்ற வெம்பசிக்குத் தக்ககப்பி வாய்ப்பெயினுங்
கூடுகின்ற குப்பைகிளை கோழிபோ—லோடுகின்ற
தீனனேன் சொற்குச் செவிகொடுப்பா யோசாம
கானனே கம்பைமுரு கா. (கஅ)

247 துன்புடைய வென்னைச் சுகமுடைய னாகச்செய்
தின்புடைய தொண்ட ரிடையுய்ப்பா—யன்புடைய
வெண்ணுடையா யீரா றெழுத்துடையாய்
கண்ணுடையாய் கம்பைமுரு கா. [பன்னிரண்டு (கசு)

248 ஐய வுனக்கே யபயம் புகுந்தவெனக்
குய்ய வொருநெறியு மோதிலையான்—செய்த
புரையாதோ பட்டதுயர் போதாதோ வுள்ளங்
கரையாதோ கம்பைமுரு கா. (உo)

249 சிங்கார வேலேந்துஞ் சேவகனே சூரனெனு
மங்கார தானவனை யட்டவனே—மங்காத
துட்டமோ கப்பயல்செய் துக்க மடக்கமிக்க
கட்டமோ கம்பைமுரு கா. (உக)

250 குன்றுதொறு மாடுங் குளிர்கமலச் சேவடிக்கு
நன்று சுகங்கொடுக்கு நாயினே—னென்றுளமே
யில்லாகும் வந்தமர்வா யேனென்னின் மானகருங்
கல்லாகுங் கம்பைமுரு கா. (உஉ)

251 கூடியங்கே தேவர் குறையிரக்க வஞ்சலெ்லன
வோடியன்பாய் விண்காத்த வுத்தமனே—வாடியிங்கே
வந்தவெற்பா ராதென்னே வஞ்சனையோ வஞ்சினை
கந்தவெற்பா கம்பைமுரு கா. [யோ

252 தூமாந்தர் நின்னருட்டேன் றுய்த்து மகிழ்ந்திடயான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டிங்—கேமாந்தேன்
றன்மமோ யாரிட்ட சாபமோ வென்னுடைய
கன்மமோ கம்பைமுரு கா. (உச)

253 பரமாதி மூன்றையுநற் பாகத்தாற் கண்டு
திரமாஞ் சகங்கழித்த சீவ-னுரமா
நிதியடையும் பின்னர் நிகரிலா வின்பக்
கதியடையுங் கம்பைமுரு கா. (உரு)

254 சஞ்சலமாம் வெந்நெருப்பைத் தண்ணருளாம் வெள்
விஞ்ச லுருதவிக்க வேண்டியே-கெஞ்சு [ளத்தால்
முடல்போலு மென்னு ளுயிர்போலும் வாழ்வாய்
கடல்போலுங் கம்பைமுரு கா. (உசு)

255 அருணகிரி நாத ரகத்தியர்நக் கீரர்
தெருளவ்வை யார்முதலாச் சேர்ந்த-பெரியோர்க்
கிலக்கமுண்டோ நாயேனு மேத்துகின்றே னெற்குங்
கலக்கமுண்டோ கம்பைமுரு கா. (உஎ)

256 மனையாளு மைந்தர்களு மன்னுமுற வோரும்
வினையாளுஞ் சூழும் விழைவி-னனநாளு
முண்டேனு ஞம லுழன்றலுத்தேன் யாதுபலன்
கண்டேனுன் கம்பைமுரு கா. (உஅ)

257 நாயேன் பலநாளு நன்மைசெயேன் றீமைசெய்வே
னீயேன்சும் மாவிருத்த னீதியோ-தீயோனைத்
தண்டிப்பான் மன்னவனத் தன்மையைப்போ லென்
கண்டிப்பாய் கம்பைமுரு கா. [னைநன்றாய்க் (உகூ)

258 தனமலையுங் கண்ணயிலுஞ் சாயன் மயிலு
புனமருவக் கண்டங்குப் போந்து-வனசரர்தம்
பண்வலையில் வீழும் பெருமானே வீழ்திமற்றென்
கண்வலையிற் கம்பைமுரு கா. (௩0)

259 சாதுசங்கஞ் சேராமற் றன்மநெறி யோராமற்
றீதுசங்கந் தீராமற் சிந்தித்து-மாதுசங்க
பூரணமோ காடவியிற் புக்கிடுவே னூழ்வினையின்
காரணமோ கம்பைமுரு கா. (௩க)

260 நவமே புரியாமற் றண்மலர்சாத் தாமற்
பவமே புரிந்து பசியா-னவமே
யுணக்கறியே சோறேயென் றார்திரிவே னுய்யுங்
கணக்கறியேன் கம்பைமுருகா. (௫௨)

261 மருள்செய்த வஞ்ச மனத்தினேன் றன்னை
யருள்செய்து நியன்பால் யாத்துத்-தெருள்செய்தால்
வெல்லுவேன் வல்வினையை வீறுமல் வேருடனே
கல்லுவேன் கம்பைமுருகா. (௫௩)

262 தான மறியேன் றவமறியேன் பேரின்ப
ஞான மறியே னலமறியேன்-றீனனே
னீட்டுவேன் வாய்வார்த்தை நின்னடியார்க் [கென்சொல்லிக்
காட்டுவேன் கம்பைமுருகா.

263 எத்தனையோ வீண்கூட்ட மெத்தனையோ வீண்வார்த்தை
யெத்தனையோ வீண்செய்கை யீட்டுபவ-மத்தனையும்
பண்ணுளா வென்னைப் படைத்தனையோ பன்னிரண்டு
கண்ணுளா கம்பைமுருகா. (௫௫)

264 துன்பா லடியேன் றுவளுகின்ற காலத்து
மன்பாற் பிறர்பா லடைந்துரையே-னின்பா
னுவலுவேன் றண்ணருட்க ணோக்காயே லந்தோ
கவலுவேன் கம்பைமுருகா. (௫௬)

265 நீரா றுமூழ்கியொளிர் நீறணிந்து கண்டிகைபூண்
டோரா றெழுத்துன்னு முண்மைசொலா-யீரா று
நேத்திரனே நாற்றிசையு நேர்த்தியுடன் [றோத்திரஞ்செய்
காத்திரனே கம்பைமுருகா.

266 ஆரா வமுதே வயில்வே லரசேயென்
றோரா யிரநாம மோதியே-காராவி
னம்பீரா னன்பி னபிடேகிக் கத்தயைபார்
கம்பீரா கம்பைமுருகா. (௫௮)

267 ஊழின் பெருவலியோ யுன்னை நினையகிலே
ஞழித் துரும்பா யலைகின்றேன்—கோழித்
துவசனே காப்பாய்மெய்த் தொண்டர்தமைக்
கவசனே கம்பைமுரு கா. [காக்குங்

268 பஞ்சும் படாப்பாடு பட்டேன் முறையிட்டே
னஞ்சும் பெருந்துயர்தீர்த் தாட்கொள்வாய்—
விஞ்சுமிரா
றங்கணு தொண்டரையே யாதரிக்க வேபுனைந்த
கங்கணு கம்பைமுரு கா. (சO)

269 கொடியபிறப் பென்னும்வெங் கோடையினல் வாடி
யடியடைந்தேன் சாந்த மளிப்பாய்—நெடிய
நிழலவனே சூரட்ட நிர்ப்பயனே வீரக்
கழலவனே கம்பைமுரு கா. (சக)

270 பல்லா யிரங்கோடி பத்த ரிளகுமனத்
துல்லாச ராய்க்களங்க மோவியுய்யப்—பொல்லா
வுளங்கனே ராயிருக்கு முண்மையினல் யானே
களங்கனே கம்பைமுரு கா. (சஉ)

271 ஒன்றிரண்டோ பாவ மொருகோடி செய்ததுண்டா
னின்றிவைகள் சோதிக்க நீதியோ—நன்றன்
றமலனே வேதசிரத் தாடுமருட் பாத
கமலனே கம்பைமுரு கா. (சங)

272 செத்தாற் பிறப்புஞ் செனித்தா லிறப்புமுள
வித்தா ரணிமீதி னின்பமென்னே—வைத்த
தொருத்தனே ஞழ்வினையோ வுன்னருளோ வாதி
கருத்தனே கம்பைமுரு கா. (சச)

273 பசிக்கின்ற போதும் பலசுவையோ டன்னம்
புசிக்கின்ற போதும் புதிதாய்—வசிக்கின்ற
மான்மறவேற் கண்ணார் மருவும்போ தாயினுநின்
கான்மறவேன் கம்பைமுரு கா. (சரு)

274 உதித்தேன் வளர்ந்தே னுலகமெலாஞ் சுற்றி
மிதித்தே னலுத்தேன் வெறுத்தேன்—றுதித்தடியே
னுவலா யுன்னையே யன்னையே யென்றடுத்தேன்
காவலா கம்பைமுரு கா. (சசு)

275 பாசிபட்டு நாறிப் பருகவுத வாச்சுனைபோன்
மாசுபட்டுக் கீழ்ப்பட்ட வஞ்சநெஞ்சைத்—தேசுபட்ட
வற்பகமே யாக்க வருமையோ சித்தாந்தக
கற்பகமே கம்பைமுரு கா. (சஎ)

276 கும்ப முலைமடவார் கோபவா யைப்பார்த்துச்
செம்பவள மென்றுகொவ்வைத் தீங்கனியென்—
றிம்பரன்பு
பூணுவே னின்னன்பு பூணேனெவ் வாறுகதி
காணுவேன் கம்பைமுரு கா. (சஅ)

277 அறிஞர்க்க டையாள மம்புவியி லென்னே
யிறைஞ்சியுனை யேத்துவதே யென்ப—குறிஞ்சிநில
வேந்தனே யேத்தாமை வீணலைவேற் கென்னைவள்ளி
காந்தனே கம்பைமுரு கா. (சகூ)

278 யாண்டுநோ யில்லாருக் கேனோ யுடையார்க்கே
வேண்டு மருந்து விதியீதே—யீண்டு
மிருணேயேன் வேண்டுவனு லின்னடியார்க் கேனின்
கருணையே கம்பைமுரு கா. (ருo)

279 நிலமும் பதியு நிதியு மழகுங்
குலமும் பெலமுங் குறையி—னலமு
முடையவனே யானலு முன்னன் பிலானேற்
கடையவனே கம்பைமுரு கா. (ருக)

280 பொன்னாசை பெண்ணாசை பூமியின்மே லாசையன்றிப்
பின்னாசை யில்லையிவை பேராசை—யுன்னாசை
வஞ்சனே னுக்கென்று வந்திடுமோ சீர்பாத
கஞ்சனே கம்பைமுரு கா. (ருஉ)

281 ஐங்காத தூரத் தரைக்கா சுறுமென்றற்
றங்கா தரைக்கணத்திற் சார்குவே—னங்கேபோய்
மேல்வருந்துன் போரேனின் மெய்க்கோயில்
கால்வருந்துங் கம்பைமுரு கா. [சூழவென்றற் (ருரு)

282 தெரிந்துங் கொடும்பாவஞ் செய்கின்றே னந்தோ
பரிந்துமொரு புண்ணியமும் பண்ணே—னெருங்கிச்
சினங்கொண்ட வேமபடர் சேர்ந்திடினென்
கனங்கொண்ட கம்பைமுரு கா. [செய்வேன் (ருச)

283 தாயுந் துயிலவப்பன் றுன்றுயிலச் சோதரரு
நாயுந் துயில நகர்துயிலப்—பேய்துயிலு
நள்ளனே ரத்தெயினர் நங்கையைக்கொண் டேகியநீ
கள்ளனே கம்பைமுரு கா. (ருரு)

284 சிரம்வணங்கிக் கும்பிட்டுச் சிந்தையொரு மித்துப்
பரவசமாய் நின்று பணிந்து—விரவுதுதிப்
பாட்டுவா யர்க்குன் பதங்காட்டு வாயெனக்கென்
காட்டுவாய் கம்பைமுரு கா. (ருசா)

285 துன்புமுதிர் வெம்பனியாய்த் தொல்லைவினை வல்லிரு
முன்பு முதிரவிவை மோயவெண்ணி—யன்பு [ளாய்
முதிரவனே தாமரையா முன்வருநீ ஞானக்
கதிரவனே கம்பைமுரு கா. (ருஎ)

286 மாடுபோ லோரிடத்தின் வாய்ந்தபுன்மே யாமலற்ப
வாடுபோ லோடி யலைந்தென்போற்-கேடொருவர்
கொண்டதுண்டோ வுண்டென்ற கூற்றுமுண்டோ
கண்டதுண்டோ கம்பைமுரு கா. [கேட்டதுண்டோ

287 காலையினு மாலையினுங் காதலினுன் னன்பருக்கே
வேலைசெய வைத்தருளாய் வேலையனே-சோலை
யரும்புவிளை தேன்பாய்ந் தகனிலத்துச் செந்நெல்
கரும்புவிளை கம்பைமுரு கா. (ருகூ)

288 பொன்னாட்டு வாணர் புகழ்ந்தேத்துஞ் செந்தமிழின்
சொன்னாட்டு வாணர் சுகம்விரும்பி-யிந்நாட்டி
னாட்சியா யென்று மமர்ந்தனைநீ யிதேவர்க்குங்
காட்சியாங் கம்பைமுருகா. (சுO)

289 மல்லல் வெறுக்கைமிக வாய்ந்தவனே யானாலு
மல்லல் வறுமையுள னானாலு-நல்ல
நனவானே நின்னை நயந்துருகு வானேற்
கனவானே கம்பைமுருகா. (சுக)

290 சாமா னியனைத் தமிழ்மாலை யால்வதன
சோமா சிலையர்ச் சுனுவடல்சேர்-வீமா
சதிர்காமா வென்றுபுகழ் தாழ்வகற்றி யாளாய்
கதிர்காமா கம்பைமுருகா. (சுஉ)

291 பூனைமுகங் கண்டகிளி போன்மறலி யைக்கண்டு
நானைவுறு வின்பநல்காய் நற்றெய்வ-யானை
மணவனே வேடர் வளர்த்தவள்ளி யம்மை
கணவனே கம்பைமுருகா. (சுரு)

292 அம்மைகா மாட்சி யரும்பெறலே யேகம்பர்
மும்மையார் கண்களிக்கு முத்தையா-வெம்மை
நலிதீராச் சேயேனை நன்றுகண்பார்த் தென்றன்
கலிதீராய் கம்பைமுருகா. (சுச)

293 மரணமுறு மென்றே வருந்துமெனை வந்தித்
தருணமுவந் தாளாய் சரணஞ்-சரண
மனகமே யன்பே யருளே மணியே
கனகமே கம்பைமுருகா. (சுரு)

294 அன்னைநீ யென்றே யடைந்து சரணமிட்டே
னென்னைநீ காவாயே யிப்பழிதா-னுன்னை
விடாசலா பாகடம்பா வேலா குகாவேங்
கடாசலா கம்பைமுருகா. (சுசு)

295 போற்றற் கெளிவருநின் பூங்கமலச் சேவடியெந்
தோற்றக் கடல்கடக்குந் தோணியா-மேற்றமுத்திக்
கேணியா மொப்பற்ற வின்பச் சுகம்விளையுங்
காணியாங் கம்பைமுரு கா. (சுஎ)

296 என்றும் பவமே யிழைக்குமவ ரைக்கூடி
நன்றென்ப தொன்றேனு நாடாதே-னுனறனக்கே
யெட்டியே யானாலு மென்றனக்குநீ கருப்பங்
கட்டியே கம்பைமுரு கா. (சுஅ)

297 உபய பதச்சிலம்பி னோசைவழி யேபோய்
விபவ மடைந்துய்ந்த மேலோர்-நபமலர்த்தா
ளோதலனே யானாலு முய்யவருள் யானுனது
காதலனே கம்பைமுரு கா. (சுகூ)

298 ஊனா யுயிரா யுணர்வா யமர்ந்தவருட்
கோனாய் விளங்குங் குமரனீ-யானுன்
மடமையே னானாலும் வந்தாள யார்க்குக்
கடமையே கம்பைமுரு கா. (எ0)

299 புகழ்ந்தான் மகிழ்வேன் புகுந்தொருவன் மற்று
மிகழ்ந்தால் வருந்துவே னென்னே-மிகுந்த
விடம்பனேற் கொத்தமன மென்றுவருந் தண்பூங்
கடம்பனே கம்பைமுரு கா. (எக)

300 என்னிரண்டு கண்ணுக் கிராறுவிழி யாறுமுகம்
பன்னிரண்டு தோளழகும் பார்ப்பரிதென்
-றுன்னிரண்டு
தாளையே நாடத் தவஞ்செய்வேன் மான்பிடிசேர்
காளையே கம்பைமுரு கா. (எஉ)

301 நன்னிதியே ஞானகுரு நாதனே யானுனது [வேன்
சன்னிதியைச் சேரத் தயைசெய்தாற்-பின்னருய்
யாக்கையும் பொன்னிறமே யாகுமான் மேருவண்முங்
காக்கையுங் கம்பைமுரு கா. (எங)

302 அறமின்பங் காட்டு மரும்பொருள்போ லீச
னறுங்கழலைக் காட்ட நடுவே-யுறைந்தருளு
மைந்தனே மைந்தன் மனத்துறையு நாளுளதோ
கந்தனே கம்பைமுரு கா. (எச)

303 எண்ணுமுன்றன் பேர்கேட்டால் யாருருகார் காட்ட
நண்ணு மரமு நனியுருகு-மண்ணுருகும் [கத்து
புல்லுருகு மாவுருகும் புள்ளுருகும் வெய்யகருங்
கல்லுருகுங் கம்பைமுரு கா. (எரு)

304 அன்பே வடிவா யவசமடைந்தே யோர்பெ
ணின்பே ருரைக்கு நிலையறிந்து-முன்போய்
வரந்தந்தாய் காந்தண் மலர்போலும் வெட்டுண்
கரந்தந்தாய் கம்பைமுரு கா. (எசா)

305 மாங்கனியை வேண்டி வலமுலகஞ் செய்தபெண்ணி
யாங்கனிவி னின்பாத மேத்துகின்றேம்-பாங்காய்த்
தனியேனற் கொல்லைவளர் தத்தைக் கினிய
கனியேநற் கம்பைமுரு கா. (எஎ)

306 குலவு முறையொன்றுங் கோடா தியற்றி
நிலவு முறுவலன்பர் நெஞ்ச-மலரி
னடந்தவனே யென்கனெஞ்சி னண்ணுவையோ
கடந்தவனே கம்பைமுரு கா. [சூரைக் (எஅ)

307 சூழுமவர் நோயைத் தொலைப்பாய்நிற் சூழாம
லாழுமய லேனை யகற்றுவையோ-வேழுலகும்
பூத்தவனே விண்ணிற் புலோமசையின் பொற்றாலி
காத்தவனே கம்பைமுரு கா. (எகூ)

308 கள்ளன் கொடியன் கலதி யிவனென்று
தள்ளலைய நின்பாற் சரண்புகுந்தேன்-வள்ளலே
மாகமேற் கற்பகத்தை மன்னினமு துண்ணுமென்பர்
காகமே கம்பைமுரு கா. (அ0)

309 வாழையடி வாழையென வந்துனது மாற்றுயர்ந்த
மாழையடி வாழ்த்தடியார் வண்சவையி—லேழை
யடியனே னென்னெருசா ரார்ந்திடினுஞ் சாலுங்
கடியனேன் கம்பைமுரு கா. (அக)

310 சயந்தன் கனவிற் றரிசனந்தந் தாய்நீ
நயந்தன் னவனுமுய்ந் தாஞயேன்—வியந்து
நனவிலுந்தா னெண்ணியுமென் னண்ணுவையோ
கனவிலுந்தான் கம்பைமுரு கா. [வென்றன் (அஉ)

311 தோன்று முடலுந் துனிசேர் பொருளுமிக
வேன்று மகிழுயிரு மென்னுமொரு—மூன்று
மளித்திடுவே னீயென் னளிக்கினும்யான் பெற்றுக்
களித்திடுவேன் கம்பைமுரு கா. (அரு)

312 தொண்டனேன் றன்னைநீ சோதிக்க நீதியுண்டோ
கண்டகவெஞ் சூரன்முனங் காணவுருக்—கொண்டு
பரந்தவனே யனனவனும் பார்த்து மயங்கக்
கரந்தவனே கம்பைமுரு கா. (அச)

313 மூந்து முழுவலன்பர் மும்மலமு மோயநிதம்
வந்துமுழு கானந்த மாகடலிற்—சிந்துந்
திவலையே சாலுமிது சேர்வதெவ்வா றீதே
கவலையே கம்பைமுரு கா. (அரு)

314 எப்பற்றும் விட்டவர்க்கே யின்பமுத்தி யுண்டென்பர்
துப்பற்ற வர்க்கென் சுகமுண்டே—யொப்பற்ற
புண்ணியனே பேறுதரும் புங்கவனே பூங்கடப்பங்
கண்ணியனே கம்பைமுரு கா. (அசு)

315 பொருந்துமிருட் காட்டிற் புகுந்துகைக்கோல் போயே
வருந்துங் குருட்டுமன் மான—விருந்திங்
குழலுவே னின்னருட்க ணுண்டாமேற் றுன்பங்
கழலுவேன் கம்பைமுரு கா. (அஎ)

316 புக்க வெயிலிற் புழுப்போல் வருந்துமெனை
யிக்கணமே கண்பார்த் திரட்சிகண்டாய்—மிக்க
வழகனே யாறுமுகத் தண்ணலே யன்பர்
கழகனே கம்பைமுரு கா. (அஅ)

317 வெள்ளிமலை வித்தகர்க்கு வேதனறி யாப்பொருளைத்
தெள்ளிமலை வின்றுரைத்த தேசிகபோய்—வள்ளிக்கு
நீசலா மிட்டதென்ன நேர்த்திகாண் சீர்த்ததணி
காசலா கம்பைமுரு கா. (அகூ)

318 துன்பக் கடல்வீழ்ந்த தொண்டனேன் றன்னையெடுத்
தின்பக் கரைவிடுக்க யாதுதடை—யன்பி
னளைந்தவனே பன்னிருகை யாயசுரக் காட்டைக்
களைந்தவனே கம்பைமுரு கா. (கூ0)

319 எண்ணவொட்டார் பாடவொட்டா ரென்றுமுனைச்
சார்ந்துவலம்
பண்ணவொட்டா ரேழையென்ன பண்ணுவே
-னண்ணு
முலகமெலா மோருமுனக் கோதலென்னே யைவர்
கலகமெலாங் கம்பைமுரு கா. (கூக)

320 இச்சையினிற் சேவிக்க யானழைத்தும் வாராதென்
பச்சைமயில் விட்டுப் பறந்ததோ—வைச்சதொரு
சீலமோ மெய்யடியார் சீறுவரோ வன்றுகலி
காலமோ கம்பைமுரு கா. (கூஉ)

321 பெருமைமந்த ராந்தொண்டர் பேறுபெற வைத்திவ்
வொருமைந்தன் மேல்வெறுப்பே னோதா—யருமந்த
நல்யாணு தம்பேர னவிலுமெந்தாய் வள்ளிமகிழ்
கல்யாணு கம்பைமுரு கா. (கூங)

322 எத்தனைவன் றுன்பங்க ளெய்துகினு மெய்துகயா
னத்தனைக்குஞ் சற்றேனு மஞ்சிடேன்-சத்தி
தரணனே யுன்றன் சரணடைந்தே னந்தக்
கரணனே கம்பைமுரு கா. (கூச)

323 பேரானந் தக்கடலிற் பெட்பினு டன்பரிடைச்
சேரா னமன்சேர்ந்தாற் றீங்கடைவா-னீரி
னயல்பாயுஞ் சிச்சிலியு மஞ்சியற வாவிக்
கயல்பாயுங் கம்பைமுரு கா. (கூரு)

324 ஏனுரு நின்னடிக்குற் றேவல்செய வைத்தியந்தச்
சேனுட்டி னின்பமதைச் சிந்தியே-ஞுனுங்
கோவோங்கு மாதர் குளிர்பூப் பறித்தணியக்
காவோங்கு கம்பைமுரு கா. (கூசா)

325 நாடுபரங் குன்றுசெந்தூர் நல்லாவி னன்குடிசீர்க்
கூடுதிரு வேரகங் குன்றுதோ-ருடல்
பழமுதிர் சோலையும்வாழ் பண்ணவனே நின்பூங்
கழன்மறவேன் கம்பை முருகா. (கூஎ)

326 இகத்தும் பரத்துமுய ரின்பங் கொடுக்கு
மகத்துவமெய்ஞ் ஞான மணியே-மிகுத்த
திடவுளே வந்தமர்வாய் சீர்க்குமர கோட்டக்
கடவுளே கம்பைமுரு கா. (கூஅ)

327 தேன்சொல்லின் வல்ல செழும்புலவ ரன்பினுரை
பொன்சொல்லி னென்னுடைய புன்சொல்லு-[நன்சொல்லா
முச்சிவருங் கொன்றையறு குந்தைகம்பர் சூடியவா
கச்சிவருங் கம்பைமுரு கா. (கூகூ)

328 வாழியயில் வாழிமயில் வாழிகொடி வாழியன்பர்
வாழியுயிர் வாழிசைவ மாமறைநூல்-வாழி
நிழல்வாழி மாதரொடு நீவாழி நின்பூங்
கழல்வாழி கம்பைமுரு கா. (கஉஉ)

வெண்பா மாலை முற்றிற்று.

## தாலாட்டு.

### காப்பு.

329 பாலாட்டு மன்பருய்யப் பாங்கருளக் கம்பைநகர்
மேலாட்டுவந்துறைசெவ் வேள்விரும்புந்-தாலாட்டுப்
பாட்டுரைக்க நெஞ்சே பதிவிகட சக்கரன்ருள்
வேட்டுரைக்க வேண்டுமிது வே.

### நூல்

330 பூவோங்கு பொன்னகரம்போலோங்கிக்கற்பகம்போற்
காவோங்கு செல்வநிறை கம்பைவளர் சண்முகனே.

331 எண்ணி லுலகமெல்லா மீடேறக் கம்பேசர்
கண்ணில்வரு கண்மணியோ கம்பைவளர் பொன்
[மணியோ. (உ)

332 அளிக்குமருட் காமாட்சி யம்மையணைத் துள்ளங்
களிக்கு மிலஞ்சியமோ கம்பைவளர் சேயவனே. (ங)

333 சரவணப்பூந் தொட்டிலிடைத் தானமர்ந்த ஞானக்
கருணைத் திருவுருவோ கம்பைவளர் காரணனே. (ச)

334 பார்த்திகையோ ரெட்டும் பரவமுலைப் பால்கொடுத்த
கார்த்திகைமின் ஞர்மகவோ கம்பைவளர் நாயகனே.

335 அங்கைத் தலத்தா லணைத்தன் பொடுசுமந்து
கங்கை மகிழ்மகனே கம்பைவளர் காவலனே. (சு)

336 தாட்சிலம்பு கொஞ்சத் தளர்நடையிற் பெற்றோர்க்குக்
காட்சிதருங் காட்சியோ கம்பைவளர் கண்ணியனே.

337 சர்வமுந்தா னென்னுமுருத் தான்காட்டித் தேவர்
[கொண்ட
கர்வந் தொலைத்தவனே கம்பைவளர் கொற்றவனே.

338 நவவீர ரோரிலக்கர் நற்றுணைவர் போற்றக்
கவின்ற வந்தவனே கம்பைவளர் காதலனே, (கூ)

339 நாரதன்செய் வேள்வியிடை நண்ணுந் தகரையலங்
காரமுற வூர்ந்தவனே கம்பைவளர் காட்சியனே. (கo)

340 திசைமுகனைக் குட்டிச் சிறைபுரிந்து பின்னர்க்
கசியவருணே த்திரனே கம்பைவளர் காத்திரனே.

341 வேதனறியாதமறை மெய்ப்பொருளைச் சங்கரனார்
காதிலுரை வாசகனே கம்பைவளர் தேசிகனே. (கஉ)

342 முதிர்நகையா லூர்முனிந்த முக்கணனார் கையிற்
கதிர்வடிவேல் பெற்றவனே கம்பைவளர்
[நற்றவனே. (கங)

343 அல்லல்புரி தாருகனை யட்டவனே வஞ்சகஞ்செய்
கல்லகத்தைக் கீண்டவனே கம்பைவள ராண்ட
[வனே.

344 மிண்டசுரன் றன்கருத்தை வீரமொய்ம்பற் [றாதுவிட்டுக்
கண்டகருணாகரனே கம்பைவளர் சேகரனே. (கரு)

345 நனவின் மறவாத நற்சயந்தன் காணக்
கனவின் வந்த நேரியனே கம்பைவளர் சீரியனே. (கசு)

346 ஆயிரத்தெட் டண்டமெலா மாண்டசூ ராதியரைக்
காயுமயில் வேலவனே கம்பைவளர் மேலவனே. (கஎ)

347 விண்ணவர்சே னபதியோ மேவுந் தயாநிதியோ
கண்ணா ரமுதமோ கம்பைவளர் சீமானே. (கஅ)

348 செந்தினகர் வாழ்வோ திருப்பரங்குன் றத்துறையுங்
கந்தப் பெருமானே கம்பைவள ராதிபனே. (கசு)

349 மெய்ப்பிடித்த தேவரன்பு மேவுதெய்வ யானைதனைக்
கைப்பிடித்த நாயகனே கம்பைவளர் கோமானே.

350 சீராவி னன்குடிவாழ் தெள்ளமுதோ வெம்முடைய
காரண வப்புகையோ கம்பைவளர் சோதியனே. உக

351 திருவே ரகமமர்ந்த தேசிகனே தொண்டர்
கருவே ரகம்பவனே கம்பைவளர் சிற்குணனே. (உஉ)

352 குனறுதோ ருடுங் குணநிதியோ வன்பரெனுங்
கன்றுகட்குச் சேதாவோ கம்பைவளர்
புண்ணியனே. (உங)

353 துன்னும் பழமுதிர்வண் சோலைமலர்த்
[தேன்பெருக்கோ
கன்னலோ கற்கண்டோ கம்பைவளர் தெள்ளமு
தோ. (உச)

354 குன்றுக் குடிவாழ் குமரனே போற்றுநரைக்
கன்று வருள்வடிவே கம்பைவளர் தற்பரனே (உரு)

355 சதுமா மறைப்பொருளோ தண்ணருளோ கண்டிக்
கதிர்காம மேயவனே கம்பைவளர் தூயவனே. (உசா)

356 அண்ணு மலையி லருணகிரி நாதரன்பாய்க்
கண்ணுரக் கண்டவனே கம்பைவள ரற்புதனே. (உஎ)

357 பொதியமலைச் சித்தனுக்குப் புத்திசித்தி முத்திக்
கதியளித்த சித்தனே கம்பைவளர் சிற்பரனே. (உஅ)

358 உலகமெலாம் போற்றவந்தே யோங்குசங்கத் தார்கள்
கலகமெலாம் போக்கினனே கம்பைவளர் பாக்கியனே

359 ஆற்றுப் படைசாத்து மன்புடைநக் கீரருக்குக்
காற்றுணையை நல்கினனே கம்பைவளர் துல்லியனே

360 பொல்லாத நோயனைத்தும் போக்குந் தணிகையென்
[னுங்
கல்லார பூதரனே கம்பைவளர் காங்கெயனே, (நக)

361 வல்வேட ராதரிக்கும் வள்ளிமலை வாழ்வள்ளி
கல்யாண சுந்தரனே கம்பைவளர் சோபனனே. (நஉ)

362 அந்தமலை வல்லிபங்க ராளுங் கயிலைமலைக்
கந்தமலைச் செந்தேனே கம்பைவளர் மாமருந்தோ (௫௫)

363 எண்கண்ட தேவரைப்போ லின்றிக் கலியுகத்திற்
கண்கண்ட தெய்வமோ கம்பைவளர் தாயகமோ.

364 ஒளித்துவந்து தாய்கொண்ட வூடலறத் தந்தை
களிக்கநகை கூர்பவனே கம்பைவள ரோகையனே

365 எம்மான் புயமலைமே லேறியிளம் புற்பறித்துக்
கைம்மானுக் கீபவனே கம்பைவளர் விந்தையனே

366 அங்கணனுர் வேணி யரவைவிளை யாட்டினங்கைக்
கங்கணமா வேய்பவனே கம்பைவளங் கூர்பவனே.

367 ஒருகோலங் காணு வொருகோலம் போற்றுங்
கருகூல மானவனே கம்பைவளர் வானவனே. (௫அ)

368 தூக்கும்வினை யாலடியார் சஞ்சலித்தா லஞ்சலென்றே
காக்குந் தயாநிதியோ கம்பைவளர் மாநிதியோ. (௫௯)

369 வினைவறியாப் பேயேன் வினையகல வுள்ளங்
களவுசெய்த கள்வனே கம்பைவளர் வள்ளலோ (௬0)

370 தத்துவமுப் பத்தாறுந் தாங்கடந்த பேரொளியாங்
கத்தனே நித்தியனே கம்பைவளர் சத்தியனே. (௬௧)

371 மணமு மலருமென மன்னியன்பர் தம்மைக்
கணமுமக லாதவனே கம்பைவளர் மாதவனே. (௬௨)

372 சுலபமா யன்பரெதிர் தோன்றியரு ணீலக்
கலபமயில் வாகனனே கம்பைவளர் மோகனனே.

373 பங்கயப்பூந் தாளானே பன்னிரண்டு தோளானே
கங்குல்பக லற்றவனே கம்பைவள ருற்றவனே. (௬௪)

374 இரும்போ வெனுமென் னிதயமுந்தித் திக்குங்
கரும்போ செழும்பாகோ கம்பைவளர் செந்தேனே.

375 இனியகழைச் சாறோ விணையில்பசும் பாலோ
கனியோ கனிரசமோ கம்பைவளர் தெள்ளமுதோ.

376 சுடரோ சுடரொளியோ சொல்லரிய ஞானக் [ப்போ.
கடலோ கருணைவெற்போ கம்பைவள ரன்பர்வை

377 மனகமல முத்தோ வயிரமோ வாணிக்
கனகமோ செம்மணியோ கம்பைவளர் விண்மணியோ

378 மெச்சுமன்பர்க் காக வியன்குமர கோட்டமன்னிக்
கச்சிவரும் பொற்பகமோ கம்பைவளர் கற்பகமோ.

379 சீதப் பழநியைப்போற் சீர்ப்பசுமந் தானகர்வாழ்
காதற் பழம்பொருளோ கம்பைவளர் நற்றெருளோ.

380 என்றென்றே தாலாட்டி யெல்லோரு மின்பமுற
மன்றவருள் செய்வனெங்கண் மாக்கம்பை வாழ்குக
னே. (ருக)

தாலாட்டு முற்றிற்று.

———

## திருப்பள்ளி யெழுச்சி

381 சீர்வளர் மாவடி வாழ்கம்ப வாணர்
திகழ்கடி மார்பின் வடுவுறச் செய்த
வார்வளர் கும்ப முலைப்பெரு மாட்டி
மடிமிசை யமருநின் காட்சியை மானப்
பார்வளர் குணதிசை மைக்கடன் முகட்டிற்
பரிதியம் பண்ணவ னுதயஞ்செய் தனனு
லேர்வளர் கம்பையுள் வாழ்முரு கோனே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (க)

382 ஊழி னருந்தவ வுத்தம ருக்கே
யுதயஞ்செய் நின்பத சூரியன் வரவுங்
கோழி யிசைப்பது நிச்சய மென்னக்
குவலய மீது குணதிசைக் குன்றி
ஞழியொன் றேழ்பரித் தேர்ச்சுடர் வரவை
யாவலிற் சேவல்க ளார்த்தன வையா
வேழிரு புவனமு மொளிர்கம்பை வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (உ)

383 அன்புறு மையநின் றிருமுகக் காட்சி
யாதர வாற்கண்டு கொண்டவர்க் கெல்லாம்
வன்புறு மாயை யொழிந்தது போல
வாம்பரி யேழுடைத் தேரவற் கண்டே
முன்புறு வையக முற்றினு மூடு
மொய்யிர வோவிய மேவிய தொண்ட
ரின்புறு கம்பையுள் வாழ்முரு கோனே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (ந)

384 கண்டிகை வத்திரு நீறும் புனைந்துன்
கதிர்முக தரிசனங் காதலிற் பெற்ற
தொண்டிகை யன்பர்கள் கட்புனல் சோரத்
தோத்திரப் பாட்டொடு முகமலர் செயல்போல்
வண்டிகை தேனொடு செங்கதிர் நோக்கி
வாவிக டோறு மலர்ந்தன கமல
மெண்டிகை யோர்புகழ் கம்பையு ளெந்தா
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (ச)

385 நற்போத வன்பர்நின் பொற்பாத சேவை
நண்ணக் கருவி கரணங்க ளோய்ந்தே
தற்போத நீங்குவர் தன்மையிற் பொற்றேர்
தன்னின் விபாகரன் சாரவிவ் வுலகி

லற்போது தாரகை யோவின வல்லோ
னல்லோ னெனுவொளி தேய்ந்தன னம்மா
வெற்போ லொளிர்மதிற் கம்பையுள் வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (ரு)

386 பொங்கரின் மாங்குயில் கூவின மற்றைப்
புட்கள் சிலம்பின வார்த்தன சங்கஞ்
சங்கையின் மத்தள தாளத்தி னேங்கு
சதியொடு சரிகம ப்தநிச கீத
நங்கையர் நின்னருள் வேன்மயி லழகி
னயனம் புரட்டி நடம்புரி கின்று
ரெங்கள் குலதெய்வ மேகம்பை வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (சா)

387 புங்கவ ரந்தர துந்துபி யார்த்தார்
பொன்னரி மாலையுங் கொண்டுநிற் கின்றார்
துங்க முனிவர ராசிசொல் கின்றார்
தும்புரு நாரதர் யாழிசைக் கின்றார்
மங்கல வேதியர் மறையொலிக் கின்றார்
வழியடித் தொண்டர்க டுதிபுரி கின்று
ரெங்கணும் பேர்பெறு கம்பையுள் வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (எ)

388 கமலவல் லியினெடு கார்வண னெருசார்
கலைமக ளுடனன்ன வாகன னெருசா
ரிமயவர் சசியொடு மிந்திர னெருசா
ரிலக்க ரொடுநவ வீரர்க ளொருசார்
தமதுள மகிழ்வொடுன் றரிசனங் காணச்
சார்ந்தனர் சரவண பவசிவ குருவே
யிமமலர் நந்தனஞ் சூழ்கம்பை வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (அ)

389 அருச்சக ரன்பினின் ஞகம முறையே
யபிடேக திரவியந் திருப்பள்ளித் தாமந்
திருக்கிளர் பூந்துகின் மணிமுடி முதலாந்
திகழ்பணி சந்தன குங்கும வாச
மருக்கமழ் தூபமுந் தீபமு மமுது
மகிழ்வொடு கொண்டருச் சிக்க விழைந்தா
ரிருக்கொலி குலவிய கம்பையுள் வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (௯)

390 அம்மையு மப்ப னு மைங்கர முடைய
வண்ண லு மன்பி னணைக்குங் குழந்தாய்
கொம்மை முலைக்குற மானுநற் றேவ
குஞ்சரி யுங்களி கொள்ளு மணாளா
விம்மை மறுமைப் பயனையு நாளு
மேத்துமெய்த் தொண்டர்க் கருளும் பிரானே
யெம்மைக்கண் பார்த்தருள் வான்கம்பை வேளே
யெம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (௧0)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

## பெரிய கட்டியம்

391 கனகமலை நிகர்களப வதனகண பதிபின்வரு
கம்பீர சுந்தரசண் முகனே
சனகர்முதன் முனிவரர்த மயலகல வருள்பரமர்
தங்காதி லின்சொலுரை சுகனே
யனகவிம கிரிகுமரி கவுரிமடி மிசைமிகவு
மன்பா யமர்ந்துவளர் மகனே
தினகரன துடல்குளிர நிழலுதவு பொழில்நிலவு
சிங்கார கம்பைவளர் குகனே. (௧)

392 உரைசெயறு சமயமுமெ யுடையவொரு கடவுளென
வுந்தாசை கொண்டுபணி பாதா
வரைசெயிடர் கழியவொரு நொடியிலயில் விடுபரம
மைந்தா செழுஞ்சுருதி கீதா
விரைசெய்குர வணிபனிரு புயசயில மருவிநிதம்
விஞ்சார்வ ரஞ்சிதவி னோதா
திரைசெய்கட லுலகிலொரு நகருநிக ரிலையெனுமொர்
சிங்கார கம்பைவளர் நாதா. (உ)

393 புனலுவரி நுகர்பொதிய மலைமுனிவர் முழுகவருள்
பொங்காழி தந்ததரு ராயா
வனகலப மயிலின்மிசை யுலகையொரு நொடியில்
வந்தா யெனும்புகழ்கொ டேயா [வலம்
வினலகல முருகவென நினையடிய ருறையுமிட
மெங்கேனு மங்குவரு நேயா
சினகரசி கரிககன முகடளவ வமரர்துதி
சிங்கார கம்பைவளர் சேயா. (௩)

394 பகரரிய பிழைசெயினு முனியலென வுலகுதரு
பங்கே ருகன்பரவு விதியே
யிகழ்விலடி யர்கள்வறுமை யிடரகல நினைவின்வண
மிங்கே யுவந்தருளு நிதியே
யகரநிக ரெனவொளிரு நினையடையு நெறியுடைய
ரங்கே மகிழ்ந்துபெறு கதியே
சிகரபுள கிதகளப முலைமகளிர் பரதமிடு
சிங்கார கம்பைவளர் பதியே. (ச)

395 பணிகளது குலமுழுது முகளபத நகநுதிகொள்
பைந்தோகை யஞ்சிகியின் மேலா
தணிவினசை யொடுகடிய கொடுமைபல புரியசுர
சங்கார வங்கைவடி வேலா

வணிககன மிசையுலவி யுடுவை நுகர் பொரியினணே
யஞ்சேவ லங்கொடிவி சாலா
திணிகன்மன முடையவரு முருகுமன மொடுதுதிசெய்
சிங்கார கம்பைவளர் பாலா. (ரு)

396 மனமுருக முருகவெனு மமரர்தம துலகினிடை
மங்கா வளம்பெறவை திருவே
யினிதுசுர பதியுதவு வனிதைசுர கரியைமிகு
மின்பாய் மணந்தமலர் மருவே
யனநடையு மமுதமதி முகமுடைய குறவர்கொடி
யன்பா யணைந்துபடர் தருவே
தினமும்விழ வயர்மறுகி னரர்விபுத ரொடுவிரவு
சிங்கார கம்பைவளர் குருவே. (சா)

397 உகளவெழு புவனமுழு மையுமுலவி வருமொர்நவ
வுங்காரர் முன்புவரு வோனே
சகலவுயிர் களினுளுயி ருணர்வுளுணர் வெனவினிது
தங்காதி யந்தமில்பி ரானே
குககுமர குருமுருக வெனவுருகி யடியவர்கள்
கொண்டாட நின்றபெரு மானே [கொள்
திகழ்கழனி யுழுதுழவர் பயிர்செய்வள மலியொலி
சிங்கார கம்பைவளர் கோனே. (எ)

398 அரியயன்வி ணவரதிப னமரர்வர ரபயமென
வஞ்சே லெனுங்கருணை வரனே
விரியுவரி வறுமையுற நுகர்பெரிய வயிறுடைய
வெம்பூதர் விஞ்சியகு மரனே
வருகுருகு மலையினெடு பொருதுபுல கொடுமைபுரி
வன்றூர கன்றனைவெ லூரனே
திருமகளு மினியகலை மகளுமன மகிழ்வினுறை
சிங்கார கம்பைவளர் பரனே. (அ)

399 திகழருணை புகழ்மயிலை யுயர்பழநி இளர்பொதியை
செந்தூர்வி ளங்குமுப காரா
மகிழ்கதிரை தமிழ்மதுரை மிளிர்கமலை நடனமிடு
மன்றேர கங்குலவு தாரா
நகுகயிலை மலைசமர புரியினிய தணிகைமலை
நன்காஞ்சி யம்பதிகு மாரா
செகவனிதை முககமல நிகர்மகிமை குலவுகன
சிங்கார கம்பைவளர் வீரா. (௯)

400 உருவெனவு மருவெனவு முருவருவ மெனவுமறை
யொன்ரு வுணர்ந்துதொடர் மூலா
மருவுமிரு வினைதுலையி னுறுமெயடி யரைவலிய
வந்தே கலந்தவநு கூலா
கருணைபுரி மருகனென வரிதிருவி னுடனினிது
கண்டோகை கொண்டுபுகழ் கோலா [டனை
தெருவுதொறு மணிபணிக ளகிலினுறு துகளோ
சிங்கார கம்பைவளர் சீலா. (௧0)

பெரியகட்டிய முற்றிற்று.

---

## சின்ன கட்டியம்

401 ஐந்துகர முன்பனெடு பின்னே
யன்பின்வரு துங்கமிகு மன்னே
கந்தகிரி யின்கணுறை பொன்னே
கம்பைவள ரெங்களரு ளன்னே. (௧)

402 உம்பருய வந்தவரு ளுருவே
யொங்குலக மெங்குமலர் மருவே
கம்பர்மகி ழும்ப்ரணவ குருவே
கம்பைவள ரெங்கள்சுக தருவே. (௨)

403 விஞ்சு துய ரங்களையு நீதா
வெங்குறவர் பைங்கொடிவி நோதா
கஞ்சனைமு னிந்தசதுர் வேதா
கம்பைவள ரெங்கள்குரு நாதா. (ங)

404 தொண்டர்பணி தண்டையணி காலா
சுந்தரியெ னுங்கவுரி பாலா
கண்டகரை வென்றவடி வேலா
கம்பைவள ரெங்கள்குண சீலா. (ச)

405 அங்கணரி ருங்கயிலை வாசா
யந்தணிகை யின்கணுறை நேசா
கங்குல்பக லின்றொளிர்வி லாசா
கம்பைவள ரெங்கண்முரு கேசா. (ரு)

406 செந்தினகர் வந்தமரு நித்தா
தென்பழநி யின்கணுயர் சித்தா
கந்தருவர் நின்றுபுக ழத்தா
கம்பைவள ரெங்கள்குல கத்தா. (சா)

407 இம்பரின்வி ளக்குபசு மந்தா
னென்றொளிர்த லங்குலவு சிந்தா
கம்பரவு மின்புதவு கந்தா
கம்பைவள ரெங்களருண் மைந்தா. (எ)

408 நண்பரிடை யென்றும்வரு வோனே
நன்றுநினை யின்புதரு வானே
கண்பனிரு கொண்டமுரு கோனே
கம்பைவள ரெங்கள்பெரு மானே. (அ)

409 குஞ்சரியெ னும்பெண்மண வாளா
குங்குமக தம்பமணி தோளா
கஞ்சிநக ரின்புறுகு ணாளா
கம்பைவள ரெங்களரு ளாளா. (கூ)

410 துங்கநடை யஞ்சிகியின் வையா
தொண்டர்மகிழ் கொண்டுதுதி மெய்யா
கங்குல்பக லுந்தயைசெய் துய்யா
கம்பைவள ரெங்களரு ளையா. (ய)

சின்னகட்டியம் முற்றிற்று.

---

## குயிற் பத்து

411 சீத மலர்ப்பொழின் மாமரந் தன்னிற்
சிறப்பி னமர்ந்துல கோர்மகிழக்
கீத மிசைக்குநற் கோகிலமே யொன்று
கேண்மையிற் சொல்லுவன் கேட்குதியால்
பூதல மீதல முற்றவர் மற்றவர்
போற்றுங் கம்பாபுரி யாறுமுக
நாதனை நங்கள் பிரானைக் குகேசனை
நண்புட னேவரக் கூவாயே. (க)

412 வேடை யகற்று மலர்ப்பொழி லீதென்று
மேவின ருள்ளங் குளிர்ச்சியுறக்
கோடையங் காலத் தினிய சுருதி
குலாவ விசைத்திடு மாங்குயிலே
யோடையந் தாமரை வண்டுணத் தேன்பொழிந்
தோங்குந் திருவயி ராவதிநன்
னுடைய னைக்கம்பை வாழ்முரு கேசனை
நாடியன் பாய்வரக் கூவாயே. (உ)

413 அற்புத நின்குரல் வெம்மையென் றேதுவ
ரன்பு மணவற் பிரிந்தமின்னார்
பற்பல வும்பின்னு மேசுவர் நீயப்
பழியு மகன்றுய்தி கோகிலமே

கற்புள மங்கையர் மங்கல வாழ்த்துக்
கலிக்குநற் கம்பையுள் வாழ்கருணைச்
சிற்பர ஞான சுகோதய பானுவைத்
தேர்ந்தினி தாய்வரக் கூவாயே. (ங)

414 பெற்றவொர் தாயும் வளர்த்தவொர் தாயும்
பிரியமி லாதுனைப் போக்கினர்மேன்
மற்றுமென் சொல்வது குற்றமில் கீதம்
வழங்கிப் பொழிலுறை மாங்குயிலே
யற்றவர்க் கற்ற துணைபுரி வோமென
வற்புத கம்பை யமர்ந்தருளும்
கொற்றவை வேலனைத் தற்பரை பாலனைக்
கூர்ந்தினி தாய்வரக் கூவாயே. (ச)

415 முருக குமார குகேசவென் றன்பின்
மொழியவல் லார்கட முன்னணுகித்
தருகவென் றேதுமு னெண்ணும் வரங்க
டழைக்க வருளுவன் மாங்குயிலே
யுருகடி யார்புடை சூழ்கம்பை வாசனை
யொப்புவ மையற்ற வுத்தமனைப்
பெருகரு ளாளனை வள்ளி மணாளனைப்
பெட்புட னேவரக் கூவாயே. (ரு)

416 காணிக் கடலுல கத்திற் பிறந்தென்னை
கண்டனம் விண்டனம் வீண்வார்த்தை
பேணிக் கருணை புரிந்து வளர்க்கும்
பிரானிவ னல்லது வேறில்லையா
லாணிக் கனக மதின்மணிக் கோபுர
வற்புத கம்பை நகருறையு
மாணிக்க வண்ணனைப் பன்னிரு கண்ணனை
மாங்குயி லேவரக் கூவாயே. (சா)

417 ஏமனைக் காலி னுதைத்தரு ளீச
னெரிநய னத்தி னுருவிலியாங்
காமனைக் காகள மாக முழங்கிக்
களிப்பிக்கக் கற்றனை கண்டதென்னே
மாமனைக் காதலிற் பொன்னுல காள
வழங்கிய வள்ளலைக் கம்பையுள்வாழ்
சேமனைக் கார்த்திகை பாலுண்ட வாயனைச்
சீர்க்குயி லேவரக் கூவாயே. (எ)

418 அன்புரு வாகி யகங்குழை வார்க
ளழைக்கு மிடத்தி னடைந்தருளி
யென்புதல் வாவெனக் கென்விழை வென்றங்
கிணைமலர்ச் சேவடி தந்தருளு
மின்புரு வாகிய கம்பைக் குகேசனை
யென்னென்று பாடுதுந் தேடரிய
மன்புர ஞானந்த சண்முக சாமியை
மாங்குயி லேவரக் கூவாயே. (அ)

419 சாகையின் மீதினுந் தத்துவ மீதுஞ்செய்
தாண்டவ னையென தாண்டவனைப்
பாகெனுஞ் செந்தமிழ்ப் பாவல ருக்கருள்
பாவல னைக்கொடிச் சேவலனை
நாகர் தருந்தெய்வ யானைக்கும் வள்ளிக்கு
நாயக னையுயிர்த் தாயகனை
மாகம்பை நம்பியை யைங்கரன் றம்பியை
மாங்குயி லேவரக் கூவாயே. (கூ)

420 பிறப்பிறப் பென்னும் பெருந்துயர் தீர்த்துநற்
பேரின்ப முத்தி யளிப்பவனை
யறப்பெருஞ் செல்வியு மேகம்ப வாணனு
மாகத் தணைக்கக் களிப்பவனை
யுறப்பெறும் வண்கும ரக்கோட்ட மாதி
யுளதல மெங்குந் தளிர்ப்பவனைச்
சிறப்புறுங் கம்பையுள் வாழ்குரு நாதனைச்
சீர்க்குயி லேவரக் கூவாயே. (கய)

குயிற் பத்து முற்றிற்று.

## கிளிப் பத்து

421 உமையவள் கரமல ரின்சுகமா
யுருவுகொ டுறைதரு நங்குகவே
ளமைவுறு புகழ்தனை யன்புடனே
யறைதரி னின்புக மென்சொலுகே
ணிமையவ ரனுதின மின்பமொடே
யிசைதரு புகழ்நிறை கம்பையுள்வாழ்
குமரனை மயிலிவர் மைந்தனையே
குதுகல மொடுதுதி பைங்கிளியே. (க)

422 மனமகிழ் புனமதி லொண்கிளியா
மரபுற வுரைதரு வண்கிளியா
மனநண்ட யுடையிடை மின்றனையே
யனையுமெய் மகிழ்வென நின்றனையே
நினைவின னருளுமோர் தன்புடையே
நினையெவர் நிகர்வர்ம ணின்புடையே
பனவர்க டுதிபுரி கம்பையுள்வாழ்
பதிமுரு கனைமொழி பைங்கிளியே. (உ)

423 பொருதிரை யறநிறை தண்கடலே
புவிமுழு தினுமொளிர் திண்கிரியே
கருமல விருடொறு செங்கதிரே
கமைபெறு சுதைபொழி யொண்கலையே
யருளெனு மழைசொரி நன்புயலே
யடியர்ம கிழவினை யும்பயனே
யிருநில மதுபுகழ் கம்பையுளா
யெனமொழி யழகிய பைங்கிளியே. (ங)

424 பலகலை புகழ்முத லைங்கரனார்
பரிவொடு தழுவுமோர் நன்றுணையே
யுலகரு ளியவரு ளம்பிகைமா
துளமகிழ் கருணையி லஞ்சியமே

யலகறு பெருமைகொள் சங்கரனு
ரவிர்புய முலவு மிளங்களிறே
யிலகறன் வளர்கன கம்பையுளா
யெனமொழி யழகிய பைங்கிளியே. (ச)

425 செனனம ரணமெனும் வெந்துயரே
செறிதரு முடலிது கண்டனையே
தனமென விதனையு நம்புவதோ
சரியல வுயுநெறி யொன்றுளதா
லனவர தமுமொளிர் கம்பையுளே
யருள்பொழி குருவடி வங்கொடுவா
ழெனதரு நிதிமுரு கன்பெயரே
யிசையிது நிசவுரை பைங்கிளியே. (ரு)

426 சரவண பவசிவ சுந்தரனே
சதுமறை முடியின்வ ரும்பதனே
சுரகரி மருவுநன் மங்கலனே
சுரர்முனி வரர்துதி புங்கவனே
நரவரி மருக னெனுங்குகனே
நறைகமழ் குரவணி யும்புயனே
யிரவலர் நிதிபெறு கம்பையுளா
யெனநய மொடுபகர் பைங்கிளியே. (சா)

427 அவனவ ளதுவென நின்றவன்யா
ரருவுரு வருவுரு வென்பவன்யார்
நவநிலை மிசையி னிருந்தவன்யார்
நவிலரு பெருமை யுகந்தவன்யார்
தவசிக ளறிவு கலந்தவன்யார்
சரணர்க ளெதிரெளி வந்தவன்யா
ரிவனெவர் களுமகிழ் கம்பையுள்வே
லிறையென வறையுதி பைங்கிளியே. (எ)

428 குவடதிர் நடமிடு செஞ்சிகியே
கொடுவினை யசுரரை நுங்கயிலே
பவவிருள் கெடவொலி பண்கொடியே
பரிமள குசும கதம்பமதே
வுவகையொ டமரர் தரும்பிடியே
யுயர்தினை வனமுல வும்பிணையே
யிவையறி குறியொடு கம்பையுள்வா
ழிறைபெய ரறையுதி பைங்கிளியே. (அ)

429 அமரர்க ளுறைதரு விண்பதமோ
வலரணை வதிகிழ வன்பதமோ
கமழ்துள வணிகரி யன்பதமோ
கலைமதி புனைபர மன்பதமோ
யுமதுள மெதுநசை யென்பதமோ
வுதவுவ னெனவொளிர் கம்பையுள்வே
ளெமதரு ளிறைமுரு கன்பெயரே
யினிமையி னறையுதி பைங்கிளியே. (௯)

430 உளநிலை மகிழ்வொ டிருந்திடவே
யுதவுவ னிருபத பஞ்சரமே
தளர்வுறு பசியற வன்புடனே
தருகுவ னருளெனு நன்கனியே
யளவிலை யவனரு ளின்பமதே
யழகிய பொழில்வளர் கம்பையுள்வா
ழிளையவ னிருகிளி தம்பதியே
யெனையருள் கெனமொழி பைங்கிளியே. (௧௦)

கிளிப் பத்து முற்றிற்று.

—

## வண்டுவிடு தூது

431 வானே முதலுலகம் வாழ்த்துமெழிற் கம்பைமுரு
கோனே மயிலிற் குலாவுமுலாக் கண்டுவந்தேன் [பூந்
யானேழை யென்செய்கேன் யாவர் துணை செய்குவர்
தேனேபோ யென்னுடைய செய்திசொல்லி வாராயே.

432 தொண்டேசெ யன்பர் சுகமடையுங் கம்பைவளர்
தண்டேந்துங் கைத்தலத்தெஞ் சண்முகனைக் கண்ட
[பின்னர்
பண்டே யெரிந்தமதன் பண்ணுங் கலகமெல்லாம்
வண்டேபோய்ச் சற்றே மகிழ்ந்துரைத்து வாராயே.

433 அமரேசன் றேவரொடு மர்ச்சனைசெய் கம்பைவளர்
குமரேச வென்றூற் குறிஞ்சிக் கிழவனென்றே
சமரேசெய் கின்றவர்போற் றூதியரும் பேசுகின்றார்
ஞிமிறேபோய்ச் சற்றே நினைவுரைத்து வாராயே.

434 ஒளியேய் பசும்பொன்மதி லோங்குமெழிற் கம்பை
[யுள்வே
ளெளியேற் கெளியேனென் றென்னைமயல் செய்த
[கன்றான்
றுளியேனு மன்பிலையோ தூயவருட் பேர்படைத்த
வளியேபோ யென்னுடைய வாசை சொல்லி
[வாராயே. (ச)

435 மறுபதமெண் ணுவுவகை வந்தருளிக் கம்பைநக
ருறுபதமா வாழ்குகனுக் குண்மை யுரைப்பவர்யார்
பெறுபதத்தின் மிக்கசிறை பேரிசையு மன்புமுள
வறுபதமே நீயேகா ணன்பினிற்போய் வாராயே. (ரு)

436 கள்ளே பொழியுமலர்க் காவளைந்த கம்பைநக [தாற்
றுள்ளே முளைத்தமுந்நான் குற்றகண்வே ழுங்கலந்
கொள்ளே மதன்விற் கொடுந்துயரங் கண்டுகரும்
புள்ளேபோ யென்றன் புரிவுரைத்து வாராயே. (சு)

437 காத்தும் பிரியமுடன் கைவிடே மென்றுகம்பைக்
கேத்தும் பிரானையெனக் கின்பமய றந்தானை [யாய்க்
மாத்தும்பி வத்திரன்றன் வண்டுணையை யென்றுணை
கோத்தும்பி சற்றேபோய்க் கூர்ந்துரைத்து
[வாராயே. (எ)

438 முதுகரகத் துற்றமுனி முன்வணங்குங் கம்பையுட்
[போய்ப்
புதுகரமா யாழிமென்கால் போழ்கரத்தை யோரி
[ரண்டார்
பதுகரஞ்சே ராறுமுகப் பண்ணவற்கு நன்குசொல்லி
மதுகரமே யென்பான் மகிழ்ச்சிகொண்டு வாராயே. (அ)

439 இரும்பேய் மனத்தினரு மேத்துகம்பை வேண்
[மயலாற்
றுரும்பே நிகரிளைத்தேன் சோர்ந்தகுழல் சோர்ந்த
[வளை
கரும்பே யமுதேபோற் கானஞ்செய் ஞானமுள்ள
சுரும்பேநீ போயெனது சொல்லுரைத்து வாராயே.

440 காவேசூழ் சிங்காரக் கம்பை நகருறையுங்
கோவே விறையென் குறைதவிர்க்கப் போந்திடிற்
பூவே யவன்றுட் புகுவிப்பா னின்னையுந்தான் [பொற்
மாவேநீ வாழியென்றன் மையல்சொல்லி வாராயே.

வண்டுவிடுதூது முற்றிற்று.

---

## எச்சரிக்கை

441 அகிலாண்டமும் புகழ்பூண்டவெ னப்பா வரிமருகா
முகிலாண்டபொன் மதில்சூழ்கம்பை முருகாவெச்ச
[ரிக்கை. (க)

442 வரைராசன்கண் மணியாய்வந்த மாதம்பிகை பாலா
விரைசேர்மலர்ப் பொழில்சூழ்கம்பை வேலாவெச்ச
ரிக்கை. (உ)

443 சனகாதியர்க் குபதேசித்த தந்தைக்குப தேசா
வெனையாள்கம்பை நகர்வாழ்கும ரேசாவெச்ச ரிக்கை.

444 உலகம்வலஞ் செய்தோயரு ளுடையோயறு முகனே
குலவும்புகழ் கம்பாபுர குகனேயெச்ச ரிக்கை. (ச)

445 தாயாயன்பர்க் கருள்கிண்கிணித் தாளாவரு ளாளா
தூயாகம்பை வளர்பன்னிரு தோளாவெச்ச ரிக்கை.

446 மணிகண்டர்தஞ் சடைமேல்வளர் மந்தாகினி மைந்தா
கணிகொண்டொளிர் கம்பாபுர கந்தாவெச்ச ரிக்கை.

447 கும்பாரியன் றன்றேசிக குறிஞ்சிந்நில வேந்தா
கம்பாபுர வாழ்வேவள்ளி காந்தாவெச்ச ரிக்கை. (எ)

448 சுரவாரணி மணவாவருள் சுரக்குஞ்சுர தருவே
திரள்சீர்வளர் கம்பாபுரித் திருவேயெச்ச ரிக்கை. (அ)

449 கண்ணேகண் ணுண் மணியேயென்றன் கருத்தே
யுயர் கதியே, பண்ணேபண் ணின் பயனேகம்பைப்
பதியேயெச்ச ரிக்கை. (கூ)

450 கனமாமணி மலையேயருட் கடலேகதி ரொளியே
யனவாகனன் பணிகம்பையு ளளியேயெச்ச ரிக்கை.

451 சார்ந்தார்வினை தீர்ந்தேத்திடத் தயைசெய்தொளிர்
[சாந்தா
தேர்ந்தார்புகழ் கம்பாபுரிச் சேந்தாவெச்ச ரிக்கை.

452 காலாயுத துவசாவயிற் கரனேயெங்கள் கோவே
சீலாகர கம்பாபுர தேவேயெச்ச ரிக்கை. (கஉ)

எச்சரிக்கை முற்றிற்று.

## வண்ணத் தாழிசை

453 அருளேபொழி மலர்மாமுக வழகும்விழியழகு[யழகுந்
மணிவெண்பொடி யழகுஞ்செவி யழகுங்குழை
தெருண்மாமறை முடிவோதிய செவ்வாய்நகை யழகுந்
திகழங்கத மணிபன்னிரு சிகரப்புய வழகுங்
குருமார்பழ குங்கிண்கிணி குலவுஞ்சர ணழகுங் [ங்
கொடிவேன்மயி லழகும்பிடி குறமங்கையி னழகு
கருதேதழையிவ் வடியேனவை காணத்தயை புரிவாய்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (க)

454 அரிதாகிய நரசன்ம மடைந்தேனதை வீணே
யமுதைக்கம ருக்குட்பெயு மறிவற்றவ னேபோல்
விரிதாரணிமிசையாசையின்விட்டேன்மதிகெட்டேன்
வினையோநின தருளோவிது வெறியேனறி வே
பரிதாபமி தாரேபடு கிற்பாரென தப்பா [ஞே
பைந்தோகையில் வாராயருள் பாராய்துயர் தீரா
கரிதாவுறு பரிதேர்மிடை கதிர்மாமணி மறுகார் [ய்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (உ)

455 செகமீதினில் வருமானுட சென்மத்தவ ரெல்லாஞ்
செய்யுந்தொழி லுய்யுந்தொழில் சிறியேன்புரி
தொழிலோ
மிகவாசையி னையுந்தொழில் வெம்பாதக மெல்லாம்
வினையுந்தொழிலாமாலிது விதியோகெடுமதியோ
மகமாயை யொழிக்குந்தொழில்வல்லாயெனைநின்ருள்
வாழ்த்துந்தொழி லுடையாரை வணங்குந்தொழி
லருளாய்
ககனாதிப னிமையோர்வரர் கரியோன்விதி துதிசேர்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (ங)

456 மாணுர்நின கழலெண் ணிலர் மனமேசுடு வனமே
வாழ்த்தித் துதி செய்யாதவர் வாயேயெழு தியே
தாணுவ வலஞ்செய்கிலர் சரணேமிகு முரணே
தகுசீரொடு பணியாதவர் சடமேயொரு முடமே
சேணுர்வின் வணங்காதவர் சிரமேநெடு மரமே
தினநின்புகழ் கேளாதவர் செவியேநக கெவியே
காணுதவர் கண்ணேயிரு புண்ணேகழ றென்னே
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (௪)

457 வெந்தானவர் வெந்தோட விடுத்தாய்கதிர் வடிவேல்
வினையேன்வினை விட்டோடவொர் விதநீசெய [வரிதோ
எந்தாயென நினைநம்புமிவ் வேழைக்கிது செய்தா
லிகழ்வோமுறையலவோவினியாரைச்சரணடை[கேன்
சிந்தாமணி யேயண்டர்கள் சேனுபதி யேமெய்த்
திருவாளர்க டினமின்பொடு தேடுந்திர வியமே
கந்தாவிய வண்கோபுர கனகத்திரு மதில்சூழ்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (௫)

458 ஆற்றேனினி யாற்றேனிட ரந்தோவடி நாயே
னஞ்சேலென வந்தேநின செஞ்சேவடி யருளாய்
போற்றேன் பிறர்தமையேயொரு பொருளென்றணு [வேனும்
புதிதன்றிது பழையேங்கள் பொருந்தும்பெரு [நோன்பா
நோற்றேகலை மகளின்னமு நுதிவேலநி னருளா
னுவலுங்கலை பெறவுற்றென நோன்பொய்கையி [ஞெற்றைக்
காற்றேமலர் நளினத்தொளிர் கடவுண்ணதி யனமார்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (௬)

459 வல்லார்புகழ் கயிலைத்திரு மலைமேலிம மலைமான்
மருவும்பர சிவனுரென மதவெண்கரி மிசையெந்
நல்லாய்சுர வேழத்தொடு நண்ணுந்தரி சனமெந்
நாளிற்பெறு வேனின்னிரு தாளுக்கப யங்கா
ணில்லாதவ ரென்றண்மிய வெளியோர்முக நோக்கி
யிலனென்னுமொ ரெவ்வஞ்சொல லில்லாதுத
[வுஞ்சீர்க்
கல்யாண நெடும்பேரிகை கடலோதையின் மிக்குங்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (எ)

460 அசைவுற்றிடு மிடைவன்கொடி யதனிற்பல முறவே
யாற்றுக்குழி மடியின்படி யசையாதெனை
[யேற்றிக்
குசவெற்பிடை நயனக்கணை கொடுதுன்புசெய் நமனிற்
கொடியார்கையின் விடுவித்தருள் கூர்கண்
[கொடு நோக்காய்
திசையெட்டினு மிசைபெற்றிடு சேயேயரு ளமுதே
தெய்வத்திரு மணியேமிகு செல்வப்பெரு நிதியே
கசடற்றமெய்ஞ் ஞானத்தவர் காணப்பெறு கதிரே
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (அ)

461 உள்ளும்புற னும்பற்றற வோங்கும்பெரி யோர்த
முயிருக்குயி ருணர்வுக்குணர் வொருநீயிரு
[வினையேன்
றள்ளுற்றவொ ருசற்கிணை சகழுங்கக னமுமே
தாவித்துயர் படவந்திடு சனனத்தொடு மரணங்
கொள்ளுஞ்செய னன்றேநிலை கொள்ளும்வகை செய்
[துட்
கூடுந்தின மென்றேவிளை யாடுங்கும ரேசா
கள்ளுண்டளி பாடுங்குளிர் காவின்மயி லாடுங்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (கூ)

462 வனசக்கிழ வன்பேசரு மறைமூல மெடுத்தே
மணிகண்ட பிதாவின்செவி மகிழக்குளிர் மொழி [யாற்
சொனசற்குரு மணியாகிய சுதனேநின செவியிற்
சுதனென்றுயர் மொழிகொள்ளுதி சுடுமென்று [வெறுக்கேல்
பனசக்கனி மதுரச்சுளை பரிவிற்கொடு கடுவன்
பைந்தேனொடு குருளைக்குறு பசிதீர வளிக்குங்
கனசத்திர நிழலம்பொழில் ககனத்தள வெழில்சூழ்
கம்பாபுரி யன்பாயுறை கந்தப்பெரு மாளே. (௧0)

வண்ணத்தாழிசை முற்றிற்று.

## ஊசல்

463 அருணன்வலம் வருங்கனக மேரு வெற்பை
யரிதுகுடைந் ததுபோல வழகு வாய்ந்த
கிரணமணி மண்டபத்துட் பவளக் கான்மேற்
கிளர்வயிர விட்டமும்பொன் வடமும் பூட்டி
வருணமர கதத்தமைத்த பலகை மீது
வதிந்தருளி யரம்பையர்கள் பாடி யாட்டக்
கருணைபொழி சண்முகரே யாடி ரூசல்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (௧)

464 சுந்தரநல் லருள்வதன மதியம் பூப்பச்
சுரோத்திரகுண் டலதபன னசைய வந்தச்
சந்திரசூ ரியர்கரங்கள் போல மார்பிற்
றண்முத்து மாலைமணி மாலை யாடச்
செந்தளிர்க்கை மாணிக்கக் கடக மாடத்
திருவடியி னரதனப்பொற் சிலம்பு மாடக்
கந்தகதம் பாரமணி மகுட மின்னக்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல் (௨)

465 பெற்றெடுத்த காமக்க ணம்மை யாரும்
பெட்பின்வரு கங்கையெனு மன்னை யாரும்
முற்றவரு ளேகம்பத் தந்தை யாரு
மோங்குகண பதியாய தமைய ஞரு
நற்றவனி லுடனுதித்த விலக்க ரோடு
நவவீரர் தம்பியரு முவந்து நோக்கக்
கற்றகவி நாவலர்கள் புகழ்ந்து பாடக்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (ரு)

466 பருதியைக்கண் டலர்செந்தா மரையைப் போலும்
பங்கயக்கண் மாதுலன்கண் டுவகை பூப்பச்
சுருதியின்மூ லம்பகர்கென் றெனையே குட்டித் [கூப்ப
தூய்மைசெய்த மைத்துனனென் றயன்கை
வருதிரென்றெந் தமைவலிய வந்தாட் கொண்ட
வள்ளலென்று மெய்யடியா ருருகி யேத்தக்
கருதினிய வரங்களெல்லாங் களிப்பி னல்குங்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (சு)

467 சோமசூ ரியரிருபாற் கவரி சாய்ப்பத்
தும்புருநா ரதரினிய யாழ்வா சிக்கக்
கோமகன்வேத் திரங்கொடுகட் டியங்கள் கூறக்
குளிர்பனிநீர் கொண்டுவரு ணன்தெ ளிப்ப
மாமருத்துக் குங்குலியப் புகையெ ழுப்ப
வந்தளகை யாளியன்பி னடைப்பை யேந்தக்
காமனுள மகிழ்ந்துபடி யகஞ்சு மக்கக்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (எ)

468 பூமருவு மாமியன்பி னேக்கி வாழ்த்தப்
புனிதமுறு கலைமகளும் புகழ்ந்து வாழ்த்தக்
கோமருவு புலோமசையு மகிழ்ந்து வாழ்த்தக்
குதுகலமா யிரதியுங்கை கூப்பி வாழ்த்தத்
தூமுனிவர் பன்னியரும் போற்றி வாழ்த்தச்
சுரமடந்தை மார்கண்மிகச் சூழ்ந்து வாழ்த்தக்
காமருவு கிளிபாடப் பூவை கேட்குங்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (சு)

469 பூதகண நாதர்கள்குற் றேவல் செய்யப்
புங்கவர்கள் கற்பகப்பூ மாரி பெய்ய
மாதவர்க ளருகினிருந் தாசி கூற
மகிழ்வினுட னந்தணர்கள் வேத மோத
நாதசுர சங்கீத மேள மார்க்க
நவையகல நல்லறங்க ளூரு மோங்கக்
காதல்வழித் தொண்டரின்பக் கடலின் மூழ்கக்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (எ)

470 அண்டர்பதி யன்புடனே யீந்த தெய்வ
யானையும்வே டுவர்வளர்த்த வள்ளி மானுங்
கொண்டவுவ கையினேடு நோக்கி நோக்கிக்
குளிர்ந்துவிழி கொட்டாமற் பாங்கர் நிற்பக்
குண்டலமோர் பன்னிரண்டுங் கதிர்கள் போலக்
குலவமக மேருவென நடுவே வைகிக்
கண்டவர்கண் மனங்களிக்கக் காட்சி நல்குங்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (அ)

471 பனவசிகா வலர்சாம கானம் பாடப்
பாராளு மன்னவர்க ளினிது கூடத்
தனவசிய வுத்தமர்கண் மகிழ்வு நீடத்
தகைமையுறு காராளர் முதலோர் நாட

வனவசிய நடைமின்னார் நடன மாட
வன்பர்குழா மானந்தக் கூத்து மாடக்
கனவளஞ்சே ருலகமெலா மிகக்கொண் டாடக்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (கூ)

472 மெச்சுமுமா பதிசுதரே யாடி ரூசல்
வேலேந்துங் கரதலரே யாடி ரூசல்
பச்சைமயில் வாகனரே யாடி ரூசல்
பகலழைக்குங் கொடியினரே யாடி ரூச
லிச்சைவள்ளி மோகனரே யாடி ரூச
லிபமின்மகிழ் சுந்தரரே யாடி ரூசல்
கச்சிவளர் சீர்க்குமர கோட்ட மென்னுங்
கம்பைநகர் நாயகரே யாடி ரூசல். (க0)

ஊசல் முற்றிற்று.

## பெருங்கழிநெடில் விருத்தம்

473 சுருதி தொடர்ந்து தொடர்ந்தின்னுஞ்
சொல்லற் கரிய வெங்கோனின்
சொருப மெளியேன் சொல்வதெவன்
சோதி வதனத் தாமரையும்

பெருகுங் கருணைச் செந்தேனும்
பிறங்கு நயன வரிவண்டும்
பேசுங் கனிவாய் நகைமுத்தும்
பெய்யுஞ் செவியிற் குழைக்கதிரு

மருமென் கடம்பு மலர்மலையு
மார்பின் மணிப்பொற் கான்யாறு
மருங்கி னணியுங் கலையலையும்
வழுத்துஞ் சரண நற்றுகிருங்

கருதற் கினிய சிலம்பொலியுங்
கயவல் விகளா மமுதுமொளிர்
கடவுட் கடலே யுனையடைந்தேன்
கம்பை முருகப் பெருமாளே. (க)

474 வேத மோது முறைமையிலேன்
வியனு கமமும் படித்தறியேன்
மேவும் பொருளெங் ஙனந்தெளிவேன்
விதியும் விலக்குந் தெரிவேனோ
வோதி யுணர்ந்த பெரியோரை
யுற்று மறியேன் குற்றேவ
லுனுற்றி யறியே னெவ்வாறே
யுன்று ளடைவேன் சிறியேனே
பேத வாதர்க் கெட்டரிய
பெரிய பொருளே மறைமுடியிற்
பிறங்கும் பதியே பேரன்பு
பெருகி யுருகி மனங்குழையுங்
காதல் வெள்ளம் படிந்தோர்கள்
காணு ஞானத் திருமலையே
கருணை பழுத்த கற்பகமே
கம்பை முருகப் பெருமாளே. (உ)

475 சென்ற பிறவி தொறும்புல்லோ
செடியோ மரமோ வன்கல்லோ
சிறிய புழுவோ நீர்மேய
செந்து வோபுள் ளோவிலங்கோ
வன்றி யெதுவோ வறியகிலே
னந்தோ வடியே னிப்பிறப்பி
லரிய மனித னெனப்போந்தே
னவலம் புரியா தெனையாளாய்

மன்று ளாடும் பெருமான்கண்
மணியே மலைமான் றருமுத்தே
வனசன் றுதிக்கு மொருநிதியே
மகவான்வணங்கும் வச்சிரமே
கன்று குணிலாக் கனியுகுத்த
கண்ணன் விரும்பு மரகதமே
கற்றோர் மகிழு மரும்பொருளே
கம்பை முருகப் பெருமாளே. (ரு)

476 பசியால் வருந்து மேழைமுகம்
பார்த்தன் போடு பிடிசோறும்
பகிர்ந்து மறியா னின்சொல்லும்
பகர்ந்து மில்லான் வசைமொழியே
யிசையா தொழியா னய்போல
வெழுவான் விழுவான் கொடுமையெலா
மிழைப்பான் பிழைப்பா னெவனவன்றான்
யானே யெனினு மேன்றுகொளாய்
சசிமான் கழுத்திற் பொற்றாலி
தயங்க வழங்கு மருட்சேயே
சதிசெ யவுணப் பெருங்காட்டைத்
தகிக்க வெழுந்த கொழுந்தீயே
கசியு மனத்துத் திருத்தொண்டர்
களிக்க வளிக்கு நற்றாயே
கமல மலருந் தடஞ்சூழுங்
கம்பை முருகப் பெருமாளே. (சு)

477 பொதியா சலத்துக் குறுமுனிக்கும்
புகழ்பா டருண கிரிகவிக்கும்
பொய்யா மொழிக்கு நக்கீரப்
புலவன் றனக்கு மனமிரங்கி

யெதிரா யடைந்து காட்சியளித்
திளகி யவர்சொ லின்றமிழுக்
கின்பங் கொடுத்த வள்ளானீ
யெளியேன் றமிழு மேன்றுகொளாய்
சதிரா யிலக்கர் நவவீரர்
தாரா கணமாய்த் தற்சூழத்
தயையா ரமுது பொழியுநிலை
சாயாத் தேயாத் தண்மதியே
கதிரா யிரஞ்சூ ழிரவிகருங்
கடலின் முகட்டி னெழுவதுபோற்
கலப மயிலின் வருஞ்சுடரே
கம்பை முருகப் பெருமாளே. (ரு)

478 மாத ராசை பொன்னாசை
மண்ணி னாசை யெனமூன்றாய்
வரும்பே ராசைக் கடன்மூழ்கி
மாழ்கி வருந்த வெனைவிடுத்துப்
பாத ரசமா யலையுமென்றன்
பாழா மனத்தை நிலைநிறுத்தும்
பான்மை யரிதோ நின்கமல
பதத்தூட் பரிசம் போதாதோ
நாத முடியி னடம்புரியு
நங்கை பயந்த விலஞ்சியமே
ஞான யோகர் நல்லுணர்வா
னாடிக் கலந்த வருள்வடிவே
காதும் பவமாங் கடுங்காட்டைக்
களைந்து நீறு செயுநெருப்பே
கனகப் பொருப்பே யென்விருப்பே
கம்பை முருகப் பெருமாளே. (சா)

479 முன்ன ரடைந்த மெய்யடியார்
மூன்று மலமுங் கழீஇயுனது
முளரித் திருத்தா ணிழலினவர்
முயங்க விருத்துஞ் செயலேபோற்

பின்ன ரடைந்த வெளியேற்கும்
பெரிதுன் மலர்த்தா டரல்வேண்டும்
பெற்றுட் கிளைய சேய்மீதே
பிரிய மிகவுண் டெனல்பொய்யோ

சின்ன மதியும் படவரவுந்
திளைக்கும் வேணித் திருத்தாதை
செவியின் வேதச் சிரப்பொருளைத்
தெரிக்கு ஞான சற்குருவே

கன்ன மதத்த வைந்துகரக்
களிற்றுக் கிளைய கோளரியே
கண்ணே கண்ணிற் கருமணியே
கம்பை முருகப் பெருமாளே. (எ)

480 வெய்ய பிறவி தனைவேண்டேம்
வேண்டே மென்னு மவர்போலும்
விருப்ப முடையேன் வினைவயத்தான்
மீண்டும் பிறவி யுளதாமேல்

வைய மதனி னினைத்தமிழால்
வாழ்த்தி வணங்கும் பேறுபெறு
மனிதப் பிறப்பே வேண்டுமிது
வருமோ நினது குறிப்பறியேன்

றுய்ய நெறியே தூமணியே
சோதி மலையே சுடரொளியே
சுரர்க்கு மரிய கற்பகமே
சுகந்த மலரே செழுந்தேனே

கையிற் கிடைத்த திருவமுதே
கருத்துக் கினிய முக்கனியே
கட்டிக் கரும்பே கற்கண்டே
கம்பை முருகப் பெருமாளே. (அ)

481 பதியும் பசுவும் பாசமுமாம்
பதார்த்த மூன்றிற் பதியாகும்
பரனீ பசுவா மெனைப்பாச
பந்த மறுப்பா யுலகினிடை
வதியு மிருளைச் சூரியனே
வந்து கெடுப்பா னதுபோல
வள்ளா லுனக்கே கடமையிதே
மைந்த னெளியேன் வகுப்பதென்னே
நிதியும் பதியு நீயேநன்
னிலமும் பயிரு நீயேசொன்
னிறையும் பொறையு நீயேமெய்ந்
நெறியுங் குறியு நீயேமேற்
கதியுங் களிப்பு நீயேயென்
கருத்து முணர்வு நீயேநீர்க்
கடலுங் கலமுஞ் சூழ்ந்தோங்குங்
கம்பை முருகப் பெருமாளே. (கூ)

482 சைவத் திருவா ளர்கள்போற்றத்
தவத்தோர் பல்லாண் டெடுத்தோதத்
தனிவேல் சேவல் விளங்கவரிச்
சயில மனைய மயின்மீது
தெய்வப் பிடியுங் குறக்கொடியுஞ்
செறியக் கனக மலைபோலத்
திகழு நினது தரிசனமே
சிறியேன் காணத் தயைகூர்வா

யுய்வைத் தருமெ னுத்தமனே
யும்பர் பதியே யருணிதியே
யுயிருக் குயிரே யுணர்வேநல்
லுணர்வுக் குணர்வே சுகவொளியே

கைவத் திடுமாமலக மெனக்
காட்சி யளிக்குஞ் சண்முகனே
காஞ்சிக் குமர கோட்டமெனுங்
கம்பை முருகப் பெருமாளே. (கo)

பெருங்கழிநெடில் விருத்தம் முற்றிற்று.

---

## அடைக்கலப் பத்து

483 கஞ்சமலர் வாவிவளை கம்பைநகர் முருகோனே
வஞ்சவினை யென்னுமொரு வன்பேயான் மனநடுங்கிச்
சஞ்சலமே பெரிதுடையேன் றளர்கின்றே
[னென்புரிவே
னஞ்சலென வந்தருளா யடியேனுன் னடைக்கலமே.

484 கற்பகநாட் டமரர்தொழுங் கம்பைவளர் சண்முகனே
நற்பணியுஞ் செய்தறியான் ஞானநெறி நாடகிலான்
பற்பகலும் வாணாளைப் பாழ்நாளாப் பண்ணுமிவ
னற்பனெனத் தள்ளிவிடே லடியேனுன் னடைக்
கலமே. (உ)

485 இன்னதிதென் றறியாமே யிடர்படுமிவ்
[வேழையினேன்
முன்னர்வர விதியிலையேன் முருகாவோர் விண்ணப்ப
மென்னகமா மெள்ளுக்கு ளெண்ணெயைப்போல்
[வந்தமர்வாய்
மன்னவனே கம்பைவளர் வரதாவுன் னடைக்கலமே.

486 பார்க்கருளுங் கம்பையெனும் பதியுறையும்
[வேலவநின்
சீர்க்கருணை பெறவிரும்பிச் செய்தவங்கள்
[செய்துபவந்
தீர்க்கவழி யறியாது தீமையெலாம் புரிந்தபெரு
மூர்க்கனென வெனைக்கைவிடேன் முருகாவுன்
[னடைக்கலமே.

487 மகத்துவஞ்சேர் கம்பையெனு மாநகர்வாழ்
[காங்கெயனே
யிகத்துமுயர் பரத்துமுனை யின்றியொரு
[துணையுமுண்டோ
மிகத்துயர்யான் படலாமோ விதுதகிநீ வந்தருளா
யகத்தியனுக் கருள்குருவே யடியேனுன்
னடைக்கலமே. (ரு)

488 காமாதி வென்றவர்சூழ் கம்பைவளர் சேவலனே
சீமானே மயிலேறுஞ் சேவகனே சிவகுருவே
தூமாரி யில்பயிர்போற் றுவள்கின்றேன் சோதனையு
மாமாவந் தாதரிப்பா யடியேனுன் னடைக்கலமே. (சு)

489 ஒருமான்முன் முருகாவென் றோதுதலுங் கரமளித்த
பெருமானே கம்பைவளர் பிரணவமந் திரகுருவே
தருமானி லிளங்கன்றாய்த் தளர்கின்றேன்
[காத்தருளாய்
திருமானன் மருமானே சிறியேனுன் னடைக்கலமே.

490 பொய்யாகு முலகினிடைப் போக்கறியேன்
[வரவறியேன்
செய்யாத தீவினைகள் செய்தவனே யானாலு [முரு
மெய்யாளர்க் கருள்புரியு மேன்மைபெறுங் கம்பை
கையாவந் தாண்டுகொளா யடியேனுன்
[னடைக்கலமே. (அ)

491 ஆறுமுகப் பெருமானே யாறிரண்டு தோளானே
நாறுகடம் பணிவோனே நங்கைவள்ளி நாயகனே
வீறுபுகழ்க் குஞ்சரியை வேட்டவனே வேண்டியவர்
பேறுதருங் கம்பைவளர் பெருமானின் னடைக்கலமே

492 அன்னைமன மிரங்காளே லழுங்குழவி தனையெடுத்துப்
பின்னையெவ ராதரிப்பார் பெருமானீ யறியாயோ
தன்னிகர் கம்பையுள்வாழ் சண்முகனே கண்
[ணருளசெய்
தென்னையுவந் தாண்டருளா யெளியேனுன்
னடைக்கலமே. (ய)

அடைக்கலப் பத்து முற்றிற்று.

---

## போற்றிக் கலிவிருத்தம்

493 பூமி யெங்கும் புகழ்கம்பை வேள்பொன்னை
மாமி யென்று மகிழ்முரு கன்சிவ
காமி தந்தருள் கண்மணி யென்குரு
சாமி தண்ணருட் சண்முகம் போற்றியே. (க)

494 வருமு கத்தமண் மங்கை தனக்கொரு
திருமு கத்திற் செழிக்குங்கம் பாபுரி
மருமு கந்தளி வாழ்த்துங் கடம்பன்மூ
விருமு கம்பொழி யின்னருள் போற்றியே. (உ)

495 வாக்கு மங்கை வளருங்கம் பாபுரி
மாக்கு கேசன் மருவிய வென்னையுங்
காக்கு மன்பிற் கடைக்கணித் தன்பரி
ஞக்கும் பன்னிரண் டம்பகம் போற்றியே. (ந)

496 அன்பர் போற்று மழகிய கம்பையுட்
பொன்ப ருப்பதம் போல வமர்ந்தருண்
முன்ப ஞறு முகன்றிருத் தொண்டருக்
கின்ப நல்கு மிளநகை போற்றியே. (ச)

497 வளநி றைந்த மணிமதிற் கம்பைவாழ்
இளர்வை வேலன் கிளிமொழி வள்ளிமா
னிளகப் புல்லி யிருதனந் தோய்ந்தமெய்ப்
புளகப் பன்னிரு பொற்புயம் போற்றியே. (ரு)

498 நிலம்ப ராவு நெடுங்கம்பை யென்னுமோர்
பொலம்ப திக்கண் புகழ்பெற வாழ்குகன்
வலம்பு ரிந்தன்பர் வாழ்த்துநன் மாமறைச்
சிலம்ப ணிந்த திருவடி போற்றியே. (சு)

499 சைவ மார்க்கந் தழைத்தவண் கம்பையுட்
டெய்வ யானையைச் சீர்மணங் கொண்டுறை
யைய னென்னை யடிமைகொண் டோன்றிருக்
கைய மர்ந்த கதிரயில் போற்றியே. (எ)

500 இட்டம் வைத்தவ ரேத்துங்கம் பாபுரிச்
சிட்டன் வேலவன் சீறடி வைத்தலு
மட்ட திக்கு மணுகிந டித்துநல்
வட்ட மிட்டு வருமயில் போற்றியே. (அ)

501 படியி னோங்கிய சித்திரைப் பர்வநா
ளடியர் வாழ்த்து மழகிய கம்பையுண்
மிடியி லாது மிளிர்விழ விற்குகன்
கொடியி னுடிய குக்குடம் போற்றியே. (கூ)

502 கல்வி மல்கிய கம்பையு ளன்பர்கள்
வல்வி னைக்கொர் மருந்தென மனனிய
நல்வி னோதன் குகேசன்ஞா னரியச்
செல்வன் கந்தன் றிருப்புகழ் போற்றியே. (க0)

போற்றிக் கலிவிருத்தம் முற்றிற்று.

——

# திருப்புகழ்

503 வண்டார் மலர்கொடு
வண்டா ளிணையிலி
வண்டா முடியரின் மகிழ்வேனே

வந்தார் வமிகவு
வந்தார் செயுமொர்த
வந்தா னெறியொடு புரிவேனே

தண்டா யுதகர
தண்டா வரசக
தண்டா வெனநினை யணைவேனே

தந்தா வளமுலை
தந்தா ரிடையினர்
தந்தாழ் சுகமுறு மெளியேனே

பண்டா லமமுது
பண்டா ணுறவுரை
பண்டா ரவிபவ குருநாதா

பஞ்சா னனவிடை
பஞ்சா ரடிகொள்சு
பஞ்சார் குறமகண் மணவாளா

கண்டா ரிடர்பொடி
கண்டா தரிநல
கண்டா வறுமுக முருகோனே

கம்பாய் நிலனதி
கம்பா வுநெல்விளை
கம்பா புரிவளர் பெருமாளே.

திருப்புகழ் முற்றிற்று.

---

## வஞ்சித் துறை

504 தும்பி மாமுகன்
றம்பி கம்பைவா
ழெம்பி ரான்பத
நம்பி வாழ்நெஞ்சே. (க)

505 வான நாடர்சூழ்
மான கம்பைவாழ்
ஞான தேசிகன்
ருனஞ் செல்வமே. (உ)

506 கம்பை வேலவன்
செம்பொற் பாதமே
நம்பு வோரெலா
மும்ப ராவரே. (ந)

507 தூய கம்பைவாழ்
சேயை நம்பினூற்
றீய வல்வினை
நோய தில்லையே. (ச)

508 நல்ல கம்பையுள்
வல்ல வேலனைச்
சொல்ல வல்லவர்க்
கல்ல தில்லையே. (ரு)

509 மன்னு கம்பைவே
டன்னை நம்பினு
லன்ன நல்குமேற்
பொன்னு நல்குமே. (சா)

510 வீறு கம்பையைக்
கூறு வோர்க்கெலாம்
ஆறு மாமுகன்
பேறு நல்குமே. (எ)

511 உற்ற கம்பைவாழ்
கொற்ற வேலனைப்
பற்றி னூர்க்கெலாம்
வெற்றி யெய்துமே. (அ)

512 இயலுங் கம்பையுட்
பயிலும் வேள்கரத்
தயிலுஞ் சேவலு
மயிலும் வாழியே. (கூ)

513 வாழி கம்பைவேள்
வாழி குஞ்சரி
வாழி வள்ளியும்
வாழி வாழியே. (கO)

வஞ்சித் துறை முற்றிற்று.

## வாழ்த்து

514 கடல்சூழு முலகமெலாங் களித்து வாழ்க!
கார்மழையான் மறைபணவர் வேள்வி வாழ்க!
வடன்மன்னர் நீதிமுறை வழாது வாழ்க!
வருட்குமர கோட்டமெனுங் கம்பை வாழ்க!
மடமங்கை வள்ளிதெய்வ யானை வாழ்க!
வடிவேலு மயிலுங்குக் குடமும் வாழ்க!
திடனுறுமெய் யன்பர்குழாஞ் செழித்து வாழ்க!
சிவதரும நீடூழி வாழ்க மாதோ!

கம்பைச் சந்நிதிமுறை முற்றிற்று.

———

உ

கணபதி துணை

பசுமந்தான் பதியமர்ந்த

# பால தண்டாயுதக் கடவுள் பதிகம்

## காப்பு

### நேரிசை வெண்பா

மணிகொண்ட பொற்கோயின் மன்னுபசு மந்தா
னணிகொண்ட மெய்யருளி ஞர்ந்த—திணிகொண்ட
தண்டா யுதபாணி தாடுதிக்க வைம்பாணி
கொண்டானைப் பாணி குவி.

## நூல்

உலகமெலாங் கொண்டாடு மோங்காரப் பொருளே
யுன்னரிய மேனிலையி லுற்றவருள் வடிவே
யிலகவரு மெய்ஞ்ஞான வின்பநிறை கடலே
யேத்துமடி யாருளத்தே யினித்திடுந்தெள் ளமு [தே
கலகவினை வெம்மையறக் கருணைபொழி முகிலே
கற்பகமே யடியேனைக் காப்பதுநின் கடனே
பலகலைதேர் பாவலர்சூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (க)

திங்கணிறை யருண்முகமுந் திருநீற்றி னுதலுஞ்
செவ்வரிசே ரிருவிழியுந் திகழுமணிக் குழையுந்
துங்கமறை பகர்வாயுந் துலங்குபெருந் தோளுந் [ம்
துலங்கியோகப் பட்டமுமெய்ச் சோதிவடி வேலு
மங்கலஞ்சேர் மறைச்சிலம்பு வனைந்தமலர்த் தாளும்
வள்ளிதெய்வ யானையுமூர் மயிலுமியான்மற [வேன்
பங்கயப்பூஞ் சரவணைசூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (உ)

சித்தரெலாங் கைகுவிக்குந் தென்பொதிய முனிக்குச்
செப்பருஞ்ச டாக்கரமந் திரமகிழ்வி னுரைத்த
சுத்தபர மாரியனே சோதிபர வெளியே
சொல்லரிய தெள்ளமுதே தொண்டருக்கோர்
[துணையே
யித்தரைமே லிவ்வெளியேற் கிசைந்தருணீ புரிந்தா
லேலாதென் றெவ்வெவரு மேசுதல்செய் வாரோ
பத்தரொடு முத்தருஞ்சூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (ரு)

நிகரெனக்கா ரெனச்செருக்காய் நின்றசது முகனை
நினக்குமறைப் பொருள்வருமோ நிகழ்த்துகென
[வவனு
மகரமுதன் மூவெழுத்தான் மன்னுமொழி யருத்த
மறியாமன் மயங்கவுதைத் தருஞ்சிறையிட்
[டினிதாய்ச்
சிகரகுடி லையரனுர் செவியிலுப தேசஞ்
செய்தகுரு நாதாவிச் சிறியனுக்கென் செவய்ாய்
பகர்மறையா கமமுறைசூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (சு)

சாதமொழி கனவினிலுஞ் சாற்றகிலேன் சாந்தஞ்
சற்றுமிலேன் வஞ்சமெலாங் கற்றுணர்ந்த
[கொடியேன்
விரதமென்ப தென்றனக்கு வெகுதூர மெந்தாய்
விதிவசமோ வென்னுடைய மதிவசமோ வறியே
நிரதிசயா னந்தசுக நேசருளக் கமல [ன்
நீங்காமல் விகசிக்க நிதமுதிக்குங் கதிரே
பரதமட மங்கையர்சூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (ரு)

அகலாத காரிருள்க ளனைத்துமொன்ருய்க் கூடி
யமர்ந்திடும்வல் லிரவிடையோ ராதித்தனுதிக்
புகலரிய வவ்விருடான் புலர்வதுபோ லென்பாற் [கிற்
போராடும் பாவமெலாம் புண்ணியனீ யடைந்தா
லிகலாடா தோடிவிடு மென்பதுசத் தியமே
யென்னுடலே யென்னுயிரே யென்னுடையவறி
பகலிரவுந் துதியொலிசூழ் பசுமந்தான் பதிவாழ் [வே
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (சு)

சண்முகவே லவகுமர சாமியென்பார் சிலபேர்
சந்திரசே கரபரமா சாரியென்பார் சிலபேர்
வண்முகம்பார்த் தருள்செய்சுக வாரியென்பார்
[சிலபேர்
வல்வினைதீர்த் திடுங்கருணை வள்ளலென்பார்
[சிலபேர்
விண்முகமீ டேறவந்த வீரவென்பார் சிலபேர்
விளங்குமுன்றன் றிருக்கொலுவின் மேன்மை
[யையென் புகல்வேன்
பண்முகத்த தொண்டர்கள்சூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (எ)

தந்திரமுஞ் சூனியமுந் தாழ்சிறுதே வதையுஞ்
சடாமுனியும் வெம்பேயுஞ் சன்மகன்ம நோயு
முந்துபுன லுங்கனலு மூதையும்பே ரிடியு
முற்றகள்வர் பயமுமுன்பே ரோதுமுனே டிடுமே
கந்தசர வணபவசங் கரசுதசண் முகசேய்
கார்த்திகைநந் தனகடம்ப காங்கேயா சரணம்
பந்தர்மணித் தோரணஞ்சூழ் பசுமந்தான் பதிவாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (அ)

நீராடி நியமமுட னித்தலுநின் கோயி
னிகழ்திருச்சந் நிதியடைந்து புகழ்ந்துவலம்வந்
யாராத மெய்யன்பி னருச்சனைசெய் திடுவா [தே
ரடியவருக் கமுதிடுவா ராறெழுத்துஞ் செபிப்பா
ரோருங் காவடிக ளெத்தனைகொண் டடைவா
ரிவர்களன்றோ மெய்யடியா ரேனையர்க்கென்
பாராதி யுலகினர்சூழ் பசுமந்தான் பதிவாழ் [பெயரே
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே. (கூ)

தத்துவமெல் லாங்கடந்த சன்மார்க்க நிலையே
சாசுவத வானந்தந் தழைக்கவரு மலையே
பித்துலகு முய்யவரம் பெட்பினருண் மணியே
பேதையினேன் புன்கவியும் பிறங்கவணியணி
சத்துவக்கூத் தாடுமயற் றுவிவருங் குருந்தே [யே
சத்திகண்மூன் றுடைமருந்தே சஞ்சலந்தீர்த்தரு
பத்துளதிக் கோர்நிதஞ்சூழ் பசுமந்தான்பதிவாழ்[ளே
பாலதண்ட பாணியெனும் பரமதயா நிதியே.(க0)

விழவுமலி பரங்குன்ற மேவுதிருச் செந்தூர்
மேன்மைபெறு மேரகநற் சோலைமலை முதலாத்
தழைதலங்க ளுறைநிதியே தகைமையுறுங் காஞ்சித்
தலக்குமர கோட்டம்வளர் சாமிநின்பூ சனைக்கு
விழைசெந்நெல் விளைகிராமம் பதிட்டைசெயப்பொன் [பெய்
மேகமன்ன வெழுநகர மிளிர்வசியர் போற்றும்
பழநிநிகர் மகிமைபெறும் பசுமந்தா னகர்வாழ்
பாலதண்ட பாணியெனும் பரமதயா பரனே.(கக)

வாழி

வெண்பா

வாழிமழை வாழியுயிர் வாழி பசுமந்தரன்
வாழிதண்ட பாணிபதம் வள்ளிபிடி—வாழியன்பர்
வாழியயில் வாழிமயில் வாழிகொடி மென்மேலும்
வாழிநகர த்தார் மகிழ்ந்து.

பால தண்டாயுதக் கடவுள் பதிகம்
முற்றிற்று.

———

# கம்பைச் சந்நிதிமுறை

## குறிப்புரை

## சிறப்புப் பாயிரம்

1. மதி வளரும்—சந்திரன் முதலாக வளர்ந்து வருகின்ற. மாறன்—பாண்டியன். நுதி—நுனி. பதி—தலைமை.

2. பிணையல்—மாலை. ஏர்—அழகு.

3. மன் நகரம்—தலைமையான நகரம். நல்க—(அவர்கட்கு) வழங்க.

4. அருள் ஈட்டின் வயத்தால்—திருவருள் வலிமையின் வசத்தால். பொற்பு—அழகு. தெருள் ஈட்டும்—ஞானத்தால் உண்டாக்கப்பட்ட. தேட்டு—செல்வம். 'தேட்டினால் தேர்ந்து' என்க. 'வணிகர்' என்றது, 'அவர்' என்னும் அளவாய் நின்றது.

5. 'செய்தே குமர கோட்டம் உறை நல கருணை வேள் குகன்' என மாற்றி இயைக்க.

6. 'குமர கோட்டம்' என்றது அதன் அன்பர்களை. நயனம்—கண். 'நகரத்தார்க்கு' என்றதும், 'அவர்க்கு' என்றபடி. புத்தி—கல்வியறிவு.

7. வருபதி வாணிகர்—வழி வழியாக வருகின்ற வாணி பத்தை யுடையவர். குரு பதி (பதி குரு)—தலைமையான ஞானாசிரியன்; தந்தையார்க்கு உபதேசம் செய்தமை பற்றி இவ்வாறு கூறப்பட்டது. 'குகநாயகன்' என மாற்றுக. சேய் தமிழ்—பிள்ளைத் தமிழ்.

8. "வேளாளர் மரபில் வந்தோன்" என்பதையும், வருஞ் செய்யுளில், "அருணகிரிநாதன் விழைசேய், மதுரகவி பாட வல்லோன்" என்பவற்றையும் மேல், "சோணாசல பாரதி" என்பதற்கு முன்னே கூட்டுக.

9. விழை சேய்—விரும்புகின்ற மகன். தேனு—பசு.

10. மாரதி நாயகன்—பெருமை பொருந்திய இரதிக்குக் கணவன்; மன்மதன். 'துதி குகன்' என இயையும். மன்மதன் முருகனைத் துதித்தல், பேரழகு கண்டு. 'பூசைக்கு' எனக் குவ்வுருபு விரித்துரைக்க. மீளவும் இதனைக் கூறியது, இந்நூல் செய்தற்குச் சிறந்த காரணம் இதுவே என்பது உணர்த்துதற் பொருட்டு. ஈசன் சாரதி, பிரமன். சூழ்தல்—வலம் வருதல்; இது, காஞ்சி நகரத்தோடு ஒத்து விளங்குதலைக் குறிக்கும். 'பாரதி' இரண்டில் முன்னையது ஒப்பினுகிய சிறப்புப் பெயர். பின்னது கலைமகட்குப் பரியாயப் பெயர்.

"மூவர் அரசுபுரி மதுரை வளர் பாண்டி நாட்டில் எழுநகர வணிகர் என ஓதும் உத்தமர்கள், பூசை விழாவும் புரிந்தோர், இவர் புரியும் தருமம் என் சொல்வாம்; அன்னோர் கம்பைமா நகரில் வீற்றிருக்கும் வடிவேல் அண்ணல் தன் திருவருளை நல்க, இரங்கோனில் அடைந்து வாழ் தேட்டினால் அவரது வண்மையைத் தேர்ந்து, குமரகோட்டம் உறை குகன் பூசை நடத்தல் வேண்டிக் கிராமம் ஒன்று பிரதிட்டை செய்யச் சோணுசல பாரதி அவரிடம் சொல்ல, அவர் அவனது பத்தியையும் புத்தியையும் ஆய்ந்து, கம்பைக் குகன்மேற் சேய்தமிழ் ஒன்று இசைக்க எனக் கூறக் கேட்டுப் 'பிள்ளைத் தமிழ் முதலிய பிரபந்தங்களின் கூட்டம் அமைந்த சந்நிதி முறை' என்று எவ்வெவரும் போற்றக் கம்பைச் சந்நிதி முறைச் செந்தமிழைச் சொற்ருன்; அவனது சொல்லைப் பாரதியும் மகிழ்ந்து கேட்பள் எனின், இனிப் பகர்வது என்" என முடிக்க.

## சாத்துக் கவிகள்

'நூலது வரலாறு கூறுதல் கருத்தாக, ஆக்கியோரது பெயர் முதலிய பலவற்றையும் முற்றக் கூறுவது சிறப்புப் பாயிரம்' எனவும், 'நூற்குத் தமது உடன்பாட்டைத் தெரிவித் தல் கருத்தாக, ஆக்கியோரது பெயர் முதலிய சிலவற்றையே கூறுவது சாத்துக்கவி' எனவும் கொள்க. சாத்து—கைச்சாத்து; அதனை உணர்த்தும் கவி சாத்துக் கவி என்க.

11. கல்+தவர் = கற்றவர்; 'மலையாகிய வில்' என்பது பொருள். 'அரும்பொருள்' என்றதும் அப்பெருமானையே. 'அவன் சேர் பதி' என்றது சிவலோகத்தை. பதியின்-பதியாய். கம்பை—கம்பாநதி.

12. 'வழங்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.

13. 'திருமகளைத் தரும் பதம்' என்க. 'திருமகள்' என்றது திருமாலின் அருளை. பதம் = மொழி; அது விட்டுணு மூலமந்திரம். எட்டு—எட்டெழுத்து. பவம்—பிறப்பு. 'நம' என்பதனையே இங்குப் 'புணை எனப் பகரும் பதம்' என்றார். சிவமூல மந்திரத்திலும், விட்டுணு மூல மந்திரத்திலும் 'நம' என்பது இருத்தல் அறிக. பிற மந்திரங்களிலும் உளதேனும், சைவ வைணவங்களே வேறுபட்ட சமயங்களாய் இஞ்ஞான்று காணப்படுதல் பற்றியும், ஏனையவை இவற்றின் பகுதியாய் அடங்குதல் பற்றியும் இவற்றையே கூறினார். 'நம' என்பதன் முதலொடு சேர்ந்த கரத்தவர் என்றது, நகரத்தவர்' என்றவாறு. 'பதமுதற் கரத்தவர் என்பதை உணர்ந்து அறப் பயிர் விளைக்கும் நற்றவர்,' என்க.

14. சான்றும் — பிரமாணமாம். 'ஆதலின்' என்பது வருவிக்க. எண் தலம்—எட்டுத்திசை. 'செல்வர் துய்த்தல்' என இயையும். கண் தலம்—கண்ணாகிய இடம்; என்றது அதன் கண் உள்ள பொறியை. 'துய்த்தல்' என்புழி ஆன் உருபு விரிக்க. 'கடவுள் மா நகர் கண்டனம்' என மாற்றி, 'கேட்டுணர்ந்து வரும் தேவருலகத்தை ஈண்டே கண்டுணர்ந்தோம்; இஃதொரு வியப்பாயிருந்தது' என உரைக்க. 'நகரே' என்புழி ஏகாரம் தேற்றம்.

15. ததி—பொழுது. 'முருகையனாகிய எம்பிரான்' என்க. சித்திரம்—பல்வேறு வகை. 'சீரியராகிய அவர்' என்க.

16. 'ஆய்ந்து இவ்வுரை இசைத்தனன்' எனவும், 'ஓர் மாயாவரை' எனவும் இயையும். மாயா வரை—கிரவுஞ்ச கிரி.

'உரை' என்றது அதனாலாகிய மாலையை; 'சொன்மாலை' என்றபடி.

17. சதம்—உண்மை; நிலைபேறு. முகத்தை உடையவனை 'முகன்' என்றல்போல, கலத்தை உடையவனைக் 'கலன்' என்றார்; அத்துச் சாரியை தொகுக்கப்பட்டது எனலுமாம். 'என்று' என்பது, 'கலன்' என்னுங் குறிப்பு வினைப்பெயரொடு முடிந்தது. கவி செய்வோனைக் 'கவி' என்றல் வடநூல் வழக்கு. சுசீலம்—நல்லொழுக்கம். 'பார் அதி வாழி' எனக் கண்ணழித்து உரைக்க. 'வாழ்' என்பது முதனிலைத் தொழிற் பெயராய் 'இ' என்னும் பெயர் விகுதி ஏற்றது; 'ஆகுக' என்பது எஞ்சி நின்றது; பூமியின்கண் மிக்க வாழ்வையுடையவனாகுக' என்பது கருத்து. மிக்க வாழ்வு—நெடுங்காலம் வாழ்தல்.

18. கான்முளை—மகன் (முருகன்). 'மறவார் விருப்புற்றமையால் சோணசல பாரதி உரைத்த செய்யுளாகிய கம்பைச் சந்நிதிமுறை' என்க. தேட்டம்—செல்வம். திகழ்—விளக்கம்; (முதனிலைத் தொழிற்பெயர்) 'என்னை யாநந்தம்' என்புழி, 'என்று' என்பதும், 'என்கொலோ' என்புழி, 'எனின்' என்பதும் வருவிக்க.

20. 'அவியை ஏற்ப' என இயையும். சுதையோர் அன்ன—அமுதத்தோடு ஒரு தன்மைப்பட்ட. கட்செவி வேந்தன்—ஆதிசேடன். அமையாதிருத்தலுக்குப் பிரமதேவன் வினைமுதல் என்க.

21. கைம்மலை—யானை. அதனையுடைய பொன்மலை என்க. பொன்மலையை (வில்லாக) உடைய கனகமலை, சிவபிரான். 'அமலையாகிய பைம்மலை' என்க. 'கம்பைவாழ் செவ்வேள்' என்பதனை, 'நாப்பண் மலையாய்' என்புழிக்கூட்டுக. அம்—அழகு. மலை—போரை வெல்லும். வைத்து—வைத்தாற் போல. செம்மல்—பெரியோன். ஐ—வியப்பு; அழகுமாம். 'பொருள்' என்புழி ஆன் உருபு விரிக்க.

23. வில்—ஒளி. நல்—நன்மை.

## நூல்

# பிள்ளைத் தமிழ்

### காப்பு

26. மா-பெருமை. வசந்த மண்டபம்—இளவேனில் மாளிகை. வரை—எழுதப்பட்டிருந்த. கலைகள்—கூறுகள்; மந்திரங்கள்' எனலுமாம். கா—சோலை. உலகு—உயிர்கள். காதலித்து—அன்பு செய்து. கருணை உருவம்—கருணையேயாய உருவம். ஞான மதம்—ஞானமே ஆகிய மதநீர். 'ஞான மத ஐங்கரக் கற்பகம்' அற்புத உருவகம்; இதனைப் புறநடையாற் கொள்க. விநாயகக் கடவுள் தோன்றிய வரலாறு இங்குக் குறிக்கப்பட்டது; இவ்வரலாற்றினை, இப்புத்தகத்து 7, 8-ம் பக்கங்களிற் காண்க. 'சோதி வடிவு, மெய்ஞ்ஞான வடிவு' எனத் தனித்தனி இயைக்க. பூ—அழகு.

## காப்புப் பருவம்

காப்பாவது, குழந்தையைத் தீய தெய்வங்கள் தீண்டி வருத்தாமற் காக்குமாறு நற்றெய்வங்களை வேண்டிக்கொள்ளுதல். இது நிகழும் பருவம் 'இரண்டாந் திங்கள்' எனவும், 'மூன்றாந் திங்கள்' எனவும் இருவகையாகக் கூறுப.

27. உலக நிலை—உலகத்தின் பகுதிகள். எரி—நெருப்புக் கடவுள். வாயு—காற்றுக் கடவுள். சுரநதி—கங்கை நதி. சரவணை—சரவணப்பொய்கை. சரவணம்—நாணற்காடு; அதனையுடையது சரவணை. கார்த்திகேயன்—கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன். முருகக்கடவுள் தோன்றிய வரலாறு இங்குக் குறிக்கப்பட்டது; இவ்வரலாற்றினைக் கந்த புராணத்துட் காண்க. இளையோன்—முருகன். 'புரக்க வாழ்த்தும்' என முடிக்க. 'மின்ன, இடிக்க, வான்வில்லிட' என்பன குறிப்புருவகங்கள்; 'கரச் செந்தாமரை, வினைக் கோடை, கருணை மழை' என்பன தொகையுருவகங்கள்; 'உயிரெனும் பயிர்' என்பது விரியுருவகம்; 'கட்க தண்ட சக்கர தரண கருமுகில்' என்பது

அற்புத உருவகம். சார்ங்கம்—திருமாலது வில். கலக வினை—பாவம். தழைத்தல்—அறப்பயனால் மகிழ்தல். கட்கம்—வாள். தண்டம்—கதாயுதம்.

28. இம கிரணம்—குளிர்ந்த ஒளி. 'கொண்டு' என்பது 'கொடு' என மருவிற்று; இதன் ஈற்றுக் குற்றியலுகரம் கெடாமை செய்யுள் முடிபென்க. 'தோற்றத்தன், ஏற்றத்தன், சீற்றத்தன்' என்பவற்றில் அத்துச் சாரியைகள் தொகுத்தலாயின. கடு—நஞ்சு. களம்—மிடறு. மதலை—சிறுவன்; மார்க்கண்டேயர். பதம்—பாதம். கூற்றன்—கூற்றுவன் (யமன்); காலனுக்குக் காலனானமை பற்றி இவ்வாறு கூறினார்; 'உறுப்பைக் கூறென்றார்' என்றலுமாம்; இப்பொருட்கு இன் சாரியை தொக்கதென்க. நவநிலை—நவந்தரு பேதம்; அவை: சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் என்னும் நிலைகள்; இவற்றின் இயல்புகளையெல்லாம் சைவ சித்தாந்த நூல்களுட் காண்க. இவையனைத்தும் சிவபிரானது பொதுநிலையாக, அவனது உண்மை நிலை இவற்றின் மேலதாதலின், 'நவநிலையின் மிசைநிலவு சிவன்' என்றார். நருமதேசன்—கம்பைச் சிவபிரான். விதி—பிரமன். உந்துதல்—செலுத்துதல். வேதத்தின் முதல் மொழியாகிய பிரணவத்தின் பொருளை உரையாமை பற்றிப் பிரமதேவனை முருகப்பெருமான் குட்டிச் சிறையிருத்திச் சிருட்டித் தொழிலைத் தானே செய்த வரலாற்றினைக் கந்தபுராணத்துட் காண்க. சாறு—முடிந்த பொருள். பேற்றன்—பேறாய் (பெறத்தகும் பொருளாய்) உள்ளவன். மா கந்தன்—பெருமை பொருந்திய முருகன். 'கந்தனைக் காக்க, நரும தேசன்றனைப் போற்றுவாம்' என மேலே கூட்டி முடிக்க. இவ்வாறு முடிக்கப்படுவன வருஞ் செய்யுட்களினும் உள; அவற்றை அறிந்துகொள்க. இதன் கண் 'ஈற்றெதுகை' என்னும் இயைபு தொடை வந்தமை காண்க.

29. பாண்—இசை. தண்டு—யாழ். அதனையுடைய முனிவர், நாரதர். பாரம்—திண்மை. புவனம்—உலகம். ஆர்க்க—ஒலிக்க. தாணு—சிவபிரான்; இதன் ஈற்றுகரந்

தொகுத்தலாயிற்று. மேவி—விரும்பி. 'கண்' என்புழி ஆன் உருபு விரிக்க. 'உண்டு' என்பது குறிப்புருவகம்; எனவே, 'நடனமாகிய அமுதத்தினைக்கண்ணுகிய வாயான் உண்டு,' என உரைக்க. அன்பென்பதன் னகரம் வலிந்து நின்றது. 'ஏல' என்பதனையும் 'சால' என்பது போல, மிகுதி யுணர்த்துவதோர் உரிச்சொல்லாகக் கொள்க. 'சௌந்தர நாயகி' என்பது, கம்பையின்கணுள்ள உமையம்மை பெயர். மாண்—மாணுதல்; மாண்பாதல். ஐந்தரு—தேவருலகத்திலுள்ள பஞ்ச தருக்கள்; அவை:—கற்பகம், அரிசந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம். நுங்குதல் — உண்ணுதல். சேக்கை— இருக்கை. மால்–திருமால். சீர்–மேன்மை. 'அகன்றிலாது' என்பது குறுகி நின்றது. 'பொருவு காட்சி' என இயையும். கார்–மேகம். 'காட்சி சேர் கம்பை' என்க. 'மேகங்கள் சோலைகளின்மேல் தவழும் காட்சி; திருமால் தனது மருகனுகிய முருகப் பெருமானது பெருமையைக் காண வந்து நீங்காதிருத்தல் போலும்' என்பது பொருள்; இது **தற்குறிப்பேற்ற உவமையணி.** 'சோலைகள் ஐந்தருக் களுக்கு மேற்போய்த் தேவர்கள் உண்ணக் கனியுதவும்' என்றது **தொடர்புயர்வு நவிற்சியணி.** காளைக் குழந்தை—என்றும் இளைய ஞய் இருத்தற்குரிய குழந்தை; முருகன். மேலைச் செய்யுளும், இதுவும் சந்தவிருத்த மாதல் காண்க,

30. உழுவல் அன்பு — முன்னைப் பிறவியினின்றுந் தொடர்ந்துவரும் அன்பு; மெய்யன்பு. 'பால குமரன், வேற் குமரன்' எனத் தனித்தனி முடிக்க. 'குமரன்' என்றது வாளா பெயராய் நின்றது. கோடு—கொம்பு. பதம்—பாதம். ஒன்றும் வலன்—பொருந்தும் வெற்றி. 'கோடு ஒன்றும், மதம் ஒன்றும், பாதம் இரண்டும் மிகும் படியும், கைகள் நான்கு மறையும் படியும் வரு இபம்' என்றது, விநாயகருக்கு இயற்கையாய் உள்ளவை ஒரு கோடு, இரண்டு மதம், இரண்டு பாதம், ஐந்து கைகளாக, முருகப் பெருமான் வள்ளியம்மையை அடையச் செய்தற்பொருட்டு யானையாய் வந்த பொழுது அவை இரு கோடும், மும்மதமும், நான்கு பாதமும், ஒரு கையும் ஆயினமை பற்றி என்க. 'விநாயகருக்கு யானை வடிவம் தலைக்

குக்கீழ் இல்லாமையால், கன்ன மதம் கபோல மதம் என்னும் இரண்டு மதங்களே உள்ளன; ஆயினும், அவரை, 'மும் மதத்தன்' என வழங்குதல், முழுதும் யானையாகக் கூறும் வழக்குப் பற்றியே' என்பது ஒருசார் ஆசிரியர் கருத்து; அவர் கருத்தைத் தழுவியே இங்கு 'மதம் ஒன்று மிரும்படி' என்றார். இவ்வாறே கச்சியப்ப முனிவரும் தமது தணிகைப் புராணக் காப்புச் செய்யுளில், "மும்ம தத்தனென் றொருபெயர் தனக்கும்மொய் கூந்தற்—கொம்மை வெம்முலைக் கோற்றொடிக் கொடிச்சியை இலைவேற்—கைம்ம லர்த்தனி யிளவற்குங் கஃறெனுங் கானத்—தம்ம முந்துபுக் குறுத்தவ னடிமலர் பணி வாம்" என் றருளிச்செய்தமை காண்க. மிகுதல், கோடு முதலிய மூன்றற்குஞ் செல்லுமாறு ஒடுக்கொடுத்துப் பிரித்தார். இபம் —யானை.

31. மயர்வு-மயக்கம். 'விளக்கு' என்றதும், 'மெய்ந்நிலை' என்றதும் முருகனையே என்க. மெய்ந்நிலையில் பெறப்படுபவனை 'மெய்ந்நிலை' என்றார். 'கதியை' என்பது 'அளிக்கும்' என்பத னோடு முடியும். உண்மைத் திருவெண்ணீறு, சிவபிரான் உலகம் அனைத்தையும் ஒடுக்குங் காலத்து அடைகின்ற அவற்றது நுண்ணிலையே யாகலின், அஃது உண்டாகும் முறையை வேள்வியில் உண்டாகும் முறையாக உருவகத்தாற் கூறி, அதனைப் 'பரமவெண்ணீறு, என்றார்; உலகத்திற் கொள்ளப் படும் திருநீறுகளிற் சிறந்ததாகக் கொள்ளப்படுவது, வேள்வித் தீயில் இட்டு எடுக்கப்படுவதே யாதலறிக. சிவமறையோன்-சிவ பிரானாகிய யஜமானன். விமலை-உமாதேவி. பார்ப்பனி-யாக பத்தினி. ஊழி-பிரளய காலம்- உலப்பு-எல்லை. அண்டம்-ஆகாயம். தரை-பூமி. வேதிகை-திண்ணை. அவி-ஓம திரவியம். ஆக்கள்-பசுக்கள். அற்புதம்-அருமை.

32. மன்மணி—மணிகளுக்கெல்லாம் தலையாயமணி. திருமால் தனது மார்பில் விரும்பியணிந்துள்ள மணி, 'கௌத் துபம்' எனப்படும். எண்கண்ணன்—பிரமன். மணி கிரீவன்—மணிகண்டன். புத்திரத்தீபமணி, காளாமுக சமயத்தவர் அணியும் ஒருவகை மணி. குமரமணி—சிறந்த புதல்வன்.

அம்போருக மணி–தாமரைக் கொட்டை. துழாய்மணி-துளசி மணி. சிரோமணி-தலைமணி. பாற்றி-அழித்து. இக பரசுகம்-இம்மை மறுமை இன்பம். 'உருத்திராக்கம்' என்பதற்குச் 'சிவன் கண்மணி' என்பதே பொருள் என்க. 'திரிபுரத்தசுரர்களது கொடுமைகளைத் தேவர்கள் சொல்லி முறையிட்ட பொழுது, சிவபிரான் கண்கள் பொழிந்த அருள்நீரிலிருந்து உருத்திராக்கம் தோன்றியது,' என்பது வரலாறு.

33. மறம்—பாவம். சூர்—சூரபதுமன். 'அவன் இறுதியில் மாமரமாய் நின்று முருகப்பெருமானது வேலால் பிளக்கப்பட்டான்' என்பதனைக் கந்த புராணத்துட் காண்க. அட்ட—அழித்த. சடக்கரன்—ஆறெழுத்து மந்திரத்தின் பொருளாய் உள்ளவன். அறப் பெருந்தாய் அப்பன்—பரம மாதா பிதாக்கள்; அற வடிவினராகிய அம்மையப்பர் எனலுமாம்.

34. மா, பூ மங்கை—திருமகள். 'மால்' என்றது, 'பிற மாதர்மேல் உண்டாகிய மையலையுடையவன்' என்னும் பொருளை உட்கொண்டது. அவ்விடத்து நின்ற உம்மை இழிவு சிறப்பு. 'என் ஆசைக்குரியவள்' என்னும் எழுவாய் வருவித்து, தொக்கு நின்ற பிரிநிலை ஏகாரத்தை விரித்து முடிக்க. 'உலக முண்டோன்' எனப்படுதலை, ஈண்டு இகழ்தற்குக் கருவியாகக் கொண்டு, 'மண்ணுண்ட வாய்' எனக் கூறினாள். 'நிச்சயமதாமே', 'ஆர்வமிலையே' என்னும் ஏகாரங்கள் வினா. ஏய வணை—பொருந்த அணிந்த. 'சலந்தரன்' என்னும் அசுரன் மனைவி 'பிருந்தை' என்பவள் மீது கொண்ட மோகத்தால், அவ்வசுரன் இறந்தபின் திருமால் அவனது உடலிற்புகுந்து, அவளொடு இன்பம் நுகர்ந்தகாலை, அவள் அஃதறிந்து தீயில் வீழ்ந்து இறக்கப் பின்னரும் அவள் சாம்பரில் அவர் புரண்டுகொண்டிருந்த பொழுது, உமையம்மை கொடுத்த ஒரு விதையைத் தேவர்கள் அச்சாம்பரில் விதைக்க, அது முன்னர்த் துளசியாய்த் தோன்றிப் பின்னர் ஒரு பெண்ணாகி நிற்க, திருமால் பிருந்தைமேற் கொண்ட மோகத்தை விடுத்துத் துளசிமாதை மணந்து, துளசியையே முடிமாலையாகவும் கொண்டமை பற்றி, 'என்னினும் இனியவள் பிருந்தை;

அவளினும் இனியவள் துளசி; அதனைக் கூறுது, என் மீதே ஆசையிருப்பதாக ஏன் பொய் கூறுகிறீர்?' எனப் பிற இருமாதர் மேல் அவருக்குள்ள ஆசை குறிப்பால் விளங்குதற் பொருட்டு, 'ஏயவனே வண்டுழாய்க் காட்டின் நிற்கார்வம் இலேயே' என வினவினள். 'சொற்சுவை' என்றது, அவ்வாறு இருவர் மீது கொண்ட ஆசையும் ஒரு தொடரிலே விளங்க வினவிய தனக்கு, 'விருந்தை' என்னும் ஒருசொல்லே புதியவள் (துளசி), பிருந்தை' என இருபொருள் பயந்து, 'அவ்விருவரினும் மிக இனியை நீ' என்று கொள்ளுமாறு அமைய விடை கூறினமையை என்க. முத்து வெண் சாந்து ஆற்றி—முத்தினை அரைத்த வெண்மையான சாந்தைப் பூசி. சிகரி—கோபுரம். 'கம்பையுண்ணிமலன்' என்புழி ணகரமெய் விரித்தல்.

35. கஞ்சாதனம்—தாமரை மலராகிய ஆசனம். கிழவன்—உரிமையுடையவன்; கணவன். வெள்ளை—யாதும் அறியாமை; அது, சிலேடை வகையால், நிறத்தினை யுணர்த்திய ஏனை வெள்ளைகளோ டியைந்தது. "என் உள்ளமும் விரும்பியமர் தாயை நினைவாம்" எனக் கூறியது, காப்புக் கூறுவாரொடு தாமும் இயைந்து நின்று கூறியவாறென்க. 'கிள்ளையை அகற்றல்போல் புனத்து உறை" என இயைக்க. இவ்வாறு கூறியது, 'அச் செயல்தானே முருகனை அடைதற்கு வாயிலாய் நின்றது' என்னும் கருத்துப் பற்றி 'குறக் கிள்ளை' என்புழிக் கிள்ளை உவமவாகுபெயர். 'கிழவனைக் குமரனை' என்பது சிலேடை முரண். கேண்மை—உறவு.

36. செப்பு அத்துவிதம்—வேதம் சொல்லும் உடனும் நிலை. 'கண்ணே யொப்ப உறை குகன்' என இயையும். துப்பு—பவழம். ஓவா—நீங்காத. திசைப்புவனம்—திசைக்கண் உள்ள உலகம். வேதன்-பிரமன். எழுமாதராவார்: மாகேசுவரி, நாராயணி, கௌமாரி, இந்திராணி, காளி அபிராமி, வாராகி. சதகோடி—வச்சிராயுதம்; அதனை ஏந்துங் கையான், இந்திரன்.

## செங்கீரைப் பருவம்

கீர்—சொல்; ஐ சாரியை. செம்மை, இங்கு இனிமையைக் குறிக்கும்; 'மழலைச் சொல்' என்றபடி; அஃது ஆகுபெயராய் அதனைச் சொல்லி ஆடும் ஆட்டத்திற்கு வழங்கும். இவ்வாட்டம், குழந்தைகள் ஒருகாலை நீட்டி, ஒரு காலை முடக்கி, இரு கைகளையும் நிலத்திற் பதித்து முகம் நிமிர்ந்து ஆடுவதாகும்.

37. கடு—நஞ்சு. மெய்ப்புளகு ஆர—உடற் பூரிப்பு மிகும் படி. முச்சி முடி—கொண்டையாகிய முடி. ஆரச் சுட்டி—முத்துச் சுட்டி. நாற்றுதல்—தொங்கவிடுதல். அரதனம்—இரத்தினம். குதம்பை—ஒருவகைக் காதணி. கொங்கு ஆர் அம் மலர் அடி—தேன் பொருந்திய அழகிய மலர்போலும் திருவடி. ஆரணப் பரிபுரம்—வேதமாகிய சிலம்பு. சிங்காரம்—இனிமை. அலங்காரம்—அழகு.

38. வசை—பழி. மதலை—பிள்ளை; 'தன் பிள்ளை' என்க. அம்—அழகிய. அசைதல்—தங்குதல்; அருகிருத்தல். நசை—விருப்பம். நளினம்—தாமரை. 'நீட்டுதல்' வளர்த்தலுமாமாகலின், அந் நயம் பற்றித் 'தவம் மல்க' என்றார்; இதனுள் செங்கீரை யாடும் முறை குறிக்கப்பட்டவா றறிக.

39. சைகதம்—மணல். 'இலிங்கம் அமைத்து' என்க. பொன்–அழகு. காஞ்சி–மேகலை. ஏலவார் குழலி–மயிர்ச்சாந்து அணிந்த நீண்ட கூந்தலையுடையவள்; இத்தொடர், கச்சி ஏகம்பரை நீங்காது உறையும் அம்மைக்குப் பெயராய் வழங்கும். பூண் குருகு—அணிந்த வளையல். உருகியது, இளகி அவ்விரண்டனாலும் உண்டாகிய வடுவை அடையாளமாகக் கொண்டது. புலவி—ஊடல். 'கம்பை' என்னும் பெயர் பற்றி இவ்வாறு புனைந்து கூறினார். இதனானே இத்தலம் இங்குள்ளார் அன்பாற் கருதிக்கொண்ட காஞ்சி என்பதும் கூறியவாறும். கைலையில் சிவாகமங்களை இறைவன் சொல்லக் கேட்ட அம்மை அம்முறைப்படியே அவரை வழிபட விரும்பிக் காஞ்சியை அடைந்து வழிபட்டமை முதலிய வரலாறுகளைப் பெரிய

புராணம் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துட் காண்க. 'அம்மை கம்பையாற்றின் மணலால் இலிங்கம் அமைத்து வழிபட்டாள்' என்பது ஐதிகம்.

40. மன்பதைகள் — மக்களினங்கள். பவம் — பாவம். பாற்று—போக்குகின்ற. படி—மூழ்குதல்; முதனிலைத் தொழிற் பெயர். பாலித்தல் — கொடுத்தல். மான்மியம் — பெருமை. கம்பை பிணக்குற்றமை, மேற்செய்யுளிற் சொல்லப்பட்டது. வரநதி, கங்கை; 'பிறரது பாவங்களை யெல்லாம் போக்குகின்ற கங்கை நதி, தனது மாசினைக் கம்பையில் மூழ்கிப் போக்கிக் கொள்ளும் பெருமையுடையது கம்பைநதி' எனப் புகழ்ந்தபடி. கம்பை நகரத்தை அப்பெயர் பற்றிக் கம்பை நதியின் மாற்றுருவாக மயங்கிய தேவர்கள், அம்மயக்கத்தானே, ஐராவதி நதியைக் கங்கை நதியின் மாற்றுருவாகவும், நரும தேச்சுரர் சௌந்தர நாயகியம்மை இவர்களை, விசுவேச்சுரர் விசாலாட்சியம்மை இவர்கள்தம் மாற்றுருவாகவும் மயங்கி அடைந்தனர்' என்றவாறு. 'இவ்வாறு எல்லாத் தேவர்களும் முனிவர்களும் சேர்ந்திருந்தமையால் கம்பை காசி ஆயிற்று' என்பதாம். ஆகண்டலன்—இந்திரன். வரர்—முனிவர். 'நண்ணுங்கம்பை' எனவும், 'அதனாற் காசியாங் கம்பை' எனவும் உரைக்க.

41. உண்மை 'சத்' எனவும், அறிவு 'சித்' எனவும் சொல்லப்படுமாகலின், "உண்மை யறி வானந்த உரு" என்றது, 'சச்சிதானந்த சொரூபம்' என்றவாறும். ஐந்து கத்தர்—பஞ்ச கருத்தாக்கள்; அவர்: அயன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன். 'உலகிற்கு எல்லாம்' என்க. ஐந்தொழில்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்; இவை முறையே மேற்கூறிய ஐவர்க்கும் உரியன. ஐஞ்சத்திகள்; வாணி, திரு, உமை, மகேசுவரி, மனோன்மனி இவர்களும் முறையே மேற்கூறிய கருத்தாக்களுக்கு உரியர். எடுத்துரைத்தல், 'உலகிற்கு அம்மையப்பர்' என்பதை என்க. 'எமக்கே அண்மையாம்' என இயையும். 'எமக்கு' என்றது, தொழுது துதிப்பவர்களை. திண்மை-நிச்சயம். 'அம்மையப்பரே உலகிற்கு அம்மையப்பர்'

என நூல்கள் எடுத்துரைக்கும்; 'அவர் வேறில்லை; நீ வேறில்லை' என்பதை யாம் அறிந்து உய்யும் வண்ணம் அவர்தம் மத்தியின் அமர்ந்து காட்டி வளர் குமரவேள் என்க.

42. மஞ்ஞை — மயில்; 'அது தன்னைக் கொல்லாமல் காக்குமாறு அரவம் (பாம்பு) அடியுறையாக வணங்கிக் கொடுத்தது போலும் சுட்டி' என்க. ஆர்—பொருந்திய. கதிர்—சூரியன். விஞ்சிய—மிகுந்த. 'நகைப்பின் ஒளி ஒழுகியதுபோலும் முத்தாரம்' என்க. பண்டி—வயிறு. எஞ்சல்—கெடுதல். பணி—பாம்பு; ஆதிசேடன். 'வாயு தேவனோடு விளைந்த கலாம் பற்றி ஆதிசேடன் மேரு மலையை இறுகச் சுற்றிக் கிடந்தான்' என்னும் வரலாறு பற்றி அதனை உவமை கூறினர். வடம்—நாண். பிரணவத்திற்குப் பொருள் கூறுமை பற்றி முருகப்பெருமான் பிரமனை உதைத்த வரலாற்றினைக் கந்த புராணத்துட் காண்க. சரணம்—பாதம். அஞ்சலி—கும்பிடு. அம்பரர்—வானவர்.

43. விபாகரன்—சூரியன். இற—அழிய. வெய்யவர்—கொடியவர். கடைக்கண் நோக்கமே ஈகையைச் செய்வதாகலின், அதனாற் பசி நீங்குதல் கூறினர். தெற—தெறப்பட. மனோகரம்—மகிழ்ச்சி. 'மனோகரத் தொண்டர்கள்' என்பது தொகுத்தலாயிற்று. 'மேனி விபாகரன்' முதலியன உருவகங்கள்.

44. 'பிடி' என்றது, 'தெய்வயானை' என்னும் பெயரைக் குறித்தது. பத ரேணு—பாதத்துகள். தொகைச் சொல்லிடத்து வருமொழியாய் நின்று ஒன்றினமையின் 'ரேணு' என்பது முதற்கண் இகரம் பெறுதாயிற்று. 'நன்புலனொடு ஆடுக' என ஒடு உருபு விரித்துரைக்க. 'அப்பெயருடைய யானை உற்றது' என வருவித்துரைக்க. 'ஐராவதம்' எனப்பாடம் ஓதுதலும் ஆம். 'மோனியர்' என்றது, விரதியரை.

45. 'வேடுவர்தம் தவ நங்காய்' எனப் பிரிக்க. வார்—நீண்ட. சிந்து—கடல். ஐம்பால்—கூந்தல். நண்புயல்—பொருந்திய மேகம். நம்பிய—விரும்பிய. சோமன்—சந்திரன். முகம்பெற—முகமாம் நிலையைப் பெற (நன்றாய் வான் நின்றான்). இத்துணை

யும் நலம் பாராட்டியது. 'கான் அணைந்தவ' என இயையும். புனை—அழகு. மானை—மான் போல்வாளை. 'செங்கீரை' என்பது அடுக்கி வருங்கால், முதற்கண் நின்றது, 'செங்கோ' என மருவி வழங்கும். அடுக்கு, விரைவு பற்றியது.

46. இந்திரியம்-புலன்; ஆகுபெயர். அடவி-காடு. பார்-நாடு. ஆடுற முந்துறும் முந்தே முந்து ஆறே-முழுக நினைத்து முயலுதற்கு முன்பே எதிர் வருகின்ற நதியே. அந்தரம் ஆதிய-விண் முதலிய உலகங்கள். 'பங்கம் இல்' என்பது, 'பங்கில்' எனக் குறைந்து நின்றது. 'பண் சீரே' என்பதனைச் 'சீர்ப் பண்ணே' என மாற்றியுரைக்க. சீர்—தாள அறுதி. அதனோடு இயைந்த பண் என்க. பண்—இசை. தயாபரன்—கருணையை மேற்கொண்டிருப்பவன்.

## தாலப் பருவம்

குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டும் பருவம். 'பாராட்டுதல், சீராட்டுதல்' என்பனபோலத் 'தாலாட்டுதல்' என்பதும் ஒருசொல். இது, 'தாலேலோ' எனப் படுதல் பற்றி வந்த பெயர். 'தாலப் பருவம்' என்பதில் அகரம், சாரியை; இதனை, 'ஏலேலோ' என்பதனை, 'ஏலப்பாட்டு' எனக் கூறுதல் போலக் கொள்க. 'தாற்பருவம்' என அகரம் மின்றியும் வழங்குப. இதற்குத், 'தாலுவை (நாவை) ஆட்டுதல்' எனப் பொருள் கூறி, 'தாலப் பருவம்' என்பதற்கு வேறிலக்கணங் கூறுவாரும் உளர். 'தாலப் பருவம், காப்புப் பருவத்தை அடுத்து நிற்பது' என்பது ஒருசார் ஆசிரியர் கருத்து.

47. 'களம்' இரண்டில், முன்னது மிடறு; பின்னது போர்க்களம்; சிலேடை. மாறன், இளையான்குடி மாற நாயனார். இவரது முளைநெல் அரிசிச் சோற்றிற்கு அவரிடம் இறைவன் சென்ற வரலாற்றினைப் பெரிய புராணத்துட் காண்க. வந்து—தோன்றி. நிருதர்—அசுரர். கடு—நஞ்சு. நிமலன்—தூயவன். ஒவ்வாது—இனியதாகாது. மைப் பகடு—மேகமாகிய கடா. வயிர அலம்—வச்சிராயுதமாகிய கொழு. 'பொருத' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'குழையொடு பொருதகண்'

என்றாயினும், 'ஆடவரொடு பொருதகண்' என்றாயினும் உரைக்க. புலவர்—தேவர். 'அரம்பையரையும் புலவர்தம்மையும்' என்க. போகி—இந்திரன். இவன் மருத நிலத்திற்குத் தெய்வமாதல் பற்றியும், அசுரரை யழித்துத் தனக்கு அரசு உதவினமையை நினைந்து முருகனை இவன் வழிபடுதல் இயல்பாதல் பற்றியும் இவ்வாறு கூறினார். உழத்தியர் உழவரது அழகைப் புகழ்ந்தவாறு. சாலி—நெல். பணை — வயல். வரதன்—வரத்தைக் கொடுப்பவன். வரை வேந்து—மலையரையன். உதவு—பெற்ற. பரை—உமையம்மை.

48. சாலி — நெற்பயிர். 'சாலியதை' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி ; ஏனைய இடங்களில் அவ்வாறு வந்தன சுட்டுப் பெயர்கள். பூகச் சோலை—கமுகஞ் சோலை. 'மாஞ் சோலையும்' என இறுதிக்கண் நின்ற உம்மையை, மேல் எல்லாச் சோலைகளோடுங் கூட்டுக. கதலி—வாழை. வனிதைப்பிடி (பிடிவனிதை)—தெய்வயானையாகிய மகள். கொடி, உவம வாகுபெயர்.

49. தம்பம்–கம்பம். தூக்கும் துவசம்–உயர்த்துக் கட்டிய கொடி. படம்—சீலை. உய்யல்—பிழைப்பு. வைய மதி—மண்ணுலகச் சந்திரன். 'என' என்புழி, 'நினைத்து' என்பது எஞ்சி நின்றது. வான் மதி—விண்ணுலகச் சந்திரன். 'உதனை' என்பது சுட்டுப் பெயர். ஆங்கு, உவம உருபு. 'செய்ய சுடர்' என்றது, சிவபிரான் கொண்ட அனற் பிழம்பு வடிவத்தை. எகினம்—(பிரமனாகிய) அன்னப்புள். கொடிக்கம்பம் சந்திர மண்டலத்தையும் கடந்து சென்றமையைக் குறிக்கச் சந்திரனைச் சிவபிரானது முடியைத் தேடிச் சென்ற அன்னத்தோடு உவமித்தார். மை அல்—மைபோலும் இருள். 'முதற்கண் உளத்துப் பொதிந்த மையல் (மயக்கம்) அகலப்பெற்றுப் பின்னர் உடற் பொதிந்த மையல் அகலப் பெற்றது' என்பது நயம்.

50. சுகந்தம்—நறுநாற்றம். சேக்கை–படுக்கை. முயங்க–தழுவ. துணை—பெடை. அரச அன்னம்—சிறந்த ஆண்

அன்னப் பறவை. அனையான்—போன்றவன்; தலைவன். இவ்வுவமையால், தலைவன் பள்ளிக் கட்டிலில் தலைவியோடு அமர்ந்திருந்தமை பெறப்பட்டது. மற்றொருத்தி, பரத்தை. 'நினைத்தான் என்பதை அவன்மாட்டு நிகழ்ந்த குறிப்பால் உணர்ந்து' என்க. அனையாள்—அவள்; தலைவி. உகந்தது—விரும்பியது.

'உகந்தது உரைத்தி' என வினவிய தலைவிக்குத் தலைவன், தனது பரத்தைமை ஒருவாறு தோன்றியும் தோன்றாது ஐயப்பட நிற்குமாறு, இருபொருள் பட, 'ஓர் தனம் உறச் சிந்தித்தேன்' என்று விடை யிறுத்தான். (தனம்—கொங்கை, பொருள்.) அதற்குத் தலைவி, 'நீ கூறியது உண்மை; அஃது இன்னதென்பதனை இப்பொழுது கூறுவேன்; அறிக' என்பாளாய், 'உளது; இங்கு உணர்க' என்றாள். பின்னர்த் தலைவன், 'அவ்வுண்மை, சொல்லத் தகாத ஒன்று எனக் கூற வல்லையாயின், அவ்வன்மையைப் புலப்படுத்துக' என்பான், 'காட்டு' என்றான். அதற்குத் தலைவி, தலைவன் கூறியவாறே இருபொருள் பட, 'சுவர்க்கம் ஓர்தி' என்றாள். (சுவர்க்கம்—கொங்கை, தேவருலகம்.) எனவே, 'நீ ஒரு தேவருலகத்தை (பெருஞ் செல்வத்தை) அடைய நினைக்கின்றாய்' என்பது வெளிப்படைப் பொருளாயிற்று. தலைவன், தலைவி குறிப்புப் பொருளாகக் கூறிய உண்மையை அறியான் போன்று, வேறொன்று கூறுவானாய், வெளிப்படைப் பொருளே பற்றி, 'நான் அடைய விரும்பும் வேறொரு தேவருலகிற்கு இந்திரனும் உண்டோ' என்பான், 'அம் மகவானும் புகுந்தது உளதோ' என வினவினான். இவ்வாறு தனது தவற்றைப் பிறிதொன்று பேசி மறைக்கக் கருதும் தலைவனைத் தலைவி, மேலும் அவனது தவற்றைப் பெரிதும் புலப்படக் கூறி நகைப்பாளாய், 'நீயே போகி' எனத் திறம்படக் கூறினாள். (அது, 'பரத்தையது கொங்கையைத் திளைப்பவன் நீயே' எனவும், நீ அடைய விரும்பும் தேவருலகத்திற்கு நீயே இந்திரன்' எனவும், இருபொருள் தருதல் காண்க.) தலைவன் மேலும் தனது பரத்தைமையை மறைப்பானாய், 'அதற்கு ('யான் பரத்தைமை உடையேன்' என்றற்கு—'நானே இந்திரன்' என்றற்கு)ச் சான்று யாது?'

என வினவ, தலைவி, 'பின் பொருந்துங் கண்கள்' என இரண்டற்கும் பொருந்துமாறு கூறினள். ('நீ பரத்தைமையுடையை என்பதற்கு இப்பொழுது சான்று காட்டல் அரிதாயினும், ஓர் தனம் உற நீ சிந்தித்தவாறே சென்று உற்ற பின்னர், உனது சாந்து பூசிய மார்பிடம் எங்கணும், பரத்தையது கொங்கையின் கண்கள் அழுந்திய அடையாளங்களே சான்றாய் அதனைப் பலரும் அறியச் செய்யும்,' எனவும், 'நீ இந்திரனாகும் நிலையில் உனக்கு உண்டாகும் ஆயிரங் கண்களே சான்றாம்' எனவும் பொருள் பட்டு, இரண்டற்கும் பொருந்து மாறறிக.) பூவை வண்டாய்ப் புணர்ந்தனன்போல் — பரத்தையராகிய பூக்களைத் தான் வண்டாகிச் சென்று கூடினன் போல; என்றது, 'தலைவியது புலவிகாரணமாக எழுந்த சொல்வன்மையானே மிக்க இன்பத்தை எய்தினனாய்த் தனது பரத்தைமையை யொழிந்தான்,' என்றபடி. 'மகிழ்ந்து' என்பதனை 'மகிழ' எனத் திரிக்க. 'இவ்வாறு பலர் வாழ் மனை' என்க.

51. மயங்கும் இரவு-மயங்குதற்கு ஏதுவாகிய இரவு. மருட்டி-நீக்கி; 'மையல் கொள்ளச் செய்து' என்பது நயம். நளினம்-தாமரை. செஞ்சுடரோன், தினகரன்-சூரியன். இவுளி-குதிரை. 'தன்தேர் இவுளி' என்க. இமையோர் வேந்து-இந்திரன்; அவனது குதிரை வெண்ணிறமுடையது. ஏது-இங்கு வந்த காரணம்யாது. பாகன், சூரியனது தேர்ப் பாகன். தியங்குதல்-திகைத்தல். 'செஞ்சுடரோன் ஈது ஏது என்னவும், பாகன் செப்புக எனவும் மருள' என இயைக்க. மாளிகையின் வெள்ளொளியால் இவை நிகழ்வவாயின என்க.

52. பெத்தம்-பந்தம் (கட்டு). வளை-சங்கு. மாமடிகள்-மாமனார். கஞ்சம்-தாமரை. கரி-யானை. அம் கரம்-அழகியகை. கோளரி-சிங்கம். 'ஐங்கர கரி, ஈராறு கரக் கோளரி' அற்புத உருவகங்கள். 'சத்துவம்' என்றது, மெய்யுணர்வை. சம்பகம்-சண்பகம். நீபம்-கடம்பு. கல்லாரம்-குவளை; இஃது-இடைக் குறைந்து நின்றது. சுகந்தன்-(இவற்றின்) நறுநாற்றங்களை (மாலைகளை) யுடையவன்.

53. புலந்து-ஊடல் கொண்டு. வாரி-கடல். 'புலந்து தமியளாய்(ச்சென்று) வீழ்ந்திடு' என்க. 'அன்னையே' என்பது இடைக் குறைந்து நின்றது. கம்பை புலந்ததாகக் கூறிய இதனை, மேல் 39-ம் செய்யுளில் விளங்க உணர்க. கம்பை நகருக்கு உள்ள அப்பெயர் பற்றியே இங்ஙனம் புனைந்துரைக்கின்றார்.

54. விழை-விரும்புகின்ற. சகம்-உலகம். தெளி-தெளிவு; தெளியப்படும் பொருள். ஒன்றுபு-கலந்து. உற்றிட-பெற. அளி-தண்ணளி; கருணை. பொன் தளி-கருவூலம். தாது-மகரந்தம். நந்தனம்-பூஞ்சோலை.

55. பூதாதி—ஐம்பெரும் பூதங்கள் முதலிய பொருள்கள். அபூதன்—உயிராதற் றன்மை யில்லாதவன். போதன்-அறிவு வடிவாகியவன். துதி போதன்—துதிக்கும் செவ்வியையுடையவன். மேதா—சிறந்த அறிவுடையவன். தீது, பண்புப் பெயர். விண்ட—நீங்கிய. அதீதன்—கடந்தவன். வீதன்—சாந்த வடிவினன். சீ—ஒளி. தா—வலிமை. சீதன்-குளிர்ச்சி (கருணை) உடையவன். நீதன்—நீதியை யுடையவ்ன். தாது-மகரந்தம். தாதா—கொடுப்பவன். சாத + அபலம் = சாதாபலம்; பிறவிப்பயன் இன்மை. தெறு—நீக்குகின்ற. சாதன்-இன்ப வடிவினன். வேதன்—அறிவுடையவன். வாதாளர்—(சமய) வாதிகள். விவாதன்—விவாதிக்கப்படுபவன். சூதன்-கரந்து நிற்பவன். மா தானம்—பெருமை பொருந்திய இடம்; 'பெருங் கொடையையுடைய' என்றுமாம்; இனி 'மாது ஆன' எனப்பிரித்து, 'விரும்புதல் பொருந்திய' என வுரைத்தலும் ஆம். மாதா—தாய். நாதன்—தலைவன்; 'நாத தத்துவத்தில் உள்ளவன்' என்றலுமாம். இதனுள், **சொற்பின் வருநிலை** வந்தமை காண்க.

56. ஆரணன்—பிரமன். காலன்-பாதத்தை யுடையவன். வாலாயர்—பழக்கமானவர்; 'வான்மை (தூய்மை) ஆகியவர்' என்றலுமாம். சீல ஆகரம் பெறு — ஒழுக்கத்தின் உறைவிடமாதற் றன்மையை யுடைய. கோலன் — அழகுடையவன். சேல் ஆர் கண் அம் கொடி-மீன் போலும் அழகிய கண்ணினை யுடைய வள்ளி. மாலன்-மோக முடையவன். 'வேலாயுதம்'

என்புழித்தொக்குநின்ற இரண்டனுருபு, "கரம்" என்புழிக் கண்ணுருபோடு தொக்கு நின்ற 'தாங்கிய' என்பதனோடு முடிந்தது. 'லீலையன்' என்பது, 'லீலன்' என நின்று விளியேற்றது. லீலை — விளையாட்டு.

## சப்பாணிப் பருவம்

'சஹ பாணி' என்பது 'சப்பாணி' என வந்தது; 'ஒருங்கு சேர்ந்த கைகள்' என்பது பொருள்; இது, இங்கு, அவ்வாறு சேர்த்துத் தட்டுதலைக் குறித்தது.

57. மழை—மேகம். கீண்ட—பிளந்த. மா, சூரபதுமன் கொண்ட மாமர வடிவம். இவ்வடிவம் கடலின் கீழ்ப் பாதலங் காறும் வேர் வீழ்த்து, அண்ட முகடு அளாவ வளர்ந்து நின்றது என்பதைக் கந்த புராணத்துட் காண்க. பாணி—கை. 'வேற் பாணி' என்பது அன்மொழித் தொகையாய், முருகனைக் குறித்தது. புயக் கந்து—தோளாகிய தறி. குலிசப் பாணி—இந்திரன். விழைவு—காதல். எயினர்கள்—வேடர்கள். 'வளர்த்துப் புனத்து உய்த்த' என இயைக்க. கோடு—தந்தம். 'முலைக் கோட்டானை' என்பது சிறப்புருவகம். வேட்டிடுவன்—மணம் புரிவேன். வனசப் பாணி—தாமரைபோலுங் கையை உடையவனே. சம்பக அடவி—சண்பகக் சோலை.

58. சார்ங்க பாணி—திருமால். கரகம்—கமண்டலம்; அதனைக் கையில் உடையவன் பிரமன். குலிசம்—வச்சிராயுதம். எண் சார்ந்த—(யாவரும்) மதித்தல் பொருந்திய. இசையாது இசை—சொல்லாமற் சொல்லிய. சிவபிரான் சனகர், சனந்தனர், சனாதனர், சனற் குமாரர் என்னும் முனிவர் நால்வர்க்குக் கையிலையில் கல்லாலமர நிழலில் தென் முகக் கடவுளாய் இருந்து, கைக் குறிப்பினாலே ஞானத்தை உணர்த்தினமையைக் கந்த புராணத்துட் காண்க. மண் கூர்ந்த—அழகு மிகுந்த, தண்ட பாணி—கோல் ஊன்றிய கை. அண்மி—அடைந்து. அங்குச பாணி—விநாயகக் கடவுள். தெளித்து—தெளிவித்து. காந்தள் அம்பாணி—காந்தள் மலர் போலும் அழகிய கை. இதன்கண், 'பாணி' என்பது, பன் முறை வந்து, சொற்பொருட் பின்வருநிலையாய் நின்றமை காண்க.

59. மண்தல மடந்தை — பூமி தேவி. குதுகலித்து — மகிழ்ந்து. கச்சிக் குமரகோட்டப் பெருமான், கனவில் தோன்றி, 'திகட சக்கரம்' என அடியெடுத்துக் கொடுக்கக் கச்சியப்ப சிவாசாரியர் கந்த புராணம் பாடிய வரலாறும், இடை இடையே அப்பெருமான் அதனைத் திருத்தித்தந்த வரலாறும் இங்குக் குறிக்கப்பட்டமை காண்க.

60. மது—தேன். முகம்—வாய். மதுகரம் — வண்டு. மழலை—நிரம்பாமொழி. பாண்—இசைப் பாட்டு. மிழற்றுதல்—மெல்லப் பாடுதல். 'அலை' என்பது கடலைக் குறித்தது. விதுமுகம்—சந்திரனாகிய முகம். ககனம்—ஆகாயம். 'இலக்கர்' என்பதன் இகரம் தொகுத்தலாயிற்று. முருகன் விளையாடல் செய்த காலத்து, மேருவும் கடலும் ஆகாயமும் நிலை தடுமாறினமையைக் கந்த புராணத்துட் காண்க. செம்மல்—பெருமையிற் சிறந்தோன். புதுமுகன்—புதியவன். போதன்—மலரில் இருப்பவன்; பிரமன்; செருக்குடையவன் என்பது நயம். 'போம்' என்றது, 'வரும்' என்றபடி. முருகப் பெருமான் பிரமனைப் பிரணவத்திற்குப் பொருள் வினவி, அது கூறுமைபற்றி அவனைக் குட்டிய வரலாறு இங்குக் குறிக்கப் பட்டது.

61. பொற்பு—அழகு. முனிவர் இருவர்: பதஞ்சலி, வியாக்கிரபாதர். வைப்பான — சேமநிதியாய் உள்ள. சிற்சபை—ஞான சபை. நட்டுவன்—ஆட்டுவிப்பவன். பிரமன் பொய் சொல்லியது, சிவபிரானது திருமுடியை அவன் தேடிச் சென்று காணமாட்டாது திரும்பியபொழுது என்க. 'ஆரணம்' என்றது, பிரணவத்தை. அதன் பொருளைக் கூற மாட்டாமையால் அவன் தலை சிவப்பானது, முருகப்பெருமான் குட்டியதனால் என்க. சீர்த் தாளம் — செம்மையான தாளம். ஆசான் ஆயது, சிவபிரானுக்கு; அது பிரணவப் பொருளை யுரைத்ததனால் என்க.

62. மஞ்சு—மேகம். வஞ்சர்—அசுரர். உடல் நஞ்சு—உடம்பு சிதைந்து. பிஞ்சு—சிதைந்து; இது, தேய வழக்காகிய மரூஉ. மட்டுஇல் — அளவில்லாத. உதிரத்து ஆறு — இரத்த

வெள்ளம். போய்—போயதனுல்; கலந்ததனுல். அயில்—வேல். விண்டு—கூவி. உடு—(அதனுல் உதிர்ந்த) நட்சத்திரம். நுங்குதல்—உண்ணுதல். சுடிகை—கொண்டை. எஞ்சல்—குறைதல். ஒன்பதின்மர், வீரவாகு முதலியோர். பூதர்—பூதப் படைஞர். குஞ்சரி—தெய்வயானை. கும்பம் உதி துங்கர்—கல சத்திற் பிறந்த முனிவர்; அகத்தியர். பதி—தலைவன். 'சேய்' என்பது முதலிய பெயர்கள் அண்மை விளி.

63. 'மெய்த் தேவு,' என்பதனை, 'எங்கடவுள்' என்பதனோடுங் கூட்டி, 'உங்கடவுள்' என்புழி, 'பொய்த்தேவு, என்பது வருவிக்க. இலது—இன்றி. 'சங்கரரது கருணை முகம்' என்க. முருகப் பெருமானைத் தந்தருளியபோது, சிவபிரான் ஆறு முகங்களைக் கொண்டு நின்றமையைக் கந்தபுராணத்துட் காண்க. உற்று—பொருந்தித் தோன்றி. நங்கள் புவனம்—நிலவுலகம். தவனின்—தவத்தால். மனைப் படப்பையில் மரம் நட்டு வளர்த்தல் மகளிர்க்கு இயல்பாதல் பற்றி, 'சுரர் பிடியும் குறவர் கொடியும் நட்டதாரு' என்றார். கடவுள் தாரு-தேவதரு. 'வெற்பில் எல்லாம், ஊரில் எல்லாம் நட்டதாரு நேர்நின்றென விளங்கு குகன்' என இயையும். கொங்கு—தேன்.

64. அந்தணன்—பிரமன். அஞ்சன வண்ணன்—மை போலும் நிறமுடையவன்; திருமால். 'மஞ்சு அன்ன' எனப் பிரித்து, 'மேகம் போன்ற' என உரைத்தலுமாம். பதம்—நிலை. 'அங்கவை' இரண்டில் முன்னது ஒரு சொல் நீர்மைத்து; பின்னது, 'அப்பொழுது அவை' எனப் பொருள் படும். 'எந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. இசைப்பது—துதிப்பது. 'மறவோம்' என்பது, குகரச்சாரியை பெற்று, 'மறக்கோம்' என வந்தது. 'பாதகம்' என்பது குறுகிநின்றது. எய்ப்பில்—சோர்வினுல். நந்து வினை—மிகுந்த வினை. நம்பு—விரும்புகின்ற. விண்டிடு—நீங்கு. பழி—அடாத சொல். கொந்து அலர் கை—கொத்தாக மலர்ந்த கை; பன்னிரண்டு கை பொர விளம்பு—பொருமாறு தட்டி உறுதி கூறிய; இனி, 'பொர' என்பதனைக் 'கொட்டியருள்' என்பதனோடு இயையக் கூட்

தலுமாம். 'அன்பரை விட்டு நீங்கு என்றாலும் நீங்குவேன்; உன்னை விட்டு நீங்கமாட்டேன்' என்று உறுதி கூறிக் கலந்தான் என்றபடி.

65. கங்காதரன்—கங்கையைத் தரித்தவன். கஞ்ச ஆனனம்—தாமரை போலும் முகத்தில். அமுதம் சேர்—அமுதகிரணமாகிய நிலவு போலப் பொருந்திய. நகையின்—(எள்ளல் பற்றி உண்டாகிய) நகைப்போடு. 'இடர்' என்றது ஊடலை. உமை ஊடுதற்குக் காரணம், கற்றவர்கள் சிவபிரானை, 'உமாதரன்' என்னாது, 'கங்காதரன்' என்றல். பக்கம் (பட்சம்)—அன்பு. ஆய்—தாய்; உமை. ஆசு அற—ஊடல் நீங்க. சீர்—வாயில். ஈர்—குளிர்ச்சி. உடன்று ஆர்—நெருங்கிப் பொருந்திய. அளித்திர்--கொடுப்பீராக. 'என் தாய் உமையம்மை உடல் நீங்கும் வாயில், என்னைத் தாமரைகள் மிகப் பூத்துள்ள கடல் எனக் காட்டுதல் அல்லது, அவள் அடியில் வீழ்ந்துவணங்குதல் ஆகாது என்று சொல்லி உனது கைகளை நீட்டித்தடுத்தல் போல நீள்கின்ற கரமலர்' என உரைக்க. இது வாயிலாதல், 'கங்கை எனப்படுவது பெண் அன்று; யாற்று நீரே' எனமெய்ப்பிக்கப் படுதலாலும், வணங்குதல்வாயிலாகாமை, 'அதனால் கற்றவர் சொற்றது காட்சிப்பட்டு உண்மையாதலாலும் என அறிக. பன்னிரண்டு கைகளும், ஆறு முகங்களும், இரண்டு பாதங்களும் தாமரை மலர் போல விளங்குதலால் முருகனைத் தாமரை மிகப் பூத்துள்ள கடல் என்றல் பொருந்துமாறு காண்க. புதல்வன் ஊடல் தீர்க்கும் வாயில் ஆதலை வேறொரு வகையால் திறம்படக் கூறியவாறு. கும்ப ஆரியன் கும்ப முனிவர்; அகத்தியர்.

66. வடித்தல்—வற்றச் செய்தல்; அழித்தல். புலம்—அறிவு. சிங்கானனன்—சிங்கமுகாசுரன். வலம்—வெற்றி. ஆர்கலி—கடல். சூர்—சூரபதுமன். அடர்த்த—அழித்த. சலம்—பெருஞ் சினம். அண்ட அதிபன்—விண்ணுலகின் தலைவன்; இந்திரன். குலம்—கூட்டம். 'தொண்டர்கள் அடையும் சுவர்க்க லோகம் நீயே' என்றபடி. என்றூர் தமது அருள்—என்று துதிப்பவர் பெறும் அருளாய் உள்ளவனே.

## முத்தப் பருவம்

தாயர் முதலியோர், 'முத்தங்கொடு' எனக் கேட்கும் பருவம்.

67. அயில்-கூர்மை. அருளினம்-கொடுத்தோம். சீதனம், 'ஸ்திரீ தனம்' என்பதன் சிதைவு. படா—சாயாத. விருப்பிஞல் மறந்து முட்கோல் (தாற்றுக் கோல்) எடாமல் வயலில் மேவிஞர் என்க. வெல்ல—வெல்லுமாறு. செய்—வயல்.

68. ஆமை, அரவு (பாம்பு), மந்தரம், கடல், அமுதம் என்பன உருவக வகையால், புறவடி, பிருட்டம், கொங்கை, கண், வாயூறல் என்பவற்றைக் குறித்தன. தேவர் பெற்ற அமுதம் உண்டாதற்குக் காரணமாய் இருந்த பொருள்கள் அனைத்தும் இங்கு ஒன்றற்கு இரண்டாக நயம்படக் கூறப் பட்டவாறறிக. தஞ்சு—பற்றுக் கோடு. 'ஆக' என்பது வரு விக்க. சதிர் (சதுர்)—திறம்பட்ட சொல். சுகம்—கிளி. கார் ஆம் மை ஓதியின்—கருமை ஆகிய மேகம்போலும் கூந்தலை யுடைய. 'பலர்' என்றது ஆடவரை ஒழித்து நின்றமை யறிக.

69. தெளி—தெளிவு. மரபு—முறை. சரி—ஆகுக. வர—மேலானவனே. நேய—அன்புடையவனே. சரவணேற்பவா-சரவணத்தில் தோன்றியவனே. புகழ்—திருப்புகழ்ப் பாடல்கள். அளி—அன்பு. சீர்—செல்வம்; 'சீரால்' என உருபு விரிக்க. இதனுள், கம்பை நகரில் உள்ளாரது பத்தி மிகுதி கூறியவாறு.

70. வயங்கும், தயங்கும்—விளங்குகின்ற. பாற்கரன்—சூரியன். உயிர்த்தல்—ஈனுதல் ஒருநீ—சிறியையாகிய நீ. சரி - நிகர். முதற்ருெட்டு, 'சரியன்று' என்னும் துணையும், தாமரை மலர் ஆம்பல் மலரை நோக்கிக் கூறியது. 'உரைக்ககிலேன்' என்றது, 'உரைப்பின்' நீயும், அப்பெருமான் இடக்கண் ஆகி இராக்கதிராய் வருகின்ற சந்திரனுக்கு இனியன் என்று ஒட்டுவாய் என்றபடி. மயங்கும்—திகைத்த. குமுதம் — ஆம்பல். மதியுடன் போய்—சந்திரனைத் துணைக்கொண்டு சென்று. 'அறிவுடன் நீங்கி' என்பது நயம். 'முயங்கும் செவ்வாய்'

என்க, 'முத்துயிர்க்கும் தன்மையைப் பெறுவான் வேண்டி உன் முகத்தில் வாயாய் அமைந்த குமுதத்தின் விருப்பம் நிறைவெய்துமாறு அவ்வாயால் முத்தந்தருதல் வேண்டும்' என வேண்டியவாறு. முத்தர்—சீவன் முத்தர். பரவும்-துதிக்கின்ற-

71. போந்து—புகுந்து; 'கன்னி' என்பது இடைக் குறைந்து நின்றது; 'அத்திக் கனி, மாக்கனி' என்புழியும் இவ்வாறே கொள்க. 'காரைக்கால் அம்மைக்கு' என்பது பொருள்; 'காரைப் புதரின் அடியிற் பழுத்த கனி' என்பது நயம். 'புதுமை' என்றது, மூவுலகினும் பெறலரிதாய் இருந்த மையை. நால்வாய்—தொங்குகின்ற வாய்; 'நான்கு வாய்' என்பது நயம். மாந்துக—உண்க. சூர்மா - சூரபதுமனாகிய மாமரம். 'கொடை செய்யப் புகுந்து' கனிக்குக் கனி வேண்டுவ தின்றாகவும் இருமாங்கனி கொடுத்த புண்ணியன், நால்வா யுடையவனுக்கு ஒரு மாங்கனி கொடுத்து, (ஆறு வாயுடைய) தனக்கு ஒரு கனிதானும் கொடாதொழிந்தமையை நினைந்து வெகுண்டு, அவ்வெகுளியால் அக்கனிக்கு முதலாய் உள்ள மாமரத்தையே அழித்தான் முருகன்' எனப் புனைந்து கூறிய வாறு இது தற்குறிப்பேற்ற வணி.

காந்து-(அம்மாமரத்தை) வெகுண்ட. குலிசப்பாணி - இந்திரன். 'காந்து குலிசப்பாணி மகிழ்ந்து' என மேலே கூட்டுக, தன — தன்னுடையதாகிய. அத்திக் கன்னி—'தெய்வயானை' என்னும் பெண்; 'அத்திப் பழம்' என்பது நயம். மிசைந்து-இன்பம் நுகர்ந்து; 'உண்டு' என்பது நயம், மாக் கன்னி—கருமை நிறமுடைய பெண்; வள்ளியம்மை; 'பெரிய பழம்' என்பது நயம். மோந்து — முத்தமிட்டு; சுவைத்து — (இதழமுது) உண்டு; சுவை பார்த்து என்பது நயம். தனது வச்சிராயுதத்தாலும், அழிக்க வொண்ணாது தனக்கு இடர் விளைத்து நின்ற மாமரத்தை அழித்தமை பற்றி மகிழ்ச்சியுற்ற இந்திரன், தனது கற்பகத்தரு வேண்டியவற்றை வேண்டியவாறே கொடுக்க வல்லதாகவும், முருகன் விரும்பிய மாங்கனியை அதன்பாற் பெற்றுக் கொடுக்க வறியாது, அத

னிடத்துத் தானே கனிந்த அத்திப்பழம் ஒன்றைக் கைம்மாருகக் கொடுத்தான்' எனவும், அவ்வாருயினும், இந்திரனது அன்பிற்கு இயைந்து அவ்வத்திப் பழத்தை முருகன் மருது ஏற்று உண்டான்' எனவும், உண்ட பின்னும் அதனுல் பழத்தின் வேட்கை தணியாமையின், களவாக வேடரது புனத்திற் சென்று, அங்குப் பெரிதாய் இருந்த பழத்தைக் களவு செய்து, அதனை மோந்தும், சுவை பார்த்தும் உண்டு வேட்கை தணியப் பெற்ருன் எனவும் நயம்படக் கூறியவாறு. சிவபிரான் காரைக்காலம்மையார்க்கு இருமாங்கனி கொடுத்த வரலாற்றினைப் பெரிய புராணத்துட் காண்க. விநாயகருக்கு மாங்கனி கொடுத்த வரலாறு மேலிடங்களிற் சொல்லப்பட்டது.

72. அரும்புதல் - தோன்றுதல். 'இருதலன்' என்றது, 'தென்திரு முல்லைவாயில், வடதிரு முல்லைவாயில்' என்னும் தலங்களை. குல்லை-துளசி. அமரும்-விரும்புகின்ற. கூட-கலவி செய்யுமாறு. நறை-தேன். நறை அரும்பும் வில்-மலர்க்கணை தொடுக்கப்பட்டுள்ள வில். 'வில்லைக் கொள் வேள்' என இயையும். வேள் — மன்மதன். 'வேளாகிய மைத்துனன்' என்க. எயினர்-வேடர். கொடி-வள்ளியம்மை. குமுதம்-வாய்; உருவகம். 'கொடியாகிய ஆம்பல்' என்பது நயம். 'வள்ளியம்மையது முல்லையரும்புபோலும் பற்கள் தோற்றியவழி, அவளது வாயினைச் சிவபிரானும் உமையம்மையும் முல்லைவாயில் என்னுந் தலங்களாகவும், மாயோன் முல்லை நிலமாகவும், மன்மதன் முல்லையம்பாகவும் கருதி மகிழ்வர் என்றபடி.

73. ஈனம்-இழிவு. பழுத்த-முதிர்ந்த. ஐம்பாசம்: ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம். திடரா-திடர் ஆகாத (தூராத; கடல் என்க.) இச்சை-ஆசை. ஊனம்-குறை. உரு-பிறப்பு. ஒரொன்பான் — நவந்தருபேதம்; அவற்றை மேலே 176-ம்பக்கத்திற் காண்க. அவற்றுள் முதல் நான்கும் அருவம்; இறுதி நான்கும் உருவம்; இடை நின்றது ஒன்றும் அருவுருவம். நான் நீ என்னுது-வேறு நின்று எதிரிட்டுக் காணுது. உணர்ந்து வந்த-(ஒன்ருய் நின்று) உணர்ந்து பழகிய.

நயம்—இன்பம். மோனம் பழுத்த-மௌனம் நீங்கிய; பேசிய; பிரணவத்தின் பொருளைச் சொல்லிய.

74. அமலம்-தூய்மை. கமலத்து அணங்கு - திருமகள். மூரல்-சிரிப்பு. கொம்மை - திரட்சி, 'முலையான் அணை' என இயையும். ஞெமுங்க-அழுந்த. மாயோன் கண்ணனாகிய பொழுது கள்வனுமாயினமையின், 'கள்ளத்தன முடைய' என்றலும் பொருந்துமா றறிக. கோகனகை-தாமரை மலரில் இருப்பவள்,-சிறந்த பொன்னையுடையவள். 'குறப்பெண் அளிப்பேன் எனக் கூறினமையின் நீ களவுத் தொழிலையுடைய குறவனைக் கைப்பிடித்த குறத்தியே போலும்; உன்னைப் பெருஞ் செல்வ முடையவள் என்று நினைத்தன்றோ, என்ன கைம்மாறு தருவாய் என வினவினேன்? எனக் கூறி நகைத்தவாறு. சிரிப்பைக் காண விரும்பிய திருமகளுக்கு, அச் சிரிப்பிற்கு அவளையே முன்னிலையாகக் கொண்டு அவள் விருப்பத்தை முடித்தான் முருகப் பெருமான் என்க. 'நகை முத்தம்' என்பதனை, 'நகைத்த முத்தமே' என விளியாக்குக.

75. அண்டர் அண்டம் - தேவருலகம். அவிர்-ஒளிவிடுகின்ற. அங்கதங்கள் -பாம்புகள். அவை தங்கும் இடம், பாதலம், எண் திக் அந்தம்-எட்டுத் திசைகளின் எல்லை. புரந்த-காத்த. உரம்-மார்பு. கமழ-தோன்றிப் பெருக. 'என்சொல் கருது' என்றதற்கு மேல் 35-ம் செய்யுளில், 'என் உள்ளமும் விரும்பிய மர்தாய்' என்றதற்கு உரைத்தவாறே யுரைக்க. முண்டகன்-தாமரை மலரில் இருப்பவன்; பிரமன். கெஞ்சுதல்- குறையிரத்தல்; இது தேய வழக்கு. முந்து கம்பை-நகரங்களில் முன்னிற்கின்ற கம்பை. உகந்த-விரும்பிய. இதனுள் ஈற்றெதுகை வந்தமை காண்க.

76. மண்டும் அஞ்சு-மிகுந்த ஐந்தீ (பஞ்சாக்கினி). மதி-(ஆறுதாரங்கட்குமேல் உள்ள) சந்திரமண்டலம். துய்த்து-உண்டு. 'ஒன்றது' என்புழி, 'அது' பகுதிப் பொருள் விகுதி. நயன அயில்-கண்ணாகிய வேல். 'கொங்கை நயன அயில்' என்றது உவமத்தொகை. நத்துதல்-விரும்புதல். நம்பும்-விரும்புகின்ற. நலன்-இன்பம். நித்தன்-அழியாதவன்.

# வருகைப் பருவம்

குழந்தையைத் தாய்மாரும் பிறரும் தம்மிடம் வருமாறு அழைக்கும் பருவம். இது, 'வாரானைப் பருவம்' எனவும் படும்.

77. நூபுரம்-சிலம்பு. கிண்கிணி-சதங்கை. அரி-(அவற்றின்) உள்ளிடுபரல். அடிக்கமலம், உருவகம். வண்டின்-வண்டுபோல. செம்பொன் மலை அருவியின்-பொன்மலைமேல் ஒழுகுகின்ற அருவிபோல. சன்ன வீரம்-ஒருவகைக் கழுத்தணி புயகிரிஉதித்த-தோள்களாகிய மலைகளின்மேல் புறப்பட்ட. விளக்க-ஒத்திருக்க. வதனச் செவ்வாம்பல்-முகத்தின்கண் உள்ள செவ்வாம்பல் மலர்; வாய். குழவியின்-குழந்தைபோல. பால் மூல்லை-பால்போலும் முல்லையரும்பு; பல். பட்டம்-நெற்றிப் பட்டம். சூழியம்-உச்சிக்கொண்டை. 'ஒளிர வருக' என இயையும். கந்தம்-மணம்.

78. விகடம்-விசேடம் பொருந்திய (மதம் ஒழுகுகின்ற) கபோலம்; 'குறும்பு செய்தலையுடைய' என்பது நயம். 'நனியாசை கொண்டு' என்பதனை மேல், 'கணபதி' என்பதனோடு கூட்டுக. 'முன் செல்வன்' என இயையும். வதனம்-முகம். நயனம்-கண். முனியாது-வெகுளாமல். முகம் முதலாகக் கூறிய நான்கினும் முருகனே பெரியவனுதலறிக. 'ஆறுமுக' என்றது, 'அவற்றில் நீயே பெரியவன் என்பதை நான் அறிவேன், என்றபடி, 'மொழிவது என்' என்றது, பெரியவன் சிறியவன் என்றல் வயது பற்றியே என்பது பலரும் அறிந்ததன்றோ' என்றதாம். முக்கியம்-சிறப்பாக. உன்னை வயதிற் பெரியவன் என்றலினும் வயிற்றிற் பெரியவன் என்றலே இங்குப் பெரிதும் பொருத்தமுடையது' என நகையாடி, 'வயதிற் பெரியவனைப் பெரியவன் என்னுது, அறிவிற் பெரியவனைப் பெரியவன் என்றலே உயர்ந்தோர் வழக்கு' என்றற்கு, 'உன் தந்தைக்கும் உபதேசம் மொழிராய குரு யார்' என வினவினன் முருகப் பெருமான் என்க. ராயகுரு-தலைமை வாய்ந்த ஆசிரியன். அதுக்கி கடித்து. மூவர்; தாய், தந்தை, தமையன்; அவர்கள் மகிழ்தற்

குக் காரணம், குழந்தை முருகனது அறிவையும் கிளர்ச்சியையும் கண்டமை. 'எனு அதுக்கி நகைசெய்' என இயையும்.

79. அலை மாது-கங்கை. 'நோக்குபு விருக்கும்' எனக் குற்றியலுகரம் உடம்படுமெய் பெற்றது செய்யுள் முடிபு. ஐயன்-சிவபிரான். இருவருள் ஒருவரிடத்தும் செல்லாது, சிவபிரானிடஞ் சென்றது, அவருள் ஒருவர்க்கு மகிழ்ச்சியும், மற்றொருவர்க்கு வாட்டமும் உண்டாகாமைப்பொருட்டு. ஏந்தல்-பெருமையுடையவன்; இப்பெயர் அண்மை விளி ஏற்றது. 'சொல்வதென்' என்றது, 'நீவிர் அறிந்ததுதானே' என்றவாறு. சங்கை-ஐயம். 'அறன் மாதா' என்றதை, 'அறன்-தருமம்; அதனை வளர்ப்பவள் யான் ஆகலின், என்மீது ஆசை என்றே முருகன் கூறினன்' என உமையும், 'அறல்-நீர்; நீர் வடிவாய் உள்ளவள் யான் ஆகலின், என்மீது ஆசை என்றே முருகன் கூறினன்' எனக் கங்கையும் கூறிக் கலாய்த்தனர் என்க. இவ்வாறு, இருவர்க்கும் பொருந்தக் கூறும் சொற்றிறம் உடையவனாய் இருந்தான் முருகன் என்றபடி. தழைதல்-பெருகுதல். களி கூர்ந்தமைக்குக் காரணம், தனது ஆசையைப் பெறுதலில், தன் தாய்மார்க்கு உள்ள வேட்கையைக் கண்டமை. முருகனே இன்னார்மீதுதான் தனக்கு ஆசை என்பதாக வரைந்து கூறாது பொதுப்படக் கூறினமையின், யாம் வரைந்து கூறல் குற்றமாம் என்னுங் கருத்தால், 'கங்கை மகன் அம்பிகை மகன் பரமன் மகன்' என அழைத்தனர் என்க. 'மகன்' என்பனவும், 'நாயகன்' என்பதும் விளிகள்.

80. அலசல்-சோம்பல். 'அடி' என்றதற்கு 'உன் பாதத்தை' என உரைக்க. 'பெரு வயிற்றன் (விநாயகர்) மீதுள்ள அன்பினால், என்னை அகற்றி, அவனுக்கு மாங்கனி யளித்தாய்' என்றவாறு. குலசயிலம், திசைகளைத் தாங்கி நிற்கும் சிறந்த மலைகள்; அவை எட்டுள வென்க. ஊர்ந்து-கடந்து சென்று. கண்ட நாவல்-பரத கண்டத்திற்குச் சிறந்த ஒன்றாய் நிற்கும் நாவல் மரம்; இது மேரு மலைச்சாரலில் நிற்பது; இது பற்றியே சம்புத் தீவு' என்னும் பெயர் உளதாயிற்று. 'நினக்கு' என்பது, எனும் (என்று கூறும்) என்பதனோடு முடிந்தது.

காஞ்சிரங்காய்-எட்டிக்காய். 'காஞ்சிரங் காயாய்க் குமட்டும்' என்க. சிவபிரான், இவ்வாறு கூறியது, தன் மகன் மெய் வருத்த முறாமல் தடுத்தற் பொருட்டு; அதனைச் சபித்தலாகக் கருதி முருகப்பெருமான் வெகுண்டான் என்க. 'ஆசை மகன்' என்புழி ஐயுருபு தொகுத்தலாயிற்று. 'அன்பு செய்தற் பாலனாகிய மகன்மேல் அது செய்யாமை மேலும், சில சமயம் அவனை இகழ்தலுஞ் செய்கின்றாய்' என்றவாறு. தின் உயிர்-பிறரை வருத்துகின்ற உயிர். களம்-கழுத்து, நன்று தீது அறியாது, பழம் வேண்டி முரணி நிற்கும் பிள்ளைமைப் பருவத்தை அணிந்துரைத்தலே கருத்தாகலின், ஈண்டு முருகனது சொற்செயல்களாகக் கூறியவை அறத்திற் றிராமை யறிக. கலச மாங்கனி யமுது-குடம்போலும் பெரிய மாங்கனியாகிய உணவு; கலசம் ஆம் கனியமுது - குடத்திற் (தனத்திற்) பொருந்தியுள்ள இனிமை மிக்க பால்.

81. கடுக்கை - கொன்றை. 'தமையனுர்க்குத் தடம்புய பராக்கிரமம் அளித்திடும், என்றது, 'தம்பியுடையான் படைக்கஞ்சான்' எனவும், 'உடன் பிறப்புத் தோள்வலியாம்' எனவும் கூறப்படும் முறைமை பற்றி. ஆழி - சக்கரம். திருமாலது சக்கரம், போரில் தாரகாசுரன் கழுத்தணியாய்த் தங்கிக் கிடக்க, முருகப்பெருமான் அவனை யழித்து, திருமால் அதனை மீளப் பெறச் செய்தமையையும் பிரமனுக்குச் சிருட்டித் தொழில் கற்பித்தமையையும் கந்த புராணத்துட் காண்க. மகவான் - இந்திரன். இந்திரன் முதலாகச் சொல்லப்பட்ட மூவரும், முருகன் அசுரரை யழித்தமையால் அவ்வப் பயன்களைப் பெற்றனர் என்க. அமரர் யானை மின் - தெய்வ யானையாகிய பெண். 'கண்ணருளோடு கூடிய திருவடி' என்க.

82. கஞ்சத் தவிசின் திரு - தாமரை மலராகிய ஆசனத்தில் இருக்கும் திருமகள். கனம் - பாரம்; மேகமுமாம். கழை-கரும்பு. நிகமம்-வேதம். நீட்டும் - வளர்க்கின்ற, தஞ்சத்து - பற்றுக்கோடாய் நின்று. 'தஞ்சத்தருள் சண்முகன்' என்னும் கந்தரனுபூதித் தொடர் இங்கு நினைக்கத் தக்கது. மஞ்சு-மேகம்

'மதுரைச் சங்கப் புலவர் சிகாமணி' என்றது, உருத்திர சன்மராய் இருந்த காலத்து, தலைமை வீற்றிருந்து அவர்கள் உரையைக் கேட்டு 'நல்லுரை இது' என்பதை விளக்கி அவர்களது பிணக்கைத் தீர்த்தமை பற்றி. இவ்வரலாற்றைக் களவியலுரை, திருவிளையாடற் புராணம் இவற்றிற் காண்க.

83. தளம்-இதழ். சால்-நிறைந்த. வனசம்-தாமரைமலர். குமுதம் - ஆம்பல். தாளம் - முத்து. தயங்கு - விளங்குகின்ற. நீலம் - குவளை. அளம் - நெய்தல் நிலம், வள்ளை - வள்ளைக் கொடி. அப்பு நிலை-நீர் நிலை. கவுள் - கன்னம். அவிரும் - விளங்குகின்ற. குழல்-கூந்தல், 'உயிரன்னுர்' என்றது, பரத்தையரை. உடன்றுல் என-போர் செய்தாற்போல. திளைக்கும்-மூழ்குகின்ற.

84. முகிள்-முகிழ்; போலி. 'அருகாக' என்பது ஈறு கெட்டது. வெளி நிறுவி-புறத்து நிறுத்தி.

85. அன்பின் - அன்பினையுடைய. அம் தண்-அழகிய குளிர்ந்த. சொருபம் - மெய்ப்பொருள். நறவம்-தேன். கலவம் (கலாபம்) - தோகை. நடனம்-அருள் நாடகம்.

86. அதுலன்-நிகரில்லாதவன். அபயன்-பயத்தை (அச்சத்தைப்) போக்குபவன். அண்டர் அதிபன்-தேவர்க்குத் தலைவன். சதுரன்-வல்லமையுடையவன். தருணன் - இளையவன். சம்பு குரவன் - சிவனுக்குக் குரு. சரசன்-இனிமை பொருந்தியவன். சுகுணன்-நற்பண்புடையவன். சண்டம் - வேகம். புதியன்-எல்லாவற்றிற்கும் பின்னுள்ளவன் பழையன்-எல்லாவற்றிற்கும் முன்னுள்ளவன். புந்தி (புத்தி)—அறிவு. 'கதியை அருள் முருகன்' என இயைக்க. நல் நகர சிகர கம்பை-நல்ல நகரங்களுள் தலையாய கம்பை.

## அம்புலிப் பருவம்

தாய்மாரும், பிறரும் குழந்தையுடன் விளையாட வருமாறு சந்திரனை அழைக்கும் பருவம். அம்புலி-சந்திரன். அவ்வாறு

அழைக்குங்கால் நால்வகை உபாயங்களாலும் அழைத்த வாருகச் செய்யுள் செய்யப்படும். நால்வகை யுபாயங்களாவன: சாமம், பேதம், தானம், தண்டம். முறையே இன்சொற் சொல்வி அளவளாவுதலாயும், கூடினரைப் பிரித்தலாயும், விரும்புவன கொடுத்தலாயும், படையொடு சென்று பொருது அழித்தலாயும் அரசரிடை நிகழ்வனவாகிய இவை, ஈண்டுப் பாட்டுடைத் தலைவர்க்கும் சந்திரனுக்கும் சமம் உண்மை காட்டுதலாயும், சந்திரன் பாட்டுடைத் தலைவரோடு ஒத்தவனாகாது இழிந்தவனாதலைக் காட்டுதலாயும், பாட்டுடைத் தலைவரோடு நட்பாய் விளையாடவரின் சந்திரன் அடையும் நன்மைகளை எடுத்துக் காட்டுதலாயும், வாராதொழியின் அவன் அடையுந் தீங்குகளை எடுத்துக் காட்டுதலாயும் வரும். இதனுள் முதல் இரண்டு செய்யுட்களில் சாமம் சொல்லப்படுகின்றது. (சாமம்-சமமாயினாரிடத்து நிகழ்வது.)

87. கடுக்கை-கொன்றை-விழியின்-கண்போல, கண்ணாய். தீக் கடவுள்-அக்கினி தேவன். ஓர்ந்து - நினைத்து. கலைகள்-பகுதிகள். நிழல் - அருள், ஒளி. சீர்மை-புகழ். மானார்கள்—பெண்கள்.

முருகன், 'சிவபிரானது கண்போல் வளர்பவன்; அக்கினி தேவனுக்கு மகன் எனப்படுபவன்; மந்திரப் பகுதிகளால் கொள்ளும் வடிவ முடையவன்; அசுரரை யழித்துத் தேவர்களை அமுதுண்டு அவர் உலகத்தில் வாழச் செய்தோன்; எப்பொழுதும் குன்றுதோ றாடுபவன்; உயிர்களெல்லாம் உய்யும்படி திருவருள் செய்பவன்; பால் கொடுத்து வளர்த்தோராதல் பற்றிக் கார்த்திகைப் பெண்களும், தனது நாளில் அவதரித்தமை பற்றி விசாகமும் அன்பு செய்ய வருபவன்' எனவும்,

சந்திரன், சிவபிரானது கண்ணாய் வளர்பவன்; அக்கினி யிடத்துப் பிறந்தவன்; பதினாறு பகுதிகள் சேர்ந்த வடிவ முடையவன்; தனது கலைகளாகிய அமுதத்தைத் தேவர்கள் உண்ணக் கொடுப்பவன்; மாலையிலும் காலையிலும் முறையே அத்தகிரியிலும், உதயகிரியிலும் இருப்பவன்;

உயிர்கள் மகிழும்படி நிலவை வீசுபவன்; கார்த்திகை, விசாகம் என்னும் நாண்மீன்களாகிய பெண்கள் அன்பு செய்ய வருபவன்' எனவும் கூறி, முருகனுக்கும் சந்திரனுக்கும் சமம் உண்மை காட்டியவாறு.

முருகப் பெருமான் சிவபிரானது கண்களிலிருந்து தீப் பொறியாய்த் தோன்றிய காலத்து, அக்கினி தேவன் தலைமேற் சுமந்து சென்று கங்கையில் விடுத்தமை பற்றி, அப் பெருமான் அக்கினி தேவனுக்கு மகன் என்னும் முறை கூறப்படுவான் என்க. சந்திரன் அக்கினியிடத்துப் பிறந்தான் என்பது, இதன் இறுதிச் செய்யுளிலும் கூறப்படுதல் காண்க. 'தேய்பிறை நாட்களில் சந்திரனது அமுத கலைகளைத் தேவர்கள் உண்கின்றனர்' என்பது ஒருசார்ப் புராணக் கொள்கை. 'ஆனாலும்' என்னும் உம்மை, சிறப்பு. 'என் செல்வம்' என்றது, 'எத்துணைப் பெருஞ்செல்வம்' என வியந்தவாறு. அம்புய தடம்-தாமரைத் தடாகம்.

88. (முருகன்) கன கமலை நித்தன் மருகோன்-பெருமை பொருந்திய திருமகளையுடைய அழிவில்லாதவன் (அச்சுதன்; திருமாலுக்கு) மருகன். (சந்திரன்) கனக மலை நித்தல் மருகோன்-பொன்மலையாகிய மேரு மலையை நாள் தோறும் பொருந்துகின்ற (வலம் வருகின்ற) தலைவன். (முருகன்) கய வல்லிகள் மன்றலோன்-தெய்வயானை வள்ளியருக்கு மணவாளன். (கயவல்லிகள், உம்மைத்தொகை. 'கள்' ஈறு உயர் திணைப் பன்மையில் வருதல் பிற்கால வழக்கு.) (சந்திரன்) கய அல்லிகள் மன்றலோன்-ஆழ்ந்த நீர் நிலைகளிலுள்ள ஆம்பல்களுக்கு மணவாளன். (முருகன்) பல் நக மிசை உற இருந்தோன்-பல மலைகளின்மேல் மிகவும் பொருந்தியிருந்தவன். (சந்திரன்) பன்னகம் மிசையுற விருந்தோன்-'இராகு' என்னும் பாம்பு விழுங்குதலால் புதியனாய்த் தோன்றுபவன். (முருகன்) பருவத்து வந்த மெய்யோன்-தேவர்களுக்குத் தக்க சமயத்தில் தோன்றி வந்த மெய்ப்பொருளாய் உள்ளவன். (சந்திரன்) பருவத்து உவந்த மெய்யோன்-பூரணையில் மகிழ்ச்சியுறுதற்குக் காரணமான (நிறைந்த) வடிவத்தை யுடையவன். (முருகன்)

வன கலாதாரி சேயோன்-மந்திர வடிவாய் உள்ள முப்பத்தெட்டுக் கலைகளைத் தரிப்பவனாகிய சிவபிரானுக்கு மகன். (வன்னம்-எழுத்து; அஃது ஆகு பெயராய் மந்திரத்தை உணர்த்திற்று.) (சந்திரன்) வன கலாதாரி-அழகிய கலைகளையுடையவன்; சேயோன்-சேய்மைக்கண் (வானத்தில்) உள்ளவன். (முருகன்) வரத அபயக் கரத்தோன்-வரத்தைக் கொடுத்தலைக் குறிப்பதும், பயத்தைப் போக்குதலைக் குறிப்பதும் ஆகிய கைகளையுடையவன். (சந்திரன்) வர தவ பயக் கரத்தோன்-மேலான மிக்க பால்போலும் கிரணங்களை யுடையவன். அனகன்-தூயவன். 'பொருளல்லை' என்புழி, 'ஆயினும்' என்பது வருவித்து, 'பொருளால் ஒப்பல்லையாயினும், சொல்லால் ஒத்தியாகலின் ஆட வா' என உரைக்க.

89. இச் செய்யுளிலும், வருஞ் செய்யுளிலும் பேதங் கூறப்படுகின்றது. பரிதி-சூரியன். தேய்பிறை நாட்களில் சந்திரனது கலைகளில் ஒவ்வொன்றை ஒவ்வொரு நாளில் சூரியன் கவர்ந்து கொள்கின்றான்' என்பது, ஒரு சார்ப் புராணக் கொள்கை. 'ஒன்று, இரண்டு' என எண்ணிக் காட்டியது, அதற்குமேல் இல்லை என்பதனை வலியுறுத்தற்கு; அவை உதயகிரியும் அத்தகிரியும் என்க. தம்பம் - தறி. அசைந்தாய் - இளைத்தாய், நிலை பெயர்ந்தாய். தேவர் திருப்பாற் கடலைக் கடைந்த ஞான்று, சந்திரனையே தறியாகக் கொண்டனர் என்க. 'தாய்' என்றது, கடலினை. முழுநிலாக் காலத்துக்கடல் பொங்கிப் பெரு முழக்கம் செய்தல் இயல்பு. 'ஞானக்கண் மணி' என்றது பிரணவத்தின் பொருளை உணர்த்தினமை பற்றி. நவில்வது-எடுத்துச் சொல்ல வேண்டுவது; சொல்லாமே விளங்கிக் கிடப்பது என்றவாறு. 'அருமருந்தன்ன' என்பது, 'அருமந்த ' என மருவிற்று; அருமருந்து - கிடைத்தற்கரிய மருந்து; சாவா மருந்து; அமிழ்தம்.

90. மைம்முகம்—மைபோலும் இருள் மயம். இரா—இராக்காலம், ஆணவமலம். இரவி—சூரியன். 'இரவிவன்' என்புழி, 'இரவி' என்பதன் ஈற்று இகரம் தொகுத்தலாயிற்று. பை—படம். பரி-ஊர்தி (மயில்). பயம்-நீர். வாரி - கடல்.

'வாரிப் பயம்' என மாற்றியுரைக்க 'அவ்வாரி' என்புழி பயம், என்பது எஞ்சி நின்றது. பண்ணவன் - முனிவன்; அகத்தியன். இந்திரன் பொருட்டு, அகத்திய முனிவர் கடல் நீரை உழுந்தளவாக்கி யுண்டமையைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க. நை-வருந்துகின்ற. களங்கன்—மறுவுடையவன். அகளங்கன் — மறுவில்லாதவன். மதி—சந்திரன்; அறிவென்பது நயம். 'சேய்' என்றதற்கு, 'முருகன், குழந்தை' என்னும் இரு பொருளுங் கொள்க- எவ்வழியும்—எவ்வாற்ருனும்.

91, இது முதல் மூன்று செய்யுட்களாலும் தண்டம் கூறுகின்ருர்; இஃது இறுதிக்கண் கூறற்பாலதாயினும், இறுதியில் கருணை புரிதலே முருகற்கு இயல்பென்பது உணர்த்தற்பொருட்டுத் தானத்தை இறுதிக்கண் கூறுவராராய், தண்டத்தைமுன்னர்க் கூறுகின்ருர். திருப்போரூர்ச் சந்நிதி முறை யருளிய சிதம்பர வடிகளும், இறுதிக்கண் தானத்தை மறு முறை கூறி முடித்தல் காண்க.

மதியன்—சந்திரன். சிறு விதி—பிரமன் மகன்; தக்கன். 'அச்சுவினி முதல் இரேவதி ஈருக உள்ள நட்சத்திரங்கள் இருபத்தேழும் தக்கன் மகளிர்' என்பதும், அவர்களை அவன் சந்திரனுக்கு மணம் புரிவிக்க, அவர்களில் கார்த்திகை, உரோகிணி என்பவர்களை மட்டுமே காதலித்து, ஏனையவர்களை வெறுத்தொழுகினமை பற்றிச் சந்திரனை அழிந்தொழியுமாறு தக்கன் சபித்தான்' என்பதும்; 'அதனுல் நாள் தோறும் தேய்ந்து வந்த சந்திரன் சிவபிரானிடம் அடைக்கலமாக அடைந்து, தனது ஒரு கலையை அப்பெருமான் தமது முடியில் அணியப்பெற்று அழியாது நிற்பவனுயினன்' என்பதும் கந்த புராணத்துட் காண்க. பெருவிதி-பிரமன். சுமதி-நல்லறிவு. 'தோன்றல்' என்றதற்கு, 'தலைவன், மகன்' என்னும் இரு பொருளுங் கொள்க. 'சந்திரன், தேவகுருவாகிய வியாழன் மனைவி தாரையைக் கூடிப் புதனைப் பெற்ருன்' என்னும் புராண வரலாறு பற்றிச் சந்திரனை, 'சற்குரு துரோகி' என்றனர். காய் மதில் பகைத்த அரண். எனு—என்று செருக்கு

வதனால். கருமம் கொள்—தீவினையைத் தேடிக்கொள்கின்ற கால் உதை—சிவபிரானது முடியில் ஏறித் தவழுங் காலத்து நிகழ்வது. கறங்கின்—காற்றாடிபோல. ஆய்மதி—ஐய உணர்வு. கெடுதி—கெடுதியைத் தருவதாகும்; 'ஆதலின் விடுதி' என்க. பேய்மதி—மயக்க உணர்வு. சடுதி—விரைவு; இது, 'சடிதி' என்பதன் மரூஉ. இதனுள் 'மதி' என்பது பலவிடத்து வந்தது பின்வருநிலையணி.

92. மயல்—மயக்கம். 'அரிது' என்பதனைப் பண்புப் பெயராகக் கொள்க. சினவுதல்—கோபித்தல். வேடுவர் மடக் கொடி, வள்ளியம்மை; இதனைப் 'பிணங்கிடில்' என்பதனோடு இயைக்க; இடை நின்றன அவ்வம்மை கூற்று. மாமடிகள், சிவபிரானார். கயல் அகல் கண்—மீன் போலும் அகன்ற கண். மாமி, உமையம்மை. கடுப்ப—போல. 'என் மாமடிகளார் கண் மாமி மகிழ நடமாடினர் கடுப்ப' என்றாரேனும், 'என் மாமி மாமடிகளார் நடமாடுதல் கண்டு மகிழ்ந்தமை கடுப்ப' என்பதே கருத்தாகக் கொள்க. 'உனது காட்சி வதனப் பகைஞனே முயலகன்' என்றது, முருகன் வள்ளியம்மையை நோக்கிக் கூறுங் கூற்று. காட்சி—அழகு. வதனப் பகைஞன், சந்திரன். முயலகன்—'முயலகன்' என்னும் அசுரன், முயல் என்னும் மறுவினை அகத்தில் உடையவன். 'முருகன் வள்ளி யம்மையை மகிழ்வித்தற் பொருட்டு என்னை முயலகனாக வைத்து மிதித்து ஆடுவனாயின், யான் என் செய்வேன்' எனச் சந்திரன் அஞ்சுகின்றான் என்று கூறி, நீ வாராமை பற்றி முருகனுக்கு உண்டாகும் சினத்தை ஒருவாறு தணித்து உனக் குத் தீங்கு உண்டாகாதவாறு தப்புவித்தனம்" என்றார் என்க. மோசம்—அழிவு. அயல் அகல் பழி படுதி—பல இடத்தும் மிக வும் பழிக்கப் படுபவனே.

93. 'சிவன், அரி, அயன், இந்திரன், தேவர், முனிவோர் கள், செகதலத்தோர், இவன்' என்பன ஆகுபெயராய் அவ் வவரது பெருமைகள்மேல் நின்றன. 'நீ' என்பதும் அவ்வாறு அவனது சிறுமைகள் மேல் நின்றது. அவ்விடத்து வந்த 'என்ன' என்பனவெல்லாம் 'எத்தன்மையன' என்னும்

பொருளவாய குறிப்பு முற்றுக்கள். 'என்ன மாதவம், என்ன இறுமாப்பு' என்புழி நின்ற 'என்ன' என்பன குறிப்புப் பெயரெச்சங்கள். இறுதியில் நின்ற மூன்றும், 'என்று சொல்லும்படி' என்னும் பொருளவாய வினையெச்சங்கள். ஏனையவை விரித்தல் விகாரம் பெற்று வந்த 'என' என்னும் இடைச்சொற்கள். சந்ததம்-எப்போதும். உவன்-பின் நிற்பவன். 'நின்ற' என்பது 'முதல் வீரன்' என்பதனோடு இயையும். முதல் வீரன், வீரவாகு. சகட்டினின்-சக்கரம்போல. உலகத் தொகுதி 'அவன், அவள், அது' என்னும் மூன்று கூறாய் அடங்குதல் சிவஞானபோதம் முதற் சூத்திரத்தே எடுத்தோதப்பட்டது. இதனுள், 'என்ன' என்பது பலவிடத்தும் **சொற்பின்வருநிலையாய்** வந்தமை காண்க.

**94.** இது முதல் மூன்று செய்யுட்களால் தானம் கூறப்படுகின்றது. கமல மட மங்கை-திருமகள்; அவளுக்கு விருப்பம் தருவது தாமரை மலராதலின், அவள் அதுபோலும் முகத் தழகைக் காண்பாளாயினள் என்க. முகில் வண்ணன்-திருமால்; இவன் கண்ணழகிற் சிறந்தவனாதல் பற்றி, 'தாமரைக் கண்ணன்' எனப் பெயர் பெற்றிருத்தல் அறிக. கலைவாணி சொல்லுக்குத் தலைவியாதல் நன்கறியப்பட்டது. சிவபிரான் சொற்பொருள் வடிவாய் உள்ளவன்; அன்றியும், மக்களது சொற்களின் பொருளாழத்தால், அவர்களது அறிவுடைமையை அறிந்து மகிழ்தல் தந்தையர்க்கு இயல்பாதலுணர்க. விதி-பிரமன்; இவன் தன்னைத் தலையிற் குட்டித் தனது சிருட்டித் தொழிலைச் செய்த கையழகைக் கண்டான் என்க. தோளழகு, தன் மகள் தெய்வயானைக்கு இன்பந் தருவதாதல் கருதி இந்திராணி கண்டு மகிழ்ந்தாள். தன் பகைவராகிய அசுரரை அழித்தது வேலே யாகலின், அதன் அழகு இந்திரன் கண்ணுக்கு விருந்தாயிற்று. நிமல மனம்-அவா அற்ற மனம். அடியவர்க்கு எப்பொருளுமாவது திருவடியேயாதலறிக. கவுரி-உமையம்மை. மகன் செல்லும்பொழுது பின்னின்று அவனது பின்னழகைக் கண்டு உண்மகிழ்தல் தாயர்க்கு இயல்பு. ஆதித்தன்-சூரியன்; முருகனது வடிவம் ஞாயிறுபோல ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளியதாய் இருத்தலின், அஃது அவனால் வியக்

கப்படுவதாயிற்று. நகை-சிரிப்பு; அது நிலவுபோலுமாதலின், அதனைக் கண்டு சந்திரன் தான் கண் பெற்ற பயனைப் பெறலாம் என்றனர்.

95. சொற்காலம் இருமூன்றும்—வழிபாட்டிற்கு உரியன வாக நூல்கள் சொல்லும் காலங்கள் ஆறிலும்; அவை: வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, இடையாமம் என்பன. அவை முறையே உஷத்காலம், காலசந்தி, உச்சி காலம், சாயரட்சை, பிரதோஷகாலம், அர்த்த சாமம் என வடமொழியிற் கூறப்படும். 'அன்பர்கள்' என்றது, 'துன்னுற' என்புழி எஞ்சி நின்ற 'வந்து' என்பதனோடு முடியும். மா பாபம்-மகா பாதகம்; குருத்துரோகம். சாபம், தக்கன் இட்டது. மோயாத (மோசாத)-தீர்க்கப்படாத. கயரோகம் (க்ஷய ரோகம்), குருவின் சாபத்தால் வந்தது. கறை-மறு. கோள்-இராகு. மெய் - உடம்பு. முதுகூன் - பழைமையாய் (இயற்கை யாய்) உள்ள கூன்; இது பிறை வடிவிற் காணப்படுவது. தனயன்-மகன். 'அஞ்சுதலை', 'ஆறுதலை' என்பன, 'நீ தலை மேல் இருக்க விரும்புபவனாதலால், இவன் தந்தைக்கு உள்ள தலையைவிட ஒருதலை இவனுக்கு ஏற்றமாய் உள்ளது' எனவும், இவன் தந்தை பாம்பை யணிந்தவன் ஆதலால், அவனிடம் இருத்தலால் உனக்கு அச்சம் உண்டாகும்; இவன் மயில் ஊர்தியை யுடையவன் ஆதலால், இவனிடம் நீ அச்சமின்றி யிருக்கலாம்' எனவும் இருபொருள் தந்து, சிலேடையாய் நிற்றல் உணர்க. அல் கால மதி - இராக்காலத்தை ஆட்சிக்காலமாக உடைய சந்திரனே.

96. 'முகிலாண்ட' என்புழி, 'ஆண்ட' என்பது உவம உருபு. மாதுலன்—மாமன்; திருமால். முளரி மான்—தாமரை மலரில் இருப்பவள்; திருமகள். மொய் அழல்—நெருங்கிய நெருப்பு; என்றது, அதன் தலைவனாகிய தேவனை. அக்கினி தேவன் முருகனுக்குத் தந்தை எனப்படுதல் இதன் முதற் செய்யுட் குறிப்பிற் சொல்லப்பட்டது. அன்பன்—அடியவன். முனித்தகை—முனியாதற் றகுதியை யுடையவன்- 'விழிக்கன்' என்புழி நின்ற கண்ணுருபை இன்னுருபாகத் திரித்து, 'இதயம்,

கடல், முகம்' என்பவற்றோடுங் கூட்டுக. சந்திரன் ஒவ்வொரு கால வேறுபாட்டில், திருமால் இருதயத்திலும், பாற்கடலிலும், அக்கினி தேவன் முகத்திலும், அத்திரி முனிவரது கண்ணிலும் பிறந்தமையை, "எங்கள் மாதவன் இதயமா மலர் வரும் உதயத்—திங்கள்," "அம்பு ராசியின் ஆரமு துடன்அவ தரித்தோன்", "அத்திரிப் பெயர் அந்தணன் அம்பகந் தனிலும்—சித்திரக்கனல் முகத்திலும் பிறந்தொளி சிறந்தோன்" என வில்லிபுத்தூராரும் தமது பாரதத்துட் கூறினர். சந்திரன் பிறந்த இடங்கள் எல்லாம் முருகனுக்கு உறவாயுள்ள இடங்களே என்றபடி. நிகில அண்ட பிண்டம்—எல்லா உலகங்களும் உடம்புகளும். 'உறவாகிய இடங்களில் பிறந்தது பற்றியோ பிதாவின் நேத்திரத்தில் அமர்ந்தது பற்றியோ எம்முறையிலாயினும், ஆகுக; நின்னை இவன் அன்பினுல் அழைக்கின்ருன்' என்பதாம். புகில் — அடைந்தால், ஆண்டலைத் துவசம்—கோழிக்கொடி. புலன்—உள்ளது; இதனை 'உளவு' என்பர். அறி—அறிவாயாக. கலா நிதி—கலைகளின் இருப்பிடம். 'கல்விச் செல்வமாய் இருப்பவன்' என்பது நயம். புண்ணியம், பயன் கருதிச் செய்வது. தவம், பயன் கருதாது செய்வது. அகில அண்டம்—எல்லா உலகங்களும். பிரம அண்டம் — பிரமன் படைத்த உலகம்: மேல், 'எல்லாம்' என்றது, 'ஏனைய எல்லாம்' என்றபடி.

## சிற்றிற் பருவம்

இதுமுதலாக வரும் மூன்று பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத் தமிழ்க்கே யுரியன. அவற்றுட் சிற்றிற்பருவமாவது, சிறுமியர் இழைக்கும் மணல் வீட்டினை அழிக்கும் பருவம். அவ்விடத்துச் சிறுமியர் 'எம் சிற்றிலைச் சிதையேல்' என அச்சிறுவனை வேண்டிக்கொள்வர். அம்புலிப் பருவத்திற்குப் பின் சிறுபறைப் பருவமும், அதன்பின் சிற்றிற் பருவமும் வருதலே முறை என்பது இலக்கணங்களிலும் இலக்கியங்களிலும் காணப்படினும், அவற்றை ஒருசார் ஆசிரியர் பின்முன்னுக மாறிவரக் கூறுப.

97. பிறங்கும் என்பது வலிந்து நின்றது. பிறங்குதல் - விளங்குதல். சிலை - கல். செம்மணி - மாணிக்கம். கனல் விறகு - எரிகின்ற விறகு. பெட்பின் உயர் - (யாவரும் விரும்பும்) விருப்பத்தால் உயர்ந்த. 'ஆய்' என்பதனை 'ஆக' எனத் திரிக்க. அட்டு - சமைத்து. ஆதிய - முதலிய மற்றைய மணிகள். 'தூரக்கும்' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. சுரிமென் குழல் - வளைந்த மெல்லிய கூந்தல். சுவாமி - தலைவன். சேயே - சிறுவனே. 'முருகனே' என்பது நயம். திரு ஆர் - செல்வம் நிறைந்த; 'திருமகள் வாழ்கின்ற' என்றும் ஆம். வேள் - முருகன்.

சிறுமியர், தங்கள் மணல் வீட்டில் முருகனை விருந்தினனாக எதிர்கொண்டு, வயிரக் கற்களை அடுப்பாகக் கூட்டி, மாணிக்கத்தை விறகாக எரித்து, பொன்னை பாத்திரமாய் அமைய, அதில் பனிநீரை உலையாக வார்த்து, முத்துக்களை அரிசியாக இட்டுச் சோறாக்கி, நீலம் முதலிய மற்றைய மணிகளைக் கறியாக வைத்து, பவழத்தை விளக்காக ஏற்றி, உணவு படைத்துப் போற்றுவதாகக் கூறி, அம்மணல் வீட்டினை அழியாதிருக்குமாறு வேண்டிக்கொண்டனர் என்க.

98. தனிமா-ஒற்றை மாமரம் (ஏகாம்பரம்). 'போதத்து' என்புழி 'அத்து', சாரியை. 'நின் நகர்' என்றது, 'கம்பை' என்றவாறு. உமையம்மை செய்த மணல் இலிங்கத்தைக் கம்பை அழிக்க வந்தமையை, மேல் 39-ம் செய்யுட் குறிப்பிற் காண்க. 'உன்தாய் உன்னை இவ்வாறு ஏவுதற்கு உரியவள்' என்பார், அவள் செய்த செயலைக் கூறினர். தடை இல்—தடுக்கும் பொருள் இல்லாத.

99. அயர—(விளையாடுதலைச்) செய்ய. 'தந்தையது பண்பே மகனிடத்து உளதாகும்' என்னும் முறைக்கேற்பப் புகுந்தாய் என்றவாறு. வண்டல் மனை—விளையாட்டு வீடு. 'நவில்வார் யார்' எனவும், 'என்ன முறையோ' எனவும் கூறியது, 'தந்தை செய்யும் செயலையே செய்யப் புகுந்த உனக்கு உன் மனைவியர் இழைக்கும் சிற்றிலை அழித்தலே முறையாம்'

எனவும், 'நாங்கள் இழைக்கும் சிற்றிலை அழித்தல் முறையாகாது' எனவும் கூறியவாறும். புனைந்து—அழகு செய்து. 'யாம் கூறுவது முற்றிலும் உண்மை' என வலியுறுத்துவார், 'அன்னையின்பால் சென்று ஆய்ந்து அறிதி' என்றனர்.

100. ஆசு—குற்றம். 'நாங்கள் அசுரப் பெண்களாயின் நின்னால் நலியத் தக்கவராவேம்' என்றபடி. அகம்பு அடிமை- அகத் தொண்டு; அணுக்கத் தொண்டு. 'அசுர மின்னார் ஆகாமையே யன்றி, உனக்குத் தொண்டு செய்ய அவாவுகின்றவரும் ஆவேம்' என்றபடி. 'பசுமை' என்பது முதனிலை மாத்திரமாய் நின்று நீட்டல் விகாரம் பெற்றது. பமரம்—வண்டு; இது, 'பிரமரம்' என்னும் ஆரியச் சிதைவு. திருமேனி மாசுபடியும்' என இயையும். படியும் விசும்பும்—மண்ணுலகமும் விண்ணுலகமும். உலகம் முருகனுக்குத் திருமேனி யாதலின், அவன் மேனியில் மாசுபடின், உலகம் மாசுபடும் என்க. உலகம் தனக்குத் திருமேனியாய் நிற்றலை முருகப்பெருமான், தேவர்கட்கும், சூர பதுமனுக்கும் காட்டிய வரலாற்றினால் கந்த புராணத்துட் காண்க. வாட்கண் நீலி—வாள்போலும் கண்ணினையும் நீல நிறத்தையும் உடையவள்;'பொய்க் கண்ணீர் வடித்துப் பழிவாங்கிய பழையனூர் நீலி போன்றவள்' என்பது நயம். 'எப்படியோ' என்றது, 'உனக்கோ, எமக்கோ, இருவர்க்குமோ, யாது விளையுமோ' என்றவாறு. அப்படியாம் படிப்பது என்னே—அத் தன்மையை யாம் பல முறையும் உனக்குச் சொல்லவேண்டுவது இல்லை (நீயே அறிவாய்). தேசு—ஒளி. சிவப்பு அடி—(இயல்பாகவே) சிவந்துள்ள பாதம். இதனுள், 'படி' என்பது, பின்வரு நிலையாய்ப் பலவிடத்து வந்தமை காண்க.

101. அருத்தி—விருப்பம். வண்டல் மணம் அயர—விளையாட்டான கலியாணத்தை நடத்துதற்பொருட்டு. 'அழகா' இரண்டனுள், முன்னையது, 'அழகாகுமோ' என வினா; பின்னையது, 'அழகனே' என விளி. எயின மடவாள்—வேட்டுவப் பெண்; வள்ளி. நாங்கள் செய்யும் கலியாணத்தில் மணமகன் முதலிய ஆடவர் பகுதியிலும் பெண்களையே

இருக்கச் செய்தல் வழக்கம்; ஆயினும், இன்று உன்னை மண மகனுய் இருக்கச் செய்கின்றோம்; அது வள்ளிக்குத் தெரிந்தால் முனிவாள் என்று நீ அஞ்சுதல் வேண்டா; அவளுக்கு இது தெரியாதவாறு பார்த்துக்கொள்கின்றோம்' எனச் சிறுமியர் முருகனுக்கு இன்சொற் சொல்லி வேண்டினர் என்க.

102. அற்பம்—சிறுமை. பற்பல் திசையும் காணுகின்ருய்' என்றது. 'பிடிபடாமல் ஓட்டம் காட்டுகின்ருய்' எனவும், 'பார் வையுள்ளும் நுழைகின்ருய்' என்றது, 'எத்தகைய காவல் இடத்திலும் புகுகின்ருய்' எனவும் கூறியவாறும். மரு—நறு மணம். 'கண்ணீராரு' இரண்டனுள், முன்னது, 'கண் ஈராருக' எனவும், 'கண்ணீர் ஆரு' எனவும் பொருள்படுமாறு காண்க. 'பன்னிரண்டு கண்கள் இருந்தும் கருணை யில்லாதிருக்கின்ருய்' என்றபடி. 'சிற்பர' என்பது ஈறு குறைந்து நின்றது.

103. சுர வாரணி—தெய்வ யானைப் பெயருடையவள். குரவு ஆர அணி—குராமலரை நிரம்பச் சூடிய; 'ஆர' என்பதன் ஈற்று அகரம் தொகுத்த லாயிற்று. மை—மேகம்; கருமையு மாம். ஆரணியம்—காடு. 'இகழ்ந்தது உளதோ' என்றது, இகழ்தல் கூடுவதாகவும், 'அச்சத்தால் வாளா இருக்கின்ற எம்மை நலிதல் முறையாகுமோ' என்றவாறு. பிழைத்தோம் எனின்—பிழைசெய்தோமாயின். திர ஆரணி—நிலைத்த வேதப் பொருளாயுள்ளவள்.

104. காரார் மலக் காடு—கருமை நிறைந்த ஆணவ மலமாகிய காடு; "காராரும் ஆணவக் காடு" என்ருர் தாயுமான அடிகளும். 'அறுத்தவர் அமர' என இயையும். கரணம்—அந்தக் கரணம். கவின்—அழகு; அஃது ஆகுபெயராய் வீட்டைக் குறித்தது. கனன்று—சினந்து. சூர் ஊர்—சூர பதுமனது நகரம். 'பொய்யாய் முடியும்' என்றது. நல்லோர்க்கு நலிவு வாராமற் காப்பவன் என்பது ஒவ்வாததாய் ஒழியும் என்றபடி. புலவர்: தேவரும், சங்கப் புலவரும். உகளும்—துள்ளுகின்ற.

105. 'தரை' என்னும் வடசொல்; ரகர றகர வேற்றுமை யின்றித் 'தறை' என வந்தது. கலை—ஆடை. சிந்து—கடல்.

ஆசமனம்—பருகுதல். விந்தாசலம்—விந்தமலை. 'இந்தா' என்பது, 'இங்கா' என்பதன் மரூஉ மொழி. தாள் அகம்—திருவடியாகிய இல்லம். 'உந்தா உதைக்க' என்பதனை, 'உதையா உந்த' என மாற்றி, 'உதைத்துப் போக்க' என உரைக்க. மறையோன்—பிரமன். மலை மான்—பார்வதி. இச்செய்யுள் முழுதும் ஈற்றெதுகை வந்தமை காண்க.

106. 'அதன்பால் விளங்கும் கந்தமலை' என மாறிக் கூட்டுக. பால்—பக்கம். கந்தமலை—கந்த கிரி; இதுவே முருகப் பெருமான் உறைவிடம். செங்கல்வம்—குவளை; மூன்று போதும் குவளை பூக்கின்ற மலை திருத்தணிகை மலை. மயிலை மலை—மயிலத்தில் உள்ள மலை. வைப்பு—ஊர். 'ஆறு படை வீடுகளை விரும்பினும், அவற்றினும் மேலாகக் குமரகோட்டத்தையே விரும்பினாய்' என்றபடி.

## சிறுபறைப் பருவம்

சிறியதொரு பறையை அடித்து மகிழும் பருவம். இது அம்புலிப் பருவத்திற்கு அடுத்த பருவமாகவும், இதனை அடுத்து வருவது சிற்றிற் பருவமாகும் இலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் காணப்படினும், ஒருசார் ஆசிரியர் அம்புலிப் பருவத்தை அடுத்துச் சிற்றிற் பருவமும், சிற்றிற் பருவத்தை அடுத்துச் சிறுபறைப் பருவமும் கூறுப.

107. பெருநாள்-நற் செயலைச் செய்கின்ற நாள். ஆன்ற-நிறைந்த. மெய்ப் புண்ணியம்—மனத் தூய்மையொடு செய்யும் நற்செயல். பெட்பு-விருப்பம். பேணும்-பாதுகாக்கின்ற. ஐந்தரு நாடு—சுவர்க்கலோகம். சூல்—கருப்பம். தனயர் — மக்கள். பொந்தி—உடல். திரிசங்கு, சூரிய குலத்து அரசருள் ஒருவன்; இவன் வசிட்ட முனிவர் சாபத்தால் நீசத் தன்மை அடைந்து சுவர்க்கம் புகக்கூடாதவனாய், விசுவாமித்திரர் தமது தவ வலிமையால் வேறொரு சுவர்க்கம் உண்டாக்கித் தர அதில் இருப்பவன். கலன் விமானம்—மரக்கலமாகிய தெய்வ விமானம்; உருவகம். 'மக்கள் ஒருநாளேனும் ஒழிதல் இல்லாமல் இடை

யருது. பெரும் புண்ணியங்களைச் செய்யினும், அவர்கள் உடல் நீங்கிய பின்னர் அவர்களை மட்டுமே தனியாகத் தன்பால் வருவித்து அப் புண்ணியத்தின் பயனைத் துய்க்கச் செய்யும் தன்மையுடையது தேவருலகம்; ஐராவதி நாடு அவ்வாறன்றி, புண்ணியம் செய்தவர்களை அவ்வுடலோடே அவர்கள் குடியினருடன் மரக்கலமாகிய விமானத்தில் ஏற்றிக் கொணர்ந்து இன்பம் துய்க்கச் செய்வது என்றபடி. இதனால் ஐராவதிநாடு பொன்னாட்டினும் சிறந்த தென்றவாறும். 'செம்பொன் நகர்' என்றதும், தேவருலகத்தின் தலை நகராகிய 'அமராவதி' என்னும் நகரத்தினை. 'நகருக்கு' என்புழி உள்ள குவ்வுருபு உறழ்ச்சிப் பொருளாகிய இன்னுருபின் பொருட்டாய் நின்றது, 'அந்நாழிக்கு இந்நாழி பெரிது' என்பதுபோல.

108. கா, சோலை 'காவில், தீவில், தடத்தில், செய்யில், மனையில், செவியில்' என ஏழாவதும், 'கனியை, பேச்சை, பயிரை' என இரண்டாவதும் விரிக்க. மலர்தடம், வினைத்தொகை. வளை-சங்கு. செய்—வயல். மா—இலக்குமி; 'எல்லாம்' என்றது எண்மராதல் பற்றி. 'மா' என்பது சொல்லால் அஃறிணையாதல் பற்றி 'எல்லாம்' என்றார். தேஎலாம்—எல்லாத் தெய்வங்களும்.

109. கோடீரம்—சடை. தமருகம்—உடுக்கை, வாணனும் பானுகம்பனும் திருக்கைலையில் உள்ள சிவ கணத்தவர்கள். இருவர்: தும்புரு, நாரதர். பிறங்குதல்—விளங்குதல். இங்குக் கூறிய ஒலிகள் யாவும் சிவபிரானது ஆடலின்போது நிகழ்வன என்க. ஆசாரி—குரு. அவதி—எல்லை. 'மெல்ல' என்பது இடைக் குறைந்து நின்றது. 'வன்மையாக முழக்கினால் உலகம் தாங்காது' என்பதனை விளக்கியவாறு.

110. நோக்காது நோக்குதல் — சிறிதாகப் பார்த்தல். நொடித்தல்—ஒலித்தல். 'பறை' என்பது கருவியாகு பெயராய், அதன் ஓசையைக் குறித்தது. அம்தாள்—அழகிய பாதம். 'வருமே' என்னும் ஏகாரம் வினா. 'ஆசிரியன்' என்பது 'ஆரியன்' என மருவிற்று. 'வருமே' என்னும் வினாவிற்கு 'வரும்' என்பார்,

'ஆரியன் கல்விசீடன் தெரிவன்' என்னும் உண்மையை எடுத்துக் கூறினர். இஃது, 'உற்றது உரைத்தல்' முதலியவற்றுள் ஒன்றற்கு இனமான விடையாகற் பாற்று. தடுமாறி நிற்றல், நுட்பம் உணரமாட்டாமையால் என்க. 'தான்' என்பது அசை நிலை. 'பையப் பைய' என்பது போலியாயிற்று.

111. அத்தன்—தந்தை. மாரன்—(அழகில்) மன்மதன். விசயன் — (விற்போரில்) அருச்சுனன். பேய்ச்சி—'பூதனை' என்னும் அரக்கி. இவள் குழவிப் பருவத்தனாயிருந்த கிருட்டினனைக் கொல்ல வந்து பால்கொடுக்க, அவன் அவளது பாலை உண்பதுபோன்று உதிரத்தைக் குடித்து அவளை மாய்த்தமையைக் கிருட்டின பாகவதத்துட் காண்க.

112. 'அயன்' என்புழி நான்கனுருபும், 'சமம்' என்புழி, 'ஆகிய' என்பதும் விரித்துரைக்க. வளர் வாணிபர், பிறவினை வினைத்தொகை. 'திருத்துபு' என்புழிக் குற்றிய லுகரம் கெடாமை செய்யுள் முடிபு. எண் மாதிரம் – எட்டுத்திசை. 'வாதத்தில்' என்பது குறைந்து நின்றது; வாதம்-காற்று; பிராணவாயு; 'போரில்' என்பது நயம். யோகியர்கள் தம் பத்துவகை நாடிகளிலிருந்து பத்து வகையான ஓசைகளைக் கேட்பர் என்க. 'என' என்பது உவம உருபு; அதனை 'முழக்கே' என்பதனோடு முடிக்க. கோது—குற்றம். குண ஆகரன்—குணங்களுக்கெல்லாம் உறைவிடமாய் உள்ளவன்.

113. பஞ்சர அம் சுகம்—கூட்டில் உள்ள அழகிய கிளி. திருப்புகழ், அருணகிரி நாதரால் அப்பெயரிட்டு அருளிச் செய்யப் பெற்ற பாடல்கள். பமரம்—வண்டு. சரளம்—தேவதாரு. முழவம்—மத்தளம். இதழி—கொன்றை. வெம்சரம்—கொடிய நடை; சரம்; அம்புமாம், குஞ்சர மெல்லி—தெய்வயானையம்மை. அந்தர துந்துபி—வானுலகப் பேரிகை; இது, கருவியாகு பெயராய், அதன் ஓசையைக் குறித்தது. வினவி—கேட்டு. இவரும்—ஏறிய. கடவுட் கோளரி—தேவர்களுட் சிங்கம்.

114. மண் தலம்—நிலவுலகம். நர மங்கையர்—மானுடப் பெண்கள். மானுவிரோ—ஒப்பீரோ. வான் அரமங்கையர்—விண்ணுலகில் உள்ள தேவ மகளிர்; 'குரங்குப் பெண்கள்' என்பது உள்ளுறைப் பொருள். 'ஒப்பலம்' என்பது, வெளிப் படையில், 'தாழ்வுடையேம்' எனவும், குறிப்பில் 'உயர் வுடையேம்' எனவும் பொருள் தரும். நிவந்து—உயர்ந்து. 'ஒப் பிட, குவிய, இட' என்னும் எதிர்காலச் செயவெனெச்சங்கள் யாற்றொழுக்காய்த் தத்தம் முன் வருவனவற்றைக் கொள்ள, 'பொழிய' என்பது, 'முழக்கு' என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயரொடு முடிந்தது. என—என்று மருண்டு.

115. ஊன்—தசை. 'ஊனினது உடல்' என்றதனை, 'எள் ளது குப்பை' என்றாற்போலக் கொள்க. ஒளியின் உள் ஒளி—எல்லா ஒளிகளுக்கும் காரணமாய் நிறைந்துள்ள ஒளி. 'தானே தானாய்' என்புழி இரண்டாவதாய் நின்ற தான் அசை நிலை; 'ஒப்பற்ற பொருளாய்' என்றபடி. சத்து—மெய்ப்பொருள். சிற்சுகம்—அறிவு வடிவாகிய இன்பப் பொருள். 'நின் உரு வாகிய உலகு' என்க.

116. செண்டு ஆர்—பந்து போலப் பொருந்திய. 'ஆர்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. கரமலர் மரு—கையாகிய மலரின்கண் உள்ள வாசனை. நிதி: சங்கநிதி, பதும நிதி; சிந்தாமணி முதலிய மூன்றும் முருகனைத் தியானிக்கின் றன என்க. ஆதரவு—அன்பு. விதி—பிரமன். மஞ்சு—மேகம். அரி—திருமால். கட்கு—கண்ணுக்கு. கரு—கருமணி. திண் தானவர்—வலிய அசுரர். விண்டார்—பகைவர். செற்றம்—கறுவு. 'செஞ்சேம்' என்பது ஒலிக் குறிப்பு 'நடி' என்பது, 'சிவன்' என்பதனோடு இயைந்து வினைத்தொகையாய் நின்றது. கும்பு—கூட்டம்.

## சிறுதேர்ப் பருவம்

சிறிய வண்டியை உருட்டி விளையாடும் பருவம்.

117. 'எண்டிக்கும்' என்பது வலிந்து நின்றது. 'வச்சிரத்

தால் ஆகிய சகடும், அச்சும்' எனவும், 'முறையே நீலத்தாலும் கோமேதகத்தாலும் ஆகிய பாரும், தட்டும்' எனவும் உரைக்க. சகடு—சக்கரம். பார் கால்களைத் தாங்குவது. தட்டு, இருத்தற் குரிய பரப்பு. போதிகை-தூணின் தலையில் பொருத்தப்படுவது. திட்டி-பார்வை. கொடுங்கை, மேற் பரப்பிலிருந்து தூணின் போதிகை மறையக் கீழ் நோக்கிக் கவிந்திருப்பது. மொட்டு-கொடிஞ்சி; இது, தாமரை மலர்வடிவிற் செய்து, தேர்த்தட்டின் முன்புறத்தில் வைக்கப்படுவது. தரளம்-முத்து. கவிகை-குடை. சிட்டிக்கும் (சிருட்டிக்கும்)-படைத்தல் தொழிலைச் செய்கின்ற. குயிற்றி-ஆக்கி. 'உயர்த்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்த லாயிற்று. 'உயர்த்த இரதம்' என்க. மதுரையில் வணிகர் குலத்தில் உருத்திரசன்மனாய்த் தோன்றினமை பற்றி முருகன் 'செட்டிக் குமரன்' எனப்படுவன். வணிகர் பெருஞ்செல்வம் உடையராகலின், வச்சிரம் முதலியவற்றாற் செய்யப்பட்ட உறுப்புக்களையுடைய தேரே அவர்கள் குலமகனது தேராதற்கு உரித்து என்பது நயம். இதனானே இந்நூலைச் செய்வித்தவரது மரபைச் சிறப்பித்து, முருகனை அவர்க்கு உரியனாக்கினமையும் உணர்க.

118. மாரதி மணாளன்-பெருமை பொருந்திய இரதிக்குக் கணவனாகிய மன்மதன். இவனுக்குக் கரும்பு வில்லையும் மலர்க் கணையையும் உமையம்மையே வழங்கினாள் என்பதனை, அவை அவளுடையனவாய் அவளது கைகளில் விளங்குதல் கொண்டும் அறியலாம்; 'பனிமலர்ப்பூங்கணையுங் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமுங்கையில் அணையுந் திரிபுர சுந்தரி'' என்பது அபிராமியந்தாதி. இவ்வாறு விளங்கும் வடிவம் 'இராச ராசேசுவரி வடிவம்' எனப்படும்; கச்சியம்பதிக் காமாட்சி வடிவம் இவ் வடிவமாகவே விளங்குகின்றது. மானுதல்—ஒப் பாதல். சூழ்—(ஒரு நொடியில்) வலம் வந்த. பார்—பூமி. ஆழி—சக்கரம். இளவல்—தம்பி; வீரவாகு. பானு—சூரியன்; சூரி யனைச் சிறைப்படுத்திய பானுகோபனை அழித்தவர் வீரவாகு தேவர் ஆதலின், அவரால் சூரியனது அச்சம் நீங்கிற்று என்க. வாம் பரி—தாவிச் செல்லுகின்ற குதிரை. பகர்—(இவனாற்)

சொல்லப்பட்ட. ஊமை மொழி—பிரணவம். இதற்கு மந்திர வகையாற் பொருள்கொள்வதல்லது, சொல்வகையாற் பொருள் கொள்ளுதல் கூடாமையின், இவ்வாறு கூறப்பட்டது. பர சுருதி—இயைபில்லாத இசை; இது நயம். 'மேலான வேதம்' என்பது உண்மைப் பொருள். நகைத்தமை, மறுத்துச் சொல்லமாட்டாமையின் என்க. ஊர் நகை செய்யும்-ஊராரால் இகழ்ந்து பேசப்படும்; இதுவும் நயம்; 'திரிபுரங்களை நகைப்பினாலேயே எரித்தவன்' என்பது உண்மைப் பொருள்.

சிவபெருமானது தேர் பூமியைத் தட்டாகவும், சந்திர சூரியர்களைச் சக்கரமாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும் பெற்றுடையததாதலின், அவற்றுள் ஒவ்வொன்றும் முருகப் பெருமான் முன்பு தாழ்வுடையதாதலை விளக்கி, 'அத்தேரும் முருகனது தேருக்கு ஈடாகாது' என நிறுவியவாறு. மேற்சொல்லப்பட்ட தேரைச் சிவபெருமான் கொண்டது திரிபுரங்களை அழிக்கச் சென்ற காலத்தாதலின், அது பற்றி, 'ஊர் நகை செய்யும் நிற்கிது தகுந்தது' என்றாள்.

119. 'இம்மென' என்பதும், 'ஒய்யென' என்பதும் விரைவுக் குறிப்புக்கள். அவனி மான்—நில மகள். 'அதிரும்' என்பது பெண்பாவில் வந்த செய்யுமென் முற்று. 'அவள்தன்' என்பது ஏற்குமிடங்களிலெல்லாம் சென்றியையும். துளங்காத—அசையாத. தகழி-அகல். 'நிலைவிட்டு அகன்று ஒழியும்' என மாறிக் கூட்டுக. வலவன்—சாரதி. ஓயும்—இளைப்பன். 'சூரியனது தேர் ஒரு சக்கரத்தையும், ஏழு குதிரைகளையும் உடையது' என்பதும், 'அக் குதிரைகளை வாசுகி என்னும் பாம்பாகிய கயிற்றிற் பிணித்து, அருணன் என்னும் கால் இல்லாத சாரதி ஓட்டுகின்றான்' என்பதும் புராணக் கொள்கைகள்.

120. மரு ஆர்—(கொன்றை மலரின்) நறு மணம் பொருந்திய. மாது, உமையம்மை. சயிலம்—மலை. மால்—திருமால். ஆல்—ஆலிலை. கமல வல்லி—திருமகள். தரு—(கல்வியைத்) தருகின்ற. வாணி—கலைமகள். சங்கம்—புலவர் அவை. 'பரன் சயிலம்' என்றது, மந்தர மலையை; இது தேவர்கட்கு

அமுதம் அளித்ததாதல் அறிக. மக வேதி—வேள்வி மேடை, மணித் தீபம்—அழகிய விளக்கு. இதணம்—பரண். திருவாளர் —திருவருள் பெற்றவர்; அடியார்கள்- முருகனது தேரைக் கண்ட காலத்து, அதனது பெருமையும் அழகும் பற்றிச் சிவ பெருமான் முதலிய ஒவ்வொருவரும் அதனைத் தத்தமக்கு மகிழ்ச்சியை உண்டாக்கும் பொருளாகக் கூறிப் பாராட்டினர் என்க.

121. குண்டு—ஆழம். திரங்குதல்—உலர்தல். ஆய்—தாய். அலகை—பேய். கேடகம்—பரிசை. சோரி—இரத்தம். துவசம் —கொடி. 'சூரபதுமன், தனது போரின் முடிவில், முன்பு சிவ பெருமான் கொடுத்த இந்திர ஞாலத் தேரினை ஏவி அமுத மலையைக் கொணரச் செய்ய, அம்மலைக் காற்றினால், முன்பு முருகப்பெருமானால் அழிக்கப்பட்ட அசுரர் யாவரும் உயிர் பெற்றெழுந்து போர் புரியத் தலைப்பட்டனர்; அதைக் கண்ட முருகப்பெருமான் அவர்களை அழித்து அத்தேரினைத் தன் பக்கத்தில் வந்து நிற்குமாறு திருக்கண் நோக்கத்தாற் பணித் தான்' என்பது கந்த புராணத்துட் கூறப்பட்டமையின், 'இற்ற வர்கள் வர அமுத மலை தந்த ரதம் நிற்க நோக்கு சித்தச் சாமி' என்றார். இற்றவர்—இறந்தவர்கள். சூர் - சூரபதுமன். 'சித்தச் சாமி' என்பதற்கு, 'திருவுளம் பற்றிய தலைவன்' எனவும், 'வியத்தகு செயலைச் செய்பவன்' எனவும் இரு பொருள் கொள்க.

122. கவிகை—குடை. அங்கம் உக—உறுப்புக்கள் சிந்த. நுங்கும்—உண்கின்ற. அந்தகன்—இயமன். அளகை— குபேரனது நகரம். தனபதி—குபேரன்; 'செல்வத்திற்குத் தலைவன்' என்பது சொற்பொருள். படியகம்—கண்ணாடி. முகமன்-உபசார வார்த்தை உதரமலை—வயிருகிய மலை. பூதர்- பூத கணத்தவர். சரபம்—எண்காற் பறவை; இது 'சிம்புள்' என்றும் சொல்லப்படும். சிங்கத்தை அழிக்கும் ஆற்றலுடையது இதுவே.

123. கனல்-அக்கினி தேவன். அக்கினிக்கு ஏழு நாக்குக்கள் உள்ளன என்க. ஆண்டலை—கோழி. மருத்து—வாயு தேவன்.

நம்பர்—சிவபெருமானுர். 'துணைவர்' என்றது இலக்கரை. ஆசை-திக்கு. மூவேழுபதினுயிரம் - ஒவ்வொன்றும் ஓர் எழுபதி னுயிரம். முனை-போர். மா—மாமரம். ஏழு மா ரதன்-ஏழு குதிரை களையுடைய பெரிய தேரையுடையவன்; சூரியன், 'தேவாகிய சூரியன்' என்க. அவனை எடுத்துக் கூறியது, பல சமயத்தரரா னும் புகழப் படுதல் பற்றி. 'ஏற்று' என்பதற்கு, 'கொடியாக ஏற்று' என உரைக்க.

124. விதி—பிரமன். இரண்டாவது விந்தை—கொற்றவை. இந்து சேகரன்—சந்திரனையணிந்த முடியை யுடையவன், சிவ பெருமான்.

125. 'பூரணம்' என்பது குறுகிற்று. 'மூர்த்தி' என்றது 'பதி' என்றவாறு. சித்திக்கும்—கிடைக்கின்ற (மாணிக்கம் என்க).

126. சோம கிரணம்-சந்திர ஒளி. அபாங்கம்—கடைக் கண். விலாசம்-ஒளி; அழகு. கன்னம்-காது. மனவு-மணி. தெருள்—தெளிவு: ஞானம்.

## அலங்காரம்

'அலங்காரம்' என்பது அழகு; அது, முன்னர்ப் பண்பாகு பெயராய் அதனையுடைய கட்டளைக் கலித்துறைச் செய்யுளை யுணர்த்தி, பின்னர்க் கருவியாகு பெயராய் அதனுலாகிய நூலை உணர்த்திற்று. எனவே, 'அலங்காரம்' என்னும் வடசொல் ஈண்டு, 'காரிகை' என்னும் தமிழ்ச்சொல் இயல்பில் நின்றதாம். 'காரிகை' என்பது அழகிற்குப் பெயராய், ஆகு பெய ரால் மகடூவையும், கட்டளைக் கலித்துறைச் செய்யுளையும் உணர்த்துதலையும், பின்னர்க் கட்டளைக் கலித்துறையாலாகிய நூலை உணர்த்துதலையும், "காரிகை அழகு பெண்ணே கலித் துறை ஓர் நூற்கும் பேர்" என்னும் சூடாமணி நிகண்டாலும், அறியலாம். அந் நிகண்டில், 'ஓர் நூல்' என்றது, யாப்பருங் கலக் காரிகையை.

கட்டளைக் கலித்துறையைக் 'காரிகை' என்றவாற்றால், பிற்காலத்தார் அதனை அழகுடைய செய்யுளாகக் கருதி இன்புற்றனர் என்பது பெறப்படும். இன்பத்துறைச் செய்யுளாகிய 'கோவை' என்னும் நூலினைக் கட்டளைக் கலித்துறையானே அவர் செய்து போந்தமையும், கட்டளைக்கலித்துறையை ஒரோவழித் 'திலகக் கலித்துறை' என வழங்கினமையும் இக்கருத்தை வலியுறுத்தும். கட்டளைக் கலித்துறையை அழகுடையதாக அவர் கருதினமைக்குக் காரணம், பதினாறும் பதினேழுமாகிய எழுத்தளவை பெற்ற கட்டளை யடிகளையும், ஓரடிக்கண் உள்ள சீர்கள் யாவும் வெண்டளை பிழையாது இயைந்து நிற்பத்தோன்றும் இன்னோசையையும் உடையதாய் நிற்றலே போலும்! கட்டளைக் கலித்துறையாலாகிய கடவுள் வாழ்த்து நூலை முதற்கண், 'அலங்காரம்' என வழங்கினார், முருகன் அடியவராகிய அருணகிரிநாதர். பின்னர்த் திருப்போரூர்ச் சிதம்பர அடிகள் தமது திருப்போரூர்ச் சந்நிதிமுறையில் அப்பெயருடைய ஒரு நூலைச்செய்தார் என்க.

127. காப்பு: மா—பெரிய. தே. கடவுள். சிகாமணி—தலைமணி. 'பா அலங்காரம்' என்பதனை, 'அலங்காரப் பா,' என மாற்றியுரைக்க. கடம் - மதம். விகட அசலம்-விசாலமான மலை (போன்ற என்க). கற்பகம், உருவகம். 'கற்பகமே கா' என முடிக்க.

128. புணரி - (பாற்) கடல். 'முருகன், தன் அடியார்களுக்கு, இந்திரன் பிரமன் திருமால் என்னும் மூவர்களது பதவியையும் வழங்குகின்றான்' என்றபடி. அற்பு அகம் - விருப்பத்தைத் தரும் பதவிகள். அல் - இரவு. உம்மை விரித்து, 'அல்லும் பகலும் வாழ்' என இயைக்க.

129. சிந்தா + ஆகுலம் = சிந்தாகுலம்; 'மனக் கவலை' என்பது பொருள்.

130. தீர்த்திகை - தீர்த்தம். பார்த்திகை - பூமியின் திசைகள்.

131. 'வேதா ஏத்தும்' என இயையும். வேதா - பிரமன். சரணம் - அடைக்கலம்.

132. ஆரியன் - ஆசிரியன். பாசவினை, மூலகன்மம். ஆங்கார வினை, செருக்காற் செய்யப்படும் வினைகள்.

133. 'முத்தனைய' என்புழி மகரம் விரித்தல். மூரல் - பல். வேண்டு கொலோ - வேண்டுதல் வேண்டுமோ.

134. விலோதனம் - கொடி. கட்டுரை—மெய்ம்மைச் சொல்.

135. 'தெரிக்க' என்புழி, 'மகிழ்ந்து' என்பது எஞ்சி நின்றது; நம்பியாரூரர்க்குச் சிவபெருமான் திருக்கச்சூரில் இரந்து சோறிட்டமையைப் பெரிய புராணத்துட் காண்க. உவத்தல் - உறவு கொள்ளுதல்; 'தந்தை பண்பு மைந்தர்க்கு உளதாம்' என்றபடி.

136. ஓகை - மகிழ்ச்சி. ஊங்கு - இனி. பதாகை - கொடி.

137. சேந்தன் - முருகன்.

138. 'மாலும் அயனும் சுரேசனும் தேவரும் விளம்புநரே' என இயையும். திருமால் முதலியோர் முருகன் அடியவரைக் கண்டால் போற்றத்தக்கவரே என்பதாம்.

139. கூய் (கூவி) - அழைத்து.

140. மகம் - வேள்வி. 'கம்பையாகிய கோமகள்' என்க. 'தாம்' என்பது அசைநிலை. அகம் - மனம்.

141. சுர வாரணி - தெய்வயானையம்மை. வேட்டு - மணந்து. கரவார் அணி - இரப்பவர்க்கு இல்லை என்னுதவாது வரிசை. ஆர் - ஆத்தி. அப்பன் செயலாவது, மலைமகளை மணந்து, பின்னும் கங்காதேவியைச் சடையிற் கரந்தமை என்க. இருவர் செயலும் உலகத்தின் பொருட்டேயாயின என்பது உள்ளுறைப் பொருள்.

142. மழ வடிவம் - இளமையான வடிவம். முழவு அடி - மத்தளத்தை அடிக்கின்ற. 'தொண்டருள்' என்பதில் உள்ள 'உள்' என்பது, 'இடையில்' எனப் பொருள் தந்தது.

143. செம்பாதி - சமபாகம்.

144. மனு - விண்ணப்பம்.

145. படை - ஆயுதம். தாசன் - அடியவன். இச்செய்யுளின் இறுதியில், 'ஆதலால், என்னை உன் அடியவனுகக் கொண்டருள்' என்னும் குறிப்பெச்சம் வருவித்துரைக்க.

146. ஆரணம் - வேதம்.

147. குணக்கு - கிழக்கு. கேதகை - தாழை. சோறு - தாழைமலரின்கண் உள்ள சோற்றி. 'தாழை அஃறிணைப் பொருளாயினும், அல்லியின் வாயில் சோற்றைப் பெய்கின்றது; உலோபர் உயர்திணைப்பொருளாய் இருந்தும் அது செய்கின்றிலர்' என்னும் நயந்தோன்றக் கூறியவாறு.

148. காய் அக்கிரமம் - வருத்துகின்ற அநீதி. 'கிருபா, கிரணம்' என்னும் வடசொற்களின் ஒற்று மிக்கது விரித்தல் விகாரம் என்க.

149. போது ஆரணன் - பூவில் இருக்கும் பிரமன். காது ஆர - செவிகுளிர. களபம் - யானை. மா தாரணி - பெரிய பூமி. இச்செய்யுளில் ஈற்றெதுகை வந்தமை காண்க.

150. வித்துத் தலை மழை ஆம் - விதையின் மேல் பெய்யும் மழை போல்வன்; என்றது, 'மழை பெய்து வித்தினைப் பயன் படச் செய்யுமாறு போல, முருகன் உயிர்கள்மேற் கருணை செய்து ஆன்ம லாபத்தை அடையச் செய்வன்' என்பதாம்.

151. தண்ணிய - குளிர்ச்சியான. 'அன்னம்' என்பது 'அனம்' எனவும், 'தன்னடை' என்பது 'தனடை' எனவும் குறைந்து நின்றன.

152. சேல் - மீன். அயில் - வேல். அயினும் — உண்கின்ற. 'பெண்கள் புகழை இனிமை யுடையதாகவும், முருகன் புகழைக் கைப்புடையதாவும் கருதுகின்றது' என்றபடி. இதனுள், 'மனமே' என்பதனை வருவித்து, 'உன் வெள்ளறிவு என்' என முடிக்க. மனத்தை அறிவுடையது போலக் கூறியது இல்க்கணை.

153. உயிராவணம் - மூச்சை விடாது அடக்கி. 'வயலுக்குச் சோலை பயன் (பழம்) தரும் (உதிர்க்கின்ற) கம்பை' என்க.

154. அம்பர சுதன் - உமையவள் மகன்.

155. அம் - அழகு. பார்-பூமி. 'விடுத்த குகன்' என இயையும். கும்ப ஆரியர்-கும்ப முனிவர்; அகத்தியர்.

156. 'வினைக்கு' என்றது, வினையால் உண்டாகிய விளைவுக்கு' என்றவாறு.

157. பேறு - வீடு பேறு. முகம்-நிலை. 'பேறு' என்புழி றகரம் இரட்டாமை தொகுத்தல் விகாரம். 'எண்ணுக' என்பதனை, 'ஆறெழுத்து' என்பதன் பின்னாக இயைக்க.

158. கன்னல் - கரும்பு. பரித்து-(துன்பத்தைத்) தாங்கி.

159. சண்டன்-இயமன். படர்-தூதர்.

160. நுந்து அழல் - வளர்க்கின்ற தீ,

161. காசு ஆர - பணம் சேர்தற் பொருட்டு; 'குற்றம் பொருந்த' என்றுமாம். பூசாரம் - நில வளம். வேசார்ல்-இளைத்தல்.

162. கோல்-அம்பு. திருமால் இராமாவதாரத்தில் கடல் கொதிக்க அம்பு எய்தமை இராமாயணத்துட் கூறப்பட்டது. முருகன் கடல் சுவற வேல் விட்டமையைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க. காலால் வற்றச் செய்த எழுகடல், பிறவி. 'ஏனைக் கடல்களினும் பிறவிக் கடல் பெரிது' என்றவாறு.

163. சாந்தம் — பொறுமை. சந்தம் — சந்தனம். பசு போதம் — 'நான்.' என்னும் முனைப்பு. 'என்று' என்புழிக் 'கொண்டு, வழிபட்டு' என்பன எஞ்சிநின்றன.

164. பசும்பால் — அப்பொழுது கறக்கப்பட்ட பால். 'ஆவின்பால்' என்பது கூறவேண்டா. 'பாலை ஆட்டி, மாலை சூட்டி' என்க. 'சோலையும் ஆலையும்' எனப் பிரிக்க. மேலை-வரும் பிறப்பு. மாலையும்-மயக்கத்தையும்.

165. அத்தன்—(1) தந்தை (2) கையை உடையவன். வையம் - தேர்; ஊர்தி. சத்தன்—மெய்ப் பொருளாய் உள்ள வன். துசத்தன்-கொடியை யுடையவன். வசத்தன் - வசப் பட்டவன். கத்தன்—தலைவன். அகத்தன் - உள்ளத்தில் இருப் பவன். கம்பை அகம்-கம்பையாகிய இடம். மா சித்தன்— எல்லாம் வல்லவன்.

166. கடகரி - மதயானை. பரிமா-குதிரை. மறுகு-தெரு. தார்—மாலை. சாந்தம்—சந்தனம். குப்பை—(பயன்படாத) குவியல்.

167. கன்னத் தெருள் வாரி-காதில் உள்ள ஒளிக் கடல்; காதணி. இது கண்ணை ஏற்றுக்கொண்டு ஆடுகின்றது என்க. இனி, 'வாரி' என்பதனை ஆகுபெயரால், 'அமுதம்' எனக் கொண்டு, செவியால் உண்ணப்படும் அமுதமாகிய சொல் லாக்கி, 'கட்கயலை உடையவாய்ச் சொல்லாட' என்று உரைத் தலும் ஆம்.

168. 'கம்பையில் உறைவதுபோல என் மனத்து உறை; அப்பொழுது படைப்பதும், பிடிப்பதும் இல்லையாம்' என்க. பூமன்-மலர்க் கடவுள்; பிரமன். 'எமன்' என்பது நீண்டது.

169. பதுமாதனன்—பிரமன். முயல்பொருள்—வினை. 'என்பது' என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி. ஒன்பது வாயில் மனை, உடம்பு. பேரகம்-பெரிய வீடு; முத்தி.

170. உற்பவியார்-பிறவார். பவம்-பிறப்பு.

171. மனுதி: மனம், மொழி, மெய். 'சொல் இரண்டு', இரண்டு என்னும் சொல்.

172. ஓர் ஆழித் தேரவன், சூரியன். உரகம்-பாம்பு; ஆதி சேடன். ஆழித் தானவர்—கடல்போலும் அசுரர். புலவர்— தேவர். பார்ஆழி-பூமியையும் கடலையும். வட்டம் இடும்- சுற்றிவரும். பரி-ஊர்தி.

173. மன்ருடி '(என்னைக் காவாதிருப்பது முறையன்று என்று) வழக்குப்பேசி.

174. கருவிளையாடல் - கருவில் விளையாடுதல். 'தீவினை ஆடல்' என்புழி, ஆடல்-முழுகுதல். 'ஒப்பு' என்பதற்கு, 'இழிவினாலும் உயர்வினாலும் சொல்லப்படும் உவமை' எனப் பொருள் கூறின், தப்பில்லாமை காண்க.

175. சினை - முட்டை. 'நிகர்' என்பது 'நிகர' எனப் பொருள் தந்தது. 'மீன் தனது பார்வையினாலே தனது முட்டையைக் குஞ்சு பொரிக்கும்' என்பர். அதனால், ஆசிரியனது அருட்பார்வை மீன் பார்வைக்கு ஒப்பாகக் கூறப்படும்.

176. பால+ஆயுதம்=பாலாயுதம். பாலம் - நெற்றி அது அவ்விடத்துள்ள கண்ணைக் குறித்தது. மால் ஆயுதம், சக்கரம். அதனை மாலையாகச் சூடிக்கொண்டவன் தாரகாசுரன். காலாயுதம் - கோழி; அதனைக் கொடியாக உடையவன் என்க. உவகை - மகிழ்ச்சி.

177. பிட்டு - பறித்து. மா பிட்டு - மாவால் ஆகிய 'பிட்டு' என்னும் சிற்றுண்டி. காப்பு - காவல். யாப்பு - பாடல். உணத் தந்தது - அநுபவிக்கச் செய்தது. 'அந்தக் கரணம்' என்றது மனத்தை. மகிழ்ச்சி மீதூர்வால் தம் மனத்தைப் புகழ்ந்தவாறு.

178. மா காத்திரம்-பெரிய உடம்பு. வாகா - அழகாக. பரதம்-நடனம். மோக+அத்திரம்=மோகாத்திரம்-மயக்கும் கணை; என்றது, வள்ளியம்மையின் கண்களை.

179. 'வரும் அந்தி நேரம்' எனப்பிரிக்க. மந்திகள் - பெண் குரங்குகள். சடக்கரம்-ஆறெழுத்து.

180. பொடித்தல்-மயிர் சிலிர்த்தல்: அஃது இங்குக் கண் இமைத்தலைக் குறித்தது. வெண்பொடி-திருநீறு.

181. 'ஐயாயிரம்' என்றது மிகுதிக்குக் காட்டிய ஓர் எண். பை-பாம்பின்-படம்.

182. மாழ்குதல்-மயங்குதல். 'போக்கி' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று; 'பிறப்பை நீக்கிக்கொள்ளும் வழியை அறிந்திலர்' என்றபடி. நாளம்-தண்டு. கண் ஆளன் - கண்ணை ஆளுதல்உடையவன்; 'எப்பொழுதும் கண்ணிலே இருக்கின்ற கோலத்தை உடையவன்' என்றபடி.

183. வீக்கிய-மிகுதியாகச் செய்த. 'சிந்தையின்'-'இன்' சாரியை. 'சிந்தையை உடைய' என்க. 'சிறப்பு' என்றது, முருகன் விரும்புமாறு நின்றதை.

184. முதற்கண் உள்ள 'ஆக' இரண்டும் விகற்பத்தின் கண் வந்த முற்றுக்கள். 'எண் முகம்', 'துதி முகம்' என்புழி 'முகம்' என்றன வகை என்றவாறு. அவ்விடங்களில் 'ஆயினும்' என்றும் விகற்பச் சொல் வருவிக்க. 'கண் முகமாக' என்புழி, 'ஆக' என்றது, 'போல' என்னும் பொருளது; அதனைக் 'கண்' என்றதனோடுங் கூட்டி, இரண்டிடத்திலும் 'கருதி' என்பது வருவித்து முடிக்க.

185. மோகனன்-மயக்குபவன்; இது மாலுக்கு அடைமொழி 'உருகேன், உன்னேன், பருகேன்' என்னும் எதிர்மறை முற்றுக்கள், 'உருகன், பன்னன், பருகன்' எனத்திரிந்து நின்றன. இருத்தி-இருக்கின்றாய்.

186. அண்டர் அண்டம் - தேவர் உலகம். மண் தலம் - பூமி. 'அண்டி' என்பது, 'அண்மி' என்பதன் மரூஉ. 'மிண்ட கண்டர்' என இயைத்து, 'திண்ணியராகிய அசுரர்' என உரைக்க. கண்டம் புரிதல்-கொலை செய்தல். மண்டி-நெருங்கி. கண்ட கண்டம்-துண்டு துண்டாக. பட-அழிய. சண்டன் - இயமன். அவன் தொழுதமை, அவர் உயிரைக் கொண்டு போகலாற்றாதவனாகி என்க. விஞ்சும் - மிகுந்த. தண்டலை - சோலை.

187. வன்மரம்-வற்றல் மரம். 'எறிந்திடுங் கல் என' என்றாராயினும், பொருளுக்கேற்ப, 'கல் எறிந்தென' என்று மாறுதல் கருத்தென்க. பொருட்கண் 'ஓயாது', 'அனேகம்' என்னும் அடைமொழிகளும், 'இளைத்தல்' என்னும் வினையும் உவமையினும் சென்றியையும். இயையவே, இது, பயன் பற்றிவந்த உவமையாம். சிவாரியன்-சிவகுரு.

188. 'என்' என்றது, 'உனது பெருமையை உலகம் உணர்ந்து உய்தற் பொருட்டு' என்னும் குறிப்புடையது. பூம்பழனம்-அழகிய வயல். 'ஓம்' என்புழி, 'என்பதன்' என்பது வருவிக்க.

189. ஓம்பு-வளர்க்கின்ற, 'பாடும்' என்றது, 'பாடுதலையே கடமையாக உடையதாய் இருக்கும்' என்றவாறு.

190. இச் செய்யுளால் இவரது மன உறுதி இனிது விளங்கும்.

191. பதி—வாழ்தற்குரிய நல்ல நகரம். பன்னி (பத்னி)-மனைவி. 'சுகாதீதம்' என்பது குறுகி நின்றது; சுகத்தை, 'இது சுகம்' என்று உணர்தலையும் கடந்த நிலை. 'இக் கற்பகம் தருவன இவை' என்றவாறு.

192. முருகனை அவன் தேவிமாரோடு தியானிக்கும் தியானத்தின் பயன் இதன்கண் இனிது விளக்கப்பட்டது.

193. ஆறுகாலம், அறுதொழில், இருபத்தேழு நாட்கள் என்பவை இதன்கண் நயம்படக் கூறப்பட்டன. 'உதித்தது' என்பது ஈறு குறைந்து நின்றது. 'கண்மூன்றோடும் (அடியவர் தம் உள்ளத்தில்) ஊன்றும் கரும்பு' என்க. இங்ஙனம் கூறியது சிவபிரானை.

194. இகானந்தம் - இம்மை யின்பம். மிகு ஆனந்தம், வினைத்தொகை. 'மிக' என்பது ஈறு தொகுத்தலாயிற்று என்றலுமாம். குகானந்தம்-முருகன் திருவடியின்பம். 'சுகானந்தம்' என்பது, முத்தியின்பம் என்னும் பொருளது. சுதாகரன்-சந்திரன்.

195. 'வீண் உழலல்' 'அவசத்தில் உழலல்' எனத் தனித் தனி முடிக்க. அவசம்-சுதந்திரம் இன்மை. 'அந்த மெல்லி' என்றது, ஆணவத்தை. மெல்லி-பெண்; உருவகம். அசத்தியினள்-சத்தியில்லாதவள். 'நாண' என்பதனை 'நாணி' எனத் திரித்து, 'அசத்தியினளாய்' என்பதன் பின்னாக வைத்துரைக்க. 'வசத்தின் என்புழி, ஒடு உருபு விரிக்க வசம்—தலைமை.

196. வித்துவ ஞானம் — கல்வி யறிவு; இஃது 'அபர ஞானம்' எனப்படும். தத்துவ ஞானம்-கருவிகளின் இயல்பை உள்ளவாறு உணரும் ஞானம். அருட் சத்துவ ஞானம்-திருவருளின்வழி அடங்கி நிற்கும் ஞானம். 'அத்துவித ஞானம்'

என்பது, 'அத்துவ ஞானம்' என மருவிநின்றது. 'ஞானத்து' என்புழிக் கண்ணுருபு விரிக்க. பரஞானம்-அநுபவ ஞானம்.

197. தம், சாரியை. தான், அசைநிலை. ஈனம் தப— இழிவு நீங்க. இச் செய்யுளில், "ஓங்குணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்-தூங்குவர்மற் றேதுண்டு சொல்" என்னும் திருவருட் பயனின் பொருள் சொல்லப்பட்டமை காண்க.

198. அன்னையர் அறுவர், கார்த்திகைப் பெண்கள். 'மார்பம்' என்பது, 'மார்வம்' என வந்தது. 'தனயன்' என்பது போலியாயிற்று. ஆரல்-கார்த்திகை. 'தருவாய்' என்றது, 'அன்பர்கட்கு எஞ்ஞான்றும் அருளுவாய்' என்றபடி.

199. சீரலைவாய்-திருச்செந்தூர். சீலம்-முறை.

200. நீரசம்—தாமரை. 'நேர்' என்பது, 'நேர' எனப் பொருள் தந்தது. பார சங்கு—பெரிய சங்கு. ஆரம்—முத்து. உயிர்ப்ப—கருவுயிர்க்க. பமரம்—வண்டு. தாமரை மலரின் மேல் முத்துக்களும் வண்டுகளும், மகளிரது முகத்தில் பற்களும் கண்களும் போல விளங்குகின்றன என்பதாம்.

201. அடுக்குக்கள் பன்மை பற்றி வந்தன.

202. 'வேதாகமங்கள் சொல்லும்' எனவும், 'அன்பர்கள் மெய்ந்நெறி வேண்டி' எனவும் மாற்றுக.

203. கூறும்—(யாவரும் சிறப்பித்துச்) சொல்லும். அண்டாண்டம்-அண்டத்தின் மேல் உள்ள அண்டம்.

204. கேதகை-தாழை. 'பங்கேருக பாதங்கள்' என இயைக்க.

205. கேசாந்த முத்தி-பிரமரந்திரத்தின் வழியே உயிர் நீங்கும் முத்தி. 'இது கச்சியம் பதியில் இறக்கும் உயிர்களுக்குக் கிடைக்கும்' என்பதனைக் காஞ்சிப் புராணத்துட் காண்க.

206. அமுது-காட்சியாகிய அமுதம். அடுக்குக்கள் துணிவு பற்றி வந்தன.

207. புல்லும்-பொருந்துகின்ற. பவம்—பாவம். என்னே —என்ன உவமை. காண்-அசைநிலை.

208. மீறும்—பெருமையால் எல்லாவற்றையும் கடந்த. நளினம்-தாமரை. இச்செய்யுள் முருகப் பெருமான் திருக்கைகளில் உள்ளவற்றைக் கூறிற்று; இவ்வாறு, கந்த புராணத்துச் சயந்தன் கனவுகாண் படலத்துட் கூறப்பட்டிருத்தல் காண்க.

209. பாரிய-பரந்த. செயாது-செய்யாதபடி. தேரிய—தேர்ந்த.

210. கோடு-சிகரம்.

211. மட்டு-தேன். கண்+தாமரை எனப் பிரிக்க.

212. 'வாழி' என்பது அசை நிலை. அவ்விடைச்சொன் முன் ககரம் மிக்கது. ஓதிய-சொல்லிய. வாணன், தமிழ் வாணர்; பொய்யா மொழிப் புலவர். இப் புலவர் வாக்கால் முருகன் வலிந்து பாடல் பெற்ற வரலாறு பரவை வழக்காய் வழங்கும். பாழி-வலிமை. தாழ்+இக் குழந்தை எனப் பிரிக்க. இக் குழந்தை என்றது, தம்மை.

213. 'பொருள்' என்றது, தனிமொழியாலும், தொடர் மொழியாலும் குறிக்கப்படுவனவற்றை; அவை எண்ணில வாதல் பற்றி, 'இரும் பொருள்' என்றார்.

214. சாலும்-நிரம்பும். 'நலம் சாலும்' என இயையும். 'மறக்கருணையும் நன்மை தருவதே' என்றவாறு.

215. எல்-ஒளி. 'வைத்த' (பொருந்திய) என்பது, 'வச்ச' எனப் போலியாயிற்று. செங்கல்வச்சயிலம், திருத்தணிகை மலை. 'திருத்தணிகை மலை போலும்' கம்பாபுரம்' என்றபடி.

216. 'நெக' என்பது விரித்தல் விகாரம் பெற்றது. 'செய்குவது' என்பது தொழிற் பெயர். அன்பர் பணிவிடை-அடியார் செய்யும் வழிபாடு.

217. சேய்-மகன். 'கம்பை வேள்' என்பது மேலும் சென்றியைந்தது, இடைநிலைத் தீவகம்.

218. அனிலம்-காற்று. பரிதி-சூரியன். சோமன்-சந்திரன். ஆவி-உயிர். இங்கு அட்ட மூர்த்தங்கள் கூறப்பட்டன. நவந்தரு பேதமாவன: சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன்; இவற்றின் விளக்கங்களை மெய்கண்ட நூல்களுட் காண்க. 'கந்த வையன்' என்பது 'கந் தையன் என மருவிற்று.

219. 'மின்னார்' என்றது ஈண்டுப் பொது மகளிரை யாதலின், அவர்தம் தீயொழுக்கம் பற்றி, 'வினையே உருவு கொண் டன்ன' என்றார்.

220. தீங்கு-பிழை.

221. இங்கு+உந்து+அலம் எனப் பிரிக்க. அலம்-அலமரல்; துன்பம்.

222. நாதன்+இன்கோயில் எனப் பிரிக்க. இதனால், இக் கோயிற்றிருப்பணி செய்வாராய் இந் நூலைப் பாடுவித்த வரது பெருமையைக் குறிப்பால் தெரிவித்தவாறறிக.

223. சமராபுரி-திருப்போரூர். அமராவதி-இந்திரன் நகரம்.

224. இதனுள் முருகனுக்குரிய படை வீடுகள் ஆறும் கூறப்பட்டமை காண்க.

225. நத்தி-விரும்பி. உள்ளும்-நினைக்கின்ற.

226. மெய்யன்பு-காரணம் பற்றாத அன்பு. பொய்யன்பு-காரணம் பற்றிச் செய்யும் அன்பு. இச் செய்யுள் அவை யடக்கம் கூறியதாதல் அறிக.

227. சோணசலம்-திருவண்ணமலை. இதுவே ஆசிரியர் பெயராதலை நினைவு கூர்க. மாண் ஆர்-மாட்சிமை நிறைந்த.

## வெண்பா மாலை

228. அருக்கன்-சூரியன். 'குளிரும்படி அலர்கின்ற பொழில்' என்க. 'பகம்' என்பது ஐசுவரியம், வீரம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களைக் குறிக்

கும். அஃது ஆகுபெயராய் அவற்றை உடையவனைக் குறித்தது.

229. பொருள்-கருத்து. 'கந்தையா' என்பது பற்றிய குறிப்பினை மேல் 218-ம் செய்யுட் குறிப்பிற் காண்க. இந் நூலிள்ள வெண்பாக்கள் யாவும், முதல் மூன்றடிகளைச் சொல்லவே, மோனை எதுகைத் தொடைகளாலும், 'கம்பை முருகா' என்னும் முடியினாலும் ஈற்றடி தானே அமையுமாறு பாடப்பட்டிருத்தல் காண்க. இவ்வாறே இவ்வாசிரியர் நூல்களுள் மற்றும் சில உள. அவற்றை ஆங்காங்குக் காண்க.

230. அளி—வண்டு. உபய பதம்—இரண்டு பாதம். விபவம்—செல்வம்.

232. மையல்-மயக்கம். விலங்குவேன்-நீங்குவேன். 'நரகமே யாயினும், அஃது உன் அருளால் வரின் நலம்' என்றவாறும். 'நரகம் புகினும்-எள்ளேன் திருவருளாலே யிருக்கப் பெறில்இறைவா' என்னும் திருவாசகத்தைக் காண்க.

234. வேள்-மன்மதன். 'விண்ணும் பாருமாய் நின்ற' என்க.

235. உங்காரம்-'உம்' என்று கூவுதல். உயர்த்தல்-கொடியாகப் பிடித்தல். ஆரச் சிந்திக்கும்-நன்றாக நினைக்கும். கந்தித்தல்-மணம் கமழ்தல்.

236. ஏமாப்பு-இறுமாப்பு. கர மன்-கையையுடைய தலைவன்.

237. 'நிதி' என்றது மணிவகைகளை. அண்ணியன்-அருகில் இருப்பவன்.

238. சவலைப் பிள்ளை-தாய்ப் பாலுக்கு ஏக்கறுகின்ற பிள்ளை.

241. விண் மணி-சூரியன். விகசித்தல்-மலர்தல்.

243. "பாலோ டளாயநீர் பாலாகு மல்லது" என்னும் நாலடிச் செய்யுளை இங்கு நினைவு கூர்க.

244. மூன்று; சரியை, கிரியை யோகம்.

246. சாடு கின்ற-வருத்துகின்ற. கப்பி-தெள்ளி யெடுத்து எஞ்சிய அரிசி முதலியன. தீனன்-எளியவன். சாமகானன்-சாம வேதத்தின் இசையைப் பாடுபவன்.

247. ஈராறு எழுத்து-ஆறெழுத்துக்களாலாகிய இரண்டு தொடர் மொழிகள். அவை முருகனது சடக்கரமும், 'கம்பை முருகா' என்பதும்.

248. புரை-குற்றம்.

249. அகங்காரம்-அங்காரம் என இடைக்குறையாயிற்று. அட்டவன்-அழித்தவன். 'மோகமாகிய பயல்' என உருவக மாகக்கொண் டுரைக்க.

250. 'நாயினேன் உளம் ஒன்றே (உனக்கு) நன்கு சுகம் கொடுக்கும் இல் ஆகும்' என மாற்றியுரைக்க. மான-பெரிய.

251. எற் பாராது-என்னைப் பாராமை. 'பாராதது' என்பது குறைந்து நின்றது.

252. ஏமாந்தேன்-இன்புற்றேன்.

253. பரமாதி மூன்று: பரம், சீவன், சகம். திரம்-நிலை; 'தான் நிலைத்து நிற்கின்ற' என்பது பொருள். சகம்-உலகம். உரம்-ஞானம்.

255. இலக்கம்-எண்ணிக்கை.

256. வினை ஆள்—பணி செய்யும் ஆள். 'அன்னம்' என்பது இடைக்குறைந்து நின்றது.

257. 'நீ சும்மா இருத்தல் ஏன்? அது நீதியோ' என்க. கண்டித்தல்-கடிதல்.

258. வன சரர்-வேடர்.

259. மாது சங்கம்-பெண்டொடு கூடுதல். மோகாடவி-மயக்கமாகிய காடு.

260. பவம்-பாவம். 'அவமேதிரிவேன்' என்க.

261. யாத்து-அணைத்து. வீறுமல்—மிகாமல்.

263. பண் ஆளா-செய்கின்ற ஆளாக.

264. நுவலுவேன்-சொல்வேன். கவலுவேன்- கவலைப் படுவேன்.

265. கண்டிகை—உருத்திராக்கம். காத்திரன்-திரு மேனியை உடையவன்.

266. கார் ஆ-கபில நிறப் பசு. அம் பீர்-அழகிய பால்.

267. கவசன்-கவசம் போல்பவன்.

269. சாந்தம்-அமைதி. 'சந்தனம்' என்பது நயம். நிழல் —கருணை.

270. உல்லாசம்-மகிழ்ச்சி. களங்கம்-குற்றம். ஓவி-நீங்கி. கல்+நேராய்+இருக்கும்+எனப் பிரிக்க.

271. 'இவைகள்' என்புழி, ஐயுருபு விரிக்க. சோதித்தல்-(பொருட்படுத்தி) ஆராய்தல்.

272. 'இத்தாரணிமேல் வைத்தது வினையோ? அருளோ?' என்றது, 'வினை தான்' என்றபடி.

273. வசிக்கின்ற-வசப் படுத்துகின்ற. மால்+மற+வேற்கண்ணார் எனப் பிரிக்க. மால்-மயக்கம். மறம் கொடுஞ் செயல்.

275. தேசு-ஒளிர்; ஞானம். அற்பு அகம்-அன்புடைய மனம்.

276. கோபம்- 'இந்திர கோபம்' என்னும் பூச்சி. இம்பர்-இவ்வுலகில்.

277. காந்தன்-கணவன்.

278. 'என் நோய் உடையார்க்கே' எனவும், 'இருள் நையேன்' எனவும் பிரிக்க.

279. பதி—நகரம்

280. கஞ்சன்—தர்மரையை உடையவன்.

281. ஓரேன்-ஆராயமாட்டேன்.

283. நள் அல் நேரத்து-நடு இரவாகிய நேரத்தில்.

285. மோய-கெட. முதிர் அவன் — முதிருகின்ற தன்மையை உடைய அவன்.

287. வேல்+ஐயனே எனப் பிரிக்க. அரும்பு விளை- போதுகள் மலருங்கால் சிந்துகின்ற.

288. 'தமிழின் சொல் நாட்டு வாணர்' என்றது, பாண்டி நாட்டில் வாழ்பவராகிய தனவணிகரை.

289. மல்லல்-வளப்பம். வெறுக்கை—பொன். நன வானே—நனவிடத்திலே; விழித்திருக்கும் நிலையிலே.

290. சோமன்—சந்திரன். சிலை—வில். அடல்-வலிமை சதிர்—பெருமை; இது 'சதுர்' என்பதன் மரூஉ. காமன்—மன்மதன்.

291. மறலி-இயமன். நான்+நைவுறு எனப் பிரிக்க.

192. மும்மை ஆர்-மூன்றுகப் பொருந்திய. நலி-மெலிவு. கலி-வறுமை.

293. அனகம்-பாவம் இன்மை; புண்ணியம்.

294. 'விடாது' என்பது ஈறு குறைந்து நின்றது. 'சல்லாபா' என்பது இடைக் குறையாயிற்று. சல்லாபம்-உரையாடல். வேங்கடாசலம்-திருவேங்கடமலை.

295. தோற்றம்-பிறப்பு.

297. நபம்-கார் காலம்; 'நவம்' என்பதன் திரிபு என்றலுமாம்.

298. ஊன்-உடம்பு. 'கடமையே' என்பதிலுள்ள ஏகாரம் அசைநிலை.

299. இடம்பன்-ஆரவாரமுடையவன். ஒத்தமனம்-புகழ்தலையும் பழித்தலையும் ஒருதன்மையாகக் காணும் மனம்.

300. மான்—வள்ளி. பிடி—தெய்வயானை. 'மானையும் பிடியையும் சேர்கின்ற களை' என்பது விரோதச் சிலேடை.

301. யாக்கையும்-உடல் முழுதும்.

302. நடுவில் உள்ள 'பொருள்' மற்றைய இரண்டையும் தருதல், 'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்னும்

நாலடியால் அறிக. 'ஈசன்' என்றாராயினும், அம்மையை யும் கூறுதல் கருத்தென்பது உவமையால் உணர்க.

304. 'முருகா' என்று இடையறாது சொல்லிக் கொண் டிருந்த ஒருத்தியின் கையை அவள் கணவன் வெட்டிய போது, அக் கை முருகன் அருளால் முன் போல வளர்ந்தது' என்பது ஒரு செவிவழிச் செய்தி.

305. உலகை வலம் வந்ததை எண்ணுதல், அடியவர் இருக்கும் இடத்தில் செல்ல வல்லவன் என்று அறிதற்கு ஏது வாதல் பற்றி என்க. 'தனி வளர்' என இயையும், தத்தை-கிளி.

306. நிலவு முறுவல்-நிலவு போலும் சிரிப்பு.

307. மயலேன்+நோய் எனப் பிரிக்க. 'மயக்கத்தை யுடையேனாகிய எனது துன்பத்தை' என்பது பொருள்.

308. கலதி-முகடி. தள்ளல்-தள்ளிவிடாதே.

309. மாழை-பொன். 'சபை' என்பது 'சவை' எனத் திரிந்து நின்றது. என் ஒரு சார்-ஏதேனும் ஓர் இடம். 'கடியனேனாகிய ஏழை அடியனேன்' என்க.

310. சயந்தன், இந்திரன் மகன்; அவனுக்கு முருகப் பெருமான் கனவில் தோன்றி அருள் செய்தமையைக் கந்த புராணத்துட் காண்க. நனவு-விழித்திருக்கும் நிலை.

311. துனி-துன்பம்.

312. கண்டகன்- அசுரன். முருகப்பெருமான் சூரபது மன் வியக்குமாறு தனது விசுவரூபத்தைக் காட்டி மறைத்தமை யைக் கந்தபுராணத்துட் காண்க.

313. உழுவல் அன்பு—முன்னைப் பிறப்பினின்றுந் தொடர்ந்து வரும் அன்பு. திவலை-துளி. சாலும்-அமையும்.

314. துப்பு-துப்புரவு-நுகர்ச்சிப் பொருள்; இது 'வலிமை' என்னும் பொருளும் உடையது ஆதலால், 'வலிமை இல்லாத வர்க்குச் சுகம் என்ன உண்டாகும்?' என நயம்பட வினவிய வாறு.

315. ஊமன்-ஊமையன். மான-போல.

316. கழகன் கூட்டத்தில் இருப்பவன்.

317. வேதன்-பிரமன். சலாம்-கும்பிடு; 'இச்சொல்லை, "கடிசொல் இல்லைக் காலத்துப் படினே" (தொல்காப்பியம்-சொல் 452) என்னும் விதியால் குமரகுருபர அடிகளும் இங்குக் குறிக்கப்பட்ட நிலையிலே மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் ஆண்டிருத்தல் காண்க. சீர்த்த-சிறப்புப் பொருந்திய.

318. அளைதல்-கலத்தல்.

319. ஒரும்-அறிகின்ற. ஐவர்-ஐம்புல வேடர்.

321. யாழ்நாதம், 'யாணுதம்' என மருவிற்று; இது வள்ளியம்மை சொற்கு உவமை.

322. தரணன் - தரித்திருப்பவன். அந்தக்கரணன் - உள்ளத்தில் இருப்பவன்.

323. பெட்பின் - விருப்பத்துடன். 'குளங்களில் உள்ள மீன்கள், சிச்சிலியும் (மீன் கொத்திப் பறவையும்) அஞ்சும்படி பாயும்' என்றது, இதில் மேற்கூறிய பொருளை வலியுறுத்தும் உள்ளுறை யுவமை.

324. சேணுடு-விண்ணுலகம். 'கோ' என்றதும் அதனை; இதிற் சோலைக்குச் சொல்லப்பட்ட சிறப்பும் அவ்வாறு இதில் மேற்கூறிய பொருளை வலியுறுத்துதல் காண்க-

325. இதன்கண் முருகப் பெருமானது படை வீடுகள் ஆறும் வந்தமை காண்க.

326. இகம்—இம்மை. பரம்—மறுமை. மகத்துவம்—பெருமை. திட உள்ளே-உறுதி வாய்ந்த மனத்திலே.

327. 'மணம் பொருந்திய கொன்றை மலரோடு மணம் இல்லாத அறுகம் புல்லையும் உன் தந்தை சூடியதுபோல' என்க.

328. நிழல்—கருணை.

## தாலாட்டு

இஃது ஆகுபெயராய் முன்னர், தாலாட்டுதற்கண் பாடப் படும் பாடல்களுக்கு ஆகி, பின்னர் அதனுல் ஆகிய நூலுக்கு ஆயிற்று.

329. 'கம்பை நகர்மேல்' என்பதில் உள்ள 'மேல்' என்பது ஏழனுருபு. ஆட்டு உவந்து-ஆடலை விரும்பி. இதுவே-இதனையே (தாளையே). வேட்டு உரைக்க வேண்டும்-விரும்பித் துதித்தல் வேண்டும். 'இது' என ஒருமையாற் கூறியது 'திருவடி' என்னும் பொதுமைபற்றி.

330. பூ - அழகு. பொன் நகரம் - இந்திரன் நகரம். கா-சோலை. ஓகாரம் உயர்வு சிறப்பு; இதனை இதன்கண் உள்ள செய்யுட்கள் எல்லாவற்றின் இறுதியிலும் உள்ள எல்லா ஓகாரங்கட்கும் கொள்க. இச்செய்யுட்கள் குறட்டாழிசை.

333. இலஞ்சியம்—பொய்கையில் தோன்றிய பொருள்.

334. பார் திசை-பூமியில் உள்ள திசைகள்.

336. தாள்-பாதம். நடையின்-நடையினால்.

337. இதில் தேவர்களுக்கு மகாமேரு மலையில் விசுவரூபம் காட்டிய செயல் கூறப்பட்டது.

339. தகர்-ஆடு.

340. திசைமுகன் - பிரமன். காத்திரன் - திருமேனியை உடையவன்.

343. கல் அகம் — மலையின் இடம். கீண்டவன் — பிளந்தவன்.

344. மிண்டு - திண்மை. வீர மொய்ம்பன் - வீரவாகு. சேகரன் - தலைவன்.

345. நனவு-விழித்திருக்கும் நிலை. சயந்தன், இந்திரன் மகன். நேரியன்-நேர்மையுடையவன். சீரியன்-மேலானவன்.

346. அயில்-கூர்மை.

347. கண் ஆர்-கண்ணால் பருகுகின்ற.

348. அதிபன்-தலைவன்; இது, முதல் நீண்டது.

349. மெய்ப்பிடித்த-மெய்யாகப்பற்றிய.

350. கார் ஆணவம் - கரிய (இருள்வடிவான) ஆணவ மலம்.

351. சிற்குணன்-அறிவாகிய குணத்தையுடையவன்.

352. செம்மை + ஆ = சேதா. ஆ-பசு.

354. கன்று-கோபியாத.

357. பொதியமலைச் சித்தன், அகத்திய முனிவர். சிற்பரன்-அறிவுவடிவான மேலான பொருள்.

358. முருகன் சங்கப் புலவர்களது மாறுபாட்டை நீக்கிய வரலாற்றினைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க.

359. கால் துணை-இரண்டு பாதங்கள். துல்லியன். உவமையாய் இருப்பவன்; 'உயர்ந்தவன்' என்றபடி.

360. கல்லாரம்-நீலோற்பலம், பூதரம்-மலை (திருத்தணிகை).

361. சோபனன்-சுபமுடையவன்.

362. கந்த மலை-கந்த கிரி.

364. 'ஒளித்து வந்து நகை கூர்பவன்' என இயையும். விளையாட்டால் மறைந்து வந்து நகைத்தலைக் கண்டு தாய் ஊடலை மறந்தாள் என்க.

367. 'கோலம்' இரண்டில், முன்னது பன்றி. அது, திருமால் கொண்ட வடிவம். பின்னது வடிவம்; அது சிவபெருமானைக் குறித்தது. கருவூலம்-நிதி அறை.

372. மோகனன்-மோகிக்கச் செய்பவன்; வசீகரிப்பவன்.

375. கழை-கரும்பு. பசும் பால்-கறந்த பால்; 'கறந்த பால் கன்னலொடு நெய் கலந்தாற் போல' என்பது திருவாசகம்.

376. வைப்பு-சேம நிதி.

377. கனகம்-பொன். செம்மணி-மாணிக்கம். விண்மணி-சூரியன்.

378. பொற்பு அகம்-அழகிய கோயில்; இஃது அதில் உள்ளவனைக் குறித்தது.

379. 'பசுமந்தன் நகர்' என்பது இரங்கோனில் கம்பையை அடுத்துள்ளது. தெருள்-தெளிவு.

380. 'தாலாட்டி இன்பமுறுமாறு அருள் செய்வன்' என்றது, 'குழந்தை வடிவாய் இருந்து அருள் புரிபவன்' என்றபடி. மன்ற-நிச்சயமாக.

## திருப்பள்ளியெழுச்சி

எழுச்சி-எழுதல்; அஃது அதனைச் செய்விப்பதாகிய பாடலை உணர்த்திற்று. இது முற்காலத்துப் பாடாண்டிணையுள் 'துயிலெடை நிலை' எனப்பட்டது. இது நின்றேத்துவாராகிய சூதர் கூறுவதாகும். துயிலுதலும், விழித்தலும் கடவுட்கு இல்லையாயினும், அன்புமேலீட்டால் அவை உளவாக ஏற்றி வைத்துப் பாடுவர். இவ்வாறு முதற்கண் பாடினார் ஆளுடைய அடிகள் என்க.

381. கடி-விளக்கம். கும்பம்-குடம். பெருமாட்டி, காமாட்சியம்மை. பரிதி-சூரியன். பண்ணவன்- தேவன்.

382. ஊழின்-முறையாய் உள்ள. 'வரவு இசைப்பது' என இயையும். குணதிசைக் குன்று, உதயகிரி. ஆழி-சக்கரம் ஆர்த்தன-பறைசாற்றித் தெரிவித்தன.

383. மொய் இரவு-செறிந்த இருள். 'ஓவியது' என்பது ஈறு குறைந்தது; 'நீங்கியது' என்பது பொருள்.

384. இசை அன்பர்கள்-ஏற்றுக் கொண்ட அடியார்கள்.

385. நற்போதம்-நல்லறிவு. தற்போதம்-'யான்' என்னும் செருக்கு. விபாகரன்-சூரியன். அற்போது-இராக் காலம்; தாரகை-விண்மீன். அல்லோன்-1 இரவுக்குரியவன் (சந்திரன்). 2பகலுக்குரியவன் அல்லன். எல்-சூரியன்.

386. பொங்கர்-சோலை. சிலம்பின-ஒலித்தன. சதி-நடனப் பெயர்ச்சி. 'மயில்' என்றது, அதன் தோகையிற் கண்களை. நயனம்-கண்.

387. புங்கவர்-தேவர். அந்தர துந்துபி—விண்ணுலகப் பேரிகை.

388. கமல வல்லி-திருமகள். கார்வண்ணன்-திருமால். சசி-இந்திராணி. இமம்-பனி; குளிர்ச்சி. நந்தனம்-நந்தவனம்.

389. 'நின் ஆகமம்' என்றது, குமாரதந்திரத்தை. திருப்பள்ளித் தாமம்-பூமாலை. துகில்-ஆடை, இருக்கு-வேதம்.

390. அருள்வான்-அருள் செய்தற்பொருட்டு.

## பெரிய கட்டியம்

கட்டியம்-புகழுரை; இதற்குப் பெருமையும் சிறுமையும் அடியளவு பற்றி வருவன என்க. கட்டியம் கூறுபவரைக் 'கட்டியக்காரர்' என்பர்.

391- களபம்-யானை. வதனம்-முகம். மயல்-மயக்கம்; ஐயம். அனகம்-தூய்மை. தினகரன்-சூரியன். இச் செய்யுட்கள் யாவும் ஈற்றெதுகை பெற்றமை காண்க.

392. உந்து-பின் நின்று தள்ளுகின்ற. வரை—கிரௌஞ்ச மலை. விரை-வாசனை. குரவு-குராமலர். ரஞ்சிதம்-மகிழ்ச்சி.

393. உவரி-கடல்; 'உவரிப் புனல்' என மாற்றுக. வனம்—அழகு; இது, 'வன்னம்' என்பதன் இடைக்குறை; இனி, 'காடு எனலுமாம். 'இன்னல்' என்பது இடைக்குறைந்து நின்றது. சினகரம்—கோயில். ககனமுகடு—ஆகாயத்தின் உச்சி.

394. பங்கேருகன்-தாமரை மலரில் இருப்பவன்; பிரமன். விதி-படைத்தல் தொழில் செய்தவன். அகரம் 'அ' என்னும் எழுத்து. அங்கே-அப்பொழுதே. சிகரம்-மலை. சிகரி-கோபுரம். புளகிதம்-பூரித்தல். களபம்—கலவைச் சாந்து. பரதம்—நடனம்.

395. பணிகள்-பாம்புகள். உகளம்-இரண்டு. நுதி-நுனி, சிகி—மயில். நசை-விருப்பம். உடு-விண் மீன்.

396. வை-வைத்த. சுரபதி-இந்திரன். சுர கரி-தெய்வ யானை. 'முகம்' என்புழி உம்மை தொகுத்தலாயிற்று. அயர்-செய்கின்ற. நரர்-மனிதர். விபுதர்-தேவர்.

397. உகளம்-இரண்டு.

398. வரர்-முனிவரர். 'அஞ்சேல்' என்பதை ஒவ்வொருவருக்கும் சொல்பவன் என்க. விஞ்சிய-மிகுந்த; இஃது உடைமையின் வினையை உடையான்மேல் ஏற்றிக் கூறியது. குருகு-பறவை; கிரௌஞ்சம்.

399. மயிலே-மயிலம். கதிரை—கதிர் காமம். கமலே-திருவாரூர். உதாரன்-வள்ளல். நகு-ஒளி வீசுகின்ற. சமரபுரி-திருப்போரூர். செக வனிதை—நில மகள்.

400. ஒன்று-ஒன்றுவாய்; பலபடக் கூறி. துலையின் உறுதல்-சமமாய் நிற்றல். அரி—திருமால். திரு-இலக்குமி. ஓகை-மகிழ்ச்சி. கோலன்—அழகுடையவன். பணிகள் ஆபரணங்கள். 'அகிலின் துகள்' என்க. உறு-மிக்க. அளா—கலக்கின்ற.

## சின்ன கட்டியம்

401. துங்கம்-உயர்ச்சி. மன்-தலைவன். ஈண்டும் ஈற்றெதுகை வந்தமை யறிக.

402. 'ஓங்குலகம்' என்பது குறுகி நின்றது.

403. நீதன்-நீதியை யுடையவன். விநோதன்-விளையாடுபவன்.

405. இன்று-இன்றி- விலாசம்-ஒளி.

406. நித்தன்—அழியாதவன். சித்தன்—அற்புதங்களைச் செய்பவன். அத்தன்-தந்தை. கத்தன்-தலைவன்.

407. கம்-விண்ணுலகம்.

410. சிகியின் வையா-மயிலாகிய ஊர்தியை உடையவனே.

## குயிற் பத்து

அகத்திணைப் பாடல்களுள், தலைவன் பிரிவினை ஆற்றுளாய தலைவி, அவ்வாற்றுமை மீதூர்ந்த வழிச் சிறிது ஆற்றுதற் பொருட்டுக் குருகு, கடல் முதலியவைகளை நோக்கிச் சில சொற் சொல்லுதலாகச் செய்யுட்கள் செய்யப்படும். அச்செய்யுட்கள், 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்னும் துறையினவாம். அத் துறைதானே, காமக் குறிப்பு இல்வழியும் உளதாகப் புனைந்து, பாடாண்டிணையுள் வைத்துப் பாடப்படும். அம்முறையால் தோன்றியதே 'தூது' என்னும் பிரபந்த வகை. அவ்வகை வாழ்த்தினும் வருமாகலின், அவ்வாறு வந்தனவே குயிற் பத்து,

கிளிப்பத்து, வண்டுவிடு தூது என்பன. அவற்றை அவ்வாற்றான் முதற்கண் அருளிச் செய்தாரும் ஆளுடைய டிகளே என்க.

411. சீதம்-குளிர்ச்சி. கோகிலம்-குயில். கேண்மையின்-நட்பினால். மீதலம்-மேலுலகம்.

412. வேடை-வெப்பம். சுருதி-இசை. குலாவ-விளங்க.

413. அற்புதம்-வியப்பு. உய்தி-பிழைப்பாய். கலிக்கும்-ஒலிக்கின்ற. சுக+உதயம்=சுகோதயம்.

414. பெற்றதாய், குஞ்சு பொரிக்க அறியாமையால் தன் முட்டையைக் காக்கையின் கூட்டில் இட்டது; அதைத் தன் முட்டை என்று மயங்கி அடைகாத்துக் குஞ்சு பொரித்து வளர்த்த காக்கை, பின்பு அதைக் குயிற் குஞ்சு என்று அறிந்து அலைத்துத் துரத்தியது; ஆதலின், 'பெற்ற தாயும் வளர்த்த தாயும் போக்கினர்' என்று இவ்வாறு கூறப்பட்டது.

415. 'ஒப்புவமை' என்பது, 'ஒப்பாகச் சொல்லப்படும் பொருள்' என்னும் பொருட்டாய் நின்றது. பெட்பு-விருப்பம்.

416. காணி-உரிமை நிலம். விண்டனம்-சொன்னோம்.

417. நயனத்தின்-கண்ணால். உருவிலி-உருவம் இல்லாதவன் (அநங்கன்). ஆம்—ஆகிய. காகளம்—ஊது சின்னம்; 'மன்மதனுக்கு ஊது சின்னமாவது குயில்' என்க. 'மாமன்' என்றது, தேவேந்திரனை. சேமன்-சேமநிதியாய் உள்ளவன்.

418. 'பூரணானந்தம்' என்பது குறுகி நின்றது.

419. சாகை—வேதத்தின் உட்பிரிவுகள். தத்துவம்—முப்பத்தாறு கருவிகள். நாகர்-சுவர்க்கலோகத்தவர்; தேவர்.

420. ஆகம்-மார்பு.

## கிளிப்பத்து

421. சுகமாய் உருவுகொடு-இன்பமே வடிவமாகக் கொண்டு. குதுகலம்-மகிழ்ச்சி.

422. புனம்-தினைக் கொல்லை. 'ஆம்' என்பன இரண்டும் முற்றுக்கள். இடைமின்-இடையாகிய மின்னலை உடையவள்; வள்ளியம்மை. அனையும்-போலும்; இதுவும் முற்று. 'மகிழ்வு

மெய்' என மாற்றுக. நினைவினன், முற்றெச்சம். 'ஓர் தன்புடையே அருளும்' என மாறுக. அருளும்-கொடுப்பான்; இதற்கு எழுவாய் முருகன்; அப்பெயர் பின் வருகின்றமையின் கூறிற்றிலர். முருகன், 'இது வள்ளியம்மை மனத்திற்கு உகந்த தினைப்புனத்தின் கிளியுமாகும்; அவளோடு முறையாகப் பேசுகின்ற கிளியுமாகும்; சொல்லால் அவளோடு ஒத்ததுமாகும்; ஆகையால், இதனால் அவள் மகிழ்தல் திண்ணம்' என்னும் நினைவினனாய் உன்னையே அவளுக்குப் பரிசிலாகத் தருவன்; இப்பேறு உனக்குத் தானே வாய்க்கின்றமையின், இப்பூமியில் உன்னையொப்பார் யாவர்' என்பது இதன் பொருள்.

423. கரு மலம்-ஆணவ மலம். கமை பெறு-தவத்தால் பெறுகின்ற. சுதை-அமுது. 'கலை' என்றது, 'சந்திரன்' என்றவாறு.

424. இலஞ்சியம்—பொய்கையில் தோன்றிய பொருள்.

425. தனம்-செல்வம். அனவரதமும்-எப்பொழுதும்.

426. சுர்கரி-தெய்வ யானை. நர அரி-நரசிங்கம்; திருமால்.

427. நவநிலை-நவந்தருபேதம். சரணர்கள்-அடியார்கள்.

428. சிகி-மயில். நுங்கு-உண்ட; அழித்த. அயில்-வேல். குசுமம்-மலர். கதம்பம்-கடம்பு. 'இவைகளாகிய அறிகுறியொடு' என்க. அறிகுறி-அடையாளம்.

429. அலர் அணை வதி-மலராகிய ஆசனத்தில் இருக்கின்ற. கரியன், திருமால். என் பதம்-எந்தப் பதவி; ஓகாரம், அசை நிலை.

430. பஞ்சரம்-கூடு. இருகிளி: தெய்வயானையும் வள்ளியும். தம், சாரியை. பதி-கணவன்.

## வண்டுவிடு தூது

431. 'முருகோனே' என்பதில் உள்ள ஏகாரம், சிறப்பு. குலாவும்-விளங்குகின்ற. ஏழை-எளியவள்; பெண்; இரு பொருளுங் கொள்க. தேன்-வண்டு.

433. 'குறிஞ்சிக் கிழவனாதலின், குறத்தியையே விரும்பு

வான்; உன்னை விரும்பான்' என்பதாம். 'நான் குமரன் என்றால், அவர்கள் கிழவன் என்கின்றனர்', என்பது நயம்.

434. 'எளியேன்' என்றது முருகன் கூற்று. அளி-வண்டு; இச் சொல்லுக்கு, 'அருள்' என்னும் பொருளும் உண்டன்றே என்றவாறு.

435. பதம்-பதவி; பொழுது, பாதம். 'பதத்தின்(பொழுதில்) போய் வாராய்' என இயைக்க. அறுபதம்-வண்டு.

436. வேழம்-கரும்பு. கரும் புள்-வண்டு.

437. காத்தும்-காப்பாற்றுவோம். 'கைவிடேம்' என்று இன்ப மயல் தந்தானை' என இயைக்க. கம்பைக்கு-கம்பையில் உருபு மயக்கம். ஏத்தும்-ஏத்தப்படுகின்ற. தும்பி வத்திரன்-யானை முகன். கோத்தும்பி-அரச வண்டு. கூர்ந்து-(அன்பு) மிகுந்து.

438. கரகத்து உற்ற(தோன்றிய) முனி, அகத்தியர். புது கரம் புதியதொரு நஞ்சு. மென்கால்-தென்றற் காற்று. 'ஆழியும் மென்காலும்' என்க. போழ்காம்-வருத்துகின்ற செயல். ஓர் இரண்டு ஆர் பது-பன்னிரண்டு. மதுகரம்-வண்டு.

439. இரும்பு ஏய்-இரும்பு போன்ற. நிகர்-நிகர. 'சோர்ந்த' என்பன முற்றுக்கள். 'கரும்பே அமுதே' என்னும் ஏகாரங்கள் எண்ணுப் பொருள. கானம்-இசை. சுரும்பு-வண்டு.

440. பூ ஏய்-பூப் போன்ற. மா-வண்டு. இதனுள் வண்டிற்குரிய பரியாயப் பெயர்கள் பலவும் வந்தமை காண்க.

## எச்சரிக்கை

இஃது 'ஓம்படை' எனப்படுவதாகும். அஃதாவது, பாட்டுடைத் தலைவற்கு எவ்வாற்றானும் தீங்குவாராதபடி பாதுகாப்புக் கூறுதல்.

446. மந்தாகினி-கங்கை. கணி-அழகு.

447. கும்பாரியன்-அகத்திய முனிவர்.

448. சுரவாரணி-தெய்வ யானையம்மை.

449. பதி-தலைவன்.

450. மணி-மாணிக்கம். 'அன்னம்' என்பது, 'அனம்' என இடைக்குறைந்து நின்றது. அளி-கருணை.

451. சாந்தன்-சாந்த வடிவினன். 'சேந்தன்' என்பது முருகனுக்கு ஒரு பெயர்.

452. காலாயுதம் - கோழி. சீல + ஆகரம் = சீலாகரம்; 'ஒழுக்கத்தின் இருப்பிடம்' என்பது பொருள்.

## வண்ணத் தாழிசை

453. வெண்பொடி - திருவெண்ணீறு. அங்கதம்-தோள் வளை (வாகுவலயம்). சிகரம் - மலை. குரு - நிறம். சரண்-பாதம். பிடி-தெய்வயானை.

454. கமர்-நிலப் பிளப்பு. 'ஆசை' என்றது, ஆசை சென்ற வழி' என்றவாறு. 'வெறுவியேன்' என்பது, 'வெறியேன்' என மருவிற்று; 'ஒன்றும் இல்லாதவன்' என்பது பொருள். பரிதாபம்-பெருந்துன்பம். மறுகு-தெரு.

455. மக மாயை-பெரு மயக்கம். நின் + தாள் எனப் பிரிக்க. ககனதிபன் — இந்திரன். வரர் - முனிவரர். கரியோன்-திருமால். விதி-பிரமன்.

456. மாண் ஆர் - மாட்சிமை பொருந்திய. எழு-ஓங்கி எரிகின்ற. முரண்-மாறுபாடு; பயனற்றது. சடம்-உடல். சேண்-பரந்த. 'ஆர்வத்தின்' என்பது தொகுத்தலாயிற்று. நகம்-மலை. கெவி-குகை. கழறு-சொல்லுதல்.

457. வெந் தானவர் - கொடிய அசுரர். எந்தாய் - எந்தந்தையே. அண்டர்கள் - தேவர்கள். கம் + தாவிய எனப் பிரிக்க. கம்—ஆகாயம்.

458. நோன்பு - விரதம். நுதி-முனை. நோன்-வலிமை. கடவுள் நதி-ஆகாய கங்கை. ஆகாய கங்கையில் உள்ள அன்னப் பறவை கம்பை நகர்ப் பொய்கைத் தாமரை மலரின்மேல் இருத்தல், கலைமகள் இன்னமும் கலைகளைப் பெறவேண்டி முருகனை நோக்கித் தவம் செய்தல்போன்றுள்ளது என்பதாம்.

அன்னம் வெண்ணிறமுடையதாதலின், அது வெண்ணிற முடைய கலைமகள்போலக் காணப்படுவதாயிற்று.

459. எம் நல் ஆய்-எங்கள் நல்லதாய். சுர வேழம்-தெய்வயானை. 'மிகும்' என்பது விரித்தலாயிற்று.

460. 'ஆற்றுக்குழி மடி' என்றது உந்தியை. 'கொடியார்' என்றது, பொது மகளிரை என்க.

461. சகம்-நிலம். ககனம்-வான்.

462. வனசம்-தாமரை. பனசம்-பலா.

## ஊசல்

463. அருணன்-சூரியன். கிரணம்-ஒளி. வருணம்-நிறம்.

464. சுரோத்திரம் — காது. கதம்பாரம்—கடப்பமாலை.

466. மாதுலன்-மாமன்; திருமால்.

467. கோமகன்-இந்திரன். வேத்திரம் பிரம்பு. மருத்து-வாயுதேவன். அளகையாளி-குபேரன். அடைப்பை - வெற்றிலை பாக்குப் பை. காமன்-மன்மதன். படியகம்-தம்பலக் கலம்.

468. மாமி - திருமகள். புலோமசை-இந்திராணி, பன்னியர்-பத்தினியர்.

469. புங்கவர்கள்-தேவர்கள்.

470. அண்டர்பதி-இந்திரன். குலவ-விளங்க.

471. பனவ சிகாவலர் - அந்தணர்களுட் சிகைபோலும் வல்லவர். இந்நூல் செய்வித்தோர் தனவைசியராதல் அறிக. காராளர் - வேளாளர். அனவசிய - அன்னம்போலும் வசீகரமான.

472. பகல் — சூரியன். அதனை அழைப்பது கோழி. இபமின்-தெய்வயானையம்மை.

## பெருங்கழிநெடில் விருத்தம்

473. 'எங்கோனாகிய நின்னுடைய' என்க. எவன்-எவ்வாறு. மலர் மலை-மலர்கின்ற மலை; தோள். கலை-ஆடை.

துகிர்-பவழம். கய வல்லிகள்-தெய்வ யானை வள்ளியர். இதனுட் கடலில் உள்ள பொருள்கள் பலவும் கூறப்பட்டமை காண்க.

474. வியன்-விரிவான. உளுற்றுதல்-செய்தல். பேத வாதர்-ஒற்றுமை இன்றிக் கலாய்ப்பவர். பதி-தலைவன்.

475. அவலம்-பயனில் செயல். வனசன்-தாமரை மலரில் இருப்பவன், பிரமன். மகவான்-இந்திரன். குணில்-குறுந் தடி. கண்ணன், தன்னைக் கொல்லுதற் பொருட்டு விளங்கனி யாகவும், பசுக்கன்றாகவும் உருவங்கொண்டு வந்திருந்த அசுரர் இருவரில் கன்றாய் இருந்தவனை எடுத்து விளங்கனியாய் இருந்த வன் மேல் எறிந்து இருவரையும் அழித்த வரலாற்றினைப் பாகவதத்துட் காண்க.

476. பிழைப்பான்-பிழை செய்வான். சசிமான்-இந்திராணியாகிய பெண்டு.

477. பொய்யாமொழி-பொய்யாமொழிப் புலவர். தாரா கணம்-நட்சத்திரக் கூட்டம்.

478. மாழ்கி-மயங்கி. விடுத்து-நீங்கி. நாதம் எல்லாத் தத்துவங்களுக்கும் மேல் உள்ள தத்துவம். இலஞ்சியம் — (பொய்கையில் தோன்றிய) பொருள். காதும்-வருத்துகின்ற. பவம்-பிறப்பு. கனகப் பொருப்பு-பொன்மலை.

479. கோளரி-சிங்கம்.

481. வதியும்-தங்குகின்ற. பதி-ஊர். நிறை-மன அடக் கம். பொறை-பொறுமை. குறி-குறிக்கோள், கலம்-மரக் கலம்.

482. வரி-அழகு. உம்பர்பதி-தேவர்கட்குத் தலைவன்; இந்திரன். ஆமலகம்-நெல்லிக்கனி

## அடைக்கலப் பத்து

483. கஞ்சம்-தாமரை. வாவி-பொய்கை. வளை-சூழ்ந்த.

485. ஏழையினேன் முன்னர்-எளியேன் கண் முன். விதி-முறைமை. வரதன்-வரம் கொடுப்பவன்.

486. பார்க்கு-பூமியில் உள்ளவர்கட்கு.

487. மகத்துவம்-பெருமை. இகம்-இம்மை. பரம்-மறுமை. 'காங்கேயன்' என்பது குறுகி நின்றது; 'கங்கை மகன்' என்பது பொருள். தகி-பொழுது.

488. காமாதி: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் குற்றங்கள்.

489. மான்-பெண். தரும் ஆன்-ஈன்ற பசு.

## போற்றிக் கலிவிருத்தம்

493, பொன்-திருமகள்

494. வரும் முகத்த-யாவும் தோன்றும் வாயிலையுடைய. மண் மகள்-நிலமகள். திருமுகத்தின்-அழகிய முகம் போல. மரு-வாசனை. அளி-வண்டு. 'வாழ்த்தும்' என்பது, 'கடம்பு' என்பதனோடு முடிந்தது.

495. வாக்கு மங்கை-கலைமகள். அம்பகம்-கண்.

496. 'பொற் பருப்பதம்' என்பது, எதுகை நோக்கி மெலிந்து நின்றது. பருப்பதம்-மலை. முன்பன்-யாவர்க்கும் முன்னே யுள்ளவன்.

497. வை-கூர்மை.

499. அயில்-வேல்.

500. சிட்டன் — மேலானவன். சீறடி—சிறிய பாதம். வைத்தல்-வைத்து ஏறுதல்.

501. சித்திரா பௌர்ணமிப்போது கம்பையில் கொடியேற்றத்தோடு கூடிய பெருவிழா நடைபெறுவதென்க. குக்குடம்-கோழி.

502. விநோதன்-மகிழ்ச்சியைத் தருபவன்.

## திருப்புகழ்

இப்பெயருடைய நூல் அருணகிரிநாதர் அருளிச் செய்தது

என்பது பலரும் அறிந்தது. அது சந்தப்பாக்களால் ஆகிய தாதலின், 'திருப்புகழ்' என்னும் பெயர் பிற்காலத்தில் சந்தப் பாக்களையும் குறிப்பதாயிற்று. ஈண்டும் அவ்வாறே கொள்க. இச்செய்யுள் முழுதும் 'மடக்கு' அல்லது 'யமகம்' என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காண்க.

'வண் தாள் இணையில் இவண் தாழ் அடியரின்' எனவும், வந்து ஆர்வம் மிக உவந்தார் செயும் ஓர் தவந்தான்' எனவும், 'தண்டா வர, சகத் அண்டா' எனவும், 'தந்து ஆர் இடையினர் தம் தாழ் சுகம்' எனவும், 'பண்டு ஆலம் அமுது பண் தாணு' எனவும், 'சுபம் சார் குறமகள்' எனவும், 'நல் அகண்டா' எனவும், 'கம் பாய் நிலன் அதிகம் பாவு நெல் விளை' எனவும் பிரித்துப் பொருள் கொள்க.

தண்டா வர-நீங்காத மேன்மையுடையவனே. சகத் அண்டா—நிலமும் வானமுமாய் உள்ளவனே. தந்தாவளம்—யானை. தந்து ஆர்-நூல்போன்ற பண்டு-முன்பு. ஆலம்-நஞ்சு. தாணு—சிவபிரான். பண்டார விபவ—கருவூலத்தில் உள்ள செல்வம் போன்ற. பஞ்சானனம்-சிங்கம். சுபம் சார்-நன்மை அமைந்த. பொடி கண்டு—துகள்படச் செய்து. அகண்டா—வரையறுக்கப் படாதவனே. கம்-நீர். பாவு-பரவிய.

## வஞ்சித்துறை

505. தானம் - இடம்; அதுவே நமக்குச் செல்வமாவது என்பதாம்.

506. உம்பர்-தேவர்.

507. சேய்-முருகன். 'வினையாகிய நோய்' என்க. அது, பகுதிப் பொருள் விகுதி.

508. வேள் தன்னை எனப்பிரிக்க. அன்னம்-சோறு.

510. வீறு-உயர்ந்த.

511. கொற்றம்-வெற்றி.

512. இயலும்-என்றும் நிலை பெறுகின்ற.

513. வேள்-முருகன். குஞ்சரி—தெய்வயானை.

## வாழ்த்து

514. கார்-மேகம். ஆன்-பசு. பனவர்—அந்தணர். அடல்-வலிமை. வழாது-தவறுது. குக்குடம்—கோழி.

## பால தண்டாயுதக் கடவுள் பதிகம்

காப்பு: மணி—இரத்தினம். பசுமந்தான் பதி, கம்பையை அடுத்துள்ளது. கம்பையைக் குமரகோட்டமாகக் கருதுதல் போலப் பசுமந்தான் பதியைப் பழநியாகக் கருதி வழிபடுவர் தனவைசியர் என்க. பாணி—கை.

4. அகர முதல் மூவெழுத்து: அகரம், உகரம், மகரம். சிகரம்—தலையாயது. 'குடிலை' என்றதும் அவற்றையே என்க.

5. சரதம்-உண்மை. நிரதிசய ஆனந்தம்—வரம்பில் இன்பம். விகசித்தல்— மலர்தல். பரதம்—நடனம்.

6. புலர்வது—விடிவது. இகல்—போர்.

8. தந்திரம்-யாமளம் முதலிய அணங்கு நூல்கள். ஊதை-காற்று. நந்தனன்-மகன்.

10. சாசுவதம்-நிலைபேறு. பெட்பு-விருப்பம். பிறங்க-விளங்க. சத்துவக் கூத்து-இன்ப நடனம். 'அஃது ஆடும் அயல்' என்றது சிதாகாசத்தை, சத்திகள் மூன்று: ஞானம், இச்சை, கிரியை.

11. இச் செய்யுளில் ஆசிரியர் தாம் தனவைசியரை அணுகிய காரணத்தை இனிது புலப்படுத்தியிருத்தல் காண்க.

## வாழி

பதம்-பாதம். பிடி-தெய்வயானை.

——

உ

சிவமயம்

# திருக்கச்சிக் குமரகோட்டக் கடவுள்

# திருவடி மாலை

## இருகோட்டு விநாயகர் காப்பு

---

### வெண்பா

பொருளார்ந்த கச்சிநகர்ப் பொற்குமர கோட்டத்
தருளார்ந்த செவ்வே ளடிமேற்—றெருளார்ந்த
வார்வந் தகுஞ்சரத்தை யற்புதமா வோதவள்ளி
நேர்வந்த குஞ்சரத்தை நேர்.

### நூல்

### கட்டளைக் கலித்துறை

1 பூமேவு பந்தரிற் கல்யாணங் கொள்ளும்
பொழுதணைமேற்
காமேவு தெய்வப் பிடியுங் குறமானுங்
கட்கடையாற்
றூமேவு மன்புட னோக்கத் தழைத்தன
தண்கச்சியுட்
டேமேவு காமாட்சி யேகம்பர் சேயன்
றிருவடியே.

2 கந்தா சரண முருகா சரணங்
கங்கைபெற்ற
மைந்தா சரணஞ் சரவணப் பொய்கையில்
வந்துதிக்கு

மெந்தாய் சரணங் குமரா சரணமென்
றேத்துநர்க்குச்
சிந்தா மணிநிதி யாங்கச்சி வேலன்
றிருவடியே.

3 பூமண் டலமக ளானன மண்டலம்
போற்றுந்தொண்டை
மாமண் டலம்திற் கண்மண் டலங்கச்சி
மன்னுமணி
யாமண் டலங்கும ரக்கோட்ட மன்பர்க்
கருண்மண்டலந்
தேமண் டலஞ்சுயஞ் சோதி குகேசன்
றிருவடியே.

4 உரத்திற் பெரிய தவத்திற் சிறந்த
வுயரடியார்
சிரத்தின் னயனத்தில் வாக்கிற் புயத்திற்
றிகழ்மடியிற்
கரத்தின் மனத்தி லறிவி லுயிரிற்
கலந்துபத்தித்
திரத்தின் விழைவன கச்சிக் குகேசன
றிருவடியே.

5 காரார் பொழிற்கச்சிக் கந்தைய பன்னிரு
கையுடைநீ
யோராரைங் கைய னௌவெனை யெண்ணற்ச
வீரறுகை
யோராய் முடிமிசை யென்று கணேச
னுரைக்குமுன்சேய்
தேராய் சுதங்கையு முண்டெனக் காட்டுந்
திருவடியே.

6 வேலா வலய வுலகத்துக் காஞ்சி
வியனகர
மேலாம் பசுவாம் வளர்கும ரக்கோட்ட
மென்முலையாம்
பாலா முருக னடியர்கள் ஞம்பொழி
பாற்சுவையாஞ்
சேலார் விழிவள்ளி சேருமச் செவ்வே
டிருவடியே.

7 பித்தாந்த முள்ளத்தி னென்று முணரப்
பெருமனிதர்
முத்தாந்த மெங்ஙன மெய்துவ ரென்று
முதிரருளாற்
சத்தாந்தண் கச்சியிற் சீர்க்கும ரக்கோட்டந்
தங்குவன
சித்தாந்த மோர்ந்தன்ப ருய்யக் குகேசன்
றிருவடியே.

8 பாதல மெவ்வள வவ்வள வேயும்
பரவியிந்தப்
பூதல மெவ்வள வவ்வள வேயும்
பொலிந்துமற்றை
மீதல மெவ்வள வவ்வள வேயு
மிளிருவன
சீதள வாவி மலர்க்கச்சி வேலன்
றிருவடியே.

9 நன்றன மீந்து பசிதீர்க்குங் காஞ்சி
நகரினருட்
குன்றன வண்கும ரக்கோட்ட மேவுங்
குகேசன்முடி

நின்றன வேழண்டத் தப்பாலுந் திண்புய
நீடிகந்தஞ்
சென்றன பாதல மேழையுந் தாண்டித்
திருவடியே.

10 இடப்பாலி னம்மை வலப்பாலி னப்பனு
மின்பொடுற்றுப்
படப்பா யொளிகொண் டிருவர் வடிவாய
பான்மையினாற்
கடப்பா ரெவரவர்க் கெல்லாஞ்சத் தன்சத்தி
காட்சிநல்குந்
திடப்பார் புகழ்கச்சி யாறு முகேசன்
றிருவடியே.

11 ஆண்டா னடிமைத் திறனோக்கித் தொண்டுசெய்
தன்புமிக்க
பூண்டார் மனத்திரு மாளிகை யென்றும்
பொலிவுபெறத்
தூண்டா மணிவிளக் காகி யிருளைத்
துரத்துவன
சேண்டா வொளிமதிற் கச்சிக் குகேசன்
றிருவடியே.

12 பெருநாத வோதக் கடல்வையத் தெற்கோர்
பெருந்துணையா
மொருநாதன் பாத மறிந்தில னென்பதொவ்
வாதவன்றன்
குருநாதன் பூங்கழல் கண்டன னென்றுட்
குளிர்ந்துருகித்
திருநாதன் காண்பன கச்சிக் குகேசன்
றிருவடியே.

13 பெருநிதி யியினும் வேண்டாத ஞானப்
பெருந்தகையோ
ரொருநிதி வண்கும ரக்கோட்டத் துண்டென்
றுறவவருக்
கிருநிதி யாவன முப்புவ னத்திணை
யேதுமில்லாத்
திருநிதி யாகிய கச்சிக் குகேசன்
றிருவடியே.

14 அரியும் பிரமனு மாயிரங் கண்ணனு
மண்டர்களும்
புரியுந் தவத்தரும் பூதல மாந்தரும்
போற்றியுளம்
பரியுந் தொழும்பரும் பார்க்குந் தொறுந்தொறும்
பற்றும்வண்ணந்
தெரியுந் தரத்தன கச்சிக் குகேசன்
றிருவடியே.

15 இருளாய விந்திரி யத்தெவ் வடக்கி
யியலறிவாம்
பொருளாய வீட்டி னிலானந்த நாட்டிற்
பொறையணிமே
லருளாய செங்கோல் செலுத்த வடியார்க்
கணிமுடியாந்
தெருளா யறிஞர் வளர்கச்சி வேலன்
றிருவடியே.

16 அஞ்சக் கரன்றந்த வர்ழியோர் மாலையி
னன்றணிந்தோன்
றுஞ்சக் கரவயி ரெட்டவா றக்கரன்
றோன்றியொரு

வெஞ்சக் கரந்தரி னன்றென்று மாயவன்
 வேயுமிரு
செஞ்சக் கரவிந்த மாங்கச்சி வேலன்
 றிருவடியே.

17 அத்தனைப் பார்த்தண்ணற் கீந்தெனக் கேது
 மளித்திலையா
லெத்தனை மாங்கனி வேண்டு நிவேதிப்ப
 னென்றெழுமு
னித்தனைத் தொண்டருங் கொண்டாட மாவடி
 யெய்தினவாஞ்
சித்தனை காணச் செழுங்கச்சிச் சேயன்
 றிருவடியே

18 நீட்டந் தருங்கச்சி பொன்னகர்க் கம்ப
 னிறைகற்பக
நாட்டம் பெறுமலர் காமாட்சி வண்காய்
 நவில்குமர
கோட்டம் புடைசூழடியார் கரத்திற்
 குலவுங்கனி
தேட்டந் தருங்குகன் சாரமன் னோன்பொற்
 றிருவடியே.

19 எத்திக்கும் போற்றுநன் மாக்குமரக்கோட்ட
 மேய்ந்ததடஞ்
சித்திக் குகேசன் செழும்புன லன்பர்
 தினந்தினமு
நத்திக் குழுமும்வண் பாட்டளி யாகி
 நயந்துண்ணவே
தித்திக்குந் தேனல்குஞ் செங்கஞ்ச மன்னோன்
 றிருவடியே.

20 பாரிய வானக மாந்திருக் காஞ்சிப்
பதியதனு
ளேரியன் மண்டில மாங்கும ரன்றளி
யின்றளியுட்
சூரிய ஞஞ்சண் முகப்பெரு மானந்தச்
சூரியன்றன்
சீரிய செஞ்சுட ராமப் பெருமான்
றிருவடியே.

21 தீங்கு தவிர்த்து முமையா டழுவத்
திருமுலையாங்
கோங்கு தருங்குறி நீங்கிட விம்மிக்
குளிரும்வண்ண
மோங்குகம் பேசன் கடிமார்பி னேறி
யுதைத்தயருந்
தேங்கும் புகழ்க்கச்சி வாழ்கும ரேசன்
றிருவடியே.

22 கருப்பத்தின் வைத்துல கத்தி னளித்துக்
களைதவிர்த்து
விருப்பத்தி னேடு வளர்த்தாடல் பேணி
வியாதியென்னு
முருப்பத்தி னீக்கினற் பாலீந்து முத்த
முதவனையாந்
தெருப்பத்தி மாளிகைக் கச்சிக் குகேசன்
றிருவடியே.

23 மாணுற்ற சங்கரன் கையி னடங்கி
வளைந்துமிக்க
நாணுற்ற பொன்மலை தன்னுமக் கேற்ப
நணுகினபோ

லேணுற்ற பொற்சிலம் பார்த்திடப் பூண்ட
வெழிலினவாஞ்
சேணுற்ற கச்சியுள் வாழ்கும ரேசன்
றிருவடியே.

24 வெங்காண் டிபன்றவத் தீசன் புகுந்ததி
வேடர்மின்ன
யங்கார்ந்த தேவி மகவா யணைத்தகை
யந்தனங்கண்
செங்காந்த ளங்கோங்கு பைஞ்ஞீலத் தோடுசெந்
தாமரையாந்
தெங்கார்ந்த சோலைகொள் கச்சிக் குகேசன்
றிருவடியே

25 சத்தான வன்பர் குழாங்க டினமுந்
தமதினிய
சித்தான மக்கட் கலங்காரஞ் செய்யத்
திகழுமின்ப
முத்தாந் தடத்தின் விகசிக்குந் தெய்வ
முளரியதாந்
தித்தாமென் றூடுமின் ஞர்கச்சி வேலன்
றிருவடியே.

26 துங்க மலர்ந்தவர் தோய்ந்தேத்தத் தாலாட்டிச்
சூழவண்டர்
தங்கம லத்திரைக் கையாட்டத் தெய்வச்
சரவணத்தி
லங்கம லத்திடை பூத்த கமலத்தி
லற்புதஞ்சேர்
செங்கம லப்பொலி வாங்கச்சிச் சேயன்
றிருவடியே.

27 நேர்த்தி யுடனொரு நன்றிசெய் தார்க்கெதிர்
நீட்டுவபோற்
கார்த்திகை மாதர் முலைக்கஞ்சம் வாயல்விக்
கண்ணுதவ
வார்த்தி யுடன்வர் வாயல்லிக் கீந்திடு
மம்புயமாஞ்
சீர்த்திகொள் காஞ்சியுள் வாழ்முரு கேசன்
திருவடியே.

28 தண்முக வம்மை தழுவி யெடுத்துத்
தழைத்தபின்முன்
விண்முகக் கார்த்திகை மாதர்பா லீந்துவெவ்
வேறறிந்த
சண்முகம் பன்னிரு தோள்கண்டுங் காணுத்
தகையினவாந்
தெண்முக ஞானியர் காண்கச்சிச் சேயன்
திருவடியே.

29 அகக்கண் ணுடையவ ராயினு மாகுக
வன்றிமற்று
முகக்கண் ணுடையவ ராயினு மாகுக
முன்னிவிர
னகக்கண் ணுடையெழி னேக்கிற் சுகக்கண்
ணணுகவைக்குஞ்
செகக்கண் ணுடைக்கச்சிச் சண்முக மூர்த்தி
திருவடியே.

30 சங்கார்ந்த நீர்க்கச்சி வண்கும ரக்கோட்ட
சண்முகவேள்
பங்கார்ந்த வள்ளியைப் பள்ளியி னேக்கிநின்
பங்கயத்திற்

கொங்கார்ந்த நீலம் வியப்பென நின்னுடைக்
கோகனகச்
செங்காந்த ளென்று வருடப் பெறுஞ்சேய்
திருவடியே.

31 பத்திக் குவந்து வரந்தருங் கற்பகம்
பாவலர்கள்
கத்திக் குவிக்கும் பலபுத் தகத்தின்
கருப்பொருணன்
முத்திக்குத் தாயக முத்தேவர் மார்பின்
முழுவயிரஞ்
சித்திக்கு நாயக மாங்கச்சி வேலன்
றிருவடியே.

32 வெப்பிய னேயவை யெத்தனை வந்து
விளைந்தனையே
கப்பிய போதினு மஞ்சாம லன்பாற்
கசிந்துருகிச்
செப்பிய வோங்கும் ராநம வென்று
செபித்திநெஞ்சே
திப்பிய மாமருந் தாங்கச்சி வேலன்
றிருவடியே.

33 வான்விழுந் தாலும் புவிபிளந் தாலு
மலையெழுந்து
தான்விழுந் தாலுங் கடல்பொங்கி னாலுந்
தளர்ந்துமிக்க
வூன்விழுந் தாலுந் துயர்நீக்கி யன்பரை
யுப்விப்பன
தேன்விழுந் தாலும் பொழிற்கச்சி வேலன்
றிருவடியே.

34 கையாற் றொழுதுகண் ணுற்கண் டுளத்தாற்
 கருதியன்பான்
மெய்யாற் பணிந்து தலையால் வணங்கிடு
 மெய்யடியா
ருய்யாற் றிடையூற்று வெய்யிற்கு நீழ
 லுதவுவன
செய்யாற்ற நெல்விளை கச்சிக் குகேசன்
 றிருவடியே.

35 மன்றுடு மானந்தக் கூத்தப் பிரானோர்
 வடதருவாப்
பின்றுழும் வேணி திசைமுற் றுஞ் சுற்றும்
 பெருவிழுதா
வென்று யுமைகண் டுவந்திடப் பற்றிநின்
 றேறுவன
தென்று மறைத்தடக் கச்சிக் குகேசன்
 றிருவடியே.

36 ஆக்கிய வண்டாண்ட கோடிக ளாடிட
 வாடுமயி
ருக்கிய தாளி னுடனெந் தரவினஞ்
 தஞ்சடையத்
தூக்கிய துத்திப் படமேலஞ் சேலெனச்
 சூட்டுவன
தேக்கிய சுந்தரக் கச்சிக் குகேசன்
 றிருவடியே.

37 மேவிக் குவலய மேலறஞ் செய்தாய்க்கு
 வேண்டுநிதி
வாவிக் குளிர்மனை யோனுக்கு வாணிக்கு
 மாமறைநூல்

காவிக் குவமைகொள் கட்டெய்வ யானைக்குக்
கன்னல்வள்ளி
தேவிக்குக் கற்பக மாங்கச்சி வேலன்
றிருவடியே.

38 நொந்தேன் குடும்பப் பெரும்பாரந் தாங்கி
நுவல்வதென்னே
தந்தே னுடலாதி மூன்று முனக்கெனத்
தஞ்சடைய
வந்தேனஞ் சேலெனச் செஞ்சிலம் போசை
வழங்குவன
சேந்தேன் பொழிபொழிற் கச்சியுள் வேலன்
றிருவடியே.

39 விச்சை முனிவரர் சூழ்வுறச் செய்ததோர்
வேள்விதனி
னச்சை நிகர வருந்தக ரைக்கண்டு
நாரதனுங்
கொச்சை மனனுட னேலிட மொய்ம்பன்
கொணர்ந்தவந்தச்
செச்சை யிவர்ந்தன கச்சிக் குகேசன்
றிருவடியே.

40 காரார் கடாமிசை யேமன் வரிலெனைக்
காத்திடென்றே
யோரா யிரந்திரு நாமத்தி லொன்றேனு
மோதவல்லா
ரரா யினுமவர் நேராயஞ் சேலென்
றருள்புரியச்
சீராய் நடப்பன கச்சிக் குகேசன்
றிருவடியே.

41 பூவென் றியாதேனும் பச்சிலை சாத்திப்
புலமையின் றிப்
பாவென் றியாதொரு புன்சொலிற் பாடினும்
பத்தியின் றி
வாவென்று வந்தெனைக் காவென்று சொல்லுமுன்
வாழ்விப்பன
தேவென்று கச்சியுள் வாழ்முரு கேசன்
றிருவடியே.

42 கணிகா சலஞ்தவிர்த் தாளென் பவர்க்காக்
களித்தமர்ந்த
தணிகா சலம்விட்டுச் சிற்றேனல் காக்குமென்
றுய்குறத்தி
மணிகா சலம்பு குயாசலம் வேட்டு
வழிக்கொண்டன
திணிகா சலந்தெறுங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

43 கார்கொண்ட வண்ணனென் கண்ணெனப் பொன்
காதலித்தென் [மகள்
னேர்கொண்ட வில்லெல நான்முகன் யான்றேன்
றிடமதென்னப்
போர்கொண்ட மன்மத னம்பெனப் போற்றிப்
புகழுவன
சீர்கொண்ட கச்சிக் குகேசன் கமலத்
திருவடியே.

44 பத்தி யளிப்பன பாசப் பழவினை
பற்றறுவன
முத்தி யளிப்பன மூலப் பொருளன
முத்தொழிலின்

சத்தி யளிப்பன் சார்ந்துமெய்த் தொண்டுசெய்
சற்குணர்க்குச்
சித்தி யளிப்பன் கச்சிக் குகேசன்
றிருவடியே.

45 தவந்தன மாக்கொண்ட வள்ளிப் பிராட்டி
தனம்விரும்பி
நிவந்தன பன்னிரு தோள்களு நீள்
நினைந்து நினைந்
துவந்தன் னெஞ்ச மிரர்முற் றும் வேடர்சிற்
றூரைச்சுற்றிச்
சிவந்தன காண்கச்சி வாழ்கும ரேசன்
றிருவடியே.

46 ஆணிப்பொன் மங்கை யெனக்கடை யாற்சொந்த
மாகுமென
வாணிப்பெண் பாவுறுப் பாலெனக் காமென
மாதுமையாள்
பேணிப்பன் னும்மவர்க் கேயெனக் காதல்
பெருக்குவன
சேணிற்பொன் மாமதி னீள்கச்சி வேலன்
றிருவடியே.

47 மாகம் பணிகச்சி வண்கும ரக்கோட்டம்
வாழ்குகனே
ஏகம்ப வாணனைக் காமக்கட் டாயை
யிபமுகனைப்
பாகம் பயிலப் பணியும் பொழுதங்கும்
பார்க்கவந்தென்
றேகம் பரவசஞ் செய்வன வின்றுந்
றிருவடியே.

48 ஊறுஞ்செந் தேனும் பருப்புநெய் பாலுமிக்
கோங்குகன்னற்
சாறுஞ் செழும்பாகும் வெல்லமுங் கற்கண்டுஞ்
சர்க்கரையும்
வீறும் பலாவாழை மாவின் கனியும்
வெறுக்கமென்மேற்
றேறுஞ் சுவைதருங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

49 நக்கன் சடையி லரவா லொடுங்கி
நடுங்கியுற்றுந்
தக்கன் றருஞ்சாப நீங்கில வென்றே
சசியடைய
மிக்கன் னதின்கதிர் போலுகிர் கொண்டு
விளங்குவன
திக்கன் புடன்புகழ் கச்சிக் குகேசன்
றிருவடியே.

50 துகளொலி வன்னம் பதம்புணர் பாகவித்
தொல்லுலகி
னிகழு மிலக்கண மாப்புல் வேரர்க
ணிதமுணர்ந்து
மகிழு மிலக்கிய மாகவுங் காட்சி
வழங்குவன
திகழுந் திருக்கச்சி வாழ்முரு கேசன்
றிருவடியே.

51 உருத்தாண் டடியரைக் கொண்டேக வேம
னுறிலவர்தங்
கருத்தாண்ட யானுங் னுயிருண்பன் மார்க்கண்டற்
காகப்பட்ட

பெருத்தாண்ட வன்கா லுதையென வெண்ணற்க
  பேணுகெனத்
திருத்தாண்ட வஞ்செய்யுங் கச்சிக் குகேசன்
  றிருவடியே.

52 நெய்யிற் பொரித்ததும் பாலினில் வெந்தது
  நேர்த்தியதாக்
கையிற் புகுந்த சுவர்க்கத் தமுதமுங்
  கைப்பவெனைப்
பொய்யிற் புகாவண மானந்த போகம்
  புசிப்பிப்பன
செய்யிற் கயல்குதிக் குங்கச்சி வேலன்
  றிருவடியே.

53 பொங்கார வார மறைநான்கும் போற்றிடப்
  போதனரி
பங்காரத் தாள முழவமும் வாசிப்பப்
  பத்தர்தொழ
வங்கார வட்டத்த ணிற்கநற் றுய்க்கண்
  டகங்களிக்கச்
சிங்கார மாநடிக் குங்கச்சி வேலன்
  றிருவடியே.

54 பேயன வென்னையுந் தொண்டருட் சேர்ப்பன
  பேணுநர்க்குத்
தாயன நல்லமு தீவன தந்தையுந்
  தண்கலையு
மாயன தூயன பத்தர்க் கணியன
  வண்டருக்குச்
சேயன வண்கச்சி வாழ்கும் ரேசன்
  றிருவடியே.

55 நீர்வேலை யிந்திர ஞற்பொங்கிக் கூடலை
நீடழிக்கப்
பேர்வேலைச் சுந்தர பாண்டிய னேவப்
பெருக்குவற்றக்
கூர்வேலை யேவிச் சரண்புக வன்பிற்
குலாவுவன
சீர்வேலைக் கோபுரக் கச்சிக் குகேசன்
றிருவடியே.

56 திருமணத் தம்மிக்கன் மீதென் பதத்தைச்
செறித்தனையென்
றருமணக் கூந்தற் பிடியூடற் றீர்த்திட
வாகுமென்றே
கருமணத் தென்மனக் கன்மீதும் வைக்கக்
களித்தனவாந்
தெருமணக் குந்திரு நாட்கச்சி வேலன்
றிருவடியே.

57 பெருந்தா ரணியிற் பிறப்பிறப் பென்னும்
பெரும்பிணியை
யருந்தாமற் பத்தியங் கொள்ளாமற் கண்ட
வளவகற்று
மருந்தா யமரர்க்குங் கிட்டற் கரிதாய்
வழங்குவன
திருந்தார்க் கடையருங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

58 தந்தையுந் தாயுந்தங் கைகளை நீட்டித்
தனித்தனியே
கந்தைய வந்திடு வந்திடென் றன்பினிற்
கண்ணடிப்ப

விந்தையிற் ருவி யிருவர் மடியினு
மேவுவன
சிந்தையன் பாளர்கள் சூழ்கச்சி வேலன்
றிருவடியே.

59 பூமிக் குயிர்தந்த மைக்கண்ட தாதையொண்
பூதியந்தோ
டாமிக்கு மேவி விளையாடு முன்பின்
சதிர்கொள்பொன்னு
மாமிக்கு மாமி மருகிக்குஞ் சந்ததம்
வாழ்மனையாத்
தேமிக்கு மம்புய மாங்கச்சி வேலன்
றிருவடியே.

60 உற்றில மாதவஞ் சாத்திரங் கற்றில
மோங்குபுலன்
செற்றில மென்றுநை யன்பரைப் பேரகஞ்
சேரவைப்பே
நற்றில நாசி மடவீ ரிழைப்பதென்
னுடிசென்று
சிற்றி லழிப்பன கச்சிக் குகேசன்
றிருவடியே.

61 வெவ்வீர வாகுவை விட்டுவெங் கோபனை
வீட்டியரு
ளிவ்வீரற் கென்பணி செய்வமென் றெண்ணி
யிரவியுறத்
தெவ்வீரக் கொண்டன்ன வீரக் கழலணி
சீர்மையின
செவ்வீர முண்டக நீர்க்கச்சி வேலன்
றிருவடியே.

62 நங்கையெந் தாயுமை கொங்கையிற் பாலுண்ணு
நற்சமய
மெங்கையின் வாவென்று பங்கயை யாதி
யிருளையரா
மங்கையர் கூப்பிட வாரா துதைத்து
மகிழுமவர்
செங்கையிற் செல்வன கச்சிக் குகேசன்
றிருவடியே.

63 பொன்னையு மண்ணையு மின்னையு மெண்ணிப்
புலம்புநெஞ்சே
பின்னையு முய்விட முண்டோவென் சொல்லைப்
பிடிக்கினுய்வா
யன்னையுஞ் செய்யா வருள்செய்து காப்பன
வாய்ந்தடைவாய்
தென்னையும் வானிழல் செய்கச்சி வேலன்
றிருவடியே.

64 வத்திரத் தாமரை செவ்வல்லி வெண்முல்லை
வண்குமிழ்கொண்
டித்திரத் தாமரை யெங்குண்டென் றெண்ணு
மெனவடியா
ரத்திரத் தாமரை வத்திரம் வைத்திறைஞ்
சற்புதத்த
சித்திரத் தாமரை யாங்கச்சி வேலன்
றிருவடியே.

65 எட்டிக்கு மேன்மையுண் டாக்கு முலோப
ரிடத்திற்சென்றே
யொட்டிக் குழைந்து நயமா யிரஞ்சொல்லி
யோயுமிந்த

மட்டிக்குந் தன்னைத் துதிக்கத் தமிழ்தந்த
வண்ணமென்னே
செட்டிக் குமரன் றிருக்கச்சி வேலன்
றிருவடியே.

66 மாதேவி மைந்தனென் மீதே நடக்கின்
வருந்துமெனப்
பூதேவி தன்னிரு பூங்கரங் கொண்டேந்து
பொற்பெனவே
தீதே விலக்கிடுஞ் சீர்ப்பாது கைமேற்
றிகழுவன
சீதேவி வாழ்கச்சி வாழ்கும ரேசன்
றிருவடியே.

67 பிறியுந் தரமின்றிப் பேதைத் தொழும்பனேன்
பேணியபோ
தறியும் படிகச்சி வண்கும ரக்கோட்ட
மார்ந்தனகாண்
குறியுங் குணமுமெக் கோலமு நீடியெங்
குங்குழுமிச்
செறியும் பரம சிவாரியன் ஞானத்
திருவடியே.

68 பாங்காரப் பள்ளியில் வாணியுங் கேட்பப்
பதுமனேனை
யோங்கார மெய்ப்பொருள் சேய்கேட்டுக் குட்டி
யுதைத்தமையா
லாங்காரந் தீர்ந்தன னென்ன வவனுவந்
தர்ச்சிப்பன
தீங்கா ரவந்தெறுங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

69 வந்தந் தணந்தநெற் போன்றமெய் யாசையை
மாற்றிவிழிக்
கந்தந் தணந்தடிப் பத்துதி யன்பர்
கருத்தமர்ந்து
பந்தந் தணந்த சிவானந்தம் பாலிப்
பனகச்சியுட்
டெந்தந் தணந்தவென் றூடுங் குகேசன்
றிருவடியே.

70 வளைக்கும் புலனை வசமாக்கிக் காட்டின்
மலைக்குகையி
லிளைக்கும் படிமெய்யை வாட்டித் தவஞ்செ
யிருடிகட்கும்
விளைக்குஞ் சுகத்தினு மேற்படத் தம்மை
விரும்பினர்கள்
திளைக்குஞ் சுகந்தருங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

71 ஏவரன் பாயெமக் கீவரென் றேழைய
ரேங்கவிவ
ராவரண் மின்னெனக் காட்டுநர் போல
வடியவரை
மாவர தக்கரங் காட்டுமுன் றுயின்
வழங்குவன
தேவர ஞரதன் சூழ்கச்சி வேலன்
றிருவடியே.

72 ஆணிற் பிறந்தவ ரென்போ லலைபவ
ராருமில்லை
வீணிற் கழித்தனன் காலமெல் லாம்விழ
லுக்கிறைத்தேன்

காணிற் கவலை தவிர்ந்துய்கு வேனெனைக்
காட்டியருள்
சேணிற் பொலிகச்சி வாழ்குமர நின்
றிருவடியே.

73 மாண்டும் பிறந்து மலைகின்ற துக்க
மலிகடலைத்
தாண்டும் படியோர் கலமாகித் தொண்டரைத்
தாங்கிக்கொண்டே
மீண்டுந் திரும்பாத முத்திக் கரையில்
விரைந்துய்ப்பன
சேண்டுன் னமரருஞ் சூழ்கச்சி வேலன்
றிருவடியே.

74 நாயிற் கடையாள ராயினும் வந்து
நயந்துருகி
வாயிற் குகாமுரு காசண்மு காவென்று
வாழ்த்துநர்க்குத்
தாயிற் சுவைதருந் தந்தையிற் கல்வி
தருமினிய
சேயிற் கதிதருங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

75 நீயேயென் றெய்வ மெனவெண்ணி நின்கச்சி
நேடிவந்தேன்
பேயேயென் றஞ்சினை யோபித்த னேயென்று
பேசினற்கா
வேயேயென் றோளி யிடந்தூது சென்ற
விமலன்பெற்ற
சேயேயென் பால்வரி னேமோ வுனபூந்
திருவடியே.

76 விள்ளும் புவனுண்ட மெத்தனை யோவவை
மேலோடுகீ
ழுள்ளும் புறம்பு மொருபடித் தாக
வுலவுவன
வெள்ளும் புகவரி தாத்தொண்டர் கூட்ட
மினிதிறைஞ்சத்
தெள்ளும் வரந்தருங் கச்சிக் குகேசன்
றிருவடியே.

77 என்பாதந் தன்னை மணத்தம்மிக் கன்மிசை
யேற்றினையென்
னின்பாத மோர்கல்லி னேற்றுவ னென்றனபி
னீலவள்ளி
வன்பா தகனேன் மனத்தைக் குறிக்க
மகிழுவன
தென்பா தவநிழல் செய்கச்சி வேலன்
றிருவடியே.

78 நன்றுகல் லாமுழு மூடரோர் கால
நயந்திறைஞ்சி
னன்றுகந் தன்னோர் மனக்கல்லிற் றங்க
வமையுமென்றே
குன்றுக டோறும் விளையாடி யேயமர்
கொள்கையின
சென்றுகண் டோர்க்கருள் கச்சியுள் வேலன்
றிருவடியே.

79 சொற்கனி வேட்டுக் கனிவாய்ச் சிறுவனிற்
றோன்றிச்சுட்ட
நற்கனி யீதென வெளவைக் கனிக்குமு
னுவற்கனி

கற்கனி யக்கவி சொல்வாய்க் களித்தபின்
கட்கினிய
சிற்கனி யாவன கச்சிக் குகேசன்
திருவடியே.

80 அல்லும் பகலுங் குமரா சரணென்
றவிழ்ந்தவன்பாற்
சொல்லும்பண் பாளர்க்கொ ராபத் துறுமுன்
றொடர்ந்தகற்ற
வெல்லும் பசுங்கல பத்தே ரிராமலும்
வேகமுடன்
செல்லும் பரிவின கச்சிக் குகேசன்
றிருவடியே.

81 ஞாலப் பொருண்முற் றுஞ் சாலப் பொருளவை
நம்பன்மினீ
ரேலப் பொருண்மறை யாகமஞ் சொற்பொரு
ளேய்ந்தவந்த
மூலப் பொருளெம்மை யன்றியின் றென்று
முருகுயிர்க்குஞ்
சீலப் பொருள்வடி வாங்கச்சி வேலன்
றிருவடியே.

82 ஓங்கிய கோழிக்கு மோர்கவி குஞ்சுக்கு
மோர்கவியோ
வீங்கிய லாதென்ற பொய்யா மொழியா
லியன்முட்டைக்கும்
வாங்கிய பாவுக்குப் பாத்தந்து மேலும்
வழங்குவன
தேங்கிய நீர்வயற் கச்சிக் குகேசன்
றிருவடியே.

83 சகத்திர கோடிநற் காமர்கள் காமர்
சகலமுந்தான்
றகத்திரண் டாலுமொவ் வாதென்று சூருஞ்
சமர்க்களத்தின்
முகத்திரண் டம்பகத் துங்காண நின்றன
முத்தமிழ்த்தே
சிகத்திரத் தோர்க்கருள் கச்சிக் குகேசன்
றிருவடியே.

84 சந்திர பீடமுஞ் சூரிய பீடமுந்
தன்னடியார்க்
கிந்திர பீடமு மாலயன் பீடமு
மீகுவன
மந்திர பீட முறையம்மை யப்பர்
மடித்தலமாஞ்
செந்திர பீட முறைகச்சி வேலன்
றிருவடியே.

85 முன்போ மிளம்பிடி யின்னடை கண்டதி
மோகமுடன்
பின்போ முதுகளிற் றின்னடை யேய்ப்பப்
பெரும்புனத்தி
லின்போடு தண்சுனை காட்டச்செல் வள்ளிபின்
னேகினகாண்
தென்போ தவிழ்பொழிற் கச்சிக் குகேசன்
றிருவடியே.

86 கழிகின்ற நாளைநன் ஞளாக்கு மன்பர்
கனிவினன்பே
பொழிகின்ற ஞானப் புகழும் வகுப்பும்
புகன்றுகண்ணின்

வழிகின்ற நீரினின் மூழ்கி மலர்ந்து
மணந்தருட்டேன்
செழிகின்ற தாமரை யாங்கச்சி வேலன்
றிருவடியே.

87 வானடர்கோன்சிர மாமறை யோன்சிர
மால்சிரமுந்
தேனர் கதம்ப மலர்மணஞ் செய்வன
தேவர்க்கெல்லா
மானத செல்வ மளித்தன தொண்ட
ரகத்தனநற்
சேனப தீசத் திருக்காஞ்சி வேலன்
றிருவடியே.

88 விருப்பணி யாலய மண்டபந் தூபி
விளங்குமதில்
பொருப்பணி கோபுரங் கூவல் குளம்பூம்
பொழிலுருவங்
குருப்பணி கட்டளை கும்பாபி டேகமுங்
கூர்ந்துசெய்வோர்
திருப்பணி யேற்பன கச்சிக் குகேசன்
றிருவடியே.

89 பாபாலங் கார வுடம்புடை யேனையப்
பங்கயனுங்
கோபாலங் கார மறலியுஞ் செய்யுங்
கொடுமையற
நீபாலங் காரத்தன் னீழலின் வைத்து
நிதம்புரக்குந்
தீபாலங் காரத் திருக்கச்சி வேலன்
றிருவடியே.

90 ஒருநா ளெனவே மனமுரு காநின்
றுறுதியுடன்
பெருநா டவஞ்செய்து சாரூபந் தாவென்று
பேணிநிற்கு
மருநாளத் தாமரைக் கண்ணற்கு நல்கமுன்
வந்தனவாந்
திருநாளெந் நாளு மருக்கச்சி வேலன்
றிருவடியே.

91 அகத்திய ஞதிய மாதவர் தேவர்மெய்
யன்பர்தொழ
மகத்துவ வேத முழங்கச் சிவாகம
மார்க்கமன்ன
மிகத்தின காலநற் பூசையு மோங்க
விழைவனவிச்
செகத்தினர் புண்ணியக் கச்சிக் குமரன்
றிருவடியே.

92 யானெனதென்னுஞ் செருக்கறுப் பாருக்
கிளகியங்கே
தானென வந்து தரிசனந் தந்தென்றுந்
தாங்குவன
மீனெனக் காதள வோடுங்கண் மாதர்நல்
வீணையினிற்
றேனெனப் பண்பயில் கச்சிக் குகேசன்
றிருவடியே.

93 திங்க ளருண கிரிநாதன் பாடிய
சீர்வகுப்பை
மங்கள மாக வனேந்தன் வென்சொல்
வனேவனவோ

கொங்கள கச்சுர குஞ்சரி யோடு
குறக்கொடியின்
செங்கள பக்கொங்கை சேர்கச்சி வேலன்
திருவடியே.

94 நலையொன் றுளவெற்குத் தாளிரண் டுள்ளன
வெங்கள் தம்பி
கலையொன் றுமாறு முகக்கேற்பக் காலெனுங்
காதலண்ணு
லிலையொன் றுநின்சொலென் பாற்பன் னிரண்டே
யெனநிற்பன
சிலையொன் றுமொன்பதுஞ் சேர்கச்சி வேலன்
திருவடியே.

95 பார்க்கச்சிந் தித்திடக் கற்றிடக் கேட்டிடப்
பத்திதரு
மார்க்கச் சிவானந்த கந்தப் புராணத்தை
வாய்மலர்ந்து
சீர்க்கச்சி யப்ப னரங்கேற்றுங் காலத்திற்
சேர்ந்தசங்கை
தீர்க்கச் சிவணின கச்சிக் குமாரன்
திருவடியே.

96 தீர்த்த பரங்குன்ற நல்லாவி னன்குடி
செந்திலண்டர்
பார்த்தம ரேரகங் குன்றுதொ றாடல்
பழமுதிர்கா
கூர்த்த பலதல முஞ்சென் றுலவிக்
குலவுவன
தீர்த்த வளஞ்செறி கச்சிக் குமாரன்
திருவடியே.

97 வேதத் திருவடி யாகம மாகி
விளங்குபர
போதத் திருவடி புண்ணியத் தொண்டர்கள்
பூசைசெய்யு
நீதத் திருவடி யானந்த போக
நிதம்பொழியுஞ்
சீதத் திருவடி காண் கச்சி வேலன்
றிருவடியே.

98 செந்தா மரைவேத புத்தக மாணிக்கச்
செம்பதக்கங்
கொந்தார் மலர்மணிக் குண்டலம் போலுங்
குலவுவன
வுந்தா விவர்ந்தையன் ருண்மடி மார்புகை
யொண்முகத்துஞ்
சிந்தா சனத்தமர் கச்சிக் குமாரன்
றிருவடியே.

99 பூமாலை பொன்மாலை மாணிக்க மாலை
பொருளுடையார்
மாமாலை யாக வணைய வணிவன
மற்றெளியேன்
பாமாலை யுங்குற்ற நீக்கிப் பரித்தருள்
பாலிப்பன
தேமாலை நாயகக் கச்சிக் குமாரன்
றிருவடியே.

100 தேருங் கரியும் பரியும் பதாதியுந்
தேசமுநல்
லூரும் மனையு மனைவியு மக்களு
முற்றவரு

மாரும் புகழு மரசும் பிறவு
மளிப்பனகாண்
சீருஞ் சிறப்பும் வளர்கச்சி வேலன்
றிருவடியே.

திருவடிமாலை முற்றுப்பெற்றது.

---

## வாழி வெண்பா

வாழிமழை வாழிகச்சி வாழிகும ரக்கோட்டம்
வாழிகுகன் வாழியடி வாழிபிடி—வாழிவள்ளி
வாழியயில் வாழிமயில் வாழிகொடி வாழிமறை
வாழிதமிழ் வாழியன்பர் வாய்ந்து.

---

## இந்நூல்,

இராமநாதபுரம் ஜில்லா கண்டனூர் வயி. ராம. வயிரவச் செட்டியார், காஞ்சிபுரம் ஸ்ரீ குமரகோட்டச் சீரணோத்தாரணத் திருப்பணி செய்து, இராட்சதஹூ (கி. பி. 1915) ஆனிமீ 11உ சுக்கிரவாரம் திரயோதசி திதி அனுஷ நட்சத்திரங் கூடிய சுபதினத்தில் உதயாதி 15-நாழிகைக்கு மேல் கன்னியா லக்கினத்தில் வேதாகம முறைப்படி செய்வித்த மஹா கும்பாபிடேக தரிசன காலத்தில் ஷை குமரப்பெருமான் சந்நிதியில் வாசித்து, அன்புடையாரனைவருக்கும், அளிக்கப்பட்டது. (இக்குறிப்பு முதற் பதிப்பின் இறுதியில் உள்ளது)

## குறிப்புரை

காப்பு: 'ஆர்வம் தரும் சரம்' எனப் பிரிக்க. சரம் - மாலை.

## நூல்

3. 'திருவடி அருள் மண்டலமாயும், தெய்வமண்டல மாயும் உள்ளன' என்க.

4. உரம் - அறிவு. மடி - வயிறு. திரம் - நிலைபேறு. 'திரத் தினை' என்க.

5. 'குளிர்ந்த அறுகம் புல்லினை' எனப் பொருள் தரும் 'ஈரறுகை' என்பதனைச் சிலேடைவகையால், 'பன்னிருகை' எனப் பொருள் படுமாறு கூறித் தனது முடியைக் காட்டிய கணேசற்கு, அவ்வாறே சிலேடைவகையால் 'நூறுகை' எனப் பொருள்படுமாறு, 'சதங்கையும் உண்டு' என முருகன் தனது அடியைக் காட்டினன் என்க. உம்மை, சிறப்பு. சேய் - முருகன். 'சேயால்' என உருபு விரிக்க. 'காட்டும்' என்பது, 'காட்டப்படும்' என்றபடி. 'அவன் திருவடி' என எடுத்துக் கொண்டுரைக்க.

6. வேலாவலயம் - கடல்.

7. பித்தாந்தம் - பித்தத்தின் முடிபு; பெரும்பித்து. 'முத்தியந்தம்' என்பது, 'முத்தாந்தம்' என மருவிற்று. முத்தியந்தம் — முத்தியாகிய முடிநிலை. சத்து - மெய்ப்பொருள். 'ஓர்ந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று, 'உய் அக் குகேசன்' எனப்பிரித்து, 'அடையும் அத் திருவடி' என உரைக்க. 'சித்தாந்த ஞானமுடையவரே அடையற் பாலனவாகிய திருவடிகள் கருணையால் உருவுகொண்டு, கச்சிக் குமர கோட்டத்தில் தங்குவ வாயின' என்க.

8. பொலிந்து - நிறைந்து.

19

9. 'நன்று அன்னம்' எனப் பிரிக்க. 'அருட் குன்றன்ன குகேசன்' என்க. திகந்தம் - திக்கின் முடிவு; இவ்விடத்து, 'உள்ளன' என்பது எஞ்சி நின்றது.

10. 'பாய் ஒளி படக்கொண்டு' என மாற்றியுரைக்க. கடத்தல், வினையை என்க. சத்தன் - சத்தியை யுடையவன்.

11. சேண்தா - ஆகாயத்தை அளாவுகின்ற.

12. நாதம் - ஒலி. ஓதம் - அலை. எற்கு - எனக்கு. ஒரு நாதன் - ஒப்பற்ற தலைவன்; சிவபிரான். திருநாதன் - திருமகளுக்குத் தலைவன்; திருமால்.

14. பற்றும் வண்ணம் - விடாது இறுகப் பற்றும் படி.

15. தெவ் - பகை.

16. ஆழி - சக்கரம்; அதனை அணிந்தோன், தாரகாசுரன். வேயும் - சாத்திய. செஞ் சக்கு - சிவந்த கண்களாகிய.

17. 'தொண்டர் கொண்டாடவும், சித்து அன்னை (ஞான சொரூபமாகிய தாய் காமக்கணம்மை) காணவும் மாவடியில் எய்தின' என்க.

18. நாட்டம் – விருப்பம்.

19. மா – பெரிய. நத்தி – விரும்பி. அளி – வண்டு.

20. பாரிய - பரந்த. ஏர் இயல் - அழகு விளங்குகின்ற. மண்டலம் - உரிய இடம். தளி - கோயில். சுடர் - கதிர்.

21. கோங்கு - கோங்கமரத்தின் அரும்பு. கடி - விளக்கம்.

22. களை - இளைப்பு. உருப்பம் - வெப்பம். 'அன்னை' என்பது 'அனை' எனக்குறைந்து நின்றது.

23. மாண் - பெருமை. 'நாமத்துக்கு' என்பதில் அத்துத் தொகுத்தலாக, 'நாமக்கு' என நின்றது. நாமம் - பெயர்; அது, 'சிலம்பு' எனப்படுவது. ஏண் - வலிமை. சேண் - ஆகாயம்.

24. தகி - பொழுது. 'உமையம்மையது கை தனம் கண்களாகிய காந்தள் கோங்கு நீலம் என்பவற்றோடு சேர்ந்து திருவடி தாமரைஆம்' என்க.

25. சத்து - நன்மை. சித்து - அறிவு. 'முத்தியாம்' என்பது 'முத்தாம்' என நின்றது.

26. துங்கம் மலர்ந்தவர்-உயர்ச்சி மிகுந்தவர்; பெரியோர். அண்டர் - தேவர்; அவர் தாலாட்டிச் சூழ என்க. அமலத் திரைக் கை-தூய அலையாகிய கை; அவைகள் ஆட்டுதல் தாமரை யாகிய தொட்டிலை. கமலத்தில் - கமலம் போல.

27. தன் வாயாகிய அல்லியில் தாமரை உதவிய கார்த் திகைப் பெண்களுக்கு, அவர்களது வாயாகிய அல்லியில் தரப் படும் தாமரை முருகனது திருவடி என்றபடி. ஆர்த்தி - விருப்பம்.

28. அம்மை தழுவி ஆறுருவத்தையும் ஓர் உருவாக்குதற்கு முன்னும் பின்னும் முகம் முதலியவை வேறு வேறு காணப்படி னும், திருவடி மட்டும் பின்னர் ஆறு உருவத்திற்கு வேறு வேறு காணப்படா; ஒன்றுகவே காணப்படும் என்றபடி.

29. அகக்கண் - ஞானம்; அதனை உடையவராயினும் இல் லாதவராயினும் முருகனது திருவடியில் நகக்கண்ணைத் தரிசிப் பினும் முத்தியடைவர் என்க.

30. 'பங்கயம், நீலம் காந்தள்' என்பன வள்ளியம்மை யின் முகம், கண், கைகள். 'கோகனகம்' என்பது முருகன் திருவடி.

31. கருப்பொருள் - உள்ளீடு.

32. செபித்தி - செபம் செய். திப்பியம் - திவ்வியம்; தெய் வத்தன்மை.

33. ஊன் - உடம்பு. ஆலும் பொழில் - ஆரவாரிக்கின்ற சோலை.

34. உய் ஆறு - பிழைக்கும் வழி. செய் - வயல். ஆற்ற- மிகவும்.

35. வடதரு - ஆலமரம். வேணி - சடை. தென் - அழகு.

36. துத்தி - பாம்பின் படப்புள்ளி.

37. தாய், காமாட்சியம்மை. 'தாமரை' என்பது முதல் குறைந்து நின்றது. பொன் - திருமகள். 'பொன்னுக்கு மரை' என மாற்றுக. காவி - நீலோற்பலம். கன்னல் - கரும்பு. தேவ மகளாகிய தெய்வ யானைக்கு மண்ணுலகப் பொருளாகிய கரும்பும், மானுட மகளாகிய வள்ளிக்கு விண்ணுலகப் பொருளாகிய கற்பகமும் புதியனவாய் இன்பம் தரும் என்க.

38. உடலாதி மூன்று: உடல், பொருள், ஆவி. 'வந்தேன், அஞ்சேல்' என்பன திருவடிகள் தனித்தனி கூறுங் கூற்று.

39. விச்சை - ஞானம். 'நஞ்சை' என்பது வலிந்து நின்றது. கொச்சை - தெளிவின்மை; கலக்கம். மொய்ம்பன், வீரவாகு. தகர், செச்சை - ஆடு.

41. 'வா என்றும், கா என்றும்' என உம்மை விரிக்க.

42. கணிகாசலம் - நிலையாமைமிகுதி. ஏனல் - தினை, 'மணியும் காசும்' என்க. காசு - அச்சுப் பொன். அலம்புதல் - ஒலித்தல். குயாசலம் - தனங்களாகிய மலை. வேட்டு - விரும்பி. திணி காசு அலம் - செறிந்த குற்றமும் அலமரலும். தெறும் - நீக்கு கின்ற.

43. கார் கொண்ட வண்ணன், திருமால். பொன்மகள் - திருமகள். ஏர் - அழகு. இல் - இல்லம். திருவடிகள் தாமரை போன்றுள்ளன என்பது கருத்து.

44. பாற்றுதல் - நீக்குதல்.

45. நிவந்தன - பூரித்தன.

46. பொன் மங்கை - திருமகள். அடை, 'திரு' என்பது, இஃது அவள் பெயராதலறிக. வாணிப்பெண் - கலைமகள். 'பாவுறுப்பு' என்றது, 'அடி' என்பதனை. பாக்களின் உறுப்புக்களுள் ஒன்று அடியாதலும், பாக்கள் கலைமகளுக்கு உரியவாதலும் உணர்க. பேணி - வளர்த்து. அன்பொடு வளர்த்து அன்பொடு அழைப்பவள் உமையம்மையாதலறிக. சேண் - ஆகாயம்.

47. மாகம் - விண்ணுலகம். ஏகம்பர் முதலிய எல்லோரும் முருகனை எடுத்துவைத்துக் குலாவுவோராதலறிக.

48. கன்னல் - கரும்பு.

49. சசி - சந்திரன். அன்னதின் - அதனுடைய.

50. துகள் - அணு. வன்னம் - எழுத்து. அணுத்திரள் ஒலி எழுத்து என்றது, பிறர் மதம் பற்றி. எழுத்திலக்கணம் ஒன்றையே இலக்கணமாகக் கூறியது, 'எழுத்தறியத் தீரும் இழி தகைமை' என்னும் முறை பற்றி.

51. உருத்து - சினந்து. ஆண்டு - இறுதிக்காலத்தில். கரு தாண்ட - பிறவியைக் கடக்க. 'பெருத்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. பேணுக - மனத்துட்கொள்க.

52. செய் - வயல். கயல் - மீன்.

53. போதன் - பிரமன். அரி - திருமால். பங்குஆர - ஒற்றுமை பொருந்த. உம்மை, தாளமென்பதனோடும் இயையும்.

54. 'தாய்' என்றது, அவள் பாலினை. கலை - நூல். அணியன - அண்மையிலுள்ளன. சேயன - சேய்மையில் உள்ளன.

55. நீர் வேலை - நீரையுடைய கடல். பேர் வேலை - அழிக்கும் தொழில்; வினைத்தொகை. சீர் வேலை - அழகுசெய்யும் தொழில்.

56. கூந்தற் பிடி - தெய்வயானையம்மை. கருமணம் பிறவி வாசனை.

57. 'பிணியை அகற்றும்' என இயையும். 'அரிது' என்பது பண்புப் பெயர்.

59. மைக்கண்டம்-நீலகண்டம். விளையாடுமுன் சிவந்திருத்தலின் திருமகளுக்கும், விளையாடியபின் விளர்த்திருத்தலின் கலைமகளுக்கும் வாழ்மனையாகும் என்க. 'மிகும்' என்பது விரித்தலாயிற்று.

60. திலம் - எட்பூ.

61. கோபன்-பானுகோபன். வீட்டி-அழித்து. தெவ்ஈர-பகைவரை அழிக்க. 'சூரியனையே அணிந்தாற் போன்ற வீரக்கழல்' என்பதாம். செஈர முண்டகம்-சிவந்த குளிர்ந்த தாமரை.

62. கொங்கையிற் பால்-கொங்கையினின்றும் வந்த பால். பங்கயை - திருமகள். இருளையர்-தோழியர். 'அவர்' என்றது தாய் தந்தையரை.

63. மின்-பெண். 'தென்னேயும்' என்ற உம்மை இழிவு சிறப்பு.

64. வத்திரம்-முகம். 'அல்லி, முல்லை, குமிழ்' என்பன, வாய் பல் நாசி என்பவற்றைக் குறித்தன. இத்திரம்-இந்நிலை. அத்திரம்-அந்நிலை. சித்திரம்-அழகு.

65. எட்டி - எட்டி மரம்.

67. பேணியபோது - விரும்பியபோது.

68. பள்ளி-படுக்கை. கலைமகளுக்குப் பிரமன், தன்னை முருகன் குட்டிச் சிறை செய்த நிகழ்ச்சியைத் தனியிடத்திற் கூறினன் என்க.

69. 'வந்து அந்து அண் அந்த நெல்' எனவும், 'விழி கம் தந்து அண்ணம் தடிப்ப' எனவும் பிரிக்க. அந்து-நெல்லின் உருவம் கெடாதிருப்ப, அரிசியை மட்டும் உண்ணும் ஒருவகை வண்டு. மெய் - உடல். கம் - நீர். அண்ணம் - மேல்வாய். தடிப்ப-தழும்பாக. பந்தம் தணந்த-பாசம் நீங்கிய.

71. அண்மின்-அடையுங்கள். அடியவரை-அடியவர்க்கு; உருபுமயக்கம். தே வரன்-தெய்வ இருடி.

72. எனே-எனக்கு; உருபு மயக்கம்.

74. சேயிற்கதி - சேய்மைக்கண் உள்ள இல்லமாகிய வீடு பேறு.

76. விள்ளும்-நூல்களாற் சொல்லப்படுகின்ற.

77. தென் பாதவம்-அழகிய மரங்கள்.

78. அன்று-அந்நாள். உகந்து-விரும்பி. இச்செய்யுள் தற்குறிப் பேற்ற வணியாகக் கூறியது.

79 'ஔவைக்கனி' என்புழிக் கனி-கன்னி. சிற்கனி-அறிவு வடிவாகிய கனி. முருகன் ஆனிரைமேய்க்கும் சிறுவனுய் வந்து

ஔவைக்கு நாவற்கனி தந்த வரலாறு பர்வை வழக்காய் வழங்குதலறிக.

80. பரிவின-அன்புடையன.

83. காமர்கள்-மன்மதர்கள். காமர்-அழகு. அம்பகம்-கண். முத்தமிழ்த் தேசிகத் திரத்தர்-அகத்தியர். போர்க்களத்தில் முருகப்பெருமானது விசுவ ரூபத்தைக் கண்ட சூரபதுமன், "ஆயிர கோடி காமர் அழகெல்லாம் திரண்டொன் ருகி-மேயின வெனினும் செவ்வேள் விமலமாம் சரணந் தன்னில்-தூய நல்லெழிலுக் காற்ரு" எனக் கூறினன் என்க. (கந்த புராணம்-சூரபதுமன் வதைப்படலம். 439.)

84. 'சந்திரபீடம்' முதலிய நான்கு பீடங்களும் ஆட்சிச் செல்வத்தைக் குறித்தன. செந்திரபீடம்-செம்மையான நிலை பேறுடைய பீடம்; சத்திபீடம்.

85. தென் போது அவிழ்-அழகிய மலர்கள் மலர்கின்ற.

86. 'புகழ், வகுப்பு' என்பன 'திருப்புகழ், திருவகுப்பு' என்னும் நூல்களை என்க.

87. கதம்பம்-கடம்பு. ஆருத-அழியாத. 'சேஞப தீசம்' என்பது, திருக்குமரகோட்டப் பெருமான் வழிபட அங்கிருக்கும் ஒரு சிவதலம்.

88. இச் செய்யுள் திருக்குமர கோட்டத் திருப்பணி செய்வாரது நலங்கருதிச் செய்யப்பட்டது. பொருப்பு அணி-மலைபோலும் அழகிய. கூவல்-கிணறு. குருப் பணி-அருச்சகர்கள் செய்யும் பணி, அருச்சகர்கட்குச் செய்யும் பணி இவ்விரண்டுங் கொள்க.

89. 'பாபாலங்காரம், கோபாலங்காரம்' என்புழி 'அலங்காரம்' என்பன இகழ்தற் குறிப்பு. நீபம்-கடம்பு.

90. மரு-நறுமணம். நாளம்-தண்டு. இது, 'முருகப் பிரானே திருஞான சம்பந்தராய் வந்தார்' என்னும் கொள்கை பற்றிக் கூறியது. திருஞானசம்பந்தர் தம் பாடலால் திரு

மாலுக்குச் சிவசாரூபம் தந்தமையை, காஞ்சிப்புராணம் திருமேற்றளிப் படலத்துட் காண்க.

91. மகத்துவம்-பெருமை, 'தொழ' என்பது முதலிய செயவெனெச்சங்கள் எதிர்காலத்தன. விழைதல்-விரும்புதல்; ஈண்டு நினைத்தல்.

93. திங்கள் - சந்திரன்போலும் என்க; 'சந்திரன்' என்றது கலைகளால் நிரம்பினமை பற்றி. தெய்வ மகளோடு குற மகளையும் சேர்பவனாகலின், என் சொல்லையுங் கொள்வன் என்றபடி.

94. எற்கு-எனக்கு. 'கால்' என்புழி 'எங்கே' என்பதைக் கூறாமல் நிறுத்தினார் விநாயகர். இலை ஒன்று - இல்லை என்றல் பொருந்திய. பன் - பன்ன; சொல்ல; 'ஏதேனும் ஒன்றை எனக்கு இல்லை என்று நீ குறை கூறி அமைதியுறுதற்காகவே அவை இரண்டாயே உள்ளன' என்றவாறு. 'பன்னிரண்டு' என்பது நயம்.

95. சிவணின-பொருந்தின. முருகன் திருவடியே கச்சியப்ப சிவாசாரியரது ஐயங்களைத் தீர்த்தன என்றபடி.

96. கா கூர்த்த—சோலை மிகுந்த. இதனுள் முருகனது படை வீடுகள் ஆறும் கூறப்பட்டமை காண்க.

97. பரபோதம்-மேலான ஞானம்; அநுபவ ஞானம். நீதம்-நீதி.

98. உந்தா-உந்தி; உதைந்து. இவர்ந்து-ஏறி. சிந்தாசனம்-சிந்தை (உள்ளம்) ஆகிய ஆசனம்.

99. பரித்து - அணிந்து. தே மாலை - தேவர் வரிசை. 'அதற்கு நாயகனாகிய குமாரன்' என்க.

100. கரி-யானை. பரி-குதிரை. பதாதி-காலாள். மனை-இல்லம்—சீர். அழகு.

## வாழி

அடி-திருவடி. பிடி-தெய்வயானை அயில்-வேல்.

—

உ

திருச்சிற்றம்பலம்

## திருக்கச்சிக் குமரகோட்டக் கடவுள்

# குறுஞ்சந்த மாலை

### காப்பு

### சந்தக் கலிவிருத்தம்

நீட்டம் வளர்கச் சிநிலைக் குமரக்
கோட்டம் வளர்வேற் குகன்மேற் றமிழின்
பாட்டம் வளர்பான் மைதருங் கருணை
நாட்டம் வளர்நல் விருகோட் டிபமே

### நூல்

1 வேலும் மயிலும் மிளிர்சே வலுமெக்
காலுங் கமழுன் கழலுந் துணையென்
றேலுந் துதிசெய் திடவெற் கருண்மேன்
மேலும் வளர்கச் சியின்மெய்க் குகனே. (க)

2 உச்சிப் பதியொண் கையொடோ திடவே
நச்சிப் பதிஞா னநயந் தருளாய்
மெச்சிப் பதிஞ லுலகும் விழையுங்
கச்சிப் பதிகந் தசுகா ரியனே. (உ)

3 கந்தா மணிகண் டரிமா சலையாண்
மைந்தா மணின்மா சறவென் றனையாள்
நந்தா மணிநன் றொளிர்கச் சியில்வாழ்
சிந்தா மணிதெய் வசிகா மணியே. (ந)

4 ஆலா லமருந் தியவங் கணனார்
பாலா வுனபா தநினைந் திடுவேன்
மேலார் குறைவிள் ளினுமெள் ளுவையோ
வேலா மிளிர்கச் சியுள்வித் தகனே. (ச)

5 வாஞ்சிக் கவரற் கொருமா மகவோ
வோஞ்சிற் பரவொண் குருவோ வுரையாய்
நாஞ்சிற் கதிர்நா ளுநடக் குமதிற்
காஞ்சிப் பதிமே வியகற் பகமே. (ரு)

6 மெய்வாய் விழிநா சிவியன் செவியா
மைவா யிலடைத் தருமைத் தவமே
செய்வார் துதிசெய் திடுகச் சியுள்வாழ்
சைவா குமரா சரணஞ் சரணே. (சா)

7 பாலா யுதனு ருதையாற் படிவீழ்
காலா வுணரக் கடவுட் கொருசேய்
வேலா யுதவிக் ரமனெம் பெருமான்
மேலா கியகச் சியுண் மேவுதியோ. (எ)

8 வெல்வார் மலமா யையைமெய் வழியே
செல்வார் வடிவேன் மயில்சே வலெனச்
சொல்வா ரடியார் தொழுகச் சியுளே
நல்வாழ் வுபொருந் தியஞா னிகளே. (அ)

9 மூதே விமுயக் கறமுண் டகம்வாழ்
சீதே விசிறப் பருள்செய் திடுவாய்
பூதே விமுகம் பொருகச் சியுள்வாழ்
மாதே விகுமா ரமனோ கரனே. (கூ)

10 அஞ்சூன் முகிலார் தருகச் சியுளாய்
நெஞ்சூன் றிநினைத் துதிநே யர்கண்மேல்
வெஞ்சூன் யம்வினைத் திடுவெய் யரைவேல்
பிஞ்சூன் கெடமார் புபிளந் திடுமே. (கo)

11 அவசங் கரவைம் புலவா ணவவெம்
பவசங் கரமே புரிவாய் பரிவாய்த்
துவசங் கரமாத் துதைகச் சியில்வாழ்
சிவசங் கரதே சிகனே குகனே. (கக)

12 மாவே தனையிட் டனைவன் சிறையென்
நீவே தனையன் பர்கடீர் வுறவோ
காவே தனைமன் னுறுகச் சியுள்வாழ்
தேவே தனையேற் கதுசெப் புகவே. (கஉ)

13 கண்டேன் வளர்கச் சியுள்வே லவனை
யுண்டேன் கழலொண் மலர்மா மதுவை
விண்டேன் வினையா வும்விளம் புவதென்
பண்டே புரிநோன் புபலித் ததுவே. (கங)

14 பண்பா ரடியா ருடனே பரவி
நண்பார் வநறும் பதமே நவில்வாய்
விண்பார் புகழ்கச் சியுண்மே வுநரைக்
கண்பார் குமரா கருணா கரனே. (கச)

15 கருணா கரனே கரிமா முகனு
ரொருசோ தரனே யுமையாண் மகனே
திருவார் தருகச் சியுள்வாழ் சிவனார்
குருவே வருவாய் தருவாய் குணமே. (கரு)

16 இன்பே யொருபோ துமிசைந் தறியேன்
றுன்பே துதையத் துயர்வேன் றுயரா
நன்பே றருள்வாய் நவில்கச் சியுள்வாழ்
அன்பே யருளே யயில்வே லரசே. (கசா)

17 கற்றார் துதிகச் சியுள்வாழ் குமரன்
பொற்றாள் கள்புகழ்ந் திடுபுண் ணியமே
பெற்றா ரெவரோ வவரே பெரியோர்
மற்றார் சிறியோர் மறைவா சகமே. (கள)

18 ஆழிக் கொடியோ ரையழித் துரையாற்
சூழிக் கொடிதும் பிகுயம் புணருங்
கோழிக் கொடியாய் குளிர்கச் சியுளாய்
தாழிக் கொடியேன் றளரா தருளே. (கஅ)

19 பாரா திகடந் தபரஞ் சுடரே
யாரா வமுதே யருளே பொருளே
ஏரார் தருகச் சியிலங் கொளியே
வாராய் சரண்மா மயில்வா கனனே. (ககூ)

20 சொல்லே பொருளே சுதையே சுவையே
யல்லே பகலே யருவே யுருவே
நல்லேர் வளர்கச் சிநகர்க் குகனே
புல்லே னினையன் றொருபொய் யுறவே. (உ0)

21 கூறக் கரவே புரிகொள் கையினே
னூறக் கரமோ தியருங் கதியே
யேறக் கரமீந் தருள்கச் சியுள்வாழ்
நீறக் கரனின் றருணின் மலனே. (உக)

22 சூனகச் சிறியேன் சுகமெய் துறவே
யனகச் சிவஞா னமளிப் பதெநாள்
கனகச் சிலைநேர் கதிர்கோ புரமார்
வனகச் சிவிசா கமகா குருவே. (உஉ)

23 திகழ்ஞா னதிவா கரஞா யதிருப்
புகழ்நா டியுரைப் பவரே புலவோர்
நிகழ்ஞா லநிதந் துதிகச் சியுள்வே
ளகழ்வா னெறிவா னவரல் லலையே. (உங)

24 கோபத் தைவிழைந் துகொடுந் தொழிலால்
பாபத் தைவிளைத் திடுபா தகனே
னூபத் தையகற் றுதிகச் சியுள்வாழ்
நீபத் தைமிலைந் தொளிர்நீள் புயனே. (உச)

25 காளைப் பருவத் தடியேன் கரவால்
வேளைக் கொருதீ மைவிளைத் தனன்வெங்
கோளைத் தவிர்கச் சியுள்வாழ் குகநின்
றாளைக் கதியென் றுசமைந் தனனே. (உரு)

26 சூரோ டுதுதைந் திடுதா னவரை
வேரோ டுகளைந் தெறிவே லவனே
தேரோ டுதெருத் திகழ்கச் சியுளா
யாரோ டுசொல்வே னெனதல் லலையே. (௨௬)

27 மார்த்தாண் டனிருட் டெறுமா றுமய
றீர்த்தாண் டருளத் திகழ்கச் சியுளே
சீர்த்தாண் டவநற் சிகிமேல் வருவாய்
ஆர்த்தாண் டலையார் கரவற் புதனே. (௨௭)

28 நானென் னுமகந் தைநலிந் திடநீ
தானென் னுமனோ ரதமே தருவா
யூனென் னுமுயர்ந் தொளிர்கச் சியுளாய்
கோனென் னுமரா ரியகோ மளமே. (௨௮)

29 பொய்யா முடலைப் பொருளன் றெனவே
மெய்யா மறிவெய் திடுமேன் மையைவேற்
கையா வளர்கச் சியுளாய் கடையே
னையா தருள்வா யுனைநம் பினனே. (௨௯)

30 உடலே முதன்முப் பொருளும் முனவே
விடலே ழைவிளம் புவதென் னினியே
கடலே நிகர்கச் சியுளே மலரும்
மடலே மணமே மதுவா ரிதியே. (௩௦)

31 கொழுநீர்க் கடலுங் குறையுங் குறையா
லழுநீர்க் கடல்வற் றவளித் தருளாய்
கழுநீர்ச் சுனைதேன் பொழிகச் சியுள்வாழ்
செழுநீர் மையனே திகழ்வே லவனே. (௩௧)

32 இத்தா ரணிமீ தெனையின் பமுற
வைத்தாண் டருள்வண் கருணா கரனே
மெய்த்தா பதர்வேண் டுறுகச் சியுள்வா
ழத்தா முருகா வறுமா முகனே. (௩௨)

33 தேந்தத் தணருச் செய்கொள்கச் சியுளாய்
தாந்தத் தணதாண் டவமா மயிலோய்
காந்தத் தணவூ சியைநேர் கடையேன்
மாந்தத் தணவாச் சுதைவந் தருளே. (௩௩)

34 தானந் தழைதண் ணியகச் சியுள்வா
ழானந் தகுகே சனருட் பதமே
ஞானந் தருநன் னிதியுங் கதியு
மூனந் தபவோங் குமருந் துமதே. (௩௪)

35 அவமோ கமகன் றுணையர்ச் சைசெயார்
தவயோ கமிழைக் கினுமென் றகைசேர்
சிவலோ கநிகர்த் திடுகச்சி யுள்வாழ்
பவரோ கநிவா ரணபண் டிதனே. (௩௫)

36 கல்லா மதியேன் கருதப் படுமோர்
நெல்லா மதினீ ளிடரந் ததுதீர்
பொல்லா மதிள்பொற் புறுகச் சியுளாய்
வல்லா மதிசே கரர்மா மகனே. (௩௬)

37 ஒருகா லமுமுன் னைமறந் தறியே
னருகா மயிலூர்ந் தருள்செய் திடவா
பெருகார் வர்பிறங் குறுகச் சியுள்வாழ்
முருகா வுயர்சண் முகவே லவனே. (௩௭)

38 அனையொப் புளரோ மகனுக் கதுபோ
லுனையொப் புளரோ வடியார்க் குதவத்
தனை யொப் புறுதண் ணியகச்சி யுள்வேள்
வினையொப் புறுமெய்ந் நெறிதந் தருளே. (௩௮)

39 உருக்கச் சிதையா வுயர்பொன் னெனவே
வருக்கச் சிவஞா னியர்வாழ்த் தியுறை
திருக்கச் சியுள்வே லவர்சி ருடனே
யிருக்கச் சிறிதுங் குறையே துளமே. (௩௯)

40 ஊனு யுடலா யுயிரா யறிவா
யானு யுனையா ரறிவா ருரையாய்
தேனு யுறுவண் டிசைகச் சியுளே
கோனு யுறைகுஞ் சரிநா யகனே. (௪0)

41 மாதா ரகமந் திரமெய்ப் பொருளே
மூதா ரழலா டியமுக் கணனுர்
காதா ரவுரைத் திடுகச் சியுளா
யோதா ரமுதேய்ப் பவெனக் குரையே. (௪௧)

42 நோங்கே யனமங் கையர்கொங் கையில்வீழ்
வீங்கே யனவெந் துயர்தீர்த் தருள்வா
னீங்கே யனையே நிகர்கச் சியில்வாழ்
சாங்கே யனைநா டுதிகன் மனமே. (௪௨)

43 அமரா பதிபோ லவிர்காஞ் சியுள்வாழ்
குமரா பழநிக் குருவே யடியார்
தமரா யுறுநற் றணிகா சலனே
சமரா புரியாய் சரணஞ் சரணே. (௪௩)

44 மன்காஞ் சிமருங் கினள்வள் ளியுடன்
தென்காஞ் சிவருஞ் சிவதே சிகனே
துன்காஞ் சிரமும் பழகிற் சுவையாய்
நன்காஞ் சிறியே னையருந் தருளே. (௪௪)

45 செங்கா லனநங் கையர்சீர் நடைகண்
டங்கா லதுகற் றமர்கச் சியுளே
தங்கா லயமே வியசண் முகனே
வெங்கா லனைவென் றருண்மெய்க் கதியே. (௪௫)

46 அனக்கே தனனத் தவெழுத் தறவே
மனக்கே தமறுக் குமருந் தெனருன்
வனக்கே தகைவா னுறுகச் சியுள்வா
ழனக்கே தகுமொண் சுடர்வே லவனே. (௪௬)

47 முருகா முருகா வெனவே மொழியா
வுருகா வுருகா வுனையே நினைவே
னருகா வருகா வழைகச் சியுண்மான்
மருகா மருகா மயில்வா கனனே. (சஎ)

48 என்போ லவறிஞ் ஞருமில் லையிசைந்
துன்போ லவுவந் தருள்வா ருமிலை
பொன்போ லமினுர் பொலிகச் சியுள்வாழ்
மின்போ லவிளங் கயில்வே லவனே. (சஅ)

49 எங்கே யடியார் களிருந் தெணுவா
ரங்கே கியளித் திடுமா றுமுகா
கங்கே சவர்கா தல்செய்கச் சியிலுன்
பங்கே ருகபா தம்வணங் கினனே. (சகூ)

50 சேண்டா மதில்சீர் தருகச் சியுளா
யாண்டா னடிமைக் கருள்செய் தல்விதி
வேண்டா வெனவென் னைவிலக் கிவிடின்
மீண்டா ரிடைமே வுவன்வே லவனே. (ரு0)

51 பூமக் கணிதம் புகழ்கச் சியுள்வாழ்
காமக் கணிகம் பனெமா னடுவாஞ்
சேமக் கணிருந் தொளிர்சீர்க் குமரா
தாமக் கணியா யணித்தண் டமிழே. (ருக)

குறுஞ்சந்த மாலை முற்றிற்று.

---

இந்நூல் ஆசிரியர் காலத்தில் அச்சிடப்படவில்லை; அவரது கைப்பட எழுதி வைத்திருந்த கைப்பிரதியைக் கொண்டு இப்பொழுது அச்சிடப்பட்டது. 1960.

## குறிப்புரை

இந்நூலிலுள்ள செய்யுட்கள் சந்தத்தால் கந்தரநுபூதியோடு ஒத்திருத்தல் காண்க.

காப்பு:— அம் வளர் பான்மை - அழகு மிகும் தன்மை. நாட்டம் - கண்.

1. ஏலும் - பொருந்துகின்ற.

2. உச்சிப் பதி - தலையில் குவித்த. நச்சி - விரும்பி. பதி ஞானம் - கடவுள் உணர்வு.

3. நந்தா மணி - கெடாத இரத்தினங்கள்.

5. வாஞ்சிக்க - விரும்ப. நாஞ்சில் - மதிலின் உறுப்பு. 'அதன்மேல் கதிர் (சூரியன்) நடக்கும்', என்க. அரற்கு மகவோ குருவோ' என்க.

7. இச்செய்யுள் காலனை நோக்கிக் கூறியது. விக்கிரமன் - பெரிய வீரன். எம்பெருமானது கச்சியுள் என்க.

9. மூ தேவி - மூத்த தேவி; தௌவை; வினைத்தொகை.

10. அம் - அழகிய. சூல் - கருப்பம். 'பிய்ந்து' என்பது 'பிஞ்சு' எனப் போலியாயிற்று.

11. அவசம் - வசமின்மையைச் செய்கின்ற. கரவு - வஞ்சனையையுடைய. பவம் - பிறப்பு. 'சங்காரம்' என்பது குறுகி நின்றது. துவசம் - கொடி. கொடிகளையே கைகளாகக் கொண்டுள்ளது கச்சி என்க.

12. மா வேதன் - பெருமையையுடைய பிரமன். 'அன்பர்களுக்குப் பிறவியைத் தாராதிருத்தற் பொருட்டோ பிரமனைச் சிறை வைத்தாய்' என்றபடி. கா - சோலை. வே - மூங்கில்; அவ்விடத்துத் 'தன்' சாரியை. 'தனயேற்கு' என்பது 'தனையேற்கு' எனப்போலியாயிற்று. 'மகனாகிய எனக்கு' என்பது பொருள்.

16. துதைய - நெருங்குதலால். துயர்வேன் - துன்பமுறுகின்ற யான். துயரா - துன்ப முறுத.

17. 'இது மறைவாசகம்' என எடுத்து முடிக்க.

18. ஆழிக் கொடியோர் - கடல் போல மிகுந்த அசுரர். உரையால் - (இந்திரனது) வேண்டுகோளினால். சூழி-கொண்டை. கொடி - கொடிபோன்றவள். தும்பி - (தெய்வ) யானை. குயம் - தனம். 'தாழ் இக்கொடியோன்' எனப் பிரிக்க.

19. பாராதி - பிருதிவி முதலிய தத்துவங்கள்.

20. சுதை - அமுதம். அல் - இரவு. 'அன்றி' என்பது அன்றெனத்திரிந்து நின்றது. 'நினையன்றி ஒரு பொய்யுறவு புல்லேன்' என இயைக்க.

21. 'கரவே கூற புரி' என மாற்றி - 'பொய் கூறவே விரும்புகின்ற' என்றுரைக்க. ஆறு அக்கரம் - ஆறெழுத்து. நீறு அக்கு அரன் - திருநீற்றையும் எலும்பையும் அணிகின்ற சிவன்.

22. சுனகன் - நாய்; நாய்போலும் சிறுமை யுடையவன் என்க. அனகம் - தூய்மை. கனகச்சிலை - பொன்மலை. கதிர் - கதிர்க்கின்ற (ஒளி விடுகின்ற). வனம் - அழகு.

23. திவாகரன் - சூரியன். திருப்புகழ் - முருகன் புகழ்; அப்பெயருடைய நூல் என்றலுமாம். 'அகழ்வான்; 'அகழ்ந்து எறிவான்' என்க.

24. நீபம் - கடப்பமாலை. மிலைதல் - அணிதல்.

25. கோள் - தீமை. சமைந்தனன் - அமைந்தேன்.

27. மார்த்தாண்டன் - சூரியன். சிகி - மயில். ஆர்த்து-ஒலித்து. அண்டலை - கோழி.

28. நலிந்திட - கெட. ஊன் என்னும் - உயர்ந்த இடம் என்று சுட்டப்படுகின்ற. அர ஆரியன் - சிவகுரு.

30. உடலே முதல் முப்பொருள் - உடல் பொருள் ஆவி. மடல் - இதழ். மது வாரிதி - தேன் கடல்.

31. கடலினும் குறையும் குறை - கடலினும் பெரிதான குறை. கழுநீர் - நீலோற்பலம். 'சுனை' என்றது, சுனை போல வற்றாத வாவிகளை.

33. தேம் - இனிமை. தத்து அண் - பாய்தல் பொருந்திய. நறு-தேன். செய் - வயல். காந்தத்து அணவு - காந்தத்தை அணு கிய. தணவா - நீங்காத. சுதை - அமுதம்; என்றது திருவடி இன் பத்தை.

34. தானம் - கொடை. தப - கெட. 'பதமே நிதியும் கதி யும்; அதுவே மருந்தும்' என்க.

35. அர்ச்சை - அர்ச்சனை. பண்டிதன் - மருத்துவன்.

36. அந்து - நெல்லின் அரிசியை உண்ணும் ஒருவகை வண்டு; அதனைத் தீர்த்தருள் என்க. பொல்லா - போழலாகாத. வல்லா மதி-இளம்பிறை.

37. 'ஆர்வத்தர்' என்பது ஆர்வர் என நின்றது; 'அன் புடையவர்' என்பது பொருள்.

38. 'வேள்' என்பது விளி.

39. வருக்கம் - இனம்.

40. ஆறுய்-நீங்காய். தேன் ஆயுறு - தேனை ஆராய்கின்ற.

42. 'கோங்கே யனைய' 'வீங்கே யனைய' என்புழி 'அனைய' என்பவற்றின் ஈற்று அகரங்கள் தொகுத்தலாயின. வீங்கு- 'வீக்கம்' என்னும் நோய்; முதனிலைத் தொழிற்பெயர். 'ஈங்கே அனையே' என்புழி-அனை, 'அன்னை' என்பதன் இடைக் குறை.

44. மன் காஞ்சி - நிலைபெற்ற'காஞ்சி' என்னும் ஆபரணம். மருங்கு-இடை. காஞ்சிரம்-எட்டிக்காய்.

45. 'அன்னம்' என்பது, இடைக் குறைந்து நின்றது. அம்கால்-(அவர்களுடைய) அழகிய காலின்கண். 'அன்னம் நடைகற்று அமர் கச்சி' என்க.

46. அனக் கேதனன் - அன்னக் கொடியுடையவன்; பிர மன். அத்த எழுத்து-கையால் எழுதும் எழுத்து. அற-அழி யும்படி. கேதம் - துன்பம். வனம் - நீர். கேதகை - தாழை. வான் - பெருமை.

47. அடுக்கு நான்கனுள், முன்னைய இரண்டும் இடைவிடாமைப் பொருளன. இடைநின்றது, மிகுதிப்பொருட்டு. இறுதிக் கண்ணது அவலம் பற்றியது.

48. 'வறிஞ்ஞர்' என்னும் ஞகரமெய் விரித்தல் விகாரம். பொன் - திருமகள். அயில் - கூர்மை.

49. கம் கேசவர் - தலையில் அழகிய மயிரினை உடையவர்; திருமால். பங்கேருகம் - தாமரை.

50. சேண்தா - ஆகாயத்தை அளாவிய. விதி - முறை.

51. பூமக்கள் - பூமியிலுள்ள மக்கள். 'நடு' என்றதை, உண்மை வடிவிலும், கச்சிக்கோயில் இடங்களிலும் கொள்க. சேமக்கண் - பாது காப்பான இடம். 'தாமத்துக்கு' என்பது 'தாமக்கு' எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. 'தாமத்துக்கு ஈடாக' என்பது பொருள். தாமம்-மாலை. 'தண்டமிழ்' என்புழி 'இத்தமிழ்' எனச் சுட்டு வருவிக்க.

——

உ

திருச்சிற்றம்பலம்

# குமரகோட்டப் பதிகம்

## காப்பு

### வெண்பா

நாட்டத் தொடுதொண்டர் நாடித் துதிகுமர
கோட்டப் பதிகமன்பாய்க் கூறவே - வேட்டுவர்தம்
வள்ளிதனை வேலவர்க்கு வந்து மணம்புணர்த்தும்
வள்ளலருள் வேழத்தை வாழ்த்து.

### கலிவிருத்தம்

1 திருமா மணிவண்ணன் றிசைமா முகனுப்ப
ணொருமா மணிபோலு முறைவேண் மகிழ்கோயி
லருமா மணிநாஞ்சி லவிர்கோ புரநீடு
குருமா மணிமேடைக் குமர கோட்டமே. (க)

2 உம்பர் தொழுதேத்து முமைநங் காமாட்சி
கம்பர் மடிமேல்வாழ் கந்த னுறைகோயில்
அம்பர் விழிமாத ராடுஞ் செயல்போற்பூங்
கொம்ப ரசைசோலைக் குமர கோட்டமே. (உ)

3 அறையார் கழற்கால்சூ ழவர்தா மெவரேனு
முறையா யருள்செய்யு முருக னுறைகோயில்
மறையா கமமார்க்க மறையோர் புரிபூசை
குறையா தொளிர்காஞ்சிக் குமர கோட்டமே. (௩)

4 வாடி வருவார்க்கு வாடா வரநல்கிக்
கூடி யருட்டாய்போற் குளிர்சே யுறைகோயில்
தேடி யறமொன்றே செய்யி லதுகோடா
கோடி யெனவோங்குங் குமர கோட்டமே. (௪)

5 காழித் தலமேவிக் கடிய சமண்பூண்டை
யூழித் தழல்போல வுருத்தா னுறைகோயில்
வாழித் திருநாளே வானோர் வருகென்று
கோழிக் கொடியாடுங் குமர கோட்டமே. (௫)

6 மடுக்குஞ் சிவஞான மதுரச் செழுந்தேனை
யடுக்குந் திருவாளர்க் களிக்குங் குகன்கோயில்
தொடுக்குந் தமிழ்சாத்தித் துதிப்போர்க் குயரின்பங்
கொடுக்குந் திருக்காஞ்சிக் குமர கோட்டமே. (௬)

7 சூற்றங் குறியாமற் குணங்கொண் டடியார்க்கே
யுற்ற துணையாக வுறைவே லவன்கோயில்
கற்ற லொடுகேட்டல் கவினும் பெரியோர்சூழ்
கொற்ற மணிவாயிற் குமர கோட்டமே. (௭)

8 போதில் வருவோன்முன் புகலாப் பொருளீசன்
காதி லுரைசெய்த கடம்ப னுறைகோயில்
ஏதி லுமக்கென்றே யிரப்போர்க் கருள்செய்யும்
கோதி றிருக்காஞ்சிக் குமர கோட்டமே. (௮)

9 வேடர் தவப்பாவை விண்ணோர் மகிழ்யானை
யூட லறுமுகமா றுடையான் றிருக்கோயில்
ஆடலு டன்பாட லடியார் தினந்தோறுங்
கூடன் மிகவோங்குங் குமர கோட்டமே. (௯)

10 அயிலோ யெனவன்ப ரழைக்கு முனம்வருவான்
மயிலே றியபெருமாள் வளருந் திருக்கோயில்
உயர்வா கியசெல்வ முதவுந் தலமென்றே
குயில்கூ விடுபொழில்சூழ் குமர கோட்டமே. (௧௦)

## வெண்பா

பமரகோட் டம்பெருகு பைம்பொழில்சூழ் கச்சிக்
குமரகோட் டத்தெங் குருவே—கமழுன்
சமல பதமறவேன் காத்தருள்வாய் வந்து
விமலவரந் தந்து விழைந்து.

குமரகோட்டப் பதிகம் முற்றிற்று.

## குறிப்புரை

1. நாப்பண் - நடு. திருமாலும் பிரமனும் முருகனை இருமருங்கும் நின்று போற்றுவர் என்க. நாஞ்சில் - மதில். அவிர் - விளங்குகின்ற. குரு - நிறம். மேடை - மேல்மாடம்.

2. 'அம்பு' என்பது 'அம்பர்' எனப் போலியாயிற்று.

4. சேய் - முருகன். 'கோடாது கோடி' என்பது 'கோடாகோடி' என மருவிற்று.

5. உருத்தான் - அழித்தவன். இது, 'முருகனே திருஞான சம்பந்தராய் வந்தான்' என்னும் கொள்கை பற்றிக் கூறியது. 'வாழ் இத் திருநாட்கண்' என உரைக்க.

6. மடுக்கும் - உண்ணும்.

7. கவினும் - அழகு விளங்குகின்ற. கொற்றம் - வெற்றி.

8. போதில் வருவோன் - மலரில் தோன்றியவன்; பிரமன். ஏது இல் - யாது இல்லை. கோது - குற்றம்.

9. ஊடல் அறு - ஊடலை நீக்குகின்ற. வேறு வேறு முகங்கள் இருத்தலால், இருவரையும் ஒரு காலத்தே ஊடல் தீர்த்தல் எளிதாயிற்று என்க.

## வெண்பா

பமரம் - வண்டு. கோட்டம் - ஓசை. விமலம் - தூய்மை.

---

இந்நூலும் இப்பொழுதே முதற்பதிப்பாக அச்சிடப்பட்டது.
1960

உ

திருச்சிற்றம்பலம்

# குமரகோட்டத் தரிசனப் பத்து

## காப்பு

### கலிவிருத்தம்

அமரர் போற்று மழகிய கச்சியுட்
குமர கோட்டக் குகேசன் றரிசனே
விமல மாப்புரி மேலவர் சீர்சொல
நமவென் றேத்திரு கோட்டிப நாளுமே.

## நூல்

1 அத்த னேயரு ளன்னையை யண்ணலை
முத்த னேக்குக னேமுரு கேசனே
நித்த னேநிம லக்கும ரக்கோட்ட
சித்த னேத்தரி சித்தவர் சித்தரே. (௧)

2 கால னேவென்ற கால னளித்திடும்
பால னேவள்ளி குஞ்சரி பாலனே
வேல னேக்கும ரக்கோட்ட மேவிவாழ்
சீல னேத்தரி சித்தவர் சீலரே. (௨)

3 உள்ள லேக்கு முறுக ணகற்றிடுங்
கள்ள லேக்குங் கடம்பணி தோளனைத்
தெள்ள லேக்குளஞ் சேர்கும ரக்கோட்ட
வள்ள லேத்தரி சித்தவர் வள்ளலே. (௩)

4 சூர னேச்செற்ற சூரனே யாயிரம்
பேர னேப்பெரு மானேப் பெருங்கடல்
பார னேதொழும் பணிகும ரக்கோட்ட
வீர னேத்தரி சித்தவர் வீரரே. (௪)

5 பேயனைத் தடுத் தாண்ட பிரான்றனை
மாயனைமல ரோனை மருங்குகொள்
சேயனைக்கும ரக்கோட்டச் செல்வனைத்
தூயனைத்தரி சித்தவர் தூயரே. (ரு)

6 ஐயனையசு ரக்கட றீத்தவேற்
கையனைக்கண நாதற் கிளையனை
செய்யனைக்கும ரக்கோட்டச் சேயனை
மெய்யனைத்தரி சித்தவர் மெய்யரே. (சு)

7 வேதனைவேத னைக்குட்டி வீசிய
பாதனைக்கொடும் பாவ மகற்றிடு
நாதனைக்கும ரக்கோட்ட நண்ணிவாழ்
நீதனைத்தரி சித்தவர் நீதரே. (எ)

8 எட்டனையன்பு மேயின் றுழன்றிடுந்
துட்டனைநல னுக்குஞ் சுகுணனை
யிட்டனைக்கும ரக்கோட்டத் தின்புறுஞ்
சிட்டனைத்தரி சித்தவர் சிட்டரே. (அ)

9 பூசனைபுரி வார்க்கருள் போதனை
யீசனையுப தேசித்த வெந்தையைத்
தேசனைக்கும ரக்கோட்டத் தேவளர்
நேசனைத்தரி சித்தவர் நேசரே. (கூ)

10 சேந்தனைத்தெய்வ குஞ்சரி சேர்ந்தணை
சாந்தனைக்குறத் தையன் மனோகர
காந்தனைக்கும ரக்கோட்டச் சண்முக
வேந்தனைத்தரி சித்தவர் வேந்தரே. (க௦)

குமரகோட்டத் தரிசனப் பத்து முற்றிற்று.

---

இந்நூலும் இப்பொழுதே முதற்பதிப்பாக அச்சிடப்பட்டது.
1960

## குறிப்புரை

1. நித்தன் - அழிவில்லாதவன். சித்தன் - எல்லாம் வல்லவன்.

2. காலன் - (1) இயமன்; (2) காலை உடையவன். பாலன் - (1) மகன்; (2) பக்கத்தில் உடையவன்.

3. அலைக்கும் - வருத்துகின்ற. உறுகண் - துன்பம். கள் - தேன். தெள் அலை - தெளிவாகிய அலைகளையுடைய. 'தரிசித்தவர் வள்ளல்' என்புழி வள்ளல், பன்மை யொருமை மயக்கம்.

4. செற்ற - அழித்த. பேரன் - பெயர்களையுடையவன்.

5. பேயனை (பேயேனை) - பேய்போன்ற என்னை. மாயனும் மலரோனும் மருங்கு நின்று போற்றுவர் என்க.

6. தீத்த - தீயச் செய்த. கணநாதன் - விநாயகப் பெருமான். செய்யன் - நடுவு நிலைமையுடையவன்.

7. வேதன் - (1) வேதத்தின் உட்கிடையாய் உள்ளவன்; (2) வேதம்ஓதுபவன். நீதன் - நீதியுடையவன்.

8. 'எள் தனை' எனப்பிரிக்க. சுகுணன் - நல்லகுணம் உடையவன். சிட்டன் - மேலானவன்.

9. போதன் - அறிவுவடிவானவன். ஈசனை - ஈசனுக்கு; உருபுமயக்கம். தேசன் - ஒளியுடையவன்.

10. மனோகரம் - மகிழ்ச்சி. காந்தன் - கணவன்.

——

உ

திருச்சிற்றம்பலம்

# குமரகோட்டக் கடவுள் போற்றிப் பதிகம்

## காப்பு

### வெண்பா

குமரகோட் டத்துட் குலவுதொண்ட ரென்னும்
பமரமுணத் தேன்பொழிவேள் பாதக்—கமலமன்பாய்ப்
போற்றும் பதிகம் புகலவள்ளி நாயகிமுன்
ருேற்றுங் களிறு துணை.

## நூல்

### கலிவிருத்தம்

1 செம்பொனர் கோபுரந் திகழு மண்டபம்
வம்புலா மலர்த்தடம் வளங்கொள் காஞ்சியுட்
கும்பமா முனிக்கருள் குமர கோட்டம்வாழ்
தம்பிரான் கந்தவே டாள்கள் போற்றுவாம். (க)

2 ஓதிமா மறையெலா முணர்ந்த வந்தணர்
நீதிசேர் பூசனை நிறைந்த காஞ்சியுட்
கோதிலா வரந்தருங் குமர கோட்டம்வாழ்
சோதிவே லவன்பதத் துணையைப் போற்றுவாம். (உ)

3 சூரிய குலத்தனுஞ் சோழ னுதியோர்
சீரிய வரசுசெய் செல்வக் காஞ்சியுட்
கோரிய வரந்தருங் குமர கோட்டம்வாழ்
ஆரியன் முருகவே ளடிகள் போற்றுவாம். (ந)

4 அண்டரு முனிவரு மகில லோகருந்
தொண்டருந் துதித்திடுந் தூய காஞ்சியிற்
குண்டலி சொருபமாங் குமர கோட்டம்வாழ்
தண்டபா ணியின்மலர்ச் சரணம் போற்றுவாம். (௪)

5 கணவனைத் தெய்வமாக் கருதுங் கற்புடை
வணங்கிறை மங்கையர் வாழ்த்துங் காஞ்சியிற்
குணநிதி யெனவளர் குமர கோட்டம்வாழ்
மணமலி குகன்கழன் மலர்கள் போற்றுவாம். (௫)

6 இயலிசை நாடக மென்னு முத்தமிழ்
பயில்பெரும் பாவலர் பரவுங் காஞ்சியுட்
குயிலமர் மாம்பொழிற் குமர கோட்டம்வாழ்
மயிலவன் பாததா மரைகள் போற்றுவாம் (௬)

7 பமரமார் பூம்பொழிற் பழத்தொண் சாற்றினுற்
கமழ்தரு செந்நெலார் கழனிக் காஞ்சியிற்
குமரதீர்த் தம்பொலி குமர கோட்டம்வாழ்
தமிழிறை குருபரன் சரண்கள் போற்றுவாம். (எ)

8 ஊழிதோ றுந்தொறு மூலைவி லாதிருந்
தோழிரு புவனமு மேத்துங் காஞ்சியிற்
கோழியங் கொடிவளர் குமர கோட்டம்வாழ்
கேழிணர்க் கடம்பனங் கிரிகள் போற்றுவாம். (அ)

9 விருப்பணி யுத்தமர் விடாது சந்ததந்
திருப்பணி செய்திடுஞ் செல்வக் காஞ்சியுட்
குருப்பணி லன்றுதி குமர கோட்டம்வாழ்
தருப்பணி சண்முகன் சரண்கள் போற்றுவாம். (௯)

(இதன்கண் ஒன்பது பாடல்களே உள்ளன.)

---

இந்நூலும் இப்பொழுதே முதற்பதிப்பாக
அச்சிடப்பட்டது. 1960

# குறிப்புரை

காப்பு : பமரம் - வண்டு.

1. வம்பு - மணம்.

3. சோழன், கரிகாலன். கோரிய - வேண்டிய. ஆரியன் - மேலானவன்.

4. குண்டவி - சுத்தமாயை.

7. 'குமர தீர்த்தம்' என்பது, குமரகோட்டத்தின் முன் புறம் இருந்து மறைந்து, இப்பொழுது அக்கோயிலின் பின் புறம் காணப்படுகின்றது.

8. ஊழி - யுகமுடிவு. உலைவு - அழிவு. கேழ் - நிறம். இணர் - கொத்து. அங்கிரிகள் - பாதங்கள்.

9. விருப்பு அணி - அன்புடைய வரிசைப்பட்ட. குரு பணிலன் - நிறம் வாய்ந்த சங்கினை யேந்தியவன்; திருமால். தரு பணி - கற்பக தருவை அடியவர்க்குப் பணிக்கின்ற.

———

உ
திருச்சிற்றம்பலம்

# குமரகோட்டச் சட்டி தரிசனப் பா

## காப்பு

### வெண்பா

பூமிபுகழ் காஞ்சி புரகுமரக் கோட்டகந்த
சாமிமகிழ் சட்டி தரிசனப்பா—நேமமுடன்
ஓதவிரு கோடுடைய வும்பன் முகத்தெந்தை
பாதமலர்த் தேனுண்டு பாடு.

## நூல்

### கலிவிருத்தம்

1 மாவின் பால்வளர் வள்ளல்கா மாட்சியுஞ்
சேவின் பால்வரு செல்வத் திருக்கச்சிக்
கோவின் பாற்கும ரக்கோட்டத் துள்வளர்
தேவின் பால்வரு சட்டியிற் சேவியே. (க)

2 விண்மு கச்சுரர் மேதினி மாந்தர்க
ளுண்மு கத்தன்பி னுற்றிடுங் கச்சியுட்
கண்மு கங்கரங் கால்கம லம்பொரும்
சண்மு கன்றனைச் சட்டியிற் சேவியே. (உ)

3 தீரா வன்பிணி தீர்த்துத்த னன்பர்க்கு
வாராச் செல்வம் வருவித்துக் காத்திடும்
கூரார் வேலனை வண்கும ரக்கோட்டச்
சீரார் கந்தனைச் சட்டியிற் சேவியே. (ங)

4 தொண்டை நாட்டிற் றுலங்கிடுங் கச்சியு
ளண்டர் நாதனை யாறு முகத்தனைக்
கொண்டல் சூழுங் குமரகோட் டத்துறை
தண்ட பாணியைச் சட்டியிற் சேவியே. (ச)

5 கஞ்ச வாவி கமழ்ந்திடுங் கச்சியுள்
அஞ்ச லென்றடி யார்க்கருள் செய்திடும்
மஞ்ச னைவடி வேலனை நெஞ்சமே
தஞ்ச மென்றுநீ சட்டியிற் சேவியே. (௫)

6 மரக தத்திரு மாமதிற் கச்சியுள்
வரத னைத்திகழ் வள்ளலை நெஞ்சமே
விரதங் கொண்டவர் மேன்மை யடைகுவர்
சரத நம்பிநீ சட்டியிற் சேவியே. (௬)

7 பூமி நாதனும் பூவுறை வேதனும்
வாமி நாதனு மன்னிய கச்சியுள்
நேமி நாத நிமிர்கும ரக்கோட்டச்
சாமி நாதனைச் சட்டியிற் சேவியே. (௭)

8 நம்பி னோர்க்கு நலந்தரு கச்சியுள்
வெம்பி னோருய் விரதமி தாநெஞ்சே
அம்பி காபதிக் கன்றுப தேசித்த
தம்பி ரானைநற் சட்டியிற் சேவியே. (௮)

9 மந்தி ரம்மருந் தேதுக்கு வண்கச்சி
சுந்த ரவ்வடி வேலனைத் தூயனைக்
கந்த னைவள்ளி காந்தனை நெஞ்சமே
சிந்தி யாநின்று சட்டியிற் சேவியே. (௯)

10 பார னைத்தும் பணிந்திடு கச்சியுள்
வீர னைநவ வீரர் துணைவனைச்
சூர னைச்செற்ற சூரனை நீபவண்
டாரனைச் சென்று சட்டியிற் சேவியே. (௧௦)

சட்டி தரிசனப் பா முற்றிற்று.

---

இந்நூலும் இப்பொழுதே முதற்பதிப்பாக அச்சிடப்பட்டது.
1960

## குறிப்புரை

காப்பு: 'நியமம்' என்பது 'நேமம்' என மருவிற்று. உம்பல் - யானை.

1. 'வள்ளல்' என்புழி உம்மை விரிக்க. சே - எருது; கோவின்பால் - தலைமைப் பகுதியையுடைய. 'தேவைச் சேவி' என இயையும் 'இன்பால் வரு சட்டி' என்க. 'இன்பாற் சேவி' என்றலுமாம்.

2. கமலம் பொரும் - தாமரையை வெல்லுகின்ற.

5. கஞ்சம் - தாமரை. வாவி - தடாகம். 'மைந்தன்' என்பது, 'மஞ்சன்' எனப் போலியாயிற்று.

6. வரதன் - வரத்தைக் கொடுப்பவன். சரதம் - நிச்சயம். 'அந்நாளில் (சட்டியில்) விரதங் கொண்டவர் மேன்மை அடைகுவர்; ஆதலின், வள்ளலைச் சட்டியிற் சேவி' என்க.

7. பூமி நாதன் - திருமால். வாமி - அழகுடையவள்; இரதி. நேமி - கடல். 'கடல் நாதம் போலும் நாதம்' என்க. நிமிர் - மிகுகின்ற.

8. வெம்பினோர் - வருந்தினவர். உய் - பிழைக்கின்ற. அம்பிகா பதி - உமைக்குக் கணவன்; சிவபிரான்.

10. நீபம் - கடம்பு. தார் - மாலை.

——

உ
சிவமயம்

# திருக்கச்சி ஏகம்பர் திரிபந்தாதி
# சாத்துக் கவிகள்

காஞ்சிபுரம் மிஷன் ஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்
ம-௱-௱ஸ்ரீ

## கனகசபை நாயகரவர்கள் இயற்றிய

### கட்டளைக் கலித்துறை

சீரார் திருக்கச்சி யேகம்ப வாணர் திருவடிக்கே
நாரார் தமிழ்த்திரி பந்தாதி யன்பி னவின் றணிந்தா
னேரார் புலவர் செவிக்கமு தென்ன வெனக்கினிய
நீரார் கலையுணர் சோணா சலனெ னு நீதியனே.

கந்தபுராணம், திருவிளையாடல் முதலியவற்றின் உரையாசிரியரும், சிவபராக்கிரமம்-ஹரிஹரதாரதம்மியம் முதலியவற்றின் நூலாசிரியருமான சைவஸ்ரீ

## ம. தி. பானுகவி யவர்கள் இயற்றிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

சோணா சலபா ரதியென்னுந் தூயோன் கச்சி யேகம்பன்
மாணார் புயக்கு மிளிர்வாக மலரா லன்றி மாண்சொல்லால்
ஏணார் திரிபந் தாதிதனை யியற்றி யணிந்திட் டிசைபெற்றான்
காணா நின்று விபுதரெல்லாங் கரங்கள் குவித்து மகிழ்ந்தனரே.

திருமழிசை - கந்தசாமி முதலியார் குமாரரும், சொர்க்கபுரம் - இராமலிங்கத் தம்பிரானவர்கள் மாணுக்கருமாகிய

## வடிவேலு முதலியாரவர்கள் இயற்றிய

### வெண்பா

தென்கச்சிக் கம்பன் றிரிபந்தா தித்தொடையை
யென்கண் ணனைய வெழினேய—னன்கமையுஞ்
சோணா சலக்கவிஞன் சொற்றனன்மற் றத்தொடையின்
மாணார் வழுத்துவரம் மா.

சிவமயம்

# *திருக்கச்சி ஏகம்பர் திரிபந்தாதி

---

### விகடசக்கர விநாயகர் துதி

### காப்பு

### கட்டளைக் கலித்துறை

புவிகட சக்கர மென்முலை மின்பொன் புரிவுபவ
மவிகட சக்கர விந்தன்சொல் கம்பனந் தாதிசொல்லக்
கவிகட சக்கர வைம்முக வைங்கர கைம்முகவென்
சுவிகட சக்கர வேழந் தருஞ்சுவைச் சொற்பதமே.

### திருக்குமரகோட்டக் கடவுள் துதி

பருக்கு மரக்கோட்ட வென்மனத் தைச்சீர்ப் படுத்தியன்பா
யிருக்கு மரக்கோட்ட நல்கயில் வேட ரிமயவர்த
முருக்கு மரக்கோட்ட வள்ளிதெய் வப்பிடி யும்புணரும்
திருக்கும ரக்கோட்ட மன்னுங் குகேசன் றிருவடியே.

### நூல்

பூமாந் தருக்குரு கானந்த மோங்கவும்
பொன்னுலகிற்
றுமாந் தருக்குரு மந்திரந் தமரர்க
டாழவுமுன்
னேமாந் தருக்குரு வாய்வந்து கச்சியி
னேய்ந்துநின்ற
தேமாந் தருக்குரு லிங்கேசற் சேர்பலஞ்
சித்திக்குமே. (க)

---

*இந்நூலை முதலிற் பதிப்பித்தவர் காஞ்சிபுரம் பி. செ. முருகேச முதலியார்.

சித்தத் திருக்கு விடுத்தவர் வாழ்கச்சிச்
சீர்க்கம்பனூர்
நித்தத் திருக்கு மொழியாற் பலியென்று
நேர்மறுகி
னத்தத் திருக்கு மனத்தொடும் வண்டு
மளித்துநன்னீர்
தத்தத் திருக்கு மடவார்பின் செல்ல
றகும்பரிசே. (உ)

சேகாம் பரசி வசீகரியார் மக்க
டேர்ந்தெனத்தோட்
டோகாம் பரசிவ னெஞ்சைக் குழைத்தனள்
சூடகத்தால்
வாகாம் பரசிவ ஞானக் குயத்தால்
வடுத்துக்கச்சி
யேகாம் பரசிவ தந்தையி னன்னைக்
கிளமனமே. (௩)

மனேகதங் காவத வேங்கை யதளா
வம்வனைந்தோ
யினேகதங் காவத மைவரை யாக்கென்
றிறைஞ்சடியார்
பினேகதங் காவ தவர்க்கேவ லென்றருள்
பெய்கவெனக்
கனேகதங் காவத வண்கச்சி யேகம்பத்
தந்தணனே. (ச)

அந்திரு மேற்றளி ரார்வுன் விரும்புமுன்
ரும்பதவி
தந்திரு மேற்றளி வேலையி ரென்ற
தாய்மகற்கு

முந்திரு மேற்றளி சேவையிற் றேவி
முலையமுதா
நந்திரு மேற்றளி வாழ்கச்சி யேகம்பர்
நல்கருளே. (ரு)

அருக்கச்ச பாலய மாவண மெண்ண
மளிப்பவவன்
பருக்கச்ச பாலய பங்கயன் வாணி
பணியவளர்
முருக்கச்ச பாலய நீக்கனம் போற்றுயர்
மோயவரு
டிருக்கச்ச பாலய வண்கச்சி யேகம்பச்
செம்பொருளே. (சா)

செம்பாச மேதகு தங்கம் புரியுஞ்
செயலினென்னை
வெம்பாச மேத மிழைக்காத வண்ண
மினிதளிப்பா
யமபா சமேத வருட்காரோ ணத்துறை
யப்பகச்சிக்
கம்பா சமேத துருவாங் குருவாகிக்
காட்சிதந்தே. (எ)

நந்திக் கரியே வலமுள தென்பரித்
தாரணியோ
ருந்திக் கரியே யெனயான்கண் டுள்ள
முவந்து நிற்ப
முந்திக் கரியே னினந்தோழ கேளாய
மொய்ப்பநின்ற
வந்திக் கரியே முதலோர் பணிகச்சி
வண்புனத்தே (அ)

வண்ணம் பலபல பேசினென் ஹம்பொய்த்த
வாழ்வைச்சற்று
முண்ணம் பலபல மாங்கச்சி யேகம்ப
வோங்குதில்லை
நண்ணம் பலபல நேத்திர னேயென
நாத்தடிப்பக்
கண்ணம் பலபல வென்றுதிர்த் தின்பக்
கடற்படியே. (௯)

படியாதி தத்துவ முப்பானெ டாறும்
படிப்படிப்போய்
முடியாதி தத்துவ மன்மையி னின்ற
முழுமுதலாப்
பிடியாதி தத்துவ கைத்தொண்டுஞ் செய்யனுட்
பேணியெங்ஙன்
குடியாதி தத்துவ ராக்கச்சி யேகம்ப
கூறுதியே. (௧0)

கூற்றங் குமைக்கு மறைமே னடிக்குங்
குறைநயக்கும்
பேற்றங் குமைக்கு நெடுமாற்கு நீளும்
பெயப்பெய்யவே
யேற்றங்கு மைக்கு வழங்குவ போற்பொழி
லேர்கொள்கச்சிப்
பாற்றங் குமைக்கு வருடத் தருங்கம்பர்
பாதங்களே. (௧௧)

பாதகஞ் சந்திர வன்பர்க் கருள்கச்சிப்
பைம்புனத்திற்
சாதகஞ் சந்திர ஞேக்காங்கு நோக்குந்
தனவதன

மாதகஞ் சந்திர தங்கொள்ள லாய்த்தம்ம
மன்னியிவர்
போதகஞ் சந்திர ணம்பட வந்ததென்
பொய்வினவே. (கஉ)

வினவகி லேச னிவனம் புகழென
விட்டிடருட்
டுனவகி லேச மலமஞ்சு நீக்கிமெய்த்
தொண்டுகொண்டே
கனவகி லேச திருக்கச்சி மாவடிக்
கம்பதெய்வப்
பனவ கிலேச விநாசகை லாச
பரம்பரனே. (கங)

பரங்கணின் முட்ட வருள்செய்து காக்கப்
பதிக்கென்பர்நீ
யிரங்கணின் முட்ட தறுதயை செய்குற்ற
மெண்ணிவெறேல்
கரங்கணின் முட்ட வறுத்தெறி வாரில்லை
காக்கைக்கருள்
குரங்கணின் முட்ட முறைகச்சி யேகம்பக்
கோமணியே. (கச)

நோமாட்சி யம்மை வருமென்ப தின்றிம்மைக்
கூடுதுங்கா
ணுமாட்சி யம்மை யுடையோ மெனுநன்
னனவிற்கச்சி
யாமாட்சி யம்மை மிடறுடை யானன்பர்க்
கன்புசெய்தே
காமாட்சி யம்மை மணவாள வென்று
கருதிடினே. (கரு)

கருக்கழுக் குன்றனை மாரிளைப் பாறக்
கருத்துளதே
லுருக்கழுக் குன்றனை யாநீ வருகென்
றுதவுவன்ரு
டிருக்கழுக் குன்றனை வண்கச்சி யேகம்பத்
தெள்ளமுதைத்
தருக்கழுக் குன்றனை நாடா முதலன்பிற்
சார்ந்திறைஞ்சே. (கசா)

சாரதி யம்புய ஞரணம் வாம்பரி
தாரணிதேர்
கூரதி யம்புய ரம்மால்வில் குன்ருக்
கொணினகைக்கு
மாரதி யம்புய மெல்லணை யோன்கெஞ்சென்
மானுவந்தா
ளேர தியம்புய வென்றெனை யாள்கச்சி
யேகம்பனே. (களஎ)

ஏகம்ப மாதவ னென்றுரைப் பீர்மல
மின்னொழிப்பான்
வாகம்ப மாதவ ணுக்கொண் டெயிலட்ட
வன்மக்களே
மேகம்ப மாதவ னிந்துக்கு மேற்பொழின்
மேவுகச்சி
மாகம்ப மாதவ யோகியிர் வம்மினென்
வாய்மைகண்டே. (கஅ)

கண்டங் கரியன் றிருக்கச்சி யேகம்பன்
கானமக்குப்
பண்டங் கரியன் கருமானின் வண்ணனிற்
பார்ப்பமென்றே

யெண்டங் கரியன் பொடுஞ்சுமந் தானென
  தேழைநெஞ்சே
யுண்டங் கரியன் னதையன்றி யென்னுனக்
  கோதுவதே. (கசு)

தேகம்ப ஞதர மின்றித் தளர்ந்தெமன்
  சேரினமக்
கேகம்ப ஞதர வாயருள் செய்ய
  விருக்குநகர்
மாகம்ப ஞத ரயர்ந்திட வூதும்
  வளைமுழக்கால்
யோகம்ப ஞதர வேந்துமட் புக்கு
  யுயர்கச்சியே. (உ0)

கச்சியப் பாவர தாகம்ப வாண
  கனகவில்லி
னச்சியப் பாவர விற்றுயின் றேனை
  நயந்தவனே
யுச்சியப் பாவர னேயென் கவிதிட்டி
  யோவலுக்கா
மெச்சியப் பாவர சம்பந்த ராதியர்
  விண்டதற்கே. (உக)

விண்ணம் பரசிவன் ருனென யாரையு
  மேவுமின்னுர்
வண்ணம் பரசிவன் பாதகந் தேடு
  மனக்குரங்கே
கண்ணம் பரசிவன் மென்முலை யும்முழங்
  காலுஞெண்டே
திண்ணம் பரசிவன் கச்சியின் மாவடிச்
  சேர்தெரிந்தே. (உஉ)

சேராத வன்பரைச் சேராத வன்மிகத்
 தேர்ந்துநெஞ்சிற்
றீராத வன்பரைத் தீரா தவனவர்
 செய்பிழையு
மோரா தவன்பரை பூசித்த கச்சி
 யுறையுங்கம்ப
னேராத வன்பரை சன்பாளர் கஞ்ச
 மிருள்வினையே. (உ௩)

இருந்தரை யண்டச மாதிய யோனியி
 னெய்த்தலென்னே
பெருந்தரை யண்ட சமூகங் கருவின்றிப்
 பெற்றகன்னி
முருந்தரை யண்ட சனத்தேல வார்குழன்
 முன்குழைத்த
மருந்தரை யண்டச னேத்துந் திருக்கச்சி
 மன்னிநின்றே. (உச)

மன்னே யரகர கங்கண மாக்கொண்ட
 வாகரும்பின்
றன்னே யரகர மென்ன விடுமதன்
 றன்னையட்டோ
யன்னே யரகர வாதருள் கம்பவென்
 றுர்த்தினைய
னன்னே யரகர வக்கரக் கச்சியி
 னன்றுநன்றே. (உ௫)

நற்கச் சினகர வேகம்ப நாத
 நணுகியென்னுட்
கற்கச் சினகர மாவுறைந் தாலென்றுங்
 கண்டுவப்பே

னேற்கச் சினகர நீங்கத் தரும
முனூற் றுமம்மை
பொற்கச் சினகர மென்முலை சங்கும்
பொருசுவடே. (உரு)

சுவணஞ் சுவண மெனவோடித் தேடிவெஞ்
சோரருக்கா
விவணஞ் சுவண மெனக்கின்று கச்சிக்கம்
பேசனரு
ளவணஞ் சுவண மனுவுடை யேன்மல
மஞ்சுமஞ்சே
னெவணஞ் சுவண மரவுக் கிளைத்திடு
மெங்குமின்றே. (உஎ)

ஏங்களை யேகம்பன் பாதார விந்த
மிறைஞ்சுநர்க
டங்களை யேகம்பன் போகியிற் போகெனிற்
றுங்குவரோ
பொங்களை யேகம்பன் மாதவ ஞகிப்
புசித்தவன்சேய்
கொங்களை யேகம்பன் வெட்கையர் காஞ்சிக்
குலவல்விட்டே. (உஅ)

குலந்தனந் தாமரை நோக்குடை மாதர்
குமரர்மற்று
நலந்தனந் தாமரை வின்றி நிரம்பியெந்
நாளுமன்பிற்
கலந்தனந் தாமரை யிற்பேடோ டார்கயக்
கச்சியினிற்
புலந்தனந் தாமரை மெய்யுமைக் கீந்தவர்
போந்திடினே. (உகூ)

போந்தந்த வந்தரி கண்பொத்து ஞான்றுதன்
பூங்கரங்க
டாந்தந்த வந்தரி மாண்பென்னை யோவெனத்
தார்க்கமிட்டுக்
காந்தந்த வந்தரி தென்னுணர் வார்திருக்
கச்சியிடைச்
சாந்தந் தவந்தரி சித்தார்க் கருள்கம்பர்
தந்தன்மையே. (நo)

தந்திர தந்திர வாசியும் வீரருஞ்
சார்மறுகு
மந்திர தந்திர பூசையு மன்காஞ்சி
வாழ்சடில
சந்திர தந்திர வும்பகல் காப்பர்
வரங்கள்கம்பர்
வந்திர தந்திர மீதே புரிதி
மகிழ்ந்துமுன்னே. (நக)

முன்னாட் டமரு வுருவா டியின்வந்த
மூர்த்திக்கன்று
நன்னாட் டமரு ணகர்க்கச்சி யேகம்ப
நாதவள்ளால்
பன்னாட் டமரு மியத்தினுந் தப்பெனப்
பற்றல்விட்டுன்
றன்னாட் டமரு மிருதங்கம் வாசித்த
றக்கதுவே. (நஉ)

வேதிய ருக்கு மறப்புவந் தாலும்
வினவும்வண்ண
மோதிய ருக்கு விளம்பு தத்தாய்கச்சி
யோங்குமைசே

ரூதிய ருக்கு மிசைவிட னென்றெனை
யுற்றணைந்தா
ராதிய ருக்கு மொழிமறந் தார்கொ
லறைந்தழையே. (ருரு)

அழைத்தல மந்தண நொந்துருத் தோற்ற
மணைந்தணைந்து
பிழைத்தல மந்தண வஞ்சாலி யாயினம்
பெண்கொடியீர்
குழைத்தல மந்தண மோதுவ போற்செல்கட்
கோச்சொரிந்தெ
னிழைத்தல மந்தண ஞெண்கச்சி யேகம்ப
னென்செயுமே. (ருச)

என்பணி யென்பணி நின்பதி சூடிய
தென்றிகழ்ந்தேன்
முன்பணி யென்பணி செய்யே னெனவே
முகம்புலர்ந்து
துன்பணி யென்பணி யாயின ளாதரி
தோன்றென்சுதை
யின்பணி யென்பணி நாள்கழிப் பாள்கச்சி
யெம்மரசே. (ருரு)

அரசாதி பத்திய நச்சேல்வண் கச்சி
யரும்பதியின்
விரசாதி பத்தியம் வேண்டுக துர்வாச
மெய்த்தவன்ரூர்
பரசாதி பத்திய மோங்கவந் திந்திரன்
பட்டதையோர்
நரசாதி பத்திய றிக்கினு நன்றென
நாட்டல்கண்டே. (ருசா)

கண்டர விந்த பலகோடி மக்களைக்
காதையினு
முண்டர விந்த நிமிடஞ் சமன்வரு
முய்விர்கொலோ
பிண்டர விந்த மமுதுகத் தூபி
பிறங்குகச்சி
யண்டர விந்த மனையிர்கம் பேசர்க்கன்
பற்றவரே. (நஎ)

அற்ப னகற்றி லநீதமென் றெண்ணில
னண்டினரை
விற்பன கற்றில னென்றே தமிழைவெவ்
வீணருக்கே
நிற்பன கற்றில தப்பெண் களைக்கொண்டு
நேயமுடன்
கற்பன கற்றில கன்காஞ்சி வாழ்த்தக்
கருதலென்னே. (நஅ)

கருந்தா தருந்து புனலிற் றிரும்பாக்
கதியுனக்கே
வருந்தா தருந்து முறைமூ வரும்பெற்ற
வண்மைகண்டே
தருந்தா தருந்து களிஞடி வண்டிசை
தண்கச்சியி
னிருந்தா தருந்து னெறியகன் றுரிருந்
தேத்துகவே. (நகூ)

ஏற்று மலையம ருங்காட்சி காணகிலே
யேழையர்கள்
போற்று மலைய வழிதேடு கின்றுய்
புலமைநன்றே

யீற்று மலைய நினைக்குங் கொலோகன்றை
யென்னருஞ்சொன்
மாற்றும லைய மடையாமற் காஞ்சி
மருவுகவே. (சo)

மருமாலைக் காவண நன்மணி மேடை
மலர்த்தடமும்
வருமாலைக் காவண மோங்கிய கச்சியை
மானுமின்னே
திருமாலைக் காவண மாயனைச் சிட்டிக்கச்
செய்துமெட்டா
வுருமாலைக் காவண மாறினை யென்னே
யுருகுவதே. (சக)

உருவ மருவ முருவரு வம்முடை
யோமறைமாந்
தருவ மருவ நினைத்த பலனைத்
தருவங்கச்சித்
திருவ மருவ வதிதீர் கிலமெனுஞ்
செம்மலையான்
மருவ மருவ வுருமூன்றி னென்றெங்கு
மாயத்ததே. (சஉ)

மாயு மரைக்கண நில்லாது தேகம்
வருமறிந்துந்
தீயு மரைக்கண நீள்பாலை யோடுஞ்
செயலுடையீ
ரேயு மரைக்க ணதீட்டுகி லோன்கச்சி
யீசனடிப்
பாயு மரைக்க ணருவுண் டுவண்டினிற்
பாடுதிரே. (சங)

பாடிக் கனிந்தனை யப்பர் பராவும்
பதிக்கச்சியுட்
கோடிக்க னிந்தனை யம்பு நிலாவலர்
கோட்படுவே
ளீடிக்க னிந்தனை நீங்குவ னேகம்ப
நீவந்தெனைக்
கூடிக் கனிந்தனை யாயி னெனக்கொரு
கோணில்லையே. (சச)

கோணு கலாமதி கோடீரத் தன்பிற்
குலாவுமராப்
பூணு கலாமதி யோருஞ்சற் றேநின்று
போற்றினுங்கா
மாணு கலாமதி னுங்கருந் தாதுவு
மானுமென்னுள்
வாணு கலாமதி செய்யா தருள்கச்சி
வாழ்சுடரே. (சரு)

சூடவம் பகல வமுதக் குடங்கள்வெஞ்
சோரிபொங்கத்
திடவம் பகல மிசையுய்த் தடுமத
தேர்ந்திலையோ
வடவம் பகலக விற்காஞ்சி நெற்றிக்க
ணன்வருமு
னடவம் பகலவ னைக்காணி னிற்குங்கொ
னள்ளிருளே. (சசா)

இரந்தனந் தந்தன னுவலர் கோனை
யினிதினென்றும்
புரந்தனந் தந்தனக் காஞ்சிப் பதியென்றும்
போற்றலர்போற்

பரந்தனந் தந்தன மெல்லிடை வாட்டுவ
பார்த்தளிகா
ணிரந்தனந் தந்தன தாக்கருங் கூழை
நிறைவதென்னே. (௪௭)

என்னந் தரங்க வருள்வள்ள லாகு
மெழில்கொள்கச்சி
மன்னந் தரங்க விடமுண்ட கண்டன்
வளருமன்ப
னன்னந் தரங்க மனலாட்டி யாண்ட
நடத்திறைவன்
முன்னந் தரங்க வரிக்கரி யாத
முழுமுதலே (௪௮)

முதனடு வந்தனை மூர்த்தியை மாவின்
முளைத்தவொன்றை
மதனடு வந்தனை வண்கச்சி வாணனை
மன்னியென்னுட்
பதனடு வந்தனை போலளி யென்று
பகரினவ
னிதனடு வந்தனை செய்தியென் பானிது
நீதியன்றே. (௪௯)

அற்புத வாக்கை மகிழ்கச்சி யேகம்ப
ரஞ்செவியிற்
கற்புத வாக்கை குவித்தேத் திடாமற்
கயவர்பின்போய்
நற்புத வாக்கை தனைத்தரு கண்ண
நரவென்றந்தோ
புற்புத வாக்கை திரமென நம்பிப்
பொருமனே நெஞ்சே. (௫0)

பொருப்பரஞ் சந்தன மாந்தழை யென்னுமுன்
 பூங்கச்சிமின்
விருப்பரஞ் சந்தன மேயென்று வாங்கி
 விஞேதத்தணைத்
திருப்பரஞ் சந்தன ஞட்ட மமிர்தா
 யெழிற்சிலம்பா
வுருப்பரஞ் சந்தன தாக்கூட லொத்தன
 ளோதலென்னே. (ருக)

ஓதியஞ் சக்கர மன்பினிற் சாத்தல
 ரொன்றிலகண்
டூதியஞ் சக்கர விந்தமென் றேமா
 லுவந்தணியச்
சோதியஞ் சக்கர நல்கினன் காஞ்சியிற்
 சூதன்மத
னேதியஞ் சக்கரச் சங்குகொண் டானென்கண்
 யான்வைக்கவே. (ருஉ)

வையத் தரிவை பவமுணர் வீரென
 மாக்கச்சியுட்
சையத் தரிவை முலைக்கும் வளைக்குந்
 தழும்புபெற்றீ
ரையத் தரிவை யறிவார் கொலோவுனை
 யண்டலர்க
ணையத் தரிவை யுறுசூல மேந்திய
 நாயகனே. (ருங)

நாயக ரத்தின மேகம்பர் கம்பை
 நதிக்கரையிற்
சேய கரத்தி னவாவிற் றழுவிய
 தேவிசெம்பொன்

மேய கரத்தின மெல்லா வுலக
விளக்கமதாம்
பாய கரத்தினக் காஞ்சிமின் மார்பிற்
பதக்கத்தினே. (நச)

பதகோடி யஞ்சலி யாதுகண் டேத்திப்
பரவசமாய்ச்
சதகோடி யஞ்சலி செய்தடி யேனுய்யத்
தண்டலைத்தேன்
மதகோடி யஞ்சலி யோங்குநன் செய்விளை
வண்கச்சியுட்
சுதகோடி யஞ்சலி னல்வர மென்றரு
டேய்கம்பனே. (நரு)

தூது பரவை யிடஞ்சென் றுரைத்ததென்
சுந்தரர்மு
னோது பரவை தனினிட்ட நாம
மொளிக்குமென்றே
மோது பரவை விடமுண்ட கண்ட
முயன்றிமய
மாது பரவம் முககச்சி மாவின்
வடுவினிற்கே. (நசா)

வடுக்கலைக் கார்முக நோக்கார் நிதமும்
வராதுமிரா
ருடுக்கலைக் கார்முகம் வேணிதந் தார்மத
னுய்யவைத்தார்
முடுக்கலைக் கார்முக மன்புகல் வார்நன்
முதுகச்சியா
ரடுக்கலைக் கார்முக மாக்கிய் வேகம்பர்க்
கார்சொல்வரே. (நஎ)

ஆரணக் கோட்ட நிறைகச்சி யேகம்ப
ரார்ந்தபன் றிப்
போரணக் கோட்ட மருப்பணிந் தீர்நல்ல
பொற்பிதென் றேன்
வாரணக் கோட்ட முடையாய் தருதி
மகிழ்ந்துமுன்னம்
பாரணக் கோட்ட மளிமினென் றேநக்க
பான்மையென்னே. (ருஅ)

பானலம் போதர வக்கடல் வெவ்விடம்
பாற்றுநமன்
வேனலம் போதர மென்ன மதர்த்தகண்
மெல்லியராற்
றேனலம் போதர வாடுகின் றேனருள்
செய்குவையோ
மானலம் போதர ஊப்பெற்ற வாகச்சி
மாமணியே. (ருகூ)

மணியும் பணியும் பதியும் முதலாய
வாழ்வைவெஃகேன்
றுணியும் பணியும் புலியுந் தொழப்பதந்
தூக்குங்கம்ப
கணியும் பணியும் பெரியோரைக் கச்சியிற்
கண்டுதுதி
பணியும் பணியும் பணியும் பணியும்
பணிபணியே. (சூ0)

பணியா தவனே திரிகுநர் சேரிற்
பணியுங்கச்சி
கணியா தவனே யனையோர் துணையாக்
கடம்புகுந்தா

டுணியா தவனே யெனுங்கொலென் பூங்கொடி
துன்புறுமேற்
றிணியா தவனே நிலவாதி கம்பர்கஞ்
சித்திக்குமே. (சுக)

சித்தச னம்பணி சோலையும் வாவியுஞ்
சேர்ந்திலங்க
வித்தச னம்பணிக் குப்பல்கொள் கச்சி
வியன்மறுகிற்
பத்த சனம்பணி கம்பநின் சேவையைப்
பார்த்துக்கொண்டாள்
பித்தச னம்பணி யாலமென் ருளென்றன்
பெண்ணரசே. (சுஉ)

அரகர மாவடி வாணல்ல கம்பனென்
றங்கச்சியுள்
விரகர மாவடி நாண்மங் கலமா
விளம்பினர்காண்
சிரகர மாவடி காட்டா வளைக
டிருடியும்மீ
சுரகர மாவடி கேள்கள்ளக் கம்பவெஞ்
சூதனிற்கே. (சுங)

தூடஞ் சரண மளியார்க்குத் தேட்டந்
தொலைத்திடுவார்
நீடஞ் சரண வணுவுங் கொடாரந்த
நீசருக்கு
நாடஞ் சரண மெரித்த பிரான்கச்சி
நன்னகரி
லாடஞ் சரண மலர்க்கம்ப நல்ல
வருட்குணமே. (சுச)

அருமருந் தன்ன திருக்கச்சி யேகம்ப
மார்ந்தருளுந்
தருமருந் தன்ன வராகங்கள் காணச்
சயம்புவைச்சூழ்
வருமருந் தன்ன முடையும் பணமும்
வழங்குமற்றோ
கருமருந் தன்ன நினக்கில்லை யில்லையெக்
காலமுமே. (௬௫)

காலையு மாலையு மாதவர் போற்றக்
கமழ்கருப்பஞ்
சோலையு மாலையு மன்காஞ்சிக் கம்பரைச்
சூழ்ந்துநின்று
வேலையு மாலையு நேர்கண் ணுதரங்கொண்
மெல்லிசொல்கேண்
மாலையு மாலையு மாலையு மாலைச்செய்
மாலைமுன்னே. (௬௬)

முன்னவ னஞ்சம் புகைத்தானை வென்றவ
மோகனுமை
மன்னவ னஞ்சம் புசித்தவன் வேள்வி
வருமுணவோ
னென்னவ னஞ்சம்பு கச்சியே கம்பனன்
பின்மைகொண்டே
யின்னவ னஞ்சம்பு தாவின் னவனென்ன
வேற்குமன்றே. (௬௭)

ஏல மணத்தள கப்பெரு மாட்டியு
மேகம்பருஞ்
சில மணத்தள மல்லிகை மாவிற்
றிகழ்கச்சியிற்

கால மணத்தள ராதவர் யாங்காணுங்
காதன் மணக்
கோல மணத்தள வோவிண் ணளவோ
குறிக்கொண்மினே. (சுஅ)

மின்ன லளிக்கு விருந்துசெய் பூங்கொன்றை
வேணியின்மின்
கன்ன லளிக்கு நிலக்கச்சி யேகம்பர்
கார்மிடற்றிற்
றுன்ன லளிக்கு வருந்தேற் றுலியொடுந்
தோன்றினகா
ரின்ன லளிக்கு மரிக்கார் துணைத்தேரு
மீண்டிலவே. (சுகூ)

இலங்கா ரமரா கமுகுயர் தென்னை
யெழில்செய்பொழிற்
றலங்கா ரமரா மகிழ்கச்சி யேகம்ப
சங்கரர்க்குத்
துலங்கா ரமரா வுடைதோ லிருப்பொரு
சூதமென்றால்
விலங்கா ரமரா வதியான் விதிமால்
வியப்பிதுவே. (எ0)

வியனுக மங்கலை சேர்வேணி யால
விருக்கமுற்றுப்
பயனுக மங்கலை தேர்நால்வ ருக்கருள்
பாணிகச்சி
வயனுக மங்கலை யம்மைகொண் மேனிகொண்
மாக்கம்பமான்
மயனுக மங்கலை யென்றடி நல்க
வழக்கில்லையே. (எக)

வழங்கிய வேதண்ட வண்பதி மாதர்
மகிழ்வினயர்
கழங்கிய வேதண்ட மங்கையர் கேட்டயர்
கச்சியொன்ருய்
முழங்கிய வேதண்டக் கல்லா லடிமகிழ்
மூர்த்திமெய்யைத்
தழங்கிய வேதண்டக் காருரி மூடலென்
சங்கரனே. (எ௨)

சங்கர சங்கர வென்றேத்து மன்பர்
சதாநுகருந்
துங்கர சங்கர வாதருந் தென்று
சொலாயெனினுங்
கங்கர சங்கர வந்தண வாத்திருக்
கச்சியிடை
வங்கர சங்கர மாதிய வாவர
வைத்திநன்றே. (எ௩)

வையா மலக மொழியாமற் கோப
மணிதரென்ரு
னையா மலககனம்பத்தி வித்தி
நயப்பதெங்நன்
கையா மலக மெனவளர் கச்சியிற்
கம்பமன்னு
மையா மலக னெறிகாட்டி யாட்கொளு
மன்புடைத்தே. (எச)

அன்பா மகத்தளி நல்லுண வால
மருந்துகம்ப
வின்பா மகத்தளி யென்குவிர் மேற்றளி
யில்லைகொலோ

தென்பா மகத்தளி ரன்னவர் மிக்குள்ள
சீர்க்கச்சியுண்
முன்பா மகத்தளி யார்க்கணி யென்றெனை
மோகிப்பதே. (எ௫)

மோக விடைய வலைவீழ் விடனை
முளரியந்தா
ளேக விடைய வெனயான் முறையிட்டும்
வெம்பகைவ
ஞக விடைய விருப்பதென் பொன்மி
னனையுநெடு
மேக விடைய திருக்கச்சி மேவும்
விடகண்டனே. (எ௬)

விடங்கண்டை யானன ஞட்டத் தவர்முலை
மென்மொழியுங்
குடங்கண்டை யானன மம்புலி யென்று
குரைப்பவனி
னடங்கண்டை யானன நின்னைக் குழக்கன்றி
னச்சுமன்ப
ருடங்கண்டை யானன வோங்கவைத் தாள்கச்சி
யூர்க்கம்பனே. (எஎ)

ஊர்மா லயனே யுருலய சித்தென
வோங்குங்கச்சிச்
சீர்மா லயனே னறிந்துரை செய்யத்
திறனுமுண்டோ
கார்மா லயனே முதலாய தேவருங்
கண்டுதொழுங்
கூர்மா லயனே யருட்கம்ப மேய
குருமணியே. (எஅ)

குருகு துவந்துவ மாங்கைவிட் டொன்று
    குலைவவொன்று
கருகுது வந்துவ கைச்சொலப் போச்சொன்று
    கச்சிமன்பால்
வருகுது வந்துவ ரென்றென்றுன் ருர்ப்ப
    மருவியுயிர்
பருகுது வந்துவ மானநெல் யானென்னை
    பண்ணுவதே. (எகூ)

பண்டா சுரகர மோவப் புரிந்த
    பராவளர்மைக்
கண்டா சுரகர நாதா மணிபொன்
    கதிர்செய்நகர்
விண்டா சுரகர தீதருஞ் சேர்கச்சி
    மேவியவே
தண்டா சுரகர வீணை தடவி
    சரண்சரணே. (அ0)

சரவார மன்ன விழிநீர் குடும்பந்
    தனின்வறுமை
வரவார மன்ன விசயவென் றீனரை
    வாழ்த்திடினும்
விரவார மன்ன மளியா ருமையறம்
    வேண்டுகச்சிப்
புரவார மன்ன வருட்கம்ப னல்குமெய்ப்
    போகமுமே. (அக)

போகன மாலயன் சேரற் கரியவன்
    போந்திடினே
யோகன மாலயன் கச்சியே கம்ப
    னுரைக்குமுன்னே

நீகன மாலயன் கிட்ட வொணுதென
நிப்பரன்பர்
வாகன மாலயன் காணு தருச்சித்த
வாய்மையுண்டே. (அ௨)

உண்டனம் பண்டி நிறையக் கலையு
முடுத்தணிந்தும்
வண்டனம் பண்டி மொழியார் விழிநடை
மானுமென்றென்
கண்டனம் பண்டித ருக்கருள் கச்சியே
கம்பனைச்செய்
தண்டனம் பண்டி யரவும் மிகவுந்
தருக்குற்றதே. (அ௩)

தருக்கிய ராவண னேங்க லெடுக்கத்
தனிவிரலான்
முருக்கி யராவண மொன்ருதி கொண்ட
முதல்வவென்றே
யுருக்கி யராவண வெய்யனைக் காத்த
துணர்ந்து துதி
யிருக்கிய ராவண வந்தணர் வாழ்கச்சி
யீசனையே. (அ௪)

ஈசங்கஞ் சங்கண் சிறிதேனும் பாரா
யெனினகைதா
தேசங்கஞ் சங்கண் வெளிர்நிற மாய
தெரிந்திலையோ
வாசங்கஞ் சங்கண் வழங்கப் பெடைகண்
மகிழவண்டர்
மூசங்கஞ் சங்கண் மருவுந் தடக்கச்சி
முக்கணனே. (அ௫)

மூக்கனி கற்கண்டு சர்க்கரை தேன்பான்
முதிர்சுவைப்பேச்
சுக்கனி கற்கண்டு வித்து முளைக்கச்செய்
சுந்தரிகோ
ணிக்கனி கற்கண்டு மேங்கும் பாத்தையங்
கேகுமுமை
நக்கனி கற்கண் டுயாக்கச்சி யூரவென்
னச்சுவதே. (அசு)

நச்சிப் பணுதா நால்வர் திருத்தமிழ்
நன்கிசைத்து
மெச்சிப் பணுதர வாத்தொண்டு வாணி
விருப்புவள்பொ
னிச்சிப் பணுதா நான்முகன் மாலல
வென்றுனேயே
கச்சிப் பணுதர கம்பேசன் ருளிற்
கரங்குவித்தே. (அஎ)

கரம்படி வில்லடி வித்திடென் னுட்கச்சிக்
கம்பமெய்ப்பத்
திரம்படி வில்லடி யேனையென் ருவணங்
கீட்டலென்மு
னுரம்படி வில்லடி மாற னரன்புத்த
னுந்தரக்கொள்
பிரம்படி வில்லடி கல்லடி மாவடிப்
பித்தருக்கே. (அஅ)

பித்தரை யத்தரைப் பேணுத ஞானப்
பெரும்பித்தரை
முத்தரை யத்தரை யம்பரைக் கன்பரை
முக்கணரை

யித்தரை யத்தரை யெத்தரை யும்புக
ழேர்கொள்கச்சிக்
கத்தரை யத்தரைக் கம்பரை நெஞ்சே
கரைகரையே. (அகூ)

கரைகடந் தானந்த முத்தியிற் சேரக்
கணிப்பமன்பி
னுரைகடந் தானந்த நல்கினென் கம்ப
ருறையுங்கச்சிப்
புரைகடந் தானந்த மாமுலைப் பூவை
புலத்தமந்திக்
கிரைகடந் தானந்த னத்திற் கடுவற்கண்
டேங்குறுமே. (கூ0)

உறிக்காரைக் காடு மடவா ரொளிப்பமென்
றுய்த்தநெய்யுண்
பொறிக்காரைக் காடு நிறநல்கு மாலயன்
போகியுந்தாழ்
குறிக்காரைக் காடு கொடியண்ட நாட்டுக்
குலவுந்திரு
நெறிக்காரைக் காடு நிகழ்கச்சி யூர்க்கு
நிதிகம்பனே. (கூக)

நிதிபசு பாசன மொய்ம்பிய ராடவர்
நேயமுடன்
வதிபசு பாசன மிக்கபெய் பால்வள
மன்னுகச்சி
யதிப சுபாசன காதிய ருக்கரு
ளீயவெற்குப்
பதிபசு பாசன வின்முப் பொருளும்
பகர்ந்தளியே. (கூஉ)

அளியளித் தானந்த வத்தருஞ் செல்வ
மமைந்த கச்சித்
தளியளித் தானந்த மாவுறை கம்பனைச்
சாரலர்போல்
விளியளித் தானந்த நந்தன நீங்கும்
விதமகிண
ரெளியளித் தானந்த வாயென் றகன்றீட்டல்
யார்தனமே. (கங)

தனையனை யாதரி நாண முலைப்பா
றருகவென்னு
முனையனை யாதரி கந்தோடத் தந்த
முதுசண்பைபோல்
வினையனை யாதரி யென்ன விதியில்லை
மேவுகச்சி
நினையனை யாதரி பன்னிரு நாம
நினைப்பித்ததே. (கச)

நினைக்க விசித்திர மாங்கம்ப புண்ணியை
நேர்ந்துமிடை
தனைக்கவி சித்திர காயத் துரியொடுஞ்
சார்ந்துபத்தூர்
மனைக்கவி சித்திர மேற்றுண்டு கச்சி
மயானம்வைகு
முனைக்கவி சித்திர நாவலர் பாடி
யுருகுமன்பே. (கரு)

உருவோண காந்தன் புகழூர னெங்கையை
யுள்ளன்பினுள்
பொருவோண காந்தன் வடிவென் றருந்து
பொதுத்தம்பலந்

திருவோண காந்தன் றளிக்கச்சி யேகம்பர்
 சீரருளால்
வருவோண காந்தன் றுணைமைந்தன் வாய்நாறு
 மாண்புடைத்தே. (கூசா)

மாணிக்கம் பச்சை நிறக்கம்ப நாதரை
 வந்துதிரு
வாணிக்கம் பச்சை துதிகச்சி யூரன்பொய்
 வார்த்தையெல்லாம்
பாணிக்கம் பச்சை வலங்குழ லென்பாண
 பாடவட்கே
நாணிக்கம் பச்சை நுகரனை வேற்கென்சொ
 ஞட்டுவதே. (கூள)

நாட்டுஞ் சுவர்க்க மெனவே மறைக
 ணவிலுங்கச்சி
யீட்டுஞ் சுவர்க்க மகிழ்திரு வேகம்ப
 ரின்னருளிற்
ரேட்டுஞ் சுவர்க்கவு ராதே நினைக்கச்
 சுகமெனக்கே
காட்டுஞ் சுவர்க்க மிரண்டார்ந்த கச்சிக்
 கனங்குழையே. (கூஅ)

கனகச் சிமய முருகநெஞ் சின்வடுக்
 காட்டுமிரு
தனகச் சிமய மகட்கொரு பாகந்
 தருங்கம்பன்வாழ்
வனகச் சிமய னிருமிக்கும் வேறு
 வளநகர்க்கு
மினகச் சிமய வருக்குவிண் டொண்டர்க்கு
 வேதண்டமே. (கூகூ)

நண்ணிய னேகரு வார்கச்சி யேகம்ப
சங்கரனே
கண்ணிய னேகரு ணுமம் புகழ்வது
கண்டுவந்து
நண்ணிய னேகரு ணகர னேயென
நானுஞ் சொற்றேன்
புண்ணிய னேகரு தேல்பிழை வாழிநின்
பூம்பதமே. (க00)

திருக்கச்சி ஏகம்பர் திரிபந்தாதி முற்றிற்று.

---

## திருவேகம்பநாதர் கும்பாபிடேகச் சிறப்பு

### வெண்பா.

*அகரத்தார் கச்சி யமர்ந்தருளே கம்பர்
சிகரத்தார் கும்பாபி டேக—நகரத்தார்
செய்வித்தா ரெங்கண்மனந் தென்படைய வன்னோர்கள்
வையத்தின் வாழ்க மகிழ்ந்து.

### இரட்டை யாசிரிய விருத்தம்

மாவோங்கு சீர்க்கச்சி யேகம்ப நாதனுர்
வாழுமூ லத்தானவுள்
வர்னசொர் னவிமான மும்புற மகத்தீசர்
வளருமார்க் கண்டேசர் நல்
வடவாலி னுறைகின்ற தட்சிணு மூர்த்தியுயர்
மத்தளம் மாதவேசர்
மகிழ்கசா னனர்கந்தர் சண்டேச ரொளிர்நால்வர்
வாய்ந்தவறு பத்துமூவர்

---

* இவ்விரண்டு செய்யுட்களும் ஆசிரியரால் இந்நூல் இறுதிக்கண் செய்யப்பட்டுள்ளன.

காவோங்கு நவர்நிலாத் துண்டமால் பிரளயம
　　காசத்தி யும்புறத்துக்
காட்சியுற் சவமூர்த்தி யேலவார் குழலம்மை
　　கதிர்வேலர் மாவடியினிற்
களிகொள்சோ மாக்கந்தர் மாசகத் ரேசரிவர்
　　காதலால் வதிமந்திரங்
கனகமணி மண்டப மகோன்னதத் தூபிதங்
　　கக்கலச மனுவெட்டினுற்

றாவோங்கு தம்பவா வரணமுதல வாவினுஞ்
　　சொல்லரிய பணிகள் செய்தே
தூண்டுமா வலினராய்ப் புகழ்வதொர் விகாரியிற்
　　றொடர்மகர ரவியி னிருபான்
சூழ்மூன்றின் வருமாதி வாரமதி பஞ்சமி
　　துலங்கிரே வதிசி வன்பேர்
துதையோக மெய்ப்பத்ர வாகரண முங்கூடு
　　சுப்தினத் துதய காலைக்

கோவோங்கு மீனலக் கினமுகூர்த் தத்தினிற்
　　கோதிலா வேதாகமங்
கூறுமுறை யாகநிறை வேற்றியன தானுதி
　　குறையிலா மற்புரிந்து
கோலமா லாதியர்கள் போற்றமறை தேவார
　　கோடமுற நகரவசியர்
கும்பாபி டேகஞ்செய் வித்தகாட் சியையென்ன
　　கூறுகே னவர்வாழியே.

இந்நூலுக்கு முழுவுரை யன்றிக் குறிப்புரை பயன்படாது என்னும் கருத்தினுல் இதற்குக் குறிப்புரை எழுதப்படவில்லை.

உ

திருச்சிற்றம்பலம்

# கச்சிக் கம்பர் வெண்பா

## காப்பு

தண்பாலி நாட்டுத் தழைத்த கச்சியேகம்பர்
வெண்பா விளம்புதற்கு மிக்கவருட்—கண்பாராய்
தேவிகட சக்கரநேர் சீர்முலைக்கா மாட்சிதந்த
மாவிகட சக்கரநேர் வந்து.

## நூல்

அருளோங்கு காமாட்சி யம்மை யொருமாவிற்
றெருளோங்கு நின்பூசை செய்து—பொருளோங்கு
மாமாலைசூட்டு மணங்கண்டு சூட்டினன்வெண்
பாமாலை கச்சிக்கம் பா. (1)

தியானத் தொளியே சிவஞான வாழ்வே
மயானத் தமுதே மணியே—தயாநிதியே [யைப்
யென்றுதே நாள்கழித்தே னின்றடுத்தே னென்பிழை
பன்னுதே கச்சிக்கம் பா. (2)

காமக்க ணம்மையுமை காசினியின் மன்னுயிரா
மாமக்க ணன்மையுறும் வண்மைதனைத்—தான்மிக்க
வெண்ணினுண் மார்க்கமிதென் றெண்ணி யுனைப்பூசை
பண்ணினாள் கச்சிக்கம் பா. (3)

பூமருவு நான்முகனும் பொன்மருவு மாலுமறை
மாமருவு வள்ளலென வாழ்த்துமுனைக்—காமர்
மகவனே யென்று மகிழ்வினழைக் கின்றேன்
பகவனே கச்சிக்கம் பா. (4)

வண்டருய்யத் தேன்சொரியு மாமலர்த்தாட் கன்புசெயுந்
தொண்டருய்யக் காட்சிதருஞ் சோதியே—யண்டருய்ய
நஞ்சமுண்டா யித்தைவிட நன்மையுண்டா நம்பினர்க்குப்
பஞ்சமுண்டா கச்சிக்கம் பா. (5)

கண்ணுங் கருத்துங் கலைபலவு மொண்பொருளு
நண்ணுஞ் சரியைமுத ஞற்பதமு—மெண்ணு
நலந்தருவாய் நேயருக்கு நாயடியேற் கென்ன
பலந்தருவாய்க் கச்சிக்கம் பா. (6)

ஆதியந்த மில்லாத வானந்த மாகடலிற்
சோதி மலையிற் சுயஞ்சுடராய்—நீதியுடன்
ருேற்றுவா யேழைத் தொழும்பனேன் வல்லிருளைப்
பாற்றுவாய் கச்சிக் கம்பா. (7)

அன்னையடித் தோட்டினுமென் னம்மாவம் மாவென்றே
பின்னையும்போய்ப் பாலுண்ணும் பிள்ளையின்யா—னுன்னை
விடமாட்டேன் விட்டு வினைவலியாற் றுன்பம்
படமாட்டேன் கச்சிக்கம் பா. (8)

நல்லோ னனமளிக்க நண்ணியுண்ணு மேழைதனைப்
பொல்லோன் றடுத்தோட்டல் போலவே—யெல்லாமா
நீவந்தாய் மாநிழலி னிற்றெடரா வொட்டாதென்
பாவந்தான் கச்சிக்கம் பா. (9)

கங்கைமதி சென்னியிலே கங்காளந் தோண்மேலே
யங்கையிலே மான்மழுத்தீ யாகத்தே—பொங்கரவ
மாரமா வைத்தா யடிபிணைக்கீ ழென்னைவைத்தாற்
பாரமா கச்சிக்கம் பா. (10)

உன்னை யடுத்தாரை யுத்தமர்க ளாச்செய்து
பின்னைப் பிறவிப் பிணிதீர்த்து—நன்னர்
சரணமே யின்பருள்வாய் சான்றிதற்கு நாகா
பரணமே கச்சிக்கம் பா. (11)

சாலவித்தை கற்றலுஞ் சாலவித்தை யாவதல்லான்
மாலவித்தை நீக்க மருந்தாமோ—காலை
யணிபோது நீர்கொண் டருச்சிப்ப தின்றேற்
பணிபோதுங் கச்சிக்கம் பா. (12)

வேதனைபண் ணுதேநீ வேடிக்கை பாராதே
சோதனைசெய் யாதேமுன் சொற்றமிழி—ேைதாசின்
சூலையா நோய்தீர்த்த தூய்மைமற வேன்கச்ச
பாலையா கச்சிக்கம் பா. (13)

மயர்வேதன் மாலு மறுவுருவிற் றேடி
யயர்வே தனைமிக் களித்தே—யுயர்வேத
சூதநிழ லுற்றநின் சூதறிவார்க் கீவாய்நின்
பாதநிழல் கச்சிக்கம் பா. (14)

பாந்தள்வாய்த் தேரையெனப் பாவத் தினைகின்றேன்
போந்தருளா லென்னைப் புரந்திடுவாய்—காந்தநீ
யிங்கயநான் வள்ளனீ யேழைநான் சூரியனீ
பங்கயநான் கச்சிக்கம் பா. (15)

அண்டர் பராவு மருந்தமிழிற் சேக்கிழார் [த்தில்
தொண்டர் புராணமன்பாய்ச் சொல்வித்தாய்—மண்டல
வேறையே யென்னருளிம் மெய்க்கதைகே ளாச்செவிவன்
பாறையே கச்சிக்கம் பா. (16)

அத்துவிதா னந்த வகண்டபரி பூரணத்தி
னித்தியமா வாழு நிலையுடைநின்—பத்தருடன் [ருள்
சேர்த்திடுவாய் வல்வினையைத் தீர்த்திடுவா யென்னைய
பார்த்திடுவாய் கச்சிக்கம் பா. (17)

முற்காழிப் பிள்ளையழ முன்னின் றருளுவித்தாய்
நற்காமக் கண்ணுமையாள் ஞானப்பா—னிற்கே
யுருகுவேன் கால்கழுநீ ரூற்றுகினு மன்பாய்ப்
பருகுவேன் கச்சிக்கம் பா. (18)

வையகத்து மானுடனாய் வந்து னடிமறந்தேன்
வெய்யனிவ னென்றென்னை விட்டுவிடே—லைய
வடியாது செய்யினுஞ்செய் யாத்தடியா மாடு
படியாது கச்சிக்கம் பா. (19)

கோயில்வலம் வந்துநினைக் கும்பிடவென் றுல்வேலை
யோயிலது செய்வமென வோதுவா—ராயிலிது
காண்டரங்க நின்று கடலாட லொக்குமே
பாண்டரங்க கச்சிக்கம் பா. (20)

தொழுவார் திருக்கோயில் சூழ்வார் திருமுன்
விழுவா ரடியார்கள் வேண்டி—யழுவாரன்
புள்ளமே வெள்ளமே யுன்பாத முன்போதப்
பள்ளமே கச்சிக்கம் பா. (21)

நந்தனைச் சேதித்து நங்கைசிறுத் தொண்டர்தரச்
சந்தனத் தோழி தலைக்கறியுந்—தந்தனணீ
முத்தியே தந்தாலு முன்னவரி தன்னவர்செய்
பத்தியே கச்சிக்கம் பா. (22)

பொய்யா வணங்கொண்டு போந்தாண்டாய் சுந்தரரை
யையா வடியேற் கதுவேண்டா—மெய்யாக
வெத்திரமுங் காட்டி யெழுதியளிப் பேனடிமைப்
பத்திரமுங் கச்சிக்கம் பா. (23)

அளவை கடந்த வருளொளியே யுன்றன்
விளைவை யறிந்தடைந்த மேலோ—ருளவைப்
பிரமனே காணுனேற் பேதையறி வேனே
பரமனே கச்சிக்கம் பா. (24)

கங்கைமுடி மேலிருந்தாள் காமாட்சி பாலிருந்தா
ளெங்குவைப்ப னின்கிளியை யென்பையே—லங்கசன்றன்
செஞ்சரத்தில் வேகாமற் சேமமுற வைத்திமனப்
பஞ்சரத்திற் கச்சிக்கம் பா. (25)

மாமாலை காலை மறுகூடு வந்துவந்து
தீமாலை நல்கினையென் செல்விக்குப்—பூமாலை
நீதந்தா லுய்வா ணிசஞ்சொன்னேன் சான்றிதற்குன்
பாதந்தான் கச்சிக்கம் பா. (26)

தண்டுத லிலாத்தான தன்மஞ் செயப்பொருளுந் [டமிழுஞ்
தொண்டுசெய மெய்வலியுந் தோத்திரத்துக்—கொண
சானிக்க மெய்யுணர்வுந் தந்தருள்வாய் நின்னருட்டேன்
பானிக்கக் கச்சிக்கம் பா. (27)

வலிக்காமற் காய்ந்தநீ வன்றொண்டர் தூதாய்ச்
சலிக்காமற் போயுரைத்த தற்குக்—கலிக்காமர்
தீங்கென்றூர் கோவித்தார் தேவே யுனதருளாற்
பாங்கென்றூர் கச்சிக்கம் பா. (28)

பொன்னகர மேவுசுரர் புண்ணியஞ்சம் பாதிக்க
நன்னகரங் காஞ்சி நகரென்றே—மன்னி
விரிதாபந் தீர்வர்நரர் வீணே திரியிற்
பரிதாபங் கச்சிக்கம் பா. (29)

காட்டு நரியைக் கனமா வினமாக்கி
மீட்டு நரியாய் விபினத்தே—யோட்டுநரியார்
தொண்டனுச் செய்தென்னைத் துட்ட னெனத்துரத்தேல்
பண்டனுக் கச்சிக்கம் பா. (30)

பொய்காட்டு மாயை புறங்காட்ட வானந்த
மெய்காட்ட வன்றொருநால் வேதியர்க்குக்—கைகாட்ட
வாலமர்ந்தா யெங்கட் கடிகாட்டவோ மாவின்
பாலமர்ந்தாய் கச்சிக்கம் பா. (31)

குண்டலத்திற் பாய்ந்து குமிழ்மேன் மறித்துமுக
மண்டலத்து லாவும்விழி மாதர்சுகம்—விண்டலத்து
நண்பாமே னீராட நண்ணினர்சே ருடலுறும்
பண்பாமே கச்சிக்கம் பா. (32)

காலையினு மாலையினுங் காதலுட னின்கோயில்
வேலைசெயுந் தொண்டரெனை வேண்டாது—மாலின்
விரசிவனே னென்னினுங்கள் வேலைக்கா ளென்றுள்
பரசிவனே கச்சிக்கம் பா. (33)

ஆசையினிற் கண்புதைத்த வம்மைக்கும் பாவமுண்டோ
மாசைலம் விட்டிங்கு வந்துன து—பூசையிலே
யீடுபட்டா ணின்னை யிளக்கிஞ ளெங்களுக்காப்
பாடுபட்டாள் கச்சிக்கம் பா. (34)

என்னை யுனக்களிப்பே னெம்பெருமா னீமகிழ்வி
னுன்னை யெனக்களிக்க வெண்ணுதோ—பின்னை
யுருவமின்றே யுன்றனக்கு முண்டெனினு மெற்கும்
பருவமின்றே கச்சிக்கம் பா. (35)

கங்கை புலித்தோல் கமழ்சந் தனங்கொன்றை
யங்கை யனலொலிமா ஞலமணி—யிங்கிதத்தை
யெண்ணுவார் யாரவரே யின்போ டுனைப்பூசை
பண்ணுவார் கச்சிக்கம் பா. (36)

எத்தனையோ நாளா வெளியேன்செய் தீவினைக
ளத்தனையும் வந்திந்நா ளல்லல்செய—மெத்தநைந்தேன்
வெய்யனே யென்றெனைக்கை விட்டுவிடேல் வெண்ணீற்
பையனே கச்சிக்கம் பா. [றுப்

எந்தக்கா லத்துநின்கா லேத்தும் பழவடியா
ரந்தக்கா லன்பகட்டி ஞர்ந்ததட்டி—வந்தக்கா
லாரென்பா ரேமனென்று லன்றுபட்ட பாட்டையெண்
பாரென்பார் கச்சிக்கம் பா. [ணிப்

கற்கோயி லுட்கோயில் காடவர்கோன் பூசலார்
நற்கோயிலாக் காட்டி நாள்வைக்க—முற்கோலி
நெஞ்சையேன் கொண்டாய்கன் னெஞ்சனே னென்
பஞ்சையேன் கச்சிக்கம் பா. [செய்வேன்

தத்துவமுப் பத்தாறுந் தாண்டிநின்ற சிற்பரனே
சத்துவ சிவானந்த தற்பரனே—வித்துவநூ
லாயிரமாக் கற்றுலென் னன்பே யடியார்க்குப்
பாயிரமாங் கச்சிக்கம் பா. (40)

மெய்ஞ்ஞானர் தம்மை விரும்பிநீ பேறுதர
லெஞ்ஞான்று மேன்மையே யென்றுலு—மஞ்ஞான
ம்மாசூரா நின்றவென்னை வாழ்வித்தன் மாமேன்மை
பாசூரா கச்சிக்கம் பா. (41)

காடுவெட்டி யுள்ளக் கரம்பு திருத்தியரு
ணீடுவித்து வித்தியன்பு நீர்பாய்ச்சிப்—பாடுபட்டுப்
போகமுண்டாக் குத்தமர்பாற் போய்வீண னேனின்றுற்
பாகமுண்டா கச்சிக்கம் பா. (42)

அள்ளித்தா வென்று னருட்காசை வைத்திலனி
கிள்ளித் தெறியென் கிலேசமெல்லாந்—துள்ளியிந்த
வூர்கடக்குங் காடுமலை யோடைகடக்கு மப்பாற்
பார்கடக்குங் கச்சிக்கம் பா. (43)

காலமெலாம் வீணிற் கழித்திட்டே னப்பாவுன்
கோலமெலாங் கண்டு நின்று கும்பிட்டுச்—சீலமெலா
மாலிபாய் கண்ணுடனே யன்புசெய வின்பருள்வாய்
பாலிபாய் கச்சிக்கம் பா. (44)

ஓங்கியநின் கந்தை யுலராமை கண்டுதொண்டர்
தேங்கியதுன் பத்தாற் சிரமோதத்—தாங்கியகை
யங்கயமேற் பூவா தருங்கன்மேற் பூத்தசெழும்
பங்கயமே கச்சிக்கம் பா. (45)

அந்தரர்க்குத் துன்பஞ்செ யாலந்தா னுண்டமுதாக்
கந்தரம்வைத் தாயென் கவிராச—சுந்தரர்க்குக்
கண்ணளித்தாய் நாடக் கடையே னுனைப்பாடப்
பண்ணளிப்பாய் கச்சிக்கம் பா. (46)

ஆர்ந்தார்வ மாகமுன்ன ராரண மாதவன்சூழ்
சார்ந்தா சயச்செல்வச் சாந்தீசா—கூர்ந்த
மருந்துமணி மந்திரமா மன்னுயிரைக் காப்பாய்
பரிந்தெனைக்கா கச்சிக்கம் பா. (47)

கொக்கு நிழலிற் குலவுதெய்வச் சிம்புடனே [மென்றுன்
மிக்குவந்தோர் பச்சைமயில் வேட்டதென்றே—னைக்கு
பேரையா னந்தமொடென் பெண்குயில்கூய்ப் பாடுவதைப்
பாரையா கச்சிக்கம் பா. (48)

காடாய் மலையாய்க் கடிநகராய்ப் பாதுகையாய்த்
தோடாய்ச் சிலம்பாய்ச் சுணங்கனாய்க்—கோடரமாய்
மாமரனாய் வேதநிற்ப வந்தனையே வந்தனையே
பாமரனேன் கச்சிக்கம் பா. (49)

பூசைபுரி துய்ய புலிக்கான் முனிமகவுக்
கோசையின்பா லாழி யுணவளித்தா—யாசைமனத்
துள்ளியுண்டா னங்கே யுறங்கியமா லெங்கேபோய்ப்
பள்ளிகொண்டான் கச்சிக்கம் பா. (50)

எனக்குவந்து கண்பா ரிறைஞ்சடியா ருக்குந்
தனக்குநிகர் காமாட்சித் தாய்க்கு—முனக்கு
மணிசெய்வேன் மைந்தனுக்கு மைங்கரற்கு நாளும்
பணிசெய்வேன் கச்சிக்கம் பா. (51)

பூவா லெறிந்திட்ட பூங்கருப்பு வில்லிதனை
யாவா வெரித்தருவ மாக்கினை—யோவாதே
சாக்கியனார் கல்லாலே தாமெறியக் காட்சிதந்தாய்
பாக்கியனார் கச்சிக்கம் பா. (52)

அன்பது வாயி லகத்தமர்வாய் நீயென்வெறு
மொன்பது வாயிலக முன்னுவையோ—வின்பதுமக்
கால்வைத்தா யாயின் கடைத்தேறு வேனுமையைப்
பால்வைத்தாய் கச்சிக்கம் பா. (53)

பச்சைவண்ண மோர்பாகம் பைம்பொன்வண்ண மோர் [பாகம்
விச்சைவண்ண நீகாட்டன் மெய்யேலென்—னிச்சை [வண்ண
நீர்வண்ணம் பால்வண்ண நேர்வண்ண மோர்வணமாப்
பார்வண்ணக் கச்சிக்கம் பா. (54)

அடுத்த வடியவருக் காலசிய மின்றிக்
கொடுத்தருளக் காட்டுங் குறிப்பி—னெடுத்த
மணித்தாளாய் தாளாது வன்றுயர்தீர்த் தின்பம்
பணித்தாளாய் கச்சிக்கம் பா. (55)

என்னருமைத் தந்தைநீ யென்று யிமயவல்லி
நன்னருமை கல்யாண நாளுக்கு—முன்னரோ
பின்னரோ வன்பாய்ப் பெருமயா னத்தமர்ந்தாய்
பன்னரோ கச்சிக்கம் பா. (56)

நறையிரதஞ் சூரியனுஞ் சந்திரனு மாழி
மறையிவுளி கஞ்சன் வலவன்—பொறைவிலலர்ப்
பெண்புணர்மா லம்பாகப் பெற்றுநகைத் தூரெரித்த
பண்புணரேன் கச்சிக்கம் பா. (57)

நாலிருக்கு மேலிருக்கு நாயகவுன் செங்கமலம்
போலிருக்குங் காலிருக்கும் பூந்துகட்கே—மாலிருக்கும்
வாலிருக்கு நெஞ்சத்தாள் வந்திருக்கி ருளணிநின்
பாலிருக்குங் கச்சிக்கம் பா. (58)

வேம்பசிவந் தெய்துதிரு வேடத் தவர்முன்போய்ச்
சாம்பசிவந் தாமெனவே தாள்வணங்கி—யோம்புநல
வுண்டிதரு நற்பேற்றுக் கொப்புண்டோ வில்லையென்பார்
பண்டிதருங் கச்சிக்கம் பா. (59)

ஆயுமெய்த் தொண்டர்க் கலகைமருட் டாதுபட
மேயு மரவின்விட மேருது—நோயுந்
தொடராது தீயுஞ் சுடாதூழ் வினையும்
படராது கச்சிக்கம் பா. (60)

நயிலமரி சிம்மாமஞ் சண்ணெல்வி முள்ளி
நயகவிய மைந்தமுத நற்றேன்—றயிர்பானெ
யெண்கனிவே முச்சா றிளநீர்நீர் முற்றுட்டப்
பண்கனிவாய்க் கச்சிக்கம் பா. (61)

ஈவிலார் பாற்போ யிரந்து வருந்தியுன்பா
லாவலாய் வந்தே னரும்பாணன்—மேவுகின்றுன்
காவலா சேராநீ காண்கவென்றேர் பாட்டெழுதும்
பாவலா கச்சிக்கம் பா. (62)

ஈடணையோர் மூன்றுலே யிவ்வுலகத் தின்மேலே
காடணையு மட்டுங் கலக்கமே—பூடணையுந்
தூடணையு மொன்ருகத் தூக்கறிஞர் வீடணைமேம்
பாடணைவர் கச்சிக்கம் பா. (63)

கல்லேப்பல் லக்காய்க் கடலரசன் ருங்கப்போய்
மல்லற் கரையேறும் வாகீசர்—சொல்லேத்
தவக்கடலே யக்கரமாச் சாற்றுநர்தாண் டாரோ
பவக்கடலேக் கச்சிக்கம் பா. (64)

கற்றல் வினவல் கருத றெளிதனெறி
நிற்றலுன தன்பர்களே நேசித்தன்—மற்றுலகி
லாவிகடா முய்ய வறஞ்செயலி லார்நரரோ
பாவிகடாங் கச்சிக்கம் பா. (65)

அண்ணற் கொருகனியு மம்மைக் கிருகனியு
நண்ணற்பி னல்கியெற்கே னல்கிலேமுக்—கண்ணப்ப
மேண்மையோ வென்னுஞ்செவ் வேளுவப்ப மாவமர்ந்த
பான்மையோ கச்சிக்கம் பா. (66)

சந்திர சேகரா சாம்ப சதாசிவா
மந்திரபஞ் சாக்கரா மாதேவா—வந்திரங்கிக்
கண்பாராய் நோய்திராய் காவாய் சரணெளியேன்
பண்பாராய் கச்சிக்கம் பா. (67)

பஞ்சாக் கரமுமொளிர் பற்பமுங் கண்டிகையும்
விஞ்சாக்க மாகவைத்து மெய்த்தொண்டர்க்—கெஞ்ஞான்
மைந்தமிழ்த வாக்கருளும் வள்ளானீ வாழிசரண் [று
பைந்தமிழ்வாழ் கச்சிக்கம் பா. (68)

பொன்னுக்கும் பெண்ணுக்கும் பூமிக்கு மேயுழைப்பே
னென்னுக்கு மானிடனு யீங்குதித்தேன் — மின்னெக்கும்
பொன்னுடை மாலறியாப் பொற்பதப்பூந் தேன்விடுநாள்
பன்னுடை கச்சிக்கம் பா. (69)

பண்டா சுரனைப் படுத்தவனற் குண்டத்தைக்
கண்டார் படிந்துதம கன்மவினை—விண்டோடக்
கங்கையாய்ச் செய்ததற்குக் கைம்மாறு முன்னுடைய
பங்கையா கச்சிக்கம் பா. (70)

சம்புவெனும் பேராற் றகவோ வெனுமொலியா
னம்பு வரகுணன்செய் நன்மையால்—வம்பு
நரிபவமேல் வீணர் நரர்பவங்கீழ் மற்றென்
பரிபவமே கச்சிக்கம் பா. (71)

நீடோண காந்தன் றளியாய் நெறிக்காரைக்
காடா யனேகபதங் காவதத்தாய்—சேடார்
கயிலாயா மேற்றளியாய் காட்சிதந்தெ னெஞ்சிற்
பயிலாயா கச்சிக்கம் பா. (72)

பதிநீ பசுநான்முப் பாசத்தை நீக்கிக்
கதிநீ ளடிநீழல் காட்டாய்—புதிதன்றே
சுந்தரஞ்சேர் வீதிமுற்றுந் தோரணம்பூ மாலைமணப்
பந்தரஞ்சேர் கச்சிக்கம் பா. (73)

அரசு திருநாம மஞ்செழுத்துஞ் செப்பார்
விரசு மிடரை விலக்கப்—பரசுகின்றேன்
மொய்ம்பொனலர் தாண்ட முடியாது மேனீண்ட
பைம்பொன்மதிற் கச்சிக்கம் பா. (74)

பாசாந்த காரிமுப் பாசாந் தகனீநற்
கேசாந்த முத்திதருங் கேண்மையினுன்—மாசாந்த
மூர்த்தியெனக் கேட்டுவந்து மூடனே னிங்கமர்வேன்
பார்த்திபர்சூழ் கச்சிக்கம் பா. (75)

ஒருமா வடிநீழ லுற்று யெனக்கு
னிருமா வடிநீழ லீயைந்—தருமா
வடிநீழ லென்கா லடிநீழ னன்கால்
படிநீழல் கச்சிக்கம் பா. (76)

துய்த்தானந் தங்கொள்ளச் சோற்றுத் துறைவெண்ணெ
நெய்த்தானம் பாற்றுறைநன் னெல்வேலி—பெய்த்தான
மாணிக்கம் பொன்வெள்ளி மன்றறமா துற்றுமென்னே
பாணிக்கங் கச்சிக்கம் பா. (77)

கொண்டாடு மென்னையன்பு கொண்டாளுன் குஞ்சிதத்
கண்டாடு வாரிற் கலந்தாடப்—பண்பாடு [தாள்
வண்டாடு பூந்துளவன் மத்தளம்வா சிக்கமன்றுட்
பண்டாடுங் கச்சிக்கம் பா. (78)

முழங்கை யரைத்தவர்க்கு மும்மையிற்பா ராள
வழங்கை யெனக்கியாதும் வழங்கை—கிழங்கை
யிணையாக்கை கூப்புகை யில்லேனுக் கென்னே
பணையாக்கை கச்சிக்கம் பா. (79)

விண்மழைபெய் தன்ன விழிம்மழைபெய் யன்பருக்குத்
தண்மழையாப் பெய்யுந் தயைமழைபெய்—கண்மழைபெய்
பூமழைபெய் வான்புலவர் போற்றப் புவிப்புலவர்
பாமழைபெய் கச்சிக்கம் பா. (80)

உலக நிலத்தி னுயிர்ப்பயிரை யிட்டாய்
நிலவருளி னன்பென்னு நீரா—னிலகு
கதிரேனு மன்பர்நீ காப்புக்கொ ளென்னைப்
பதரேனுங் கச்சிக்கம் பா. (81)

நல்லார்க் கருள்புரியு நாயகனே நீயென்னைப் [காண்
பொல்லா தவனென்று போக்கினெங்குச்—செல்வேன்
வேம்புக்கு நீர்வார்ப்பார் மேதினியோர் பால்வார்ப்பார்
பாம்புக்குங் கச்சிக்கம் பா. (82)

ஆழிபுடை சூழுலகி லாருயிரெ லாந்தழைப்ப
வாழியெம்பி ரானீ வழங்குமிரு—நாழிநெல்லை
வாங்கியம்பா தன்மம் வளர்த்தாளிம் மந்தணத்தின்
பாங்கியம்பாய் கச்சிக்கம் பா. (83)

தளிதீர்த்தம் பூந்தோட்டஞ் சாந்தி தினபூசை
யொளிர்பொற்பூண் சீர்த்திருநா ளூர்தி—விளையுங்
கிராமநிதி வேதமுறை கீதாதி செய்வார்ப்
பராவுவன்யான் கச்சிக்கம் பா. (84)

ஆழேழ் கடலுலகி லல்லல்பட மாட்டேனென்
பாழேழ் பிறப்பறுத்துப் பாலியருள்—வாழ்வே
நதியேழ் முழுகிமெய்ஞ் ஞானியர்கள் சூழும்
பதியேழ்முன் கச்சிக்கம் பா. (85)

அரனே சரண மமலா சரணம்
பரனே சரணம் பதியே—சரணஞ்
சிவாசரணந் தேவாதி தேவா சரணம்
பவாசரணங் கச்சிக்கம் பா. (86)

திருஞான சம்பந்தச் சேய்முத்துப் பல்லக்
கொருநா வரசுசுமந் துற்ற—பெருமை
வியந்திட்டே னல்லேனுன் மெய்ந்நடுங்கி மிக்குப்
பயந்திட்டேன் கச்சிக்கம் பா. (87)

முதனா ளதிகாலை முன்னு கொடியேறக்
கதிர்போலுஞ் சப்பிரத்திற் கங்குன்—மதிசிங்க
வாகனத்திற் காட்சி வழங்கினைகண் ணுனுகர்ந்தோம்
பாகனத்திற் கச்சிக்கம் பா. (88)

இரண்டாநாட் காலை யிரவிரண்டு போதும்
பெரும்பானு சந்த்ர பிரபை—மருங்கேகின்
னட்சமாக் காட்சிகண்டோ மம்புய மல்லியெனப்
பட்சமாக் கச்சிக்கம் பா. (89)

மூன்றுநாட் காலை முதிர்பூத மூர்ந்திரவு
வான்று விமானத்து வந்தருணீ—யின்றசுத
ரார்த்துவந்தே யத்திகிரி யம்மான்மேற் செய்யேசல்
பார்த்துவந்தேங் கச்சிக்கம் பா. (90)

நாலாநாட் காலைமணி நாகமிசை யூர்ந்திரவின்
மாலான வெள்விடையின் வாவிவந்து—மேலான [தோம்
சேவைதந்தாய் சேவித்தோஞ் செல்வமெலாம் பெற்றுகந்
பாவைபங்கா கச்சிக்கம் பா. (91)

ஐந்தாநாட் காலை யதிகார நந்திமிசை
வந்தாய் தரிசித்தோ மற்றிரவிற்—றந்தா
யிராவணன்றுங் கொண்கயிலை யின்காட்சி கண்டோம்
பராவணமாங் கச்சிக்கம் பா. (92)

ஆறுநாட் காலை யணிவசந்த சப்பிரத்தில்
வீறுன காட்சிதந்து மேவிரவிற்—பேறுன
வோங்கார வானையின்மே லுற்றனைசே வித்தனநற்
பாங்காரக் கச்சிக்கம் பா. (93)

ஏழாநாட் காமாட்சி யெந்தா யுமையுடனே
யாழாழிக் கற்பகம்போ லற்புதமாச்—சூழாழித்
தேரின்மிசைக் காட்சிகண்டோந் தெள்ளமுத முண்
பாரின்மிசைக் கச்சிக்கம் பா. [டோமிப்

எட்டாநா ணண்பகலி னேத்தும்பிட் சாடனராய்
மட்டார் குழலார் வளைகவர்ந்து—விட்டாய்நீ
யோங்குதிரை யாங்குதிரை யூர்ந்திரவிற் காட்சிதரும்
பாங்குதிரை கச்சிக்கம் பா. (95)

ஒன்பானாட் காலை யுயராண்மேற் பல்லக்கி
லின்பாச்சே வித்திரவி லெந்தாயோ—டன்பா
நலங்கண்டோர் மாவடியி னற்காட்சி கண்டோர்
பலங்கண்டோர் கச்சிக்கம் பா. (96

பத்தாந் தினத்துதயம் பன்னுநட னச்சேவை
யொத்தாரு மாலை யுமைகாட்சி—மெய்த்தவசு
கல்யாணந் தங்கவிடைக் காட்சிக் கிணையுண்டோ
பல்யாணர்க் கச்சிக்கம் பா. (97)

பதினோரா நாண்மாலைப் பாங்கார் வசந்தஞ்
சதிராய் நடந்திரவிற் றக்கோர்—துதிருத்ர
கோடிவிமா னக்காட்சி கும்பிட்டே னன்புற்றேன்
பாடிவிமாக் கச்சிக்கம் பா. (98)

பன்னிரண்டா நாளிரவிற் பாய்ந்துபுரு டாமிருக [யன்பிற்
மன்னியநின் சேவைகண்டு வாழ்த்துநர்க்குந்—துன்னி
காணுர்க்கு மவ்வா கனஞ்சான்றுங் காவில்வண்டு
பாணுர்க்குங் கச்சிக்கம் பா. (99)

பதின்மூன்று நாட்காலைப் பாவனதீர்த் தந்தந்
தெதிரில் கொடியிறங்கு மெல்லி—மதிபோலு
மங்கள வண்கிரிமேன் மாகாட்சிக் கென்காட்சி
பைங்குவளை கச்சிக்கம் பா. (100)

அந்தணர்கள் வானவர்க ளானினங்கள் வேந்தன்மழை
சந்தமறை சைவந் தரணியுயி—ருய்ந்திடச்செய்
நீவாழி காமாட்சி நேயசுதர் செந்தமிழ்வெண்
பாவாழி கச்சிக்கம் பா. (101)

கச்சிக் கம்பர் வெண்பா முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

இந்நூலை முதலில் அச்சிட்டவர், காஞ்சிபுரம் யுனைட்டெட்
அச்சக முருகேச நாயகர். 1924.

## குறிப்புரை

காப்பு: 'தேவி காமாட்சி தந்த' என இயையும். கட சக்கர நேர்-குடமும் மலையும் போன்ற; கடசக்கரம், உம்மைத் தொகை. மா-பெருமை. இது விகடசக்கர விநாயகரைக் காப்பாகக் கூறியது.

1. பொருள்-தலைவன் தலைவியராவது. மணம்-திருமணம். கச்சியில் திருமணம் நிகழ்வது பங்குனி உத்திர நாளில் ஆதலின், அதனைக் கண்ட காலத்து எழுந்த உவகை மிகுதியால் இது பாடப்பட்டது என்க.

2. மயானம் - 'கச்சி மயானம்' என்னும் தலம்.

3. காமக்கண் அம்மை - காமாட்சியம்மை. 'மிக' என்பது விரித்தலாயிற்று.

4. 'மகவன்' என்புழி அகரம் விரித்தல் விகாரம்.

5. 'வண்டு, வண்டர்' என இறுதிப் போலியாயிற்று.

7. 'கடலைப்போலவும் மலையைப் போலவும் வருவாய்' என்க. பாற்றுவாய் - கெடுப்பாய்.

9. 'எல்லாமாம் நீ மாநிழலில் வந்தாய்' என்க.

10. கங்காளம் (பிரமவிட்டுணுக்களது) எலும்புக் கூடு.

11. சரணம் மேவு - திருவடியை அடைகின்ற. 'ஏன் கருடா, சுகமோ' என வினவியமையால் நாகாபரணம் சான்றுமென்க.

12. சாலக்கற்றும் என்க. ஜால வித்தை, 'சால வித்தை' என வந்தது. மால் அவித்தை - மயக்க உணர்வைச் செய்கின்ற ஆணவ மலமாகிய நோய். பணி - சரியைத்தொண்டு.

13. 'கச்ச பாலயா' என்பது போலியாயிற்று.

14. மயர் - மயங்கிய. வேதன் - பிரமன். அயர்தல் - சோர்தல். சூதம் - மாமரம். சூது - சூழ்ச்சி; அன்பால் வழிபடுவோர்க்கு அருள் செய்யுங் கருத்து.

15. பாந்தள் - பாம்பு. இனைகின்றேன் - வருந்துகின்றேன். அயம் - இரும்பு.

16. 'ஐயே வேறு அருள் என் வேண்டும்' என்க.

17. அருள் - அருளால்.

18. 'பால் அருளுவித்தாய்' என்க. நிற்கே - உன் பொருட்டே.

19. யாத்து - கட்டி. 'அடியாத மாடு படியாது' என்பது ஒரு பழமொழி.

20. வேலை - தொழில். தரங்கம் - அலை. பாண்டரங்கம், ஒரு வகைக் கூத்து.

21. போத - புகுத.

22. நந்தனன் - பிள்ளை.

23. ஆவணம் - பத்திரம். திரம் - நிலை.

24. உளவு - உண்மை.

25. அங்கசன் - மன்மதன். பஞ்சரம் - கூடு.

26. மறுகூடு - தெருவில். தீ மாலை - தீய மயக்கத்தை.

27. தண்டுதல் — இரத்தல். சானித்தல் — தியானித்தல். பானித்தல் - பருகுதல்.

28. வலிக் காமன் - வலிமை பொருந்திய மன்மதனை.

29. விரி தாபம் - மிக்க துன்பம்.

30. மா - குதிரை. விபினம் - காடு. 'ஓட்டுநரியார்' என்பதிலுள்ள இகரம் குற்றியலிகரமாய் அலகு பெறாது நின்றது. பண்டனு - பொருளாகின்றவனைக் (கொண்டு) என்க.

31. 'குமிழ்' என்றது, மூக்கினை. 'மாதர் சுகமே விண்தலத்தும் வரும் நண்பு என்றால், அதனை அடைய விரும்புதல் குளிக்கப்போய்ச் சேறு பூசிக் கொள்ளுதல் போலும்' என்க.

32. 'லாவும்விழி' என்னும் சீரில் மகர ஒற்றை நீக்கி அலகிடுக.

33. விரசு - செறிந்த.

34. மாசைலம் - திருக்கைலை.

35. அணி இங்கிதம் - தரித்த கருத்து.

40. 'சத்துவம்' என்றது அருளை. பாயிரம் - பெருமை.

41. மாசு ஊராநின்ற எனப் பிரிக்க.

42. அருளாம் நீடு வித்து, அன்பாகிய நீர் என்க.

44. ஆலி - மழை.

46. கந்தரம் - கழுத்து. என்-என்று பாடிய,

47. ஆரண மாதவன், வியாதன். 'சார்ந்தாசயம்' என்பது கச்சிப் பலதளிகளுள் ஒன்று.

48. கொக்கு - மாமரம். சிம்புள் - சரபம். பச்சை மயில், உமையம்மை. பறவைப் பெயர்கள் பலவந்தமை நயம்.

49. காடு, வேதாரணியம். மலை, வேதாசலம். நகர், வேதபுரி. சுணங்கன் - நாய். கோடரம் - குதிரை.

50. உள்ளி - நினைத்து.

53. வாயில் - பொருந்தினால். அகம்-மனம், இல்லம்.

54. விச்சை வண்ணம் - ஞானவடிவம்.

55. ஆலசியம் - தாமசம். மணி - அழகு. தாள் - பாதம். தூக்கி யிருப்பது கொடுக்கச் சித்தமாய் இருப்பதைக் காட்டும் என்றவாறு.

56. நன்னர் - நன்மை. 'பன்னரோ' என்பதில் அரோ, அசைநிலை. நீ என் தந்தை யென்றால், என் தாய் உமையை மணம் புரிந்திருத்தல் வேண்டும்; ஆயின், மயானத்து நீங்கா திருக்கின்ற நீ மணம் கொண்டது எப்பொழுது? என வினவிய வாறு; ஒன்றொடொன்றொவ்வாதவேடமும் செயலுமுடைமையை வியந்தவாறு.

57. இவுளி - குதிரை. கஞ்சன் - பிரமன். வலவன் - சாரதி. பொறை - மலை. அலர்ப் பெண் - திருமகள். கருவிகள் வேண்டாது நினைவு மாத்திரையால் செயல் செய்பவன் என்பது கருத்து.

58. இருக்கு - வேதம். மால் - மையல். வால் - தூய்மை. இருக்கும் - இருப்பாள்.

60. 'அரவின்விடம்' என்னும் சீரில் னகர ஒற்றை நீக்கி அலகிடுக.

61. தயிலம் - எண்ணெய். 'அரிசிம்மா' என்புழி மகரம் விரித்தல். நயம் - இனிமை. 'கவ்வியம்' என்பது இடைக் குறைந்து நின்றது; கவ்வியம் - பஞ்ச கவ்வியம். ஐந்தமுதம் — பஞ்சாமிர்தம். எண் - சிறப்பாக எண்ணப்படுகின்ற. 'சாறு' என்பதனைக் கனிக்குங் கூட்டுக. 'வேழம்' - கரும்பு. கனிவாய்- மகிழ்வாய். பண் - அருள் செய். 'கனிவாய்ப் பண்' என மாற்றுக. இதனுள் அபிடேகிக்கும் பொருள்கள் முறையாகக் கூறப்பட்டமை காண்க.

62. காவலன் - அரசன். பாணபத்திரர் பொருட்டு மதுரைச் சிவபிரான் சேரமான் பெருமாள் நாயனுருக்கு, "மதிமலி புரிசை" என்னும் திருமுகப் பாசுரம் எழுதி விடுத்தமையைப் பெரிய புராணம், திருவிளையாடற் புராணங்களிற் காண்க.

63. ஈடணை - ஆசை. மூவாசை :- மண், பெண், பொன் பற்றியன. காடு - சுடுகாடு. பூடணை - புகழ்ச்சி. தூடணை— இகழ்ச்சி. தூக்கு - நினைக்கின்ற. வீடு - முத்தி.

64. வாகீசர் - திருநாவுக்கரசு நாயனர். 'சொல்லை, தவக் கடலை' என்பன ஒரு பொருள் மேல் வந்த பல பெயர்கள். அக்கரமா - எழுத்தெழுத்தாக; அன்போடு என்றபடி.

65. வினவல் - கேட்டல். கருதல் - சிந்தித்தல். ஆவிகள் - உயிர்கள். பாவிகள்தாம் எனப்பிரிக்க.

66. அண்ணல், விநாயகர். அம்மை, காரைக்காலம்மையார். 'அன்பின்' என்பது வலிந்து நின்றது.

67. 'பண்பு ஆராய்' எனப்பிரிக்க.

68. பற்பம் - திருவெண்ணீறு. விஞ்சு ஆக்கம் - மிகுந்த செல்வம். மைந்து - வலிமை.

69. என்னுக்கு - எதற்கு. பொன் ஆடை - பீதாம்பரம். மால் - திருமால். விடு - கைவிடுகின்ற.

70. இது, கச்சியேகம்பத்தின்கணுள்ள சிவகங்கைத் தீர்த்தவரலாறு கூறியது; இவ்வரலாற்றைக் காஞ்சிப்புராணத்துட்காண்க. 'கைம்மாறு உன்னுடைய பங்கு' என்றது, 'நீயின்றி நாங்களே செய்வது ஒன்றும் இல்லை' என்றவாறு.

71. வரகுணபாண்டியன், 'ஓடும் பல்நரி ஊளைகேட் டரனைப் - பாடின என்று படாம்பல அளித்தான்' என்று, பட்டினத்துப் பிள்ளையார், திருவிடை மருதூர் மும்மணிக் கோவையுட் கூறுதல் காண்க. நரிபவம் - நரிப் பிறப்பு. பரிபவம் - அவமானம்.

72. ஓணகாந்தன்றளி முதலியவை கச்சியில் உள்ள தலங்கள். அவற்றுட் கயிலாயம் தவிர ஏனையவை பாடல் பெற்றவை. 'பயிலாயா' என்பது வினா.

73. பந்தர் அம் சேர் எனப்பிரிக்க. அம் - அழகு.

74. அரசு - மந்திரங்களுள் தலையாயது. விரசுதல்—நெருங்குதல். பாசுதல் - துதித்தல். 'ஐந்தெழுத்தை ஓதாதவர் வந்து என்னை நெருங்குகின்ற இடரை' என்க. 'மொய்ம்பு ஒன்னலர்' எனப்பிரிக்க. மொய்ம்பு - வலிமை. ஒன்னலர் - பகைவர். "பைம்பொன்மதில்' என்பதில் னகர ஒற்றைத்தள்ளி அலகிடுக.

75. பாச அந்தக அரி—அறியாமையையுடைய 'அந்தகன்' என்னும் அசுரனை அழித்தவன். பாசாந்தகன் - பாசத்திற்கு முடிவைச் செய்பவன். 'கேசாந்தமுத்தி' என்பதனைக் காஞ்சிப் புராணத்தில் உணர்க.

76. ஐந்தரு மா அடி நீழல். இந்திர பதவி. 'என் காலடி நீழல் ஆகும்' என்க. நன் கால் படி நீழல் கச்சி - நல்ல காற்றுப் படிகின்ற சோலையை உடைய கச்சி.

77. துய்த்து - நுகர்ந்து. 'சோற்றுத் துறை முதலியன மெய்த்தானம் (உண்மைத் தலம்)' என்க. மாணிக்கம் - இரத்தினம். இரத்தினசபை, பொற்சபை, வெள்ளிச்சபை என்பன முறையே திருவாலங்காடு, தில்லை, மதுரை என்னும் தலங்களில் உள்ளன. பாணிக்கம் - தாமதம். தாமதம் அருள் செய்தற்கு என்க.

78. 'என்னை உன் தாள் கண்டு ஆடுவாரில் கலந்து ஆட அன்புகொண்டு ஆள்' என்க.

79. முழங்கை அரைத்தவர், மூர்த்தி நாயனர்; அவரது வரலாற்றைப் பெரிய புராணத்துட் காண்க. வழுங்கு ஐ - கொடுத்த தலைவன். வழங்கை - கொடாய். கிழங்கை இணையா - கிழங்கைப்போல் ஆக. கூப்பிய கை கிழங்கு போலத் தோன்றும் என்றவாறு. கிழங்கு என்பது அதனினின்றும் தோன்றிய தாமரை அரும்பைக் குறித்தது என்னலுமாம். என்னே - ஏனே. பணை யாக்கை - பருத்த உடல்.

80. 'கண் மழை பெய் புவிப் புலவர்' என இயையும். 'சம்பா தயை மழை பெய்' என்க.

81. 'அருளினல் அன்பென்னும் நீரால் உயிர்ப்பயிரை இட்டாய்' எனவும், 'அன்பர் கதிரேனும்' எனவும் இயையும். கதிர் - நெற்கதிர்.

82. 'மேதினியோர் வேம்புக்கும் நீர்வார்ப்பார்; பாம்புக்கும் பால் வார்ப்பார்' என்க.

83. மந்தணம் - இரகசியம். பாங்கு - தன்மை.

84. தளி - கோயில். சாந்தி - குடமுழுக்கு. பூண் - ஆபரணம். ஊர்தி - வாகனம். 'செய்வாரைப் பராவுவன்' என்க. பராவுதல் - துதித்தல்.

85. 'அருள் பாலி' என மாற்றுக. பதி ஏழ் முன் - முத்தி நகர் ஏழனுள் முன் வைத்து எண்ணப்படுகின்ற.

87. திருஞானசம்பந்தரது முத்துப் பல்லக்கினைத் திருநாவுக்கரசர் தாங்கினமையைப் பெரியபுராணத்துட் காண்க. பயந்தமை, அத்தகைய அருட்பேராசிரியராகிய ஆளுடைய பிள்ளையார்க்கு நாம் எத்தகைய வழிபாட்டினைச் செய்வதென்னும் கருத்தினுல் என்க.

88. இது முதல் பதின்மூன்று பாக்கள் முறையே திருவேகம்பரது பெருவிழா நாட் சிறப்புக்களைக் கூறுவன. மதி - மதிக்கின்ற. பாகு அன்னத்தில் - அக்கார அடிசிலைப்போல (நுகர்ந்தோம்) என்க.

89. 'பிரபை' என்பதை பானுவுக்கும் கூட்டுக. அட்சம் - கண். 'நின் கண்' என்றது சூரிய சந்திரரை. 'அம்புயம் போலவும் அல்லி போலவுங் கண்டோம்' என்க.

90 சுதர் - மக்கள்: மூத்தபிள்ளையாரும் இளையபிள்ளையாரும். அம்மான் - மாமன்; திருமால்; வரதராசப் பெருமாள்.

91. மாலான - பெரிதான. விடை - இடபம். வாவி - தாவி.

92. பரா வண்ணம் ஆம் - பரா சத்தியே வடிவமாகிய; துதிக்கத்தக்க வடிவம் எனலுமாம்.

93. 'ஓங்கார வடிவமான யானை' என்க. இவ்விழா இப்பொழுது காலையில் அறுபத்து மூவருடன் விமானக் காட்சி யாகவும், இரவு வெள்ளித் தேர்க்காட்சியாகவும் மாறியுள்ளது.

94. ஆழ் ஆழி - ஆழ்ந்த பாற் கடலில் தோன்றிய, சூழ் - வளைந்த. ஆழி - சக்கரம். 'தேரின்மிசை, பாரின்மிசை' என்றும் சீர்களில் னகர ஒற்றுக்களை நீக்கி அலகிடுக.

95. 'பிட்சாடனராய்' என்பது வழக்குப் பற்றி ஒருமைப் பன்மை மயக்கமாகக் கூறப்பட்டது. மட்டு ஆர் குழலார் - தேன் பொருந்திய கூந்தலையுடைய முனிவர் பத்தினிகள் ஓங்கு திரை - உயர்ந்த கடல் அலை; இது தாவிவருதற்கு உவமை. பாங்கு - அழகு. திரை - படம் எழுதிய திரைபோலும்.

96. 'ஆள் மேற் பல்லக்கு' எனப் பிரிக்க. பலம் - பயன்.

97. ஆரும் - பொருந்திய. யாணர் - அழகு.

98. 'பாடி அன்புற்றேன்' என மாறுக. விமா, 'விம்மா' என்பதன் இடைக்குறை.

99. புருடா மிருகம், முகம் மனித வடிவும், பிற உறுப்புக்கள் விலங்கு வடிவுமாகப் பெற்றிருப்பது. 'கண்டு வாழ்த்துநர் முனிதர்' என்பதையும், 'காணுதார் விலங்கு' என்பதையும் அது காட்டுகின்றது என்றவாறு. பாண் - இசை- ஆர்க்கும் - பாடுகின்ற. இவ்விழாவும் இப்பொழுது காலையில் புருடா மிருக வாகனக் காட்சியாகவும், இரவு பஞ்சமூர்த்திகள் இடப வாகனக் காட்சியாகவும் மாறியுள்ளது. 'காவில் வண்டு' என்னும் சீரில் லகர ஒற்றை நீக்கி அலகிடுக.

100. பாவனம் - பரிசுத்தம். 'இறங்கும்' என்பது முற்று. எல்லி - இரவு. மதி - சந்திரன். காட்சிக்கு - காட்சியைக் காண்பதற்கு. என் காட்சி - என் கண்கள்; 'பைங்குவளை ஆகும்' என்க.

101. 'வேந்தன்மழை' என்பதனுள் னகர ஒற்றைத் தள்ளி அலகிடுக. சந்தம் - இசை. தரணி - பூமி. சுதர் - மூத்த பிள்ளையாரும், இளைய பிள்ளையாரும்.

---

உ

திருச்சிற்றம்பலம்

திருக்கச்சிச்

# சுரகரேசர் பஞ்சரத்தினம்

## சந்த விருத்தம்

### காப்பு

### வெண்பா

சுருதிமலி கச்சிச் சுரகரே சன்றுள்
கருதியுரை பாடல் கமழத்—தெருள்வளர்மே
தாவிகட சக்கரா தண்ணணம் முகாவென்னுங்
காவிகட சக்கரா கா.

தத்ததன தானதன தத்ததன தானதன தத்ததன தான தனனு

பொற்புநதி தாரிதழி தட்பமதி யோடினிது
புற்றரவு வாழ்சடையனே
பொத்துமிரு ளோடவொளிர் முக்கணிள மூரல்விளை
புட்கள தயாவதனனே
யற்பினமு சேயுரைகு ழைச்செவிய னேகடுவி
னற்கனியு மாமிடறனே
யட்டபுய னேமழுவெ டுத்தகர னேவடுவி
னற்புதமு நூன்மினுரனே
வற்புலியி னீருரியு டுத்தரை யனேமறைவ
ழுத்தநட மாடுபதனே
மட்டுமலர் தூவியுனை யர்ச்சனைசெய் நேயமனம்
வைத்ததிரு வாளருடனே
வெற்புதவு காமவிழி நற்கொடி குமாரனெடு
மிக்கமகிழ் சேவைதருவாய்
மெச்சுகயி லாசமதி கச்சிநகர் வாசநிதி
மெய்ச்சுரக ரேசபதியே. 1

ஒப்பில்கதி ரோனெழுமு னித்திரையை யோவிமன
மொத்துனது கோயிலினுளே
யுற்றசிவ நீர்முழுகி யக்கமணி நீறுமனு
வுச்சரண நேமநெறியே
மைப்பொழிலி னூடுகமழ் தப்பின்மலர் மாலைகொடு
மற்றுநின பாதமவைமேல்
வைத்தவுணர் வாய்நிதமு மர்ச்சனைசெ யாதவெனை
மற்றுமகிழ் வாயருள்செய்வாய்
செப்பெமது தாயுமையு னைப்பெருகு பூசைசெயல்
சிற்றறிவி னேமையெணியே
சிற்பர தயாசொருப சர்ப்பதர சோமசிர
சித்தநிலை மேவுசிவனே
விப்பிரர்கள் வேதவொலி முத்தமிழர் பாவினொலி
மிக்கவிழ வாதியொலியான்
மெச்சுகயி லாசமதி கச்சிநகர் வாசநிதி
மெய்ச்சுரக ரேசபதியே. 2

உற்றசுர தாருண தயித்தியனை நீயொர்பெணை
யுய்த்தழியு மாறுசெயெனு
வுட்கனிய நேயவள கைக்கிறையை யேவவவ
னுக்கொடியன் மாளும்வகையே
யெற்றமிகு வாழ்வருளு னற்பெருமை நீயடையு
மிப்பெயரினு லுணர்வொடே
யெத்தகையி னேருமுனை யர்ச்சனைசெய் தேயுய்வர்க
ளித்தனய னேதுபுரிவேன்
முற்றநின பாதமல ரெற்கொர்துணை யாநினைவன்
முக்கணுடை ஞானமலையே
முற்புவியி னேயிலது சொற்பெரிய வாழ்வதனை
முக்யவர மாவருளுவாய்

வெற்றிபெறு மானிடர்கள் மற்றெுர்தல நாடுகிலர்
மிக்கமகிழ் வாயுறைதலான்
மெச்சுகயி லாசமதி கச்சிநகர் வாசநிதி
மெய்ச்சுரக ரேசபதியே. 3

செக்கமல வாசவிதி மைக்கரிய மேனியரி
திப்பியவி ணுடரிறைமா
சித்தர்கண நாதர்தவ முத்தர்திசை யாளர்துதி
சித்தநிலை யானவடியார்
அக்கடலி னூடொர்சிலை தெப்பமென வேறிவரு
மப்பருயர் காழிநகர்வாய்
யற்புதமெய்ஞ் ஞானவமு தைப்பருகு வாயர்மிக
வச்சமற வேசியபிரான்
பொக்கமற மாறனது பொக்கிசமெ லாமினிய
பொற்றளிசெய் வாதபுரியார்
புத்தியுயர் வாலுருகு பத்திநெறி யாலுனது
பொற்சரண வாழ்வணுகினர்
மிக்கவடி யேனுமவர் பெட்பினிடு மேவல்செயும்
விச்சையுப தேசமருள்வாய்
மெச்சுகயி லாசமதி கச்சிநகர் வாசநிதி
மெய்ச்சுரக ரேசபதியே. 4

துப்புறழ்செ வாயுமையொ டத்திமுக வாறுமுகர்
சொற்பெருவி லாசமெதிரே
சுத்தமன மோடுவிழி வைத்துவகை கூர்வைமிகு
துட்டவிணையா லலையவே
யிப்படியின் மீதிலெமை யுற்பவ வியாதியுற
விட்டனையிவ் வாடலழகோ
வெப்படியும் வோமுனது பத்திசெய்து வாழவரு
ளிக்கருணை சாலும்வரனே

யுப்புறு சடாமகுட தத்துவ வதீதசுக
வத்துவித ஞானமணியே
யர்க்ககுல சோழனது கற்றளி விசேடமுறு
மர்ச்சைமகிழ் வாழியரசே
வெப்புதவிர் வாவியினின் முப்புவனர் மூழ்கிவர
மிக்கபெறு மாமகிமையான்
மெச்சுகயி லாசமதி கச்சிநகர் வாசநிதி
மெய்ச்சுரக ரேசபதியே. 5

சுரகரேசர் பஞ்சரத்தினம் முற்றிற்று.

---

*இந்நூலை ஆசிரியர் முதலில் அச்சேற்றியது 7—2—1916.*
அச்சேற்ற உதவியவர் காஞ்சிபுரம் ஆடை வாணிகர்
**கா. முருகப்ப முதலியார்.**

௨

# சுரகரேசர் பஞ்சரத்தினம்

## குறிப்புரை

**காப்பு:** 'மேதாவிகள் தசக்கரா தண் ஐம்முகா என்னும் கா' எனப்பிரித்து, 'அறிவுடையோர், பத்துக் கைகளை உடையவனே, குளிர்ந்த ஐந்து முகங்களை உடையவனே என்று துதிக்கின்ற கற்பகம்' எனப் பொருள் கூறுக.

'கா' இரண்டனுள் முன்னையது கற்பகம். அஃது இங்கு உவமையாகு பெயராய்ச் சிவபிரானைக் குறித்தது. 'விகட சக்கரன்' என்பது அப்பெயருடைய மகன் என்னும் பொருட்டாய் நின்றது. ஈற்றில் உள்ள 'கா' என்பது, 'காத்தருள்' எனப் பொருள்தரும்.

### நூல்

1. பொற்பு - அழகு. இதழி - கொன்றை. பொத்து - மூடிய. மூரல் - நகைப்பு. புட்களம் - நிறைவு. தயா - இரக்கம். சேய், திருஞான சம்பந்தர். உரை - சிறப்பித்துப் பாடிய. கடு - நஞ்சு. அல் கனியும் - இருள் மிகுந்த. வடு - அம்மை தழுவக் குழைந்தது. உரன் - மார்பை உடையவன் 'வன்புலி' என்பது வலிந்து நின்றது. 'உடுத்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. மட்டு - தேன். மதி - சந்திரன்; 'மதி, நிதி' என்பன உருவகங்கள்.

2. ஓவி - நீக்கி. நீர் - தீர்த்தம். 'நீறு' என்பதை முன்னர்க் கூட்டுக. அக்கமணி - உருத்திராக்கம். அணி - அணிதல். மனு - மந்திரம்; திருவைந்தெழுத்து. 'உச்சாரணம்' என்பது குறுகிற்று; 'உச்சரித்தல்' என்பது பொருள். 'நியமம்' என்பது, 'நேமம்' என மருவிற்று. சோம சிர - சந்திரனை அணிந்த சிரசினை யுடையவனே. சித்த நிலை - உள்ளமாகிய கோயில்.

விப்பிரர்கள் - அந்தணர்கள். 'எமது தாய் உன்னை என்றும் ஏத்தி வழிபடுதல் எங்கள் பொருட்டாகவே ஆதலின், நான் உன்னை வழிபடாதொழியினும் நீ எனக்கு அருள் செய்தல் வேண்டும்' என்பது இச்செய்யுளாற் கூறப்பட்டது.

3. உற்ற சுர - என்னை அடைந்த தேவனே; இது சிவ பிரான் குபேரனை விளித்தது. தயித்தியன் - அசுரன். 'உக் கொடியன்' என்புழி உகரம் சுட்டு. எற்ற - அழிக்க. சிவபிரான் கட்டளைப்படி குபேரன், 'தாருணன்' எனவும், 'சுராட்சன்' எனவும் பெயர் பெற்ற அசுரனை, 'சண்டிகை' என்னும் பெண்ணைக் கொண்டு சென்று அழித்தமையைக் காஞ்சிப் புராணம் இரண்டாங் காண்டம் இருபத்தெண்டளிப் படலத்துட் காண்க. 'இப்பெயர்' என்றது, சுராட்சனை அழியச் செய்தமை யாற் பெற்ற 'சுரகரேசன்' என்னும் பெயரினை. 'முற்ற நினைவன்' என இயையும். 'நோயிலது சொற்பெரிய வாழ்வு' என்றது, 'நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்' என்னும் பழமொழியைக் குறித்தது. சுரம் வெப்பு நோயாதலாலும், சுரகரன் அதனைத் தீர்ப்பவனுதலாலும், அவன் முக்கியமாகத் தரும் வரம் நோயற்ற வாழ்வேயாயிற்று. ஆகவே, மக்கள் வேறொரு தலத்தை நினையார் என்க. 'மிக்க மகிழ்வாய் உறைதலான் நாடுகிலர்' என இயையும்.

4. 'செங்கமலம்' என்பது வலிந்து நின்றது. வாசம் - வசித்தலையுடைய. விதி - பிரமன். அச்சம் அற ஏசிய பிரான், சுந்தரர்; இவர் இறைவனைப் 'பித்தர்' என உரைத்தலும் பாடுதலும் செய்தமை யறிக. பொக்கம் - பொய். மாறன் - பாண்டியன். பெட்பு - விருப்பம். அவர் இடும் ஏவல் - அவர்கள் விதித்துச் சென்ற விதிகள்; அவற்றின் வழியொழுகலின் வேருய் 'ஞானம்' என்பது ஒன்று இன்மையின், 'அந்த விச்சையைத் தரும் உபதேசத்தை அருள்வாய்' என்ருர். விச்சை - ஞானம்.

5. துப்பு - பவழம். விலாசம் - விளையாட்டு. 'விழி எதிரே வைத்து' என மாற்றியுரைக்க. இட்டனை - விதித்தாய். இவ்

வாடல் - இந்தத் திருவிளையாடல், (உனக்கு) அழகோ என்க. வரனே - மேலானவனே. அப்பு - நீர். அர்க்கன் - சூரியன். கற்றளி - கற்கோயில்; சுரகரேசர் திருக்கோயில் சோழ மன்னனால் கட்டப்பட்டது என்பர். அர்ச்சை - அர்ச்சனை; வழிபாடு. வெப்பு தவிர் வாவி - சுரகர தீர்த்தம்; இதன் பெயர் வெப்பேறிக் குளம்; இஃது இப்பொழுது, 'உப்பேறிக் குளம்' என மருவி வழங்குகின்றது.

——

திருச்சிற்றம்பலம்

# திருவருணைப் பதிற்றுப்பத் தந்தாதி

## சாத்துக் கவிகள்

இந்நூலாசிரியர் தமையனார்

**புலிசை-தணிகாசல முதலியார்**

இயற்றிய

### அறுசீர்க் கழிநெடில் விருத்தம்

1 தருவருணைச் சியமெனினுந் தனையடைந்தாற்
றருமதுபோற் சார்ந்தார்க் கீயும்
ஒருவருணை விடமிடற்ற ருமைகொழுந
ருவமையிலா ரெனவோ ராமல்
இருவருணை வுறத்தொடர்நா தன்மேற்சோ
ணசலனு மிளவ லன்பாய்த்
திருவருணைப் பதிற்றுப்பத் தந்தாதி
யெனுமொருநூல் செப்பினனே. (க)

கவர்ன்மெண்டு தமிழ்டிரான்ஸ்லேடர் முனிஷியாரும்
புரசை அஷ்டாவதானம்
சபாபதி முதலியார் அவர்கள் மாணாக்கருமாகிய
தண்டலம் பாலசுந்தர முதலியார் இயற்றிய

### பன்னிருசீர்க் கழிநெடில் விருத்தம்

2 பரையாதி யைஞ்சத்தி சகிதமா யைஞ்சத்தர்
பற்பல வுயிர்க்குமென்றும்
பரிவுற நடத்தும் பெருஞ்சோதி தனைவெம்
பவக்கடல் விழுந்தழுங்கி

நரையாதி யனுருற்று நலியுமெம் போலியரு
நன்குவீ டுணரமேவு
நலனுற்ற ஞானதீ பச்சுடரை மலைதந்த
நங்கையோர் செம்பாதிகொண்
டுரையாதி யாவுங் கடந்தவுண் மைப்பதத்
தோங்குசோ ணசலத்தெம்
முடையவருள் வாரியைக் குகனருளி னனிலவு
முயரருண கிரிநாதனித்
தரையாதி புகழவரு தலைனயந் தாதியாத்
தருபதிற் றுப்பத்தினல்
தண்டமிழ்ப் புலமைமிகு புலிசைவரு சோண
சலப்புலவ னேதினனரோ. (உ)

இயற்றமிழ்ப் புலவர்

கோ. இராஜகோபாலப் பிள்ளையவர்கள் மாணக்கர்

**மயிலைச் சண்முகம் பிள்ளையவர்கள்** பாடிய

**அறுசீர்க்கழிநெடில் விருத்தம்**

3 **தா**ணுடித் தாணுட கிலாதலமந் தவர்நிலைமை தன்ம னத்தோர்ந்
தாணுனல் லழகனருட் பரைமகிழு மரும்பரம துரிய மேய [பாய்ச்
சோணுச லந்தனக்குப் பதிற்றுப்பத் தந்தாதித் தொடைய லன்
சோணுச லப்பெயர்கொ டமிழ்ப்புலவன் றுகடபுத்துச் சொற்ரு
[னன்றே.

4 .................... (ச)

சாரதா வைத்திய நிலயம் பண்டிதர்

**தஞ்சைச் சண்முகம் பிள்ளை**

இயற்றிய

**கட்டளைக் கலித்துறை**

5 **வி**தித்த புராண விதிகாச நூல்களின் மெய்ந்நிலையைக்
கதித்துப்பிர சங்கஞ்செய் வேளாள சோணு சலக்கவிஞன்
துதித்துப் புகழா ரருணை விமலன் றுணையடிக்குப்
பதிற்றுப்பந் தந்தாதி சொன்னு னடியர் பயனுறவே. (ரு)

திருமழிசை - கந்தசாமி முதலியார் குமாரரும்

சொர்க்கபுரம்

## இராமலிங்கத் தம்பிரானவர்கள்

மாணுக்கருளொருவருமாகிய

## வடிவேலு முதலியாரியற்றிய

### வெண்பா

6 அருணைப் பதிற்றுப்பத் தந்தாதி யீசன்
கருணைப் பதித்துப்ப கர்ந்தா—னிருணை
யருணகிரி நாத னருந்தவப்பே ருருகுந்
தருணனெனுஞ் சோணு சலன். (சா)

7 .................. (எ)

——

உ

திருச்சிற்றம்பலம்

# திருவருணைப் பதிற்றுப்பத் தந்தாதி

## காப்பு

### அறுசீர்க் கழிநெடில் விருத்தம்

அண்ண லருணைப் பதிற்றுப்பத்
தந்தா திச்சொல் லாரநனி
தண்ண லருணைக் கார்வணமால்
சார்தற் கரிய சரண்சாத்த
விண்ண லருணை தலைநோக்கி
வேழ முகத்தா னவனையடர்த்
தெண்ண லருணை வுடனளிக்கு
மியானை திறைகொண் டவற்பணிவாம்.

## நூல்

1 சீரா ரருணைப் பதிவாழுந்
தேவ தேவே நின்னியல்பை
யோரா துழலு நாயேனுக்
குணரும் வகையா லுனையுணர்த்திப்
பூரா யமதாய் வழிகாட்டிப்
புன்சொல் வாக்கால் பாடிடெனக்
காரா யிரங்கிக் கருணைசெய்தாய்
காணே னிதற்கோர் கைம்மாறே. (க)

2 கைம்மா வுரித்துப் புரஞ்சிரித்துக்
கண்ணுற் காமன் றனையெரித்துப்
பைம்மா சுணமாங் கலன்றரித்துப்
பண்பா ரருண கிரிமேவி

யைம்மா நிலத்து ளடியர்தமக்
கருளுந் திறலோய் நாயேனை
யுய்ம்மா றளிக்கக் கடனுனக்கே
யுண்டோ விலையோ வுரைத்தருளே. (உ)

3 அருளே பரமா னந்தவெள்ளத்
தாடுந் தொழும்ப ரகம்விளக்குந்
தெருளே யின்பா தீதவருட்
டடங்கற் கண்டே தெள்ளமுதே
மருளே யுடைய மனத்தனேனை
வாழ்விப் பதுவு நின்பரங்காண்
பொருளே யண்ணு மலைமருந்தே
புரையேன் புகனின் பொன்னடிக்கே. (ங)

4 பொன்னார் கடுக்கை யாலாரம்
புனையுஞ் சடில நம்பெருமா
னென்னார் புரங்க ளொருமூன்று
மொழியச் சிரித்தோன் றங்குறைகள்
சொன்னார்க் கருளு மாதிபரன்
றோன்ற லருண கிரியனல்லாற்
பின்னார் நமது முறைகேட்பர்
பெரும்பூ தலத்துட் பேதைநெஞ்சே. (ச)

5 பேதைக் கிடமாய் வளர்ந்தோங்கும்
பெரும்பா மரனேன் பிறந்திறக்கும்
வாதைக் கிடமா மருந்துன்கை
வரதா பயமே வேறுளதோ
கோதைக் கிடப்பா லளித்த குணக்
குன்றே கனக சபைநடுவே
தாதக் கிடத்தோ மெனவாடுஞ்
சரணா வருணா சலக்கொழுந்தே. (ரு)

6 .................... (சு)

7 உண்டாய் விடத்தை வெங்கரியை
யுரித்தாய் தரித்தாய் கூற்றுதைத்தா
மிண்டாய் மகஞ்செய் தக்கனுக்கு
மேடத் தலையை விரைந்தளித்தாய்
கொண்டா யருணு புரிவாசங்
கொடியேன் றனைத்தொண் டாவருள்செய்
கண்டாய் நினது பெருமைகுறை
காணு தென்றுங் கண்ணுதலே. (எ)

8 கண்ணுய் மணியாய்க் கற்பகமாய்க்
கண்ணு ரமுதாய்க் கதிர்மதியாய்
விண்ணுய் வளிதீப் புனன்மண்ணுய்
வித்தாய் முளையாய்ப் பயிராயாண்
பெண்ணு யலியா யகண்டமுமாய்ப்
பேதா பேதமாகி நின்ற
வண்ணு மலையாய் நின்றிருக்கூத்
தடியே னறிதற் கெளிதாமோ. (அ)

9 ஆமே யெளிதிற் கைவல்ய
மணிமா முதலா மட்டசித்தி
பூமே லுயர்ந்தோர் செய்தொழிலும்
பொன்னுட் டமரர் புரிவகையு
நாமே நமச்சி வாயவென
நாளுந் துதித்தா னன்னெஞ்சே
தாமே யருண சயிலமிசைத்
தங்கும் பெருமான் றயையாலே. (கூ)

10 ஆலங் கொழிக்கு மணிமிடறு
மயன்றே டரிய நெடுமுடியும்
பாலங் கொழிக்குந் திருவிழியும்
பதுமைக் கிறைதே டிணையடியு ..........

மேலங் கொழிக்குங் குழலுமையா
ளிடப்பா கமுமென் கண்காணக்
கோலங் கொழிக்கு மருணமலைக்
கோவே காதல் கொண்டேனே. (க0)

## எழுசீர்க் கழிநெடில் விருத்தம்

11 கொண்டநன் மனையை மகிழ்வுடன் கொடுத்துங்
குழந்தையைக் கறிசமைத் தளித்தும்
விண்டநென் முளையைக் கொணர்ந்தமு தீந்தும்
விழைவுறு மகள்குழல் பகர்ந்துங்
கண்டன ரருணை நாதநின் கதியைக்
கருணையோ டோர்துரும் பேனு
முண்டென வளிக்கக் கனவினு நினையா
வுளத்தினேற் குன்னரு ளுறுமோ. (கக)

12 உறுமையு மகலு முற்பவப் பிணியு
மொழிந்திடும் புலைத்தன மாறும்
வறுமையுந் தவிருந் துர்க்குணந் தொலையும்
வன்பிணி நீங்கு மென்மேலும்
பொறுமையும் புகழுங் கல்வியு நலமும்
பொன்னுநென் மணியுட னிம்மை
மறுமையும் பயக்கு மருணையு ளுறையும்
வள்ளலா ரடியவர் மாட்டே. (கஉ)

13 மாட்டிடு மயலாற் சுந்தரர் புரியு
மணந்தகைந் திணையடி சிரமேற்
சூட்டிடும் படிக்கு விருத்தவே தியனாய்த்
தோன்றியென் றொண்டனீ யென்னாத்
தீட்டிடு முறியைக் காட்டியாட் கொண்ட
தேவனே யருணைகா வலனே
ஆட்டிடும் வினையான் முறையிடு நாயேற்
கருள்செய நீவரா தென்னே. (கந)

14 ........................................ (க௪)

15 ........................................
கடல்பொரு கருணை பொழிவதே போலுங்
கழிமுக மாலையா யொழுகி
யடல்பொரு மண்ணா மலையடி வாரத்
தமர்ந்தமுக் கண்ணுடைக் கரும்பே. (க௫)

16 கரும்புகற் கண்டு சீனிசர்க் கரைமுக்
கனியென வன்பருக் கருளி
விரும்புகற் பகமே யருணையு ளுறையும்
வித்தகச் செழுஞ்சுடர்க் குன்றே
வரும்புகற் ககனர் வாழ்வுறக் கடலில்
வந்தவெவ் விடந்தனை யயின்றோ
யிரும்புகற் போன்ற வென்மனங் கரைய
வின்னருள் புரிவதெந் நாளோ. (க௬)

17 நாள்விடா துனது திருப்பஞ்சாக் கரத்தை
நாவினா லோதிநற் கமலத்
தாள்விடா துளத்து ளிருத்தியா னந்தத்
தண்புன லிருவிழி யிறைப்பத்
தூள்விடா மேனி யடியரோ டருணைத்
தோன்றலே யினிதுவீற் றிருக்கக்
கோள்விடா மனத்த னாயினுங் கருணை
கூர்ந்தெனை யடிமையாக் கொள்ளே. (க௭)

18 கொள்ளுவார் நலஞ்சேர் சங்கமே நண்ணிக்
கோதிலா வறிவுடை ஞானந்
தெள்ளுவா ரருணை நாதனின் மாண்பைத்
தினந்தின நாத்தழும் பேற
விள்ளுவார் பரமா னந்தமுற் றுய்வார்
வினையினேன் றன்னைவே றாக்கித்

தள்ளுவா ரங்கே யென்செய்வே னடியேன்
சாமிநின் றுணையிலாக் காலே. (கஅ)

19 காலனுன் மறையு முயிரெனத் தெளிந்து
கலங்குரு துய்ந்த மார்க்கண்டர்
போலநான் மறைபுக் குனதடிக் கினிய
பூசனை புரிமுறை யறியேன்
மேலநான் மறைநன் னயமொடு சொலினும்
விட்டிடா னென்செய்கே னந்தோ
மூலநான் மறையின் முடிமிசை நடிக்கு
முன்னவா வருணைமன் னவனே. (கசு)

20 மன்னிய தமருந் தந்தையுந் தாயு
மாசறு குருவுநற் றேவு
முன்னிய பொருளு முடலமு முயிரு
முணவுமே லுற்றதோர் சுகமும்
பன்னிய விவைமற் றதுவுநீ யலது
பார்க்கில்வே றேதுபூ ரணனாய்
மின்னிய வருணைச் சுயம் பிரகாச
வித்தகச் செழுஞ்சுடர்க் குன்றே. (உ0)

அறுசீர்க் கழிநெடில் விருத்தம்

21 குன்றினைத் தனு வாய்க்கொடு தானவர்
குலவிய புரந்தீத்து
நன்றினைச்சுரர்க் கீந்திடு நற்குண
நல்லரு ணாசலனே
கன்றினைப்பசு தேடிவந் தளித்திடுங்
காரணம் போற்கருணை
யொன்றினைத்தடை யேதுமில் லாதுவந்
துதவென தருகடைந்தே. (உக)

22 அருமை யாகிய வக்கர மஞ்சையு
மரைநொடிப் போதேனு

மொருமை யாகிய மனனுட ஞேதியே
யுணர்வொடு நின்றறியேன்
கருமை யாகிய கந்தர சுந்தர
கருதரு மருணேச
பெருமை யாகிய நின்னன்பர் தம்மில்யான்
பிறங்குவ தெப்படியோ. (உஉ)

23 ........................................ (உ௩)

24 முடியி டந்தெரி யானன மாகியோர்
முடியிழந் தவன்முடுகி
யடியி டந்தெரி யான்கிரி யாய்விழி
யடியிடந் தெரிந்தணிந்தோன்
படியி டந்தெரி யாதநா னின்னையெப்
படியறி வதுபகர்வாய்
பிடியி டந்தெரி யாவுரு விடைப்பிடி
பிடியருணாசலனே. (உச)

25 அருணை நாயகன் றனஞ்சயன் வில்லினு
லடித்திட மகிழ்வாகி
யிருணை யாதொளிர் குழலுமை யாளுட
னிட பமூர்ந் ததிராகிப்
பொருணை வோடளிப் போமென வினவியே
புகலரும் பாசுபதங்
கருணை செய்ததென் காரண நீயதைக்
கண்டறி வாய்மனனே. (உ௫)

26 மனமு தற்பெறு கரணநான் கைம்புலன்
மாறிலா துடன்சேர
வனமு தற்புசிப் பியாவையும் வெறுத்துமே
லருள்பெறு வோமென்னு
வனமு தற்பருப் பதங்குகை மேவியே
மாதவம் புரிந்தாலு

மெனமு தற்பொரு ளாமரு ணாபுரி
யெந்தையை வணங்காரே. (உசா)

27 வணங் குலாவிய விமயமால் வரையர
சினிதுடன் பெறுமாதி
யணங்கு லாவிய வாமபா கத்துட
னமர்ந்தய னரியாதி
கணங்கு லாவிய முனிவர்சூ ழவையிலே
கடையனேன் வருவேனோ
மணங்கு லாவிய சோலைசூ ழணியணா
மலையுறை தனிமுதலே. (உஎ)

28 முதலை வாயினின் மகன்வர நற்கவி
மொழிந்தவர் பொருட்டாய்முன்
றிதலை மேவிய கொங்கையம் பரவைபாற்
சென்றொரு தூதோது
மதலை வேணிய தென்னரு ணாபுரி
மன்னிய பெருந்தகையே
குதலை நாயினேற் கருள்செய நீவரிற்
குவலயம் பொறுக்காதோ. (உஅ)

29 பொறுக்கு மோகையோ டெளியவன் பிழையெலாம்
போற்றுநர்க் கருள்வீசி
வெறுக்கு மோவெறுக் காதொரு காலுமிம்
மேதினி நடுக்குறவே
கறுக்கு மோட்டெரு மைக்கடா வூர்ந்துமே
காலன்வந் தணுகாமன்
மறுக்கு மோம்புவார்க் கணியணா மலையுறை
மாநிதி மண்டலத்தே. (உகூ)

30 மண்டும் வெம்பசி யாலழுஞ் சேயினை
வந்தனை காப்பதுபோல்

விண்டும் வேதனுந் தேடணு மலையுறை
வித்தக வுனைநாளும்
அண்டும் பத்தர்கள் குறையெலாந் தீர்ப்பைநீ
யடியனேன் குறையெல்லாங்
கண்டும் வந்தருள் செய்திடா திருப்பதென்
காரண மறியேனே. (௩0)

## கலி விருத்தம்

31 ஏனி னுஞ்சிறி யேன்மிசை வஞ்சக
நீநி னைத்தனன் னேர்த்திசோ ணேசனே
மானி னம்வலை சிக்கிய வாறுபோ
ஞனி லத்தினி னண்ணி யிருப்பதே. (௩௧)

32 இருப்ப தென்றரு ணேசநின் னன்பரை
விருப்ப மோடு கலந்து விரைந்துநல்
லுருப்பஞ் சாக்கர மோதி யனுதினந்
திருப்ப தந்தனைச் சிந்தித்தெ னுள்ளமே. (௩௨)

33 உள்ள மேயுனக் குற்ற வருட்டுணை
கொள்ள வேண்டுமெனிற்புலங் கூறுவேன்
கள்ள மேதுமில் காட்சியண் ணுமலை
வள்ள னூபுரப் பாத வனசமே. (௩௩)

34 பாதம் பெற்றவர் பாதம் பணிந்துநின்
போதம் பெற்றுப் பிழைப்பனோ புன்மையே
னீதம் பெற்றவண் ணுமலை நீண்முடி
மீதம் பெற்று விளங்கிடு மீசனே. (௩௪)

35 ஈச னேயடி யாரித யாம்புய
வாச னேபிற வித்தொடர் வல்வினை
நாச னேயரு ணுபுரி வாழ்பிர
காச னேயெனைக் கைகொடுத் தாள்வையே. (௩௫)

36 ஆள வெண்ணி லருமைய தோவெனை
நீள வெண்ணி நிதானிப்ப தென்புவி
மாள வெண்ணிவந் துற்றநஞ் சைக்களந்
தாள வெண்ணிய சோண சயிலனே. (௩௬)

37 சயிலை யங்கிரி யாதுடைச் சார்பனே
கயிலை யங்கிரி காணரு ணேசனே
பயிலை யங்கிரி பற்றி யிறைஞ்சியும்
வெயிலை யங்கிரி நீண்டதென் மேன்மையே. (௩௭)

38 என்னை நாளு மிரட்சிப்ப துன்கட
னுன்னை நாளு முவந்தேத்த லென்கடன்
பொன்னை நாளு மணியுரன் போதனு
முன்னை நாளு ணராச்சோண மூர்த்தியே. (௩௮)

39 மூர்த்தி யானவன் மும்மலச் சேட்டையை
யீர்த்தி னல்லரு ளன்பருக் கெய்துவோன்
கீர்த்தி மேவிய சோண கிரியின்மேற்
கார்த்தி கைச்சுடர் காட்டுங் கருத்தனே. (௩௯)

40 கருத்திற் றென்னரு ணேசன் கழற்கழ
லிருத்தி ஞோர்க ளிருவினை தீப்படும்
பருத்தி யொத்திடு முன்னுநற் பாக்கியம்
விருத்தி யாமலை போலுமென் மேலுமே. (௪0)

## தரவு கொச்சகக் கலிப்பா

41 மென்குழலை நேர்மொழிசேர்
விமலைமகிழ் மணவாள
பொன்குழுநேர் திருமேனிப்
புண்ணியதென் னருணேச
நன்குழுநின் பழவடியார்
திருக்கூட்ட நடுவிருக்கப்
புன்குழவி யனையவெனைப்
புகுவிப்ப துன்கடனே. (௪௧)

42 கடகடவென் றெயிறசையக்
கனற்பொறிகண் ணிடையுகுப்பப்
படபடவென் றடிகரமும்
பதைக்கவிரும் பகடூர்ந்து
தடதடவென் றியமன்வரில்
வந்ததடந் தனைநோக்கி
நடநடவென் றறையவெளி
தருணைவள நவில்வார்க்கே. (சஉ)

43 நவிலாத புன்னாவு
நாடாத வன்கருத்துங்
குவியாத வெறுங்கரமுங்
குனியாத நெடுஞ்சிரமும்
புவிமீதி லெனக்களித்த
தென்னருணா பூதரம்வாழ்ந்
தவியாத கருணைபுரி
யாண்டகையே நின்புகழே. (சங)

44 நின்மல நிரானந்த
நிருவிகற்ப வருணேச
துன்மலத்து ளழுந்துமியான்
றொல்லைபுரி நற்றவமோ
பொன்மலருந் தண்மலரும்
பொருந்தாவென் றுன்னடிக்கே
சொன்மலராற் புனைமாலை
சூட்டும்வரம் பெற்றேனே. (சச)

45 பெற்றவர்க ளறிவார்கள்
பெருமானின் பெருமைதனை
மற்றவர்க ளறிவாரோ
மாநிலத்தி லெஞ்ஞான்று

நற்றவர்கள் புடைசூழ
மருணமலை நாதவெனக்
குற்றவர்க டாமுளரோ
வுனையன்றி யுன்கழலே. (சரு)

46 கழையேந்து மதவேளைக்
காய்ந்தருளு நாதவழ
லுழையேந்து மலர்க்கைய
வுன்பாத நினையாத
பிழையேந்து நாயேற்குப்
பிரியமுட னருள்பொழியு
மழையேந்த லேயருண
மலைஞான மணிவிளக்கே. (சசா)

47 விளக்கமுடன் மதுரையினில்
விறகுகொடு விலைகூறி
யுளக்கவலை படும்வாண
னுவக்கவினி தருள்கூர்ந்தே
யளக்கவரு மிசைவீணை
யதுபாடு மருணேச
களக்கமற வெனைக்கூடிக்
கருணைசெயி லொவ்வாதோ. (சஎ)

48 ஒவ்வாநஞ் சுண்டமரர்க்
குவந்தருளு முத்தமனே
செவ்வான மெனச்சிறந்த
திருமேனி யருணேச
தெவ்வான புலவேடர்
சேர்க்கையினிற் சிக்குமெனைக்
கவ்வான வனம்பாலிற்
கம்பிரிப்ப தெனப்பிரியே. (சஅ)

49 பிரியாத பூரணத்தைப்
பேரின்ப வாரிதியைத்
துரியாதீ தப்பொருளைச்
சுயஞ்சுடரை யருள்வெளியைக்
கரியாதி மூலமெனக்
காத்தோனு மலரோனுந்
தெரியாத தனிமுதலை
யருணையினுட் டெரிந்தேனே. (சகூ)

50 ................................ (ரு0)

எழுசீர்க் கழிநெடில் விருத்தம்

51 எவனேது மில்லி யெவன்மேரு வில்லி
யெவனேயர் தீங்கு தெறுவோ
னெவனேழை பங்க னெவனாதி யந்த
மிலனு சகன்ற பெரியோ
னெவனால முண்ட திருநீல கண்ட
னெவனா ரணத்து ளுறைவோ
னவனே யிணங்கு மடியார் வணங்கு
மருணேச னெங்க ளிறையே. (ருக)

52 இறையோ வுனக்கி தரிதோ மிகுத்த
விழிவோ தகாத செயலோ
குறையோதி நிற்கு மெனையாள நின்ற
னருள்கூர்வ தென்று பகராய்
சிறையோதி மத்தன் விழியா யிரங்க
டிகழ்தேவ ராயன் முதலோர்
மறையோர் வழுத்து மருணா சலத்துள்
வளர்தேவ தேவ தருவே. (ருஉ)

53 தருவாச மன்ன னெழிலால வாயி
றனியாண்டு வேட்டை மெலிநா
டுருவாசர் முன்ன மிடுதீங் ககன்ற
துணையோர் மொழிந்த மொழியாற்

றிருவாச மார்ப னறியாத சோண
சிலைமா வலஞ்செய் தினிதாய்
மருவாச வன்ற னொருநா டைந்த
வளநானு ரைக்க வெளிதோ. (ருங)

54 எளியேன் வருத்த மறிவார் சகத்தி
லெவரே திருத்த முடையார்
களியே மிகுத்த வுயர்மா தவத்து
கடவாது மெத்த மகிழ்வா
யொளியே நிலைத்த வெளியூ டகத்தை
யுறவாக வைத்த பெரியோர்
தெளியே கவத்து வருணு சலத்து
டிகழ்வா ரொருத்த ரலதே. (ருச)

55 அலையா யலைந்தும் வளியா யுழன்று
மலையா யுடைந்த மனமோர்
நிலையா யிருந்து தவமே புரிந்து
னிருதா ணினைக்க வருளாய்
தலையாவு நொந்து விளியாது வந்து
தழலாய்ப் பொலிந்த வருண
மலையா யெழுந்து மலரோன் முகுந்தன்
மடியா தளித்த பொருளே. (ருரு)

56 பொருளாசை பெண்டு மனைமாடு கன்று
புவிபூ டணங்க ளெனவே
மருளாசை கொண்டு நிலமே லலைந்து
மடிவே னலாது மடியா
வருளாசை கண்டு தினைநேர மொன்றி
யருணேச வென்று மொழியே
னிருளாசை விண்டு சுகமாவ தெங்ங
னினியேது செய்வ னவமே. (ருசா)

57 அவனுவ தென்ன வவளாவ தென்ன
வதுவாவ தென்ன நினலா
தெவனுட வல்ல னிதுபோலும் வித்தை
யெழில்பூமி தன்னி லருணைச்
சிவனே யகண்ட செயலாய் நிறைந்த
தேவாதி தேவ தயவாய்ப்
பவனேனை வந்து னடியே வணங்கு
பணியே பணிக்க வரிதோ. (ருஎ)

58 அரிலோ சனங்கொள் சுரலோக மங்கை
யர்கடோள் கரும்ப தெனவே
கரிலோ சனங்கொ ளுறநீள்கை நீட்டு
கவின்மேவு சோண மலையு
ளெரிலோ சனங்கொ டொருமார னங்க
மெரியா யெரித்து மருளே
புரிலோ சனங்கொள் பெருமான் விளங்கு
புகழ்யா னுரைக்க வசமோ. (ருஅ)

59 ........................................ (ருகூ)

60 முனமால வாயி றிருவாத வூரர்
மொழிமூல நாளி னரியைக்
கனமா வினங்க ளெனவே யளித்த
கருணைக்கி யாது புரிவேன்
வனமாலி வேத னிமையோர் வலாரி
வளர்நார தாதி முனிவர்
தினமாசி கூறு மருணச லேச
சிவஞான ரூப மணியே. (சூ0)

## கலிவிருத்தம்

61 மணியி லேபொலா மணியெ னக்கிரி
யணியி லேயர சணிய ணுமலைப்

பணியி லேன்த ஞற்ப டிப்பவப்
பிணியி லேகிடந் தேன்பெ ருக்கவே. (சுக)

62 பெரிது வந்துளம் பெட்பொ டருணேநன்
கரிது வந்துபா டன்பர் தங்களுக்
குரிது வந்துஞ் முரக வேணியங்
கிரிது வந்துவங் கேட்டி முன்னமே. (சுஉ)

63 முன்ன நாளேயின் முண்ட கன்றரும்
பொன்ன ஞளேமெய் புணர்ந்தி டத்தொடப்
பின்னஞ ளேய பேதுற் றேனெனுத்
துன்ன ஞளேவெல் சோண மேருவே. (சுங)

64 சோண மால்வரைத் தோன்றல் சேவடி
காண மால்புவி கல்லி யுற்றிலா
நாண மால்பொர நண்ணி ஞனெனில்
வேண மால்வளர் வீணர் காண்பரோ. (சுச)

65 காண லாமயன் காணெ ஞக்கதி
பூண லாமரி பூணெ ஞப்புகழ்
சேணெ லாம்புகழ் திருவ ஞமலே
மாணெ லாமகிழ் வாய்வ ழுத்தவே, (சுரு)

66 வழுதி கூடலில் வளையல் விற்றவ
ரெழுதி டாமறை யேத்து மாண்பினர்
முழுதி னுக்குமோர் முதலு மானவர்
தொழுதி யான்றுதி சோண நாதரே. (சுசு)

67 நாத னேயொரு நாவ லன்றிருத்
தூத னேதழற் சோண மாமலே
நீத னேயுனே நித்தி யந்தொழ
வேத னேற்கரு ளெய்தவேண்டுமே. (சுஎ)

68 ........................................ (சுஅ)

69 நீயி லாதொரு நிலைமை யேதுகொல்
நோ யிலாதெனை நோக்கி யாண்டரு
ளாயி லாசைகொ ளப்ப னேடொரு
தாயி லாவரு ணேச தாணுவே. (சுகூ)

70 தாணு மாமலை தனைவ ளைத்தனை
யூணு மாக்கினை யுரக நஞ்சினைக்
காணு மாவதிற் கடைய னேன்வினை
நாணு மாறுசெய் யருணை நம்பனே. (எ0)

அறுசீர்க் கழிநெடில் விருத்தம்

71 நம்பிரா வணநற் சோண
மலைமுடி மீதி னல்குஞ்
சம்பிரா வணமென் கூந்தல்
சங்கரி பயந்து வாட
வெம்பிரா வணனஞ் சாமல்
வேதண்ட மெடுத்த போது
வம்பிரா வணங்கொண் டுன்று
மலர்ப்பதந் துதிசெய் வோர்க்கே. (எக)

72 செய்வளர்ந் திடுமோ ரைந்து
திரவியம் பொழிற்பூப் பெய்யு
நெய்வளர்த் திடவே யோங்கு
நிகரிலா வருணை மூதூர்
பொய்வள ரயனு ருக்குப்
பூசையுந் தளியு நீத்து
மெய்வள ரடியார் காண
விளங்கிய பெருமான் வாழ்வே. (எஉ)

73 வாழ்வினை யடையும் போது
மங்கையர்ப் புணரும் போதுந்
தாழ்வினை யடையும் போதுஞ்
சஞ்சலித் துழலும் போது

மூழ்வினை யடையும் போது
மொப்பிலா வருணை நாத
பாழ்வினை யகற்று நின்றாட்
பத்திதந் தருளு வாயே. (எங)

74 தந்திர மறியேன் வேறு
சாலமொன் றறியேன் மூல
மந்திர மறியேன் றின்னு
மருந்துநா னறியே னட்டு
மெந்திர மறியே னண்ணு
மலையினு ளிருக்கு மெந்தா
யுந்திர மறியே னெவ்வா
றுய்யுமா றுரைத்தி டாயே. (எச)

75 உரைத்துநற் கனகம் வாங்கு
முணர்வுபோ லுஞ்சந் தத்தை
யரைத்துமே லணிதல் போலு
மப்பரைச் சூலை நோயில்
கரைத்துநீ யாண்டு கொண்ட
கருணையை யென்ன சொல்வே
னிரைத்துசூழ் கடல்வை யத்து
ளெழிலண்ணு மலையி னானே. (எரு)

76 மலையெடுத் தவனை யூன்று
மருணமா மலையார் தாணின்
றலையெடுக் காம லூன்றுந்
தயையுட னுனக்கி யானந்
நிலையெடுத் துரைத்தே னென்னை
நீங்கிட வினையே யென்றன்
சொலையெடுத் தேகி னானீ
சுகமுட னுய்ய லாமே. (எசா)

77 ...................................... (எஎ)

78 தானவர் புரத்தை நீத்துத்
தயைபுரி சோண நாதர்
வானவர் முறைகேட் டன்று
வாரிவல் விடத்தை யுண்டோர்
கானவர் வடிவ மாயோர்
கன்னிமான் முன்னர் வந்தோ
ரேனவர் வரமாட் டாரென்
னிதயமே யவரைப் பாடே. (எஅ)

79 பாடுவார் குறைக ளெல்லாம்
பற்றறப் புரிவோ மென்று
தேடுவார் புலியும் பாம்புந்
தினந்தொழு தேத்து மன்று
ளாடுவா ரடியே னுள்ள
மாலய மாக வந்து
கூடுவா ரருண வெற்பிற்
குலவிய கொண்க னாரே. (எகூ)

80 கொண்கரி யாவு மான
கொள்கையர் முனிவ ரேவுந்
திண்கரி யுரித்துப் போர்த்த
திண்ணியர் கருணை வள்ள
லெண்கரி கடமை யானை
யின்புறு மருண வெற்பர்
வண்கரி யவர்நா யேனை
வாழ்விக்கும் பரம னாரே. (அ0)

கலிநிலைத் துறை

81 பரவு மன்பர்மு னினிதுடன் பாய்விடை
யிவர்ந்தே
விரவு மன்னையுண் ணாமுலை யாளுடன்
மேவிப் ..........................................

புரவு மன்னவ தென்னரு ணுபுரிப்
புனிதா
வரவு மன்னினை யதனினுங் கொடியனே
வடியேன். (அக)

82 அடித்தி டுந்தனஞ் சயன்றனக் கருளிமா
மலர்தூய்ப்
பிடித்தி டுஞ்சிலை மதனவே ளைப்பிடி
நீறுய்ப்
பொடித்தி டுந்திரு வருணையம் பதியுறை
புனிதன்
முடித்தி டுஞ்செயல் கண்டியார் மொழிவர்முத்
தலத்தே. (அஉ)

83 முத்த னேமுனி வோர்தொழு முக்கண
முதல்வா
வத்த னேதில்லை யம்பலத் தாடிய
வழகா
சித்த னேதிரு வருணையம் பதியுறை
தேவா
பித்த னேயெனு மவர்க்கருள் புரிந்ததென்
பேசாய். (அந)

84 பேசு வார்திரு மறையடி யவர்க்கருள்
பெருக
வீசு வாருடன் முழுமையும் வெண்பொடி
விளங்கப்
பூசு வாரரு ணேசனுர் நதியவள்
பொருட்டாக்
கூசு வார்மலை மகட்குப்பி னெவர்க்குங்கூ
சாரே. (அச)

85 கூசி யும்மையே கோரின னெனினுங்கா
தற்ற
ஆசி யுங்கடைக் கிலையென வோர்ந்திடா
ருலோபர்
கேசி யும்விதி யுந்தொட ரருணையங்
கிரியைப்
பேசி யுய்குவை யுள்ளமே யென்சொலைப்
பிடித்தே. (அரு)

(இந்நூலில் உள்ள ஏனைய பதினைந்து பாடல்களையுடைய ஏடுகள் கிடைத்தில. இடையிடையே விடப்பட்ட பாடல்கள் சிதலைவாய்ப் பட்டன.)

இந்நூல், ஆசிரியரால் (கி. பி. 1884) தாரண ஆண்டுக் கார்த்திகைத் திங்களில் அச்சிட்டுவெளியிடப்பட்டது.

——

உ

திருச்சிற்றம்பலம்

# திருவருணைக் கல்யாணசுந்தரர் பதிகம்

## சாத்துக் கவிகள்

திரிசிரபுரம் மகாவித்துவான்
மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மாணாக்கர்
அரன்வாயில் வெங்கடசுப்புப்பிள்ளை யவர்கள் இயற்றிய

### வெண்பா

கார்சூ ழருணையுள்வாழ் கல்யாண சுந்தரர்மே
லேர்சூழ் பதிக மிசைந்தணிந்தான் — பார்சூழ்ந்
தொலிசெயுஞ்சோ ணாசலனென் றோதுதிருப் பேரோன்
புலிசைநக ராளி புகழ்ந்து. 1

திருமழிசை - கந்தசாமி முதலியார் குமாரரும்,
சொர்க்கபுரம்
இராமலிங்கத் தம்பிரானவர்கள் மாணாக்கருள்
ஒருவருமாகிய
வடிவேலு முதலியார் இயற்றிய

### வெண்பா

காதலுடன் றென்னருணைக் கல்யாண சுந்தரர்மீ
தாதவனைப் போன்றோங் கருணகிரி — நாதனருள்
சோணா சலப்புலவன் சொற்றார் தொடுத்தணிந்தான்
மாணார்வ மோடு மகிழ்ந்து. 2

திருவருணைக்

# கல்யாணசுந்தரர் பதிகம்

## காப்பு

### வெண்பா

அல்ல லகற்று மருணகிரி யுள்ளுறையுஞ்
சொல்லரிய கல்யாண சுந்தரர்மே—லெல்லவரு
மெச்சினிய வோர்பதிகம் விள்ளுவேன் பத்தியுட
னுச்சி விநாயகர்தா ளோர்ந்து. 3

## நூல்

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

1 சுருதியுந் தொடர்ந்து சொல்லொணப் பொருளே
துரியமுங் கடந்தமெய்ப் பதமே
கருதினோர்க் கெளிய காரண வடிவே
கனிந்தவன் பர்கண்மனக் கலப்பே
வருதியென் றழைத்தேன் மனவிரு ளுடையேன்
வந்தெனக் கருளுநா ளென்றோ
பருதிபோ லருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (க)

2 வானிமிர்ந் தோங்குங் கோதிலாக் கரும்பே
வளமுட னுடைந்ததீஞ் சாறே
சீனிசர்க் கரையே யினியகற் கண்டே
தேடுதற் கரியதெள் ளமுதே
கானிருந் திறங்கும் புதியசெந் தேனே
கடையனேன் றனக்கொரு தாயின்
பானிக ரருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (உ)

3 தந்தமில் விருத்தன் மாவினை வியக்குந்
தன்மைபோற் றரணியை வியந்து
சொந்தமி லனைத்துஞ் சொந்தமா நினைத்துத்
துள்ளுவே னுய்யுநா ளுளதோ
வந்தமில் பொருளே யருட்பெருஞ் சுடரே
யானந்த ஞானவா ரிதியே
பந்தமி லருணை கிரியினுள் ளுறையும்
பரகமல் யாணசுந் தரனே. (௩)

4 தோணியா யிருந்து பவக்கடல் கடத்தித்
துகளிலாச் சரியைநாற் படிசேர்
ஏணியா யிருந்து பேருல கத்தி
லேற்றியுய் வாயெனக் கதிசேர்
காணியா யிருந்து பத்தர்கட் கருளும்
கழலிணை மறப்பனோ பரசு
பாணியா யருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே (௪)

5 வண்புளார் வனச மலரவன் மாயோன்
வளருநின் னடிமுடி யிரண்டும்
வெண்புளா யேன மாகியே தேட
மிக்கவு நீண்டமெய்ப் பொருளே
நண்புளார்க் கருளுந் தென்கயி லாய
நாதனே நாயினேன் றனையாள்
பண்புளா யருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (௫)

6 அடியர்க ளகத்தி லமர்ந்தரு ளரசே
யைந்தெழுத் தாயவா ரமுதே
கொடியிடைக் கவுரி கொழுநனே விண்ணோர்
குறைகெட விடத்தையுட் கொண்டோய்

கடியவிழ் கடுக்கைப் பணிச்சடைக் கற்றைக்
கடவுளே கடையனேன் றுயர்தீர்
படியிலோங் கருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே (சு)

7 முற்றிலா முலையார் மோகவா ரிதியின்
மூழ்கியே மூடனு யொன்றுங்
கற்றிலாக் கயவர் கழகமே மருவுங்
கடையனேன் கனவில்வந் தளித்தும்
பெற்றிலார் போலப் பேதுறு கின்றேன்
பிஞ்ஞகா வடியர்பற் றலதோர்
பற்றிலா வருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே (எ)

8 என்னரு முயிருக் கோருயி ரான
வெந்தையே யெங்கணு யகனே
யுன்னரு முண்ணு முலையுட னுறையு
மொப்பிலாச் சிற்பர சிவனே
நின்னரும் புகழை நேசமோ டென்று
நினைப்பவர்க் கருள்பர வெனையாள்
பன்னரு மருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (அ)

9 சராசர மனைத்தும் படைத்தளித் தழிக்குந்
தனிமுதற் கருணைசேர் வள்ளல்
சுராசுரர் முனிவர் தொழுஞ்சுயஞ் சுடரே
தொண்டருக் கருள்செய்தா மணியே
தராதர மறியாத் தமியனேற் கிரங்கிச்
சந்ததந் தண்ணருள் புரியும்
பராபர வருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (கூ)

10 கதித்திடும் புகழ்சேர் கல்வியுந் திருவுங்
கனந்தரும் புத்திரப் பேறும்
மதித்திடுந் தகவும் பூரண வயதும்
மற்றுள பாக்கிய மனைத்துந்
துதித்திடு மவர்கட் கிம்மையி லளித்துச்
சொல்லரும் பரத்திலுங் கருணை
பதித்திடு மருண கிரியினுள் ளுறையும்
பரமகல் யாணசுந் தரனே. (௧0)

முற்றிற்று.

---

இந்நூல், ஆசிரியரால், (கி. பி. 1884) தாரண ௵ கார்த்திகை ௴ அச்சிட்டு வெளியிடப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

# திருவருணை

## உச்சிவிநாயகர் பஞ்சரத்தினம்

### அறுசீரடிச் சந்த விருத்தம்

1 சுமுக சுகிர்தசுப சுசரித சுரர்துதி
சொற்பரி பூரணனே
கமுகன மிடறுடை வலமையை மருவிய
கட்டழ காவுயர்வா
னமுக மிதழியணி யரனுறை யருணையு
ளற்புத கோபுரம்வா
ழுமுகள சரணனு தினநினை யெனையரு
ளுச்சி விநாயகனே. (க)

2 கமையணு கினதிலை யறநெறி யுறவிலை
கற்பக நேர்பெரியோர்
தமையணு கினதிலை யெமையணு கியவினை
தட்டழி யாறெவணே
யமையணு கினதல மெனவள ரருணையு
ளற்புத கோபுரம்வா
ழுமையணு கினனென திடர்பொடி படவரு
ளுச்சி விநாயகனே. (உ)

3 முரகர னயனிமை யவர்முனி வரர்துதி
முக்கண மூடிகமூர்
பரகர வுளமன வெனையனு தினமிகு
பட்சம தாயருள்வோ

யரகர சிவசுத வளர்திரு வருணையு
ளற்புத கோபுரம்வா
ழூரகர டவிகட தடமத கசமுக
வுச்சி விநாயகனே. (௩)

4 படையவன் மதன்விடு படையினில் மயல்கொடு
பத்திய தேதுமிலாக்
கடையவ னெனினுமு ணயமொடு னடிபணி
கட்டளை யேபுரிவா
யடையவர் புரமடு பரனுறை யருணையு
ளற்புத கோபுரம்வா
ழுடையவ வடியர்க ளுளமுறை யருண்மிகு
முச்சி விநாயகனே. (௪)

5 தனதடி களெனவு ளுருகிட நிதநினை
சற்குண மேனியவோர்
மனதடி யவருறு துயர்கெட வருள்புரி
மத்த கசானனனே
யனதம மருவிய திருவரு ணகிரியு
ளற்புத கோபுரம்வா
ழுனதடி யிணைமல ரலதொரு கதியிலை
யுச்சி விநாயகனே. (௫)

முற்றிற்று.

---

இந்நூல், ஆசிரியரால், (கி. பி. 1884) தாரண ஸு கார்த்திகைமீ
அச்சிட்டு வெளியிடப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

# திருவருணை
# இருவர் இரட்டை மணிமாலை

## காப்பு
## வெண்பா

பொன்மாலை பூமாலை பொற்பார் மணிமாலை
பின்மாலை முன்மாலை பேணியே – சொன்மாலை
நன்மாலை யென்றருணை நாதனுமை மாலைசொல
மன்மாலை செங்கழுநீர் மா.

### அண்ணுமலை நாதர் வெண்பா

பூமேவு நான்முகனும் பொன்மேவு மாலுமுனறன்
றீமேவு சோதியுருத் தேர்ந்தணுகற்—காமோ
திருவருணேச தெரிந்தடைவேன் றீயேன்
மருவருணேச மதித்து. 1

### உண்ணுமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

மதிகொண்ட தேய்வுங் களங்கமுங் கண்டு வதங்கியுதிர்
நதிகொண்ட வல்லியும் வான்மீனு மன்பர் நவிலருணைப்
பதிகொண்ட வல்லியுண் ணுமுலை நின்முகம் பார்த்துவந்து
கதிகொண் டடைந்தன வோசெய்ய வாய்நகைக் காட்சி
யென்னே. 2

### அண்ணுமலை நாதர் வெண்பா

என்னுரைப்ப ணூரு ரெழிற்றில்லை காசிநகர்
முன்னுதிக்கக் காண முடியமுத்தி—மன்னு
மெனைக்கவ ருங்கருணை யின்போங் கருணை
நினைக்க வருங்கருணை நேர்ந்து. 3

உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

நேரார் புரந்தர னன்றன் றெரித்தவ னின்னையஞ்சு
மாரார் புரந்தரன் மாலய னின்னன்ப ரைம்புலத்தார்
தேரார் புரந்தர ணுவென்னை யாண்டநின்சேவடியென்
றோரார் புரந்தர மன்னருணைபுரி யெம்மனையே. 4

அண்ணாமலை நாதர் வெண்பா

அனைத்துலகா வாருயிரா வத்தனைக்குந் தேவா
நினைத்துலங்க வேத நிகழ்த்து—மெனைத்தான்
கருணா சலமருவிக் காட்சியென வோங்கு
மருணா சலமருவி யாள். 5

உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

ஆட்பட்ட தொண்டர் குழாம்பாற் கடற்பட்ட வற்புதம்போற்
கோட்பட்ட சோணவெற் போங்குமுண் ணாமுலைக் கோமளைநின்
ணுட்பட்ட பூப்பட்ட தாட்பட்ட தூள்படு நாளுமுண்டோ
சேட்பட்ட பாத ரசம்பட்ட சிந்தைச் சிதடனுக்கே. 6

அண்ணாமலை நாதர் வெண்பா

சிதம்பரவி லாசத் திருநடங்கும் பிட்டுப்
பதம்பரவி யுய்ந்தார்மெய்ப் பத்தர்—மதம்பரவி
வீணாத் திரியப்பா விக்குவகுத் தாயென்னே
சோணாத் திரியப்பா சொல். 7

உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

சொற்படி கேட்பனின் குற்றேவல் செய்வன் றுணிந்தொற்றிவை
நற்படி காணவி லாவணந் தீட்டியு நல்கிடுவே
னற்படி யேன்மனக் கல்லிமக் கல்லென வாருணை
வெற்படிவாரமுக் கண்வேழஞ் சேர்ந்துறை மென்பிடியே. 8

அண்ணாமலை நாதர் வெண்பா

மென்முலையாற் காஞ்சியிடை மெல்கிவடு மேற்சுமந்து
பன்முலையா லேசிரிக்கப் பட்டுவந்து—நன்முலையா

டோணசையி லன்றூர் துலங்குமெய்யோர் கூறுடைய
சோணசயி லன்று டுதி. 9

### உண்ணுமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

துதிசெய்ய வாயும் வலஞ்செயக் காலுந் தொழக்கங்கையும்
விதிசெய்ய வந்ததென் ரோர்கிலன் வீண்செய்த வெவ்வொதியேன்
கதிசெய்ய பூங்கழற் கேயரு ணுபுரிக் கற்பகநீ
சதிசெய்ய வெண்ணிடின் யானென்ன செய்குவன் றக்கதம்மே. 10

### அண்ணுமலை நாதர் வெண்பா

தக்கபொரு ணேடித் தரித்திரன்று ணேடியெங்கு
மிக்கவுங்கா லோய்ந்துடலம் வேர்த்திருகா—தொக்க
வடைத்த தருண மடுத்தவமு தேபோற்
கிடைத்த தருண கிரி. 11

### உண்ணுமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

கிரிமக ளாகுமுன் றக்கன் மகளாய்க் கிளர்ந்தனைபின்
புரிமக வேள்வியிற் றேன் றினை பாண்டியன் புத்திரியாய்ச்
சரிமக வாட்டுத் தலைகா லளித்தனை தந்தையர்க்குத்
தெரிமக ராசி யருணையம் மேயுன் றன் செய்கைநன்றே. 12

### அண்ணு மலைநாதர் வெண்பா

செயலற்ற சிந்தைச் சிவஞானச் செல்வர்
மயலற்ற வாழ்க்கையே வாழ்க்கை—யயலற்ற
சக்கரமஞ் சோதி தழுவருணை யஞ்சோதி
யக்கரமஞ் சோதி யமர். 13

### உண்ணுமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

அம்பர வம்பகக் கொம்பனை யார்பக மஞ்சுகமே
யம்பர வாதொழிந் தென்றடை வேனின்சொ லஞ்சுகமே
யம்பர வாணர்க ளேத்தரு ணுபுரி யஞ்சுகமே
யம்பர னெஞ்சகப் பஞ்சர மேவிய வஞ்சுகமே. 14

### அண்ணாமலை நாதர் வெண்பா

சுகக்கடலாந் தீர்த்தங்க டோய்ந்துவெண் ணீறிட்டு
மிகக்களிப்பா யன்பருடன் மேவிச்—சகத்திடையே
வீணா சலத்தைவலம் வீறவிடா தேழைநெஞ்சே
சோணா சலத்தைவலஞ் சூழ். 15

### உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

சூழ்கின்ற மஞ்ஞையங் தொய்யலங் கார்முகில் சுந்தரவார்
தாழ்கின்ற வெள்ளருவிப்புன னித்திலத் தாமமுமாய் [று
வாழ்கின்றவன்னையுனுண்ணா முலையொன்றைமானப்பெற்
வீழ்கின்றதொண்டர்க்கண்ணாமலைகாட்டியமெய்விளக்கே

### அண்ணாமலை நாதர் வெண்பா

மெய்யார்ந்த நற்கலையு மேலாங் கதியுமுட
லையார்ந்த வாடைநடை யாமெனயான்—மையார்ந்த
வெண்ணா மலையா லினைய விடாமலையா
வண்ணா மலையா வருள். 17

### உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

அருந்தா முலைப்பெய ரோவ்வா தருணையி லந்தணனைப்
பெருந்தா ரணியுற மாலையிட் டங்குசப் பிள்ளையையுந்
திருந்தார் கெடச்செட்டிப் பிள்ளை யையுஞ்சக சிவரையும்
வருந்தா தளித்தநன் மங்கலச் சூத்திரி மற்றுனக்கே. 18

### அண்ணாமலை நாதர் வெண்பா

உனக்கே கடமையெனை யுற்றன்பாய்க் காத்த
லெனக்கே கடமையுனை யேத்தன்—மனக்கேதக்
கோணகிரி யாதி குலதெய்வ நீயடுத்தேன்
சோணகிரி யாதி துணை. 19

### உண்ணாமுலை யம்மையார் கட்டளைக் கலித்துறை

ஆதியண் ணாமலை யாவர மீவளென் றன்பினுறை
நீதியண் ணாமலை யோமன் வானர நீடலைந்தின்

ரேறு தியண் ணமலை யோங்கினின் றுணிழ லுற்றதனு
பூதியண் ணமலை மேவுமுண் ணமுலைப் பூந்தருவே. 20

முற்றிற்று.

## குருபரன் துதி

### கலித்துறை

வருணகிரி யிமயசர வணமதிலு மறுவறுமை மடியின்மீதுந்
தருணகிரி நிகருமுலை வள்ளிதெய்வ யானையெனுந் தாயர்பாங்கு
மருணகிரி முருககுக வெனுமடியார் மலர்மனத்துமலைகடோறும்
அருணகிரி யினுமமர்ந்து கருணைபுரி யாறுமுகற் கன்புசெய்வாம்

## காஞ்சிபுரம் குமரகோட்டக் கந்தவேள் துதி

### கட்டளைக் கலித்துறை

இச்சிப் பதிக்கும ரக்கோட்ட வல்லிரும் பும்மெங்ஙனே
நச்சிப் பதிக்கும ரக்கோட்ட வல்லித யங்ஙயந்தே
மெச்சிப் பதிக்கும ரக்கோட்ட வல்லிச்செல் விக்குமகன்
கச்சிப்ப திக்கும ரக்கோட்ட வல்லியங் காந்தனையே.

## வாழ்த்து

### கலிவிருத்தம்

வேத வேள்வி விளங்குநல் லானின
மாத மும்மழை வண்பயிர் வான்புவி
நீத மன்னுயிர் நீடமி ழன்பர்கோ
மாதண் ணமலை வாழிநீ டூழியே.

---

இந்நூல், ஆசிரியரால், பார்த்திபவஹு (கி. பி. 1885) கார்த்திகைமீ அச்சிடப்பட்டது எனக் கொள்ளுதல் வேண்டும்.

உ

திருச்சிற்றம்பலம்

## சாத்துக் கவி

இந்நூலாசிரியர் தமையனார்

**தணிகாசல முதலியார் அவர்கள்**

இயற்றிய

### வெண்பா

முக்கனியுந் தேனு முதிரா விளம்பாகு
மொக்கக் கலந்தளித்த தொக்குமே—மிக்ககலை
நாடியறி வண்புலமை நற்றுணைசோ ணாசலச்சேய்
பாடியசோ ணாசலவெண் பா.

# சோணசல வெண்பா

### காப்பு

### வெண்பா

வாணாளை வீணாளா வையகத்திற் போக்காமற்
சோணாசல வெண்பாச் சொல்லுதற்கு—நாணாளு
மிங்கமுநீ ரானைநினை யேக்கமறக் காக்கு முக்கட்
செங்கமுநீ ரானைநினை தேர்ந்து.

### நூல்

ஓங்கார பீடத் துறையும் பிரானின்னைப்
பாங்காரக் காணப் பணித்திடா—யாங்கார
வெம்பிரமா நற்றிருமான் மெய்யதுமா றித்தொடர்மா
சம்பிரமா சோணா சலா. 1

கங்கைச் சடையுங் கருணைத் திருமுகமு
மங்கைமழு மானு மரைக்கசைத்த—பொங்கரவுஞ்
செந்தாளு மெந்நாளுஞ் சேவிக்க மேன்மேலுந்
தந்தாளுஞ் சோண சலா. 2

எற்றைநாண் மாதுமையோ டென்முன் வருவாயோ
வற்றைநா ணல்லநா ளானநாண்—மற்றைநாள்
கன்மநாள் வீணாள் கரிநா ளிருட்டுநாள்
சன்மநாள் சோண சலா. 3

தீவாய்ப் படநாகந் தீண்டினு லுந்துயர்கூர்ந்
தாவாவென் றேங்கி யழுங்காம—னுவால்
விடாதரா வென்பார்க்கு வெய்யவிட முண்டோ
சடாதரா சோண சலா. 4

கோயில் வலஞ்செய்யேன் கும்பிடே னின்றுருகேன்
வாயிலெழுத் தஞ்சும் வழுத்துகிலே—னுயிற்
கடையாளாய்ப் பேய்போற் கவல்கின்றேன் கங்கைச்
சடையாளா சோண சலா. 5

மாதேவா சங்கரா மைக்கண்டா முக்கண்ணு
கோதேது மில்லாக் குணகரா—பூதேசா
வோம்பவா வோம்பவா வுள்ளவா வுள்ளவா
சாம்பவா சோண சலா. 6

மெய்ந்நூலை விட்டுவிட்டு வேறுவே றுள்ளபல
பொய்ந்நூலைக் கற்றுப் புலம்புகின்று—ரென்னோர்க்கும்
பொல்லாவா தைக்குளிர்க்குப் போர்வையுயர் கம்பலமா
சல்லாவா சோண சலா. 7

பிறையிட்ட பொற்சடையெம் பெம்மானே நின்று
ணிறையிட்ட வன்பா னினைந்து—முறையிட்டுங்
கேளாது போலிருந்தாற் கெட்டே னினிக்கணமுந்
தாளாது சோண சலா. 8

வேதா கமந்தெரிந்த மேலோ ருடன்கலந்து
மாதாக மான்புனற்காண் மாண்பினுளப்—போதாகச்
சத்துவா னந்த சகசநிட்டை தந்தருளாய்
தத்துவா சோண சலா. 9

மண்ணேறு பல்வகையா மன்பதைக ளத்தனையுங்
கண்ணேறு நீங்கிக் களிப்பதற்கோ—புண்ணேறு
சிந்தனையே யென்னையுமோர் சீவனென விவ்வுலகிற்
றந்தனையே சோண சலா. 10

தண்டா மரையிலைமேற் றண்ணீரா யென்றனுள
மண்டாத் துயரா லலைகின்ற—கண்டாய்
சிலையெழுத்தா வோர்மொழியுஞ் செப்பகிலா யீதென்
றலையெழுத்தா சோண சலா. 11

பேயுடனே நட்டம் பிரியமுடன் செய்பவனீ
சேயுடனே சேராதென் செப்புவா—யாயுலக
மாமகண்டா வேதண்டா வண்டரண்டா வாலமுண்ட
சாமகண்டா சோண சலா. 12

மாயா மலம்புணர்ந்து மாதவமாஞ் சைவநெறித்
தோயாம லம்புவியிற் சோர்கின்றேன்—றூயாகி
வேண்டவா வின்படியே மெய்ஞ்ஞானப் பால்கொடுப்பாய்
தாண்டவா சோண சலா. 13

துன்பக் கடல்வீழ்ந்த தொண்டனேன் றன்னைநீ
யின்பக் கடலாட்ட வெண்ணிலை—லன்பர்
கடுப்பாரோ வைவாரோ கம்மியிவ னென்று
தடுப்பாரோ சோண சலா. 14

தெய்வமுண் டென்றோர்வேளை தெய்வமின்றென் றோர் [வேளை
மைவளருந் துட்ட மனமிருந்தா—லுய்வதெவன்
ஈசனெ னென்றுனூர்ந் தீண்டவா வாண்டானீ
தாசனன் சோண சலா. 15

எத்தனைதான் கற்றென்ன வெத்தனைதான் கேட்டென்ன
வத்தனையு மற்றோர்க் கறைந்தென்ன—சித்தந்
தராசனார்க் கல்லாலுன் றாளுண்டோ மேருச்
சராசனா சோணா சலா. 16

அன்புவளர் தொண்டருள மாலயமா வெப்பொழுதுந்
தென்புவளர் தேவியுடன் சேர்ந்துவளர்—நின்புகழைப்
பாடுவேன் பந்தவினைப் பாசத்தை வேரறவே
சாடுவேன் சோணா சலா. 17

கருநிறத்த காகங் கனகமலை சார்ந்தாற்
றிருநிறத்த வாகுஞ் செயல்போ—லிருநிறத்த
வாகரா நானுனைச்சார்ந் தன்பனா வேன்கருணா
சாகரா சோணா சலா. 18

வன்பா தகஞ்செய்யும் வஞ்சர்தமைச் சேராம
னின்பா தகஞ்ச நினைந்துவா—முன்பா
நிதானந்தா மந்தாகி னிக்குவந்தா யெந்தாய்
சதானந்தா சோணா சலா. 19

மான்செய்த கண்ணியொடும் வாலவடி வேலனொடும்
வான்செய்த காட்சி வழங்கென்றால்—யான்செய்த
கன்மமா வந்துமுகங் காட்டகிலா யீதுனக்குத்
தன்மமா சோணா சலா. 20

வெய்யபிறப் பீனுமுயர் வித்தாகு மாசையென
வுய்யநல்லோர் சொற்றநெறி யோராமன்—மையலிலே
யாழ்கின்றே னின்சீ ரருளெள் ளளவுமின்றித்
தாழ்கின்றேன் சோணா சலா. 21

முற்றா விளஞ்சேய்க்கு மூண்டநோய்க் காமருந்து
பெற்றா ளருந்துகின்ற பெற்றிபோற்—சிற்றம்
பலத்துவந்த மன்பதைக்காப் பாரநடஞ் செய்தித்
தலத்துவந்த சோணா சலா. 22

ஆட்டுகின்ரு யாடுகின்ரு யாடலேயுங் காண்கின்ருய்
கூட்டுகின்ருய் கூடுகின்ருய் கொள்கைபல—நாட்டுகின்ருய்
ஞானமெலா மிவ்வகையே நானறியே னின்னுடைய
சாலமெலாஞ் சோண சலா. 23

என்னைப்போ லேழையிலை யெவ்வெவ் வுலகத்து
நின்னைப்போல் வள்ளலிலை நிச்சயமே—பின்னையே
யென்ருழிலே யாசித்த வில்லையெனு தீவதுநின்
தன்ருழிலே சோண சலா. 24

நறும்பூ வுடன்சேர்ந்த நாருமண மெய்து
மிறும்பூதன் றைய வெளியேன்—பெறும்பே
றதுவேதா னுக வடியருடன் சேர்வேன்
சதுவேதா சோண சலா. 25

பத்தருக்குஞ் சித்தருக்கும் பண்ணவர்க்கும் விண்ண
முத்தருக்கு மற்றவர்க்கு மூவரனுங்-கத்தருக்கு [வர்க்கு
நற்றுரையாய் வாழ்கின்ருய் நாயேற்கு நாயகனுர்
சற்றுரையாய் சோண சலா. 26

வணங்காத் தலையும் வழுத்தாத நாவு
மிணங்கா மனமு மெனக்கே—யணங்கா
மிகுதியா வின்னம் விளம்புவதே னந்தோ
தகுதியா சோண சலா. 27

என்னேநீ ராடப்போ யெண்ணமறந் தொருவன்
பின்னேசே ருடுகின்ற பெற்றிபோற்—கொன்னேவெங்
கன்மத்தைச் செய்து கழிக்கின்றே னல்லநா
சன்மத்தைச் சோண சலா. 28

அண்ண மலையென்று மண்டமெலாம் பெற்றெடுத்த
வுண்ணு முலையென்று முள்ளத்தே—யெண்ணுத
நாளில்லை நாயேற்கு னற்ரு ளலாதடையுந்
தாளில்லை சோண சலா. 29

இலவுதனைக் காத்தே யிருக்குங் கிளிபோற்
குலவுகுடும் பத்தையே கோரி—விலகினேன்
மாதுரியா னந்தசுகம் வாய்க்குமோ வேழைக்குச்
சாதுரியா சோணா சலா. 30

நாட்டைவிட்டுக் காட்டையுற்று நற்கனிதே ரோர்சிறுவன்
வேட்டையிற் றப்புங்கொடிய வேங்கைகண்டு—கோட்டை
யரண்புகுந்தே யுய்ந்ததென யானுய்ய நின்பூஞ்
சரண்புகுந்தேன் சோணா சலா. 31

வானே முதலட்ட மாமூர்த்தி யாய்விளங்குங்
கோனே நினதுபதங் கூடாமல்—யானே
தனித்தேனோ விங்குத் தளரலிதற் கென்றே
சனித்தேனோ சோணா சலா. 32

தேவாரந் தன்னைச் சிரத்தையா நாயடியே
னாவாரப் பாடி நயந்துவிழிக்—கோவாரக்
கன்னிகரு முள்ளங் களித்துருகும் வாழ்வருளாய்
தன்னிகருஞ் சோணா சலா. 33

ஞாயிறுதிங்க ணயனஞ் செவ்வா யுமைமெய்
மேயபுத னின்மெய் வியாழமுறை—வாய
தனியாமோர் வெற்பு தழைவெள்ளி யெற்குச்
சனியாமோ சோணா சலா. 34

பெண்ணாசை யாதியாப் பேசுகின்ற மூவாசை
யெண்ணாசை வையகத்தி லேற்காதோ—அண்ணா
மலையானே கொண்டவர்யார் மற்றாசை தம்மிற்
றலையானே சோணா சலா. 35

ஒருனிரு தாண்முமல மோவுறவே நாற்கரணஞ்
சேர்தரவஞ் சக்கரமுஞ் சிந்தித்தா—ரூர்பொழுது
மேழுவே தத்திசையி னேத்தருளெட் டங்கமுறத்
தாழுவேன் சோணா சலா. 36

காலத்தே சென்றுசிவ கங்கையிலே நீராடிப்
பாலத்தே நீற்றைப் பரிந்தணிந்து—மூலமா
மந்திரமே யோதினே மன்னிவலஞ் செய்வதுய்யுந்
தந்திரமே சோண சலா. 37

நின்னைச் சதமா நினைக்குஞ் சிறியேற்கும்
பின்னை வறுமைப் பிணியுண்டோ-பொன்னைச்
சுதாசிவா வென்றழைக்குந் தோகை புணர்சாம்ப
சதாசிவா சோண சலா. 38

உடல்பொருளோ டாவி யுனக்கே யளித்தேன்
கடலுலகங் காணவென்னைக் காவா—தடலுடனே
யிங்கடத்தை நீபுரிந்தா லேவர்பாற் கூறுவனென்
சங்கடத்தைச் சோண சலா. 39

தன்னிகரில் சோண சயிலனே யென்றன்பாய்ச்
சொன்னிகழ்பா மாலையன்று சூட்டினருக்—கிந்நிலத்தின்
முன்மானனன் றெட்டறிய முண்டகத்தா ளன்றியுண்டோ
சன்மானஞ் சோண சலா. 40

வாக்கின் வருகவென்றால் வாய்நோமோ தாழ்ந்தோனைத்
தூக்கின் மலர்க்கை துவளுமோ—நோக்கின்
வலிக்குமோ நின்கடைக்கண் வள்ளலுக்கு முள்ளஞ்
சலிக்குமோ சோண சலா. 41

நன்னெஞ் சுடனுன்ற னுண்மலர்த் தாள்பூசியே
னென்னெஞ்சு கல்லா யிருப்பதா—லுன்னெஞ்சுங்
கல்லாபார் மேலென்னைக் காவாதென் காரணமோ
சல்லாபா சோண சலா. 42

தஞ்சமென நின்கமலத் தாளடைந்து நானிருக்க
வஞ்சநம னென்பால் வருவானோ—நஞ்சமிக்க
பொங்கரா வேணிப் புனிதமார்க் கண்டனையாள்
சங்கரா சோண சலா. 43

கரங்குவித்து மெய்சிலிர்த்துக் கண்ணீ ருதிர்த்துச்
சிரங்குனித்துத் தெண்டனிட்டுத் தேம்பி—யிரங்குநர்க்கு
வந்திடுவாய் கேட்ட வரந்தருவாய் நாயேற்கென்
றந்திடுவாய் சோண சலா. 44

ஒருவ னொருத்தியுட னோசைபெறக் கூடும்
பருவம் பனித்துளிபோற் பாய்ந்து—கருவுற்
றுருவஞ்சார்ந் துற்பவித்திங் கோடியுழ லாதாள்
சருவஞ்சா சோண சலா. 45

வன்பிறவி நோய்க்கு மருந்தா விருந்தடியார்
துன்பிறவி ழிக்குமினைச் சூழ்ந்தவருக்—கென்பிறசீர்
சிற்பரா வம்பலத்திற் றெய்வநடஞ் செய்தருளுந்
தற்பரா சோண சலா. 46

ஓருரென் றில்லாம லோடெடுத்துப் பிச்சைக்கா
வூருராய்ச் சுற்றியுழல் கின்றாய்—பேரூரி
லேற்றுவா யென்றுன்னை யெப்படியா னம்புவது
சாற்றுவாய் சோண சலா. 47

அன்பார வுன்ற னடிக்கமலம் பூசித்த
லென்பார மென்னை யிரட்சித்த—லுன்பாரங்
காரண தீதா கருண கராமமுமான்
தாரண சோண சலா. 48

பந்தக்கா லென்னப் பருத்த வுடல்சுமப்பே
னந்தக்கா லன்வெகுண்டெ னுவிகொள—வந்தக்கா
லஞ்சலிப்பே னீவந் தருளாயே லென்செய்வேன்
சஞ்சலிப்பேன் சோண சலா. 49

ஒருமணத்தை நீக்கி யுயர்நாவ லூரர்க்
கிருமணத்தைச் செய்தாண்ட தென்னீ—பருமனத்தோர்
மாட்சியோ வென்பாரேல் மங்கையுமை கங்கையிவர்
சாட்சியோ சோண சலா. 50

ஞாதுருமெய்ஞ் ஞான நவிலரிய ஞேயமென
வோதுறுமம் முப்பொருளினுண்மைதனைப்-பேதுறுவேன்
றேர்வேனோ தேர்ந்துன் றிருவாளர் தஞ்சபையிற்
சார்வேனோ சோண சலா. 51

ஞாலமிட லோடருந்து நாரணனே யாதியரிக்
காலமிடர் தீர்த்தெம்மைக் காத்தியென—வோலமிட
நஞ்சமுண்டா யுன்னைவிட நாயேற் குலகிலொரு
தஞ்சமுண்டா சோண சலா. 52

அபய கரமு மருள்சேர் முகமு
முபய பதமு முமையா—ளிபமுகன்சேய்
நண்ணவா மால்விடைமே ஞயேன் சரணுனக்கே
தண்ணவா சோண சலா. 53

அன்பே திரியா வருளேநெய் யாகமிக
நன்பே ரகமகலா நாணளு—முன்பேமெய்ஞ்
ஞானமாந் தீபமிட்டு நண்பொடுவாழ் வாழ்வருள்சீர்த்
தானமாஞ் சோண சலா. 54

மணமென்று கூறியதோர் வாயாலே மற்றும்
பிணமென்று கூறுகின்றார் பின்புங்—குணமென்ற
வெம்மதியே ஞனலு மெய்யினைமெய் யென்றணுவுஞ்
சம்மதியேன் சோண சலா. 55

மாசகன்ற வாதவூர் வள்ளல் வழங்குமணி
வாசகமே மாமறைக்கு மாண்பென்றே—பேசுவே
னங்கையா னீயெழுது மன்பே பெருஞ்சான்றாஞ்
சங்கையா சோண சலா. 56

இரந்தும் பரிந்தே யிடுவென்னு நீதி
கரந்து விடாதிருக்கக் கச்சூர்ப்—பொருந்தி
யுணவா தரித்துநம்பி யுண்ணவளித் தாய்சீர்
தணவாத சோண சலா. 57

பாலையளித் தாய்காழிப் பாலனு ரின்புறவே
சூலையளித் தாயப்பர் துன்புறவே—யேலவிவை
நன்மையோ வாயுண்முறை நாமத்தினுல் விளைந்த
தன்மையோ சோணு சலா. 58

கற்பனையெ லாங்கடந்த காரணு தீதசுக
தற்பரனே நின்ருள் சரண்புகுந்தே—னற்பனெனக்
கொள்ளாதே குற்றங் குறியாதே யன்னியமாத்
தள்ளாதே சோணு சலா. 59

பூசேன் விபூதிதனைப் பூணேன் சிவமணியைப்
பேசேன்பஞ் சாக்கரத்தைப் பேதைமையை—வீசேன்
வலவனே போற்றிரிவேன் வாழ்வேனே வேணிச்
சலவனே சோணு சலா. 60

அளவை கடந்த வருளொளியே நின்பே
ருளவை யணுவு முணரேன்—களவகன்ருேர்
தந்நிதியே மெய்ஞ்ஞானத் தாண்டவா வானந்த
சந்நிதியே சோணு சலா. 61

தொண்டர்களு மாதவருந் தூயசிவ காமியுநல்
லண்டர்களுங் காணமன்று ளாடுகின்ருய்—பண்டிருவர்
காணுமே யென்று கருதுங் கமலப்பூந்
தாணுமே சோணு சலா. 62

ஆணிலே பெண்ணிலே யல்லா வுயிர்களிலே
வீணிலே யென்போல் விழைபவர்யார்—வேணி
வியாளனே பொல்லா வினையேனைக் காப்பாய்
தயாளனே சோணு சலா. 63

தொல்லை வறுமையினுற் சோர்ந்தாலு மென்மேனி
யில்லையெனு லோபிகளை யாசியேன்—றில்லையிலே
வேம்பசிவா னைதக்கழுஞ்சேய் வேண்டும்பா லாழிதந்த
சாம்பசிவா சோணு சலா. 64

கருணைபுரிந் தென்னைநீ காத்தியே லென்னே
யருணை யடைந்ததுண்டோ வன்பாத்—தருணமல
ரிண்டையுண்டோ தொண்டுண்டோ வென்னுண்டென்
சண்டையுண்டோ சோணு சலா. [றன்பர் செய்யுஞ்

திட்டுண்டு வெண்ணெய் திருடியுண்டு மாதராற்
கட்டுண் டடியுண்டான் கண்ணனே—பிட்டுண்டு
வாழ்வெவர்க்கு நல்கவே மாறனடி யுண்டாய்நீ
தாழ்வெவர்க்குச் சோணு சலா. 66

தாயுமில்லை தந்தையில்லை தான்றனிய னுய்நீ
சேயுமில்லை சேய்களுக்குத் தேர்ந்திதனை—யாயுங்கால்
வர்க்கமில்லை முன்பின் மரபில்லைநீ வத்துவெனத்
தர்க்கமில்லை சோணு சலா. 67

நண்ணியவெற் போவெள்ளி நற்சிலையும் பொற்சிலையாம்
புண்ணியமா தேவியன்ன பூரணியே—யுண்மையிவை
நம்புவே னன்றுபத்தூர் நாடியிரந் துண்டகதை
சம்புவே சோணு சலா. 68

விளைவான் மலிந்திடுநெல் வேலியுனக் குண்டவ்
விளையான் குடிமாற னின்பா—முளையதனை
வாரிவருங் காலை மறுக்காயோ மால்விடைமேற்
சாரிவருஞ் சோணு சலா. 69

அண்ணு மலையாணு யப்பநீ தாயுமையு
முண்ணு முலையாளு ளுண்மைசொல—வொண்ணுதா
மிக்கதோ நல்லோர் வியந்து துதிசெய்யத்
தக்கதோ சோணு சலா. 70

சூதாடப் பொய்பேசத் தூயோரை நிந்திக்க
வாதாட வஞ்சிக்க வல்லவன்யான்—வேதாவின்
ருேதகமோ நின்ருடுதிக்கறியே னென்னுடைய
சாதகமோ சோணு சலா. 71

குகைநமசி வாயர் குருநமசி வாயர்
தகையுறுவெண் பாமாலை சாத்திப்—புகழடைந்தா
ரேத்துகின்றே னுள்ளபடி யில்லை யவர்போலச்
சாத்துகின்றேன் சோண சலா. 72

நந்தவனம் புக்கு நறுமா மலரெடுத்துச்
சுந்தரப்பன் மாலை தொடுத்தணிந்தே—யெந்தை
யருணேசா வென்பாரை யாபத்திற் காக்குந்
தருணேசா சோண சலா. 73

முயலகன்மேல் வையா முளரித்தா ளிந்த
மயலகன்மேல் வைத்து மகிழ்வா—யியல்சேர்
பரதமே செய்த பலனுனக்கு முண்டு
சரதமே சோண சலா. 74

பூவடிவம் வெற்பரையன் புத்திரிக்குத் தீண்டரிய
தீவடிவ நின்றனக்கேற் சீர்க்கச்சி—மாவடிக்கீழ்த்
தந்தேகம் வாடாமற் றுன்வளைத்தா ணியிளைத்தாய்
சந்தேகஞ் சோண சலா. 75

நன்மார்க்க நின்மார்க்க நண்ணுஞ் சரியையுறு
முன்மார்க்க மேனு முயலாத—வென்மார்க்கந்
துன்மார்க்க மாதலினாற் சூழ்வதெங்கே மேலான
சன்மார்க்கஞ் சோண சலா. 76

பல்லா யிரந்தரமாப் பாலன் குறையெல்லாஞ்
சொல்லா திருக்கவிலை சொல்லியுமென்—பொல்லாத
புத்தியின்றோ டத்தாற் பொருத்தமின்றோ வாண்டருளச்
சத்தியின்றோ சோண சலா. 77

ஆடரங்கா வன்பர்மன மானந்தக் கூத்துகந்தாய்
கோடரங்கா ணென்றன் கொடியமன—நீடரங்க
மண்டிப்பாய் வேக மடங்கவெங்கு மோடுவதைத்
தண்டிப்பாய் சோண சலா. 78

மழைகுளிர்வெங் காற்றுருமு வல்லிடிதீ வெய்யில்
குழைபசிநோய் கள்ளர் கொடுநோய்—விழைகூற்றுற்
றிங்குவா ராதுவலஞ் செய்வாரை நீயிருந்து
தாங்குவாய் சோணு சலா. 79

பூமாலை கையும் புனன்மாலை நேத்திரமும்
பாமாலை நாவும் பணிந்தணியுந்—தாமே
நெடுமாலைத் தேடவைத்த நீயெனைச்சேர்ப் பாய்கூய்த்
தடுமாலைச் சோணு சலா. 80

முற்காசி மன்னன் முகத்தைக் குரங்காக்கிப்
பிற்கா சிகந்தவருள் பெய்தனையே—யெற்காசி
யப்படியேன் றண்டித் தருள்புரியா யந்தோயான்
றப்படியேன் சோணு சலா. 81

தென்பாகத் தேவியுடன் சேர்ந்துசிறுத் தொண்டரிட்ட
வன்பாங் கறியை யருந்தற்கே—யின்பாய்ப்போய்ச்
சீராளா வென்றழையுஞ் சேயையெனத் தந்தளித்த
தாராளா சோணு சலா. 82

ஆக்குவாய் காப்பாய் யழிப்பாய் மறைப்பாய்பின்
னேக்குவா யாவு நொடிப்போதே—தாக்கு
மிமியேற்கு நேரந்தா னெத்தனையோ கற்பந்
தமியேற்குச் சோணு சலா. 83

தாயிலாச் சேய்போற் றவிக்கின்றே னென்றுரைத்தா
லாயிலா னுனென் றறைவையென—வாயிலா
வூமனே யொத்தியா னென்றுமுரை யேனிதழித்
தாமனே சோணு சலா. 84

அனங்காணு னஞ்சுண்டா னம்மை வினையாற்
பினையுடம்பும் பாதியாய்ப் போனுன்—றினமுந்தா
னேமாந்த மானிடனென் றெள்ளாம லேத்துவதென்
ருமாந்தர் சோணு சலா. 85

சங்கரியத் தங்கொளலாற் சக்கரமான் மன்னுதலால்
வெங்கரி பயந்தவணன் மேவலா—லிங்கிது
நிற்குருவே யென்னுருவ நீமுழுதுங் கொண்டுறைவாய்
சற்குருவே சோண சலா. 86

மோன முடிவே மொழியவரு மானந்த
ஞான வடிவேநின் னலமுழுதுந்—தீன
னியம்புவே னெவ்வா றினியவருள் செய்யாய்
சயம்புவே சோண சலா. 87

முத்தே மணியே முழுவயிரப் பொற்றூணே
சித்தே யெமதுகுல தெய்வமே—சுத்தகுண
மேருவே நற்கருணை மேகமே வந்தடைந்தேன்
குருவே சோண சலா. 88

சோதிக்க லாமா தொழும்பனேன் றன்னைமிக்க
வாதிக்க லாமா மணியரவம்—பாதிக்
கலாமதிகஞ் சேரவைத்த காரணநின் றாட்குச்
சலாமதிகஞ் சோண சலா. 89

அண்டாண்ட கோடி யருளா லளித்தடிமை
கொண்டாண்ட சோதிக் குருமணிநீ—கண்டாய்
சுமுகனே யாகவெனைத் தொண்டுகொள்வா யன்பர்
சமுகனே சோண சலா. 90

திருவல கிட்டுத் திருமெழுக்கு மிட்டு
மருவுதிருக் கோலமிட்டு வாழ்த்திப்—பெருகுதளி
கம்பத்தே கத்துடனே கைகூப்பிச் சூழ்வதுநற்
சம்பத்தே சோண சலா. 91

உருவா யருவா யுருவருவாய் நின்ற
வொருவா வுபதேச மோதக்—குருவாய்
வரவேண்டு முன்றன் மலர்ச்சரணந் தன்பு
தரவேண்டுஞ் சோண சலா. 92

ஆருரு மம்பலமு மானந்த கானமெனும்
பேருருங் கட்டமெனப் பேணுகிலேன்—சீரூர
நித்தியமே நின்னூர் நினைக்கின்றேன் முத்திபெறச்
சத்தியமே சோணு சலா. 93

பாரறியா விண்ணறியா பாதாளந் தானறியா
யாரறிவா ருன்ற னருஞ்சீர்த்தி—யோரணுவும்
யானறியாத் தன்மையதே யெம்பெருமா னின்னமுநீ
தானறியாய் சோணு சலா. 94

கார்த்திகைக்குக் கார்த்திகைநாட் காட்சிபெறக் காட்டுகிற
சீர்த்திவளர் மெய்ஞ்ஞான தீபத்தை—யேத்தி
மதுரநே யத்தமிழால் வாழ்த்தவரந் தாராய்
சதுரனே சோணு சலா. 95

வானே முதலட்ட மாமூர்த்தி யாயமர்ந்தா
யேனே வுலகுய்ய வெண்ணியோ—வானே
றதிபதியே ஞான வருணிதியே சீலச்
சதிபதியே சோணு சலா. 96

சம்புவே யென்றுனது தாணினைக்க வொட்டாம
லைம்புலத்தார் கூடி யலைக்கின்ற—வெம்பிறவி
வெந்தோட நீங்கு விபவமருள் வாய்மிகவுஞ்
சந்தோடஞ் சோணு சலா. 97

சோதனைசெய் யாதே சுயவடிவாய் வந்தென்னை
யாதரிப்பாய் காட்டி லருச்சுனனின்—பாதமலர்
நாடினன் வேடுவனாய் நண்ணினாய் வில்லாலே
சாடினன் சோணு சலா. 98

வெள்ளையா வின்னும் விளம்புவதென் மென்கனிதேர்
கிள்ளைமொழி போலிதனைக் கேட்டருள்க—பிள்ளைநான்
மாதாநீ தொண்டனுன் வண்பதிநீ யேழைநான்
தாதாநீ சோணு சலா. 99

அருணாசலா வென்றே யன்புடனே போற்றி
யிருணாச மெய்த்தீப மிட்டோர்—பெருவாழ்வைச்
சிந்தையே செய்தளவு தேர்ந்துரைக்க வொண்ணாதென்
றந்தையே சோணா சலா. 100

முற்றிற்று.

(வாழி வெண்பா கிடைத்திலது)

---

இந்நூல், ஆசிரியரால், கி. பி. (1886) விய௵ கார்த்திகைமீ அச்சிட்டு வெளியிடப்பட்டது எனக் கொள்ளல் தகும்.

உ

திருச்சிற்றம்பலம்

## குரு வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மஞ்சுமுகந் தறல்பொழியா தொழிவுறுநா
 ளறம்வளர்த்த மாது பாகத்
தஞ்சுமுக வள்ளனமை யஞ்சுமுக மென்றடியா
 ரடையா ரென்னுச்
செஞ்சுமுக மொன்றுடனே யாறுமுக மெனவந்த
 தேசி கன்ரு
ணெஞ்சுமுக மலர்ந்துகரங் குவித்துடலஞ் சிலிர்த்துநித
 நினைந்து வாழ்வாம்.

### திருவண்ணுமலைக்

# கார்த்திகைத் தீப வெண்பா

### காப்பு

வெண்பா

கீர்த்திபெறுஞ் சோண கிரிமுடியின் மீதொளிருங்
கார்த்திகைத் தீபவெண்பா கட்டுரைக்கப்—பூர்த்தியுற
நம்பந்த வாரணத்தி ஞதனரு ளைந்துகரச்
சம்பந்த வாரணத்தின் ருள்.

### நூல்

கங்கை யணிதீபங் கற்பூர தீபமலை
மங்கையொரு பங்கில் வளர்தீபம்—பங்கயன்மால்
விண்பாரு நேடும்வண மேவியவண் ணுமலையிற்
பண்பாருங் கார்த்திகைத்தீ பம். 1

அன்னமளிக் குந்தீப மண்டினரை யாதரித்துப்
பொன்னுமளிக் குந்தீபம் பொற்றீப—மன்னு
மராவணிநேர் காட்டுமெங்க ளண்ணு மலைமேற்
பராவவருங் கார்த்திகைத்தீ பம். 2

மோகாந்த கார முரிந்தோடச் செய்தீப
மேகாந்த மாவந் திடுந்தீப—மாகாந்த
ளாங்கார்ந்த தென்றுரைக்க வண்ணு மலைமுடிமேற்
பாங்கார்ந்த கார்த்திகைத்தீ பம். 3

பந்துமுலைப் பாவையர்க்காம் பாங்காருங் கூடலிலே
வந்து வளையல்விற்ற மாதீபங்—கொந்து
மலர்மலியுஞ் சோண மலைத்தீபம் போற்றிப்
பலர்மலியுங் கார்த்திகைத்தீ பம். 4

இட்டவிதி சாப மிரிந்தோடப் போற்றிசைக்கும்
அட்ட வசுக்கட் கருடீபஞ்—சிட்டர்
வதிதருசீர்ச் சோண மலைத்தீப மெம்முட்
பதிதருசீர்க் கார்த்திகைத்தீ பம். 5

ஆதுலரா னீரென்றே யன்றெருசேய்க் காவழக்கு
மாதுலரா வந்துரைத்த வண்டீபந்—தாதுலரா
நந்தனஞ்செய் சூழுஞ்சோ ணசலத்தி லன்பரன்பிற்
பந்தனஞ்செய் கார்த்திகைத்தீ பம். 6

நீடுகற்பி ளுைடன்வாழ் நீலகண்டர் தம்மிடம்வந்
தோடுகவர்ந் தாண்ட வொருதீப—மாடுமயிற் [சைப்
கொக்கவிசை வண்டினம்பா டோங்கருணை வெற்பின்மி
பக்கமிகுங் கார்த்திகைத்தீ பம். 7

செங்கமல வேதா திலோத்தமையைப் பின்றுரத்த
வங்கவளுக் காவேட ஞந்தீபம்—திங்கடவழ்
சோணமலைத் தீபமிகத் தோத்திரஞ்செய் தென்றுமுயர்
பாணர்மகிழ் கார்த்திகைத்தீ பம். 8

மண்ணிடந்துங் காணு மலரடியின் மாயவனூர்
கண்ணிடந்து சாத்திக் களிதீப—மெண்ணிறந்த
கீர்த்திபெறுஞ் சோண கிரித்தீபந் தென்மதுரைப்
பார்த்திபனுங் கார்த்திகைத்தீ பம். 9

எல்லா வுலகு மிசைய வருச்சுனன்கை
வில்லா லடியுண்ட மெய்த்தீபம்—பொல்லாக்
கலிதீர்க்குந் தீபங் கனவருணைத் தீபம்
பலியேற்குங் கார்த்திகைத்தீ பம். 10

சீரார் சிறுத்தொண்டர் செல்வன் கறியுண்ணப்
பேராசை வைத்த பெருந்தீபங்—காரா
ரருணகிரித் தீபமனத் தல்லும் பகலும்
பருணிதர்தேர் கார்த்திகைத்தீ பம். 11

உள்ளதெனு நல்லோர்கட் குள்ளதா வில்லதெனுங்
கள்ளமனத் தோர்க்கிலதாக் காண்டீபம்—வெள்ளமதி
மேவுசடைத் தீபம் வியன்கொளரு ணாசலத்திற்
பாவுபுகழ்க் கார்த்திகைத்தீ பம். 12

தொண்டர்க்குத் தோன்றுத் துணையான தீபநல்ல
வண்டர்க்கு மெட்டா வருட்டீபம்—வண்டமருந்
தோடுடைய பூம்பொழில்சூழ் சோணமலைத் தீபநன்மேம்
பாடுடைய கார்த்திகைத்தீ பம். 13

வென்றுளே வன்புலனை வீட்டியுணர் கும்பமுனிக்
கன்றுமணக் கோல மருடீபஞ்—சென்றுவியன்
விண்ணளக்குஞ் சோணகிரி மேற்றீப மன்பருக்குப்
பண்ணளிக்குங் கார்த்திகைத்தீ பம். 14

போற்றுமடி யார்க்கருளும் புண்ணியதீ பம்வினையை
மாற்றுமருந் தாகு மணித்தீபஞ்—சாற்றுமறை
யுன்னரிய சோணமலை யோங்கிவள ருந்தீபம்
பன்னரிய கார்த்திகைத்தீ பம். 15

சிற்றம் பலத்திற் றிருநடஞ்செய் தீபமன்பர்
குற்றம் பலகுணமாக் கொள்தீப—மற்றந்
துடைத்தருளுஞ் சோணமலைத் தோன்றியதீ பஞ்சீர்
படைத்தருளுங் கார்த்திகைத்தீ பம். 16

கஞ்சமலர்க் கண்ணயனன் காண்பரிய தீபமெனுள்
வஞ்ச மலமகற்றும் வான்றீப—நஞ்ச
மயிலுமுயர் தீபமெழி லண்ணு மலைமேற்
பயிலுமொரு கார்த்திகைத்தீ பம். 17

அன்பருளத் தேயகலா வானந்த தீபம்பே
ரின்பருளத் தோன்று மெழிற்றீபம்—வன்பருளத்
துற்றறியா தீபம்வள மோங்குமரு ணசலத்திற்
பற்றகலாக் கார்த்திகைத்தீ பம். 18

ஆலால சுந்தரரை யன்று மணந்தடுத்து
மேலா வுவந்தாண்ட மெய்த்தீபம்—பாலாழி
யோர்புதல்வ னுக்கருளி யோங்குமரு ணைத்தீபம்
பார்புகழுங் கார்த்திகைத்தீ பம். 19

வாதவூ ரன்பர் மகிழப் பெருந்துறையிற்
போத மளித்த புகழ்த்தீப—மேத
மகலவருந் தீபமுய ரண்ணு மலையிற்
பகலவனேர் கார்த்திகைத்தீ பம். 20

முத்திக்கு வித்தா முளைத்தெழுந்த தீபமெழிற்
சத்திக் கொருபா றருதீப—மெத்திக்கு
மார்த்துமிக்கு மன்புடனே யண்ணு மலைமீது
பார்த்துவக்குங் கார்த்திகைத்தீ பம். 21

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசைக்கும் தீபம்விந்து
நாதாந்த முங்கடந்த நற்றீபம்—வேதாந்தச்
சித்திதருந் தீபந் திருவருணைத் தீபநல்ல
பத்திதருங் கார்த்திகைத்தீ பம். 22

பாணனுக்கோர் சத்துருவாம் பாடகனைக் கூடலிலே
நாணமுற்றோ டப்பாடு நற்றீபம்—பேணி
யயனுமரி யுங்காணு வண்ணு மலையிற்
பயனுருவாங் கார்த்திகைத்தீ பம். 23

முத்திநெறி காணவென்று முன்னுமன்ப ருக்குமுனம்
பத்திநெறி காட்டிப் படர்தீபம்—சத்திநெறி
யோடுதவஞ் செய்யருணை யோங்கியதீ பம்பெரியோர்
பாடுமெழிற் கார்த்திகைத்தீ பம் 24

சத்தான தீபமுயர் சன்மார்க்க ருள்ளத்தில்
வித்தா முளைத்து மிளிர்தீப—முத்தான
மோங்குங் கரிக ளுலவுமரு ணசலத்திற்
பாங்குபெறுங் கார்த்திகைத்தீ பம். 25

இன்பந் தருதீப மேத்திப் பணிந்தோர்க
டுன்பவிரு ளோட்டுஞ் சுடர்த்தீப—மன்ப
ரவமறுக்குந் தீப மருணைவளர் தீபம்
பவமறுக்குங் கார்த்திகைத்தீ பம். 26

அஞ்ஞானம் போக்கி யருடீப மானந்த
மெய்ஞ்ஞானங் காட்டி மிளிர்தீப—மெஞ்ஞான்றுஞ்
சித்தர்மகிழ் சோணகிரித் தீபம் பணிந்தேத்தும்
பத்தர்மகிழ் கார்த்திகைத்தீ பம். 27

நட்டம் புரிதீப நல்லடியார் தங்கள்கொடுங்
கட்டங் களையே களைதீப—மட்ட
திசைமேவு மெங்க டிருவருணைத் தீபம்
பசைமேவுங் கார்த்திகைத்தீ பம். 28

நாடியடி யார்பரவு ஞானதீ பம்மறைக
ணேடி யறியா நெறித்தீப—நீடுந்
திருவருணைத் தீபந் தினமமரர் போற்றிப்
பருவரல்தீர் கார்த்திகைத்தீ பம். 29

நாலா ரணமு நவிலரிய ஞானமெனு
மேலான போகம் விளைதீப—மாலால
முண்டமரர் தங்களிட ரோட்டருணைத் தீபமன்பாய்ப்
பண்டமருங் கார்த்திகைத்தீ பம். 30

சென்மப் பிணிதீர்க்குந் தீபமடி யார்செய்கொடுங்
கன்மவினை போக்குங் கனதீப—மன்மதனை
யங்கமிலா தாக்கியரு ளண்ணா மலைத்தீபம்
பங்கமிலாக் கார்த்திகைத்தீ பம். 31

மாமறைக்கு மெட்டா மணித்தீப மேழைகட்குச்
சேமமளித் துக்காக்குஞ் சீர்த்தீபம்—தாமரையு
நத்துமொளிர் வண்சுனைச்சோ ணாசலதீ பந்திசைகள்
பத்துமொளிர் கார்த்திகைத்தீ பம். 32

கற்றைச் சடைமுனிவர் காண்டீப மாரூரிற்
புற்றையிடங் கொண்டுறையும் பொற்றீப—மொற்றைத்
தவளவனத் தந்தனைமுன் றந்த வருணைப்
பவளவனக் கார்த்திகைத்தீ பம். 33

மன்னு மிளசைநகர் மாறன் முளைவாரி
யன்னமிடச் சேவை யருடீபம்—வன்னச்
சிகரநெடுங் கோபுரஞ்சேர் தென்னருணைத் தீபம்
பகரமிகுங் கார்த்திகைத்தீ பம். 34

நாவுக்கு வேந்து நமச்சிவா யப்பதிகப்
பாவுக்குக் கன்மிதக்கப் பண்டீபம்—வாவிக்
கயன்மேய்க் கமுகுடைக்குங் காமருணைக்கோன்
பயன்மேவுங் கார்த்திகைத்தீ பம். 35

சிந்தைக் கலக்கந் தெளிவிக்குந் தீபந்தாய்
தந்தைக் கிணையாகச் சார்தீபம்—விந்தை
மதினிலவுக் காரு வளரு மருணைப்
பதிநிலவுங் கார்த்திகைத்தீ பம். 36

மன்னுயிர்கட் கோருயிரா வந்தருளுந் தீபமறை
யுன்னுதற்கு மெட்டாத வோர்தீபம்—பொன்னுலகைக்
கீழாக்குஞ் சோண கிரித்தீபம் வெவ்வினையைப்
பாழாக்குங் கார்த்திகைத்தீ பம். 37

மூவருக்கு மாதி முதலான தீபமுயர்
தேவருக்குங் காண்பரிய சீர்த்தீப—மேவருவி
யாலிக்குஞ் சோணமலை யார்ந்தசெழுந் தீபமின்பம்
பாலிக்குங் கார்த்திகைத்தீ பம். 38

கந்தனையு ஞானமதக் காரானை மாமுகத்தோர்
தந்தனையுஞ் சேயாத் தருதீப—மெந்தமைக்க
ணோக்கியருள் சோணமலை நோன்றீப மன்பருக்குப்
பாக்கியமாங் கார்த்திகைத்தீ பம். 39

வேலனைநேர் மார்க்கண்டர் மேவுசிவ பூசைக்காக்
காலனையு தைத்த கனதீபம்--கோல
விதுமகிழுஞ் சோணகிரி வேணுவின் மேற்சூடும்
பதுமநிகர் கார்த்திகைத்தீ பம். 40

தக்கனுக்கு மேடத் தலையளித்த தீபமென்று
நக்கனெனப் பேர்படைத்த நற்றீப—மிக்க
விருப்பதனுற் சார்ந்தார் வினைதீர்க்குஞ் சோணப்
பருப்பதஞ்சேர் கார்த்திகைத்தீ பம். 41

கற்றலுடன் கேட்டுணர்ந்து காதலுடன் சிந்தித்தோர்க்
குற்ற துணையா வுறுதீபஞ்—சொற்றகதிக்
கேணிநிகர் சோணகிரி யேர்முடிமே லஞ்சலெனும்
பாணிநிகர் கார்த்திகைத்தீ பம். 42

பண்ணுடனே தேவாரம் பாடுமூ வர்க்கிமவான்
பெண்ணுடனே தோன்றும் பெருந்தீபம்—விண்ணுடனே
சேரமலை வான்புவிக்காச் செல்வதுபோ லோங்கருணைப்
பாரமலைக் கார்த்திகைத்தீ பம். 43

தந்தைதிருத் தாடடிந்த சண்டே சுரருக்குச்
சிந்தைமகிழ் தீபஞ் செழுந்தீப—முந்தை
யொருமுடிவி லாம லுயரருண வெற்பின்
பருமுடியிற் கார்த்திகைத்தீ பம். 44

பஞ்சாக் கரத்தைமிகு பத்தியுட னுன்னுநர்க்கு
விஞ்சாக்க மாக மிளிர்தீப—மஞ்சார்க்கச்
சிங்கமுழை விட்டகலாத் தென்னருணை வெற்புறுமோர்
பங்கதழ்வாங் கார்த்திகைத்தீ பம். 45

பந்தவினைப் பாசத்திற் பட்டுழலும் பாதகனேன்
மந்த மதிநீக்கும் வண்டீபஞ்—சந்ததமுங்
கொக்குமிசை நற்குயில்கள் கூவருணைத் தீபமுயர்
பக்குவர்காண் கார்த்திகைத்தீ பம். 46

ஏதம் பெரிதுடையே னேத்துந்தீ பஞ்சாம
வேதம் பெரிதும் விழைதீபங்—கேதம்
புலிக்குங்கோ வுக்குமிலாப் பொன்னருணை வெற்பிற்
பலிக்குஞ்சீர்க் கார்த்திகைத்தீ பம். 47

வன்னிமதி சென்னிமிசை வைத்தருளுந் தீபமறை
பன்னி மதிக்கப் படாத்தீபங்—கன்னிமதில்
சூரியற்கு மேலுயருஞ் சோணமலை மீதுவளர்
பாரியநற் கார்த்திகைத்தீ பம். 48

ஆர்த்துவந்தி டுங்கொடுங்க யாசுரனை யன்றுருநா
ளீர்த்துரித்துப் போர்த்த வெழிற்றீபம்—பார்த்துரைக்க
வொண்ணுத சோணகிரி யோங்கியதீ பங்கோபம்
பண்ணுத கார்த்திகைத்தீ பம். 49

பொய்வசமாம் வன்சமணம் போயழிய மூவர்களாற்
சைவ சமயந் தருதீபந்—தெய்வ
முனிவர்நித்த முண்மகிழ்ந்து மொய்யருணை சார்ந்தார்
பனியகற்றுங் கார்த்திகைத்தீ பம். 50

பாரருந்தி னேன்றுதித்தல் பண்டைபம் வாவிகரை
நீரருந்தி யேறக் கிளர்தீப—நீரருந்திச்
சீவனஞ்செய் மாதவர்வாழ் தென்னருணைத் தீபமெம்மைப்
பாவனஞ்செய் கார்த்திகைத்தீ பம். 51

தாருவன மாதவர்க டாம்விடுத்த வேங்கைதனை
கூருகிரி னுலுரித்துக் கொஃடைப—மேருமுத
லோங்குமலை யெட்டினுமிக் கோங்குமரு ணசலத்திற்
பாங்குமலி கார்த்திகைத்தீ பம். 52

நன்றுபுரி பொன்னனையா ளண்ணுதிருப் பூவணத்திற்
சென்றிரச வாதமது செய்தீபங்—கன்றுகளுக்
கம்பிடிகை யாலருத்தி யாடுசுனைச் சோணமலைப்
பம்பிவளர் கார்த்திகைத்தீ பம். 53

மாயப் பசுவமணர் மாமதுரைக் கேவவதை
வீயச் சமர்செய் விடைத்தீப—நேயமா
நீராட் டுவனேர்கார் நீள்சோண வெற்பிலன்பர்
பாராட்டுங் கார்த்திகைத்தீ பம். 54

போதனந்த ரத்தவரும் போற்றுந்தீ பங்கொடியேன்
கோதனந்த மும்பொறுத்துக் கொஃடைப—நாதனண்டர்
தாங்கனிகர் பண்டுபலாத் தாங்கிவளர் சோணமலைப்
பாங்கமருங் கார்த்திகைத்தீ பம். 55

பொன்புரையுஞ் செம்மேனிப் புண்ணியதீ பஞ்சிறிய
வென்புரைமுற் றுந்தீர்த் திடுந்தீப—மன்புரைகொண்
டேத்தியமாத் தொண்டர்களுக் கென்றுமரு ணசலத்திற்
பாத்தியமாங் கார்த்திகைத்தீ பம். 56

பாவிகளும் வந்தேத்திப் பார்த்துப் பணிவாரேன்
மேவிவினை தீர்த்தருளு மெய்த்தீபம்—தேவிமுலைத் [பர்
தீட்டுதொய்யி னேர்மயில்சேர் தென்னருணை வெற்பிலன்
பாட்டுவக்குங் கார்த்திகைத்தீ பம். 57

சோமனைக்கா ருண்ணியமாச் சூடுந் தீ பங்கொடிய
வேமனைக்கால் கொண்டோச் செழிற்றீபந்—தாமரைக
ணெற்றிவளர் கண்போல நீளுமரு ணசலத்திற்
பற்றிவளர் கார்த்திகைத்தீ பம். 58

கோளுங் கொலையுங் குடிகெடுப்பு மாணவமு
நீளுமவர்க் கெட்டாது நீடீப—நாளுந்
திடமிக்குஞ் சோணமலைச் சென்னிவளர் நாகப்
படமொக்குங் கார்த்திகைத்தீ பம். 59

தில்லையம்ப லத்திற் றிருநடனஞ் செய்தீப
மொல்லையினி லின்பமுத வுந்தீப—மெல்லை
யிலாண்டுதவஞ் செய்தவரா லேரருணை வெற்பிற்
பலாண்டுபெறுங் கார்த்திகைத்தீ பம். 60

ஆணிப்பொன் மேருவில்லா வம்பரியாச் சேடனையே
நாணியெனக் கொண்டூர் நகைதீபம்—வேணி
விழுதிலா ரத்தவர்கண் மேவருணை வெற்பிற்
பழுதிலாக் கார்த்திகைத்தீ பம். 61

மின்னுர் மணியரவம் வெண்மதியு நேசிக்கப்
பொன்னுர் சடைமேற் புனைதீப—நன்னுரி
பூரிக்குங் கும்பமுலை போலோங்குஞ் சோணமலைப்
பாரிக்குங் கார்த்திகைத்தீ பம். 62

பன்னருஞ்சம் பந்தருக்குப் பந்தருநற் பல்லக்குஞ்
சின்னமுமுத் தாலளித்த சீர்த்தீபஞ்—செந்நெற்
கழனிபுடை சூழருணைக் காமர்மலை மீது
பழநிமலைக் கார்த்திகைத்தீ பம். 63

பாகத் துமையும் படர்சடைமேற் சானவியு
மோகத் துடன்வாழ் முதிர்தீப—மேகத்
துழனிமிக்கார் சோணமலைத் தூமுடிமேன் ஞானப்
பழநிகர்க்குங் கார்த்திகைத்தீ பம். 64

பொல்லா மலவிருட்டைப் போக்குந்தீ பம்புவன
மெல்லாந்தா ஞகு மெழிற்றீபம்—வல்லாளன்
மைந்தனென வந்த மகிமையரு ணசலத்திற்
பந்தமிகுங் கார்த்திகைத்தீ பம். 65

எங்கெங்கே யன்பரிருந் தெவ்வா றுவேண்டுகினு
மங்கங்கே யவ்வா றருடீபஞ்—சிங்கங்கேட்
டஞ்சமுகட் டார்ந்துமுகி லார்க்குமரு ணசலத்திற்
பஞ்சமுகக் கார்த்திகைத்தீ பம். 66

எட்டுமிரண் டுந்தெரியா வேழையே மென்பாருட்
கட்டுப்பட் டோங்குங் கனதீப—மட்டிலா
மேன்மைதரு சோணகிரி மேவும் பிறைக்கொழுந்தின்
பான்மைதரு கார்த்திகைத்தீ பம். 67

கங்கைதனை யேவியெழிற் கம்பா நதியிலுமை
கொங்கை வளைத்தழும்பு கொஃடீபஞ்—சங்கையிலாப்
புங்கவர்சேர் சோணகிரிப் பொற்சடையாற் றிற்பூத்த
பங்கயநேர் கார்த்திகைத்தீ பம். 68

செம்மையடி யார்பூசை செய்துவந்த காரைக்கா
லம்மைக்கா லங்காட் டருடீபம்—வெம்மை
யரிகரிக்கு மில்லா வருணையடைந் தார்நோய்
பரிகரிக்குங் கார்த்திகைத்தீ பம். 69

காணரிய மெய்ஞ்ஞானக் காட்சியரு டீபமன்பர்
வேணவரந் தந்தருளு மெய்த்தீபஞ்—சோண
கிரிமுடிக்கண் மேவியொளி கேழ்புவன முற்றும்
பரிமளிக்குங் கார்த்திகைத்தீ பம். 70

பாண்டுமகன் வில்லாற் பரிந்தடிக்கப் பாசுபத
மாண்டுமையோ டெய்தி யருடீப—நீண்டு
விசும்புருவு சோணகிரி வெந்தழ லினிட்ட
பசும்பொனிகர் கார்த்திகைத்தீ பம் 71

பன்னற் கரியசெழும் பச்சைப் பவளமென
வன்ன மிரண்டா வளர்தீபந்—தென்னருணை
வெற்பரெனும் வெந்தழலின் வெந்திட்ட வெண்கட்டிப்
பற்பநிகர் கார்த்திகைத்தீ பம். 72

மான்மேற் புலிபோல் வருமிடரெல் லாம்போக்கி
யான்மே லிவர்ந்தெனைவந் தாடீப—மேன்மை
யணிகொளரு ணசலமா மம்புயமே லுற்ற
பணிலநிகர் கார்த்திகைத்தீ பம். 73

தேடரிய தீபஞ் சிதம்பரத்தி லாடெடுத்து
நாடறியப் பேர்படைத்த நற்றீப—நீடக்
கசியார்க் குவக்காக் கனவருணை சார்ந்தார்
பசிதீர்க்குங் கார்த்திகைத்தீ பம். 74

சாகையுடன் சாத்திரமுஞ் சாற்றரிய பல்கலையு
மாகமபு ராணமுத லாந்தீபந்—தேகப்
பிணியகல வந்தெவரும் பேசிமகிழ்ந் தேத்திப்
பணியருணைக் கார்த்திகைத்தீ பம். 75

துப்பற்ற வென்னையுமோர் தொண்டாகக் கொஃடீபந்
தப்பற்ற சேவை தருதீப—மொப்பற்ற
வட்டாங்க யோகிகள்வாழ் வார்ந்தவரு ணசலத்திற்
பட்டாங்காங் கார்த்திகைத்தீ பம். 76

தூர்த்தவடி வாய்வந்து சோரா வியற்பகையார்
சீர்த்தவில்லா ளைக்கொண்டு செஃறீபந்—தீர்த்த
நலனருகுஞ் சோணமலை நாடுநர்க்குக் கிட்டும்
பலனருகுங் கார்த்திகைத்தீ பம். 77

கொக்கிறகும் வெள்ளெருக்குங் கோணகை லாமதியு
மக்கு மணியு மணிதீப—மிக்க
வரிசையுற்ற சோணகிரி வாழ்த்துநர்க்கு வேண்டும்
பரிசளிக்குங் கார்த்திகைத்தீ பம். 78

இக்கடன்ஞா லத்தி லிறப்புப் பிறப்பென்னுந்
துக்கமுறு வேற்கருளுந் தூத்தீப—மிக்க
திருமணிசேர் சோணமலைச் செம்மலரின் முத்தின்
பருமணிநேர் கார்த்திகைத்தீ பம். 79

மான்மீ னிகர்த்தவிழி மாதாரர் மையலுற்ற
நான்மீளக் கண்பார்க்கு நற்றீபம்—வான்மீ
னுதிர்ந்ததென வேய்முத் தொளிர்சோண வெற்பிற்
பதிந்ததிருக் கார்த்திகைத்தீ பம். 80

தீங்கினில்வீ ழாதடியார் சீராரு முத்தியெனும்
பாங்கினிலே செல்லப் பகர்தீப—மூங்கின்மதி
சத்திரமேந் துங்காம்பாத் தானேங்குஞ் சோணவெற்பிற்
பத்திரமாங் கார்த்திகைத்தீ பம். 81

பந்தத் தொடக்கைப் பரிகரிக்குந் தீபநிதம்
வந்தடியே னுள்ளம் வதிதீப—மிந்தத்
தரணிபணி சோணு சலமுடியி, னல்ல
பரணிவரு கார்த்திகைத்தீ பம். 82

கானகவே டன்றணலிற் காய்ச்சியெடுத் துண்டீந்த
ஊனகம கிழ்ந்தினிதென் றுண்டீப—மான
சராசரமும் போற்றுந் தனியருணை வெற்பிற்
பராபரமாங் கார்த்திகைத்தீ பம். 83

காசிமன்னன் றன்னைக் கவியாக்கிப் பின்பவன்சீர்
மாசிலுரு வந்தந்த வண்டீபங்—காசினிமி
ஞற்றுதவம் போலாங் கருணைவள ரன்பர்வினை
பாற்றுமெழிற் கார்த்திகைத்தீ பம். 84

கல்லா லடியிற் கரங்காட்டி நால்வருக்குஞ்
சொல்லா துணர்த்துஞ் சுபதீபங்—கொல்லா
விரதமொடு தென்னருணை மேவினருள் ளத்திற்
பரதமிடுங் கார்த்திகைத்தீ பம். 85

மெச்சிநக ராசமகள் வேண்டுநல்ல கம்பனெனக்
கச்சிநகர் வாழுங் கனதீபம்—கொச்சையெயின்
மாமகளிர் வண்டன் மகிழருணை தன்னிலன்பர்
பாமருவுங் கார்த்திகைத்தீ பம். 86

ஆனஞ்சா டுந்தீப மன்பர் பிறப்பிறப்பா
மூனஞ்சா டுந்தீப மொண்டீபம்—வானஞ்
செவித்திரவெல் லும்போற்றிச் சேரருணை வெற்பிற்
பவித்திரமாங் கார்த்திகைத்தீ பம். 87

கேட்ட வரமெல்லாங் கேடுபடா மற்கொடுத்தே
நாட்டமுட னுண்டருளு நற்றீபம்—வாட்டமிலாப்
புள்ளிசேர் மான்கள் பொலியருணை கண்டுகடற்
பள்ளிதாழ் கார்த்திகைத்தீ பம். 88

மானுய கண்ணியுடன் மால்விடைமேல் வேய்ங்குழல்கேட்
டானுயர் முன்வந் தருடீபம்—வானுர்
தருவதினி னுஞ்சிறந்த தாருவளர் சோணப்
பருவதம்வாழ் கார்த்திகைத்தீ பம். 89

ஏறி வருந்தீப மேத்துமவர் வல்வினையை
நூறி வருந்தீப நோன்றீபஞ்—சிறிவரு
மஞ்சிபமா வுற்றரிகாண் மாவருணை வெற்பினிலின்
பஞ்சிறந்த கார்த்திகைத்தீ பம். 90

பாம்பணி யுந்தீபம் பத்திநெறி சேரடியார்
தாம்பணியுந் தீபந் தனித்தீப—மாம்பல்
விகசிக்கும் வாவி மிளிரருணை வாழ்கற்
பகமொக்குங் கார்த்திகைத்தீ பம். 91

நன்களிக்குந் தீப நவிலருமுண் ணுமுலையா
மின்களிக்குந் தீபம் விழைதீபம்—வன்களிறு
தண்ணருவி யாடத் தனிப்பிடிதேர் சோணவெற்பிற்
பண்ணவர்சேர் கார்த்திகைத்தீ பம். 92

மங்களஞ்சேர் தீபமொரு மாசடையா மாசடையிற்
றிங்களஞ்சேர் தீபந் திருத்தீபம்—வெங்களஞ்சேர்
மாலுமிரு வர்க்கரிதா மன்னருணை வெற்பிடைவிண்
பாலுயருங் கார்த்திகைத்தீ பம். 93

பாதார விந்தம் பரவுந் தொழும்பருக்கோ
ராதார மாகி யருடீபம்—போதாருங்
கொங்கிலங்குஞ் சோலை குலவருணை வெற்பினுமென்
பங்கினும்வாழ் கார்த்திகைத்தீ பம். 94

சங்கரிக்கோர் பங்குந் தகையுடனே மற்றையொரு
பங்கரிக்கு மாகப் பகிர்தீபம்—வெங்கரித்தோல்
போர்த்ததென மங்குல் பொலியருணை வெற்பிலன்பர்
பார்த்தருள்சேர் கார்த்திகைத்தீ பம். 95

ஆணிப்பொன் னம்பலத்தி லாடுந்தீ பம்பொல்லா
மாணிக்க தீபமகி மைத்தீபம்—வேணிக்க
ணீராருந் தீபமெழி னீடுமரு ணசலத்திற்
பாராருங் கார்த்திகைத்தீ பம். 96

அந்தவச்சி ராங்கதனை யச்சுவத்தின் கீழ்வருத்திப்
பிந்தவவ னேத்தவருள் பெய்தீபம்—வந்தார்க்
குதவிசெய்வோ மென்றருணை யுற்றடியார் வேண்டும்
பதவிதருங் கார்த்திகைத்தீ பம். 97

பண்டுபுள காசுரனைப் பாவந் தவிர்த்தாண்டு
கொண்டுவகை கூர்ந்த குணதீபந்—தொண்டு
கரவிலா மற்செய்வார் காணருணை வெற்பிற்
பரவிவாழ் கார்த்திகைத்தீ பம். 98

சிந்தா மணிகாம தேனு பதுமநிதி
யுந்தாழ்ந் தவர்க்கருள்செ யுந்தீப—நந்தா
வியப்புள்ள சோணமலை மேற்றீப நல்ல
பயப்புள்ள கார்த்திகைத்தீ பம் 99

புத்திதருந் தீபநல்ல புத்திரசம் பத்துமுதல்
சித்திதருந் தீபஞ் சிவதீபஞ்—சத்திக்
குயிராகுஞ் சோணமலை யோங்கிவளர் ஞானப்
பயிராகுங் கார்த்திகைத்தீ பம். 100

வாழி

வான்வாழி மண்வாழி மன்னவனும் வாழியுய
ரான்வாழி மெய்ம்மையடி யார்வாழி—மேன்மேலுஞ்
சோபனவண் ணாமலையுந் தூயதிருக் கார்த்திகைநற்
றீபமும் வாழி சிறந்து.

முற்றிற்று.

—

உ

திருச்சிற்றம்பலம்

# அருணகிரிநாதர் ஆசிரிய விருத்தம்

## காப்பு

### வெண்பா

கருணைபுரி காட்சியெனக் கான்யாறு காட்டு
மருணகிரி நாதன்மே லன்பா—யுரைதமிழ்க்குக்
கோபுரக்க ணேசன்ருள் கோபுரக்க ணேசன்ருள்
கோபுரக்க ணேசன்ருள் கூறு.

நீர்கொண்ட வேணிதளி ராகிலவு பிஞ்சதா
நிறைமுகங் கண்கண் மலரா
நீங்காத கருணைசெந் தேனு வணிந்தவெண்
ணீறுகமழ் மகரந்தமா
வேர்கொண்ட நகையரும் பாவிதழொர் கனியா
விசைந்தமிட றமர்கொண்டலா
விலகுசெவி யிற்குழை யிரண்டுசுட ராமுநூ
லேய்ந்திடு சிலந்திநூலாப்
பேர்கொண்ட தோள்கைகிளை யாவரை பராரையாப்
பேசரிய பாதமடியாப்
பெருகுநிழல் போகமா வடியர்வண் டாவுமை
பிறங்குகொடி யாப்பெருமநீ
சீர்கொண்ட கற்பதரு வாவெண்ணி நண்ணினேன்
றென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 1

அரகர மகாதேவ வானந்த நடராச
வகிலநா யகதாயக
வமலகுஞ் சிதபாத கமலபுங் கவவேத
வாகம விஞேதகீத
புரகர மஞேகர தயாகர பராபர
புராதன புராணஞான
போகயோ கவிவேக விடபவா கனநாக
பூடண கலாசேகர
விரகர சித்ரசல நிவாசசித் துவிலாச
விபவவர தாபயாத்த
விசிதவிம யாசல குமாரிகல் யாணசய
விசயசிவ மூர்த்தியென்று
சிரகரமொ டஞ்சலித் தேத்தவருள் புரிகுவாய்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 2

கரும்பே நறுஞ்சாறு பாகுவெல் லஞ்சருக்
கரைகண்டு மானவாபோற்
கடவுணீ யேசதா சிவனெடு மகேசன்
கதித்தருத் திரன்மாலய
னரும்பேர்கொள் கத்தரா யாக்கலு மளித்தலு
மழித்தலு மறைத்தலும்பின்
னன்பா வநுக்கிரக மதுபுரித லுந்தொழில்க
ளைந்தையு நடாத்துகின்ருய்
வரும்பேத மில்லாது மன்னுயிர்த் தொகையெலாம்
வாழாத மாயமென்னே
மருளும்வினை யென்னின து நீக்கமுடி யாதோ
வழக்கிடவொர் மகனில்லையோ

திரும்பே னேனுநீ யிருப்பதுந் தன்மமோ
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவரு முனறியாத
திருவருண கிரிநாதனே. 3

பாம்பழக நின்னையே யோம்பழம் பொருளென்று
பார்த்துவலம் வந்தமூத்த
பாலனுக் கொருமாம் பழங்கொடுத் துலகெலாம்
பரிவின்வலம் வந்தசேய்க்கோர்
மாம்பழ மிலாதநீ வாய்ந்தகா ரைக்காலின்
வருபுனித வதியெனம்மை
மகிழவிரு மாம்பழ மளித்ததென் மாயமோ
மக்கண்மேல் வைத்தவன்பிற்
றேம்பழ குருத்தொண்டர் மேலன்பு பெரிதென்று
தொல்லுலக மறியவன்றே
தூயமுப் பழமதினு மினியநி னருட்பழஞ்
சுவைதொண்டர் தொண்டருளுவாய்
தேம்பழச் சாற்றிஞற் பூம்பழனம் விளைகின்ற
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 4

பாலடிசி லுப்பிலாக் கூழ்பசும் பொன்னேடு
பகலிரவு மொக்கநோக்கும்
பரஞான விழியுடைய சனகாதி நால்வரும்
பணிசெயக் களிகூர்ந்துகல்
லாலடியி லரசடிக ளெனவந்து கைகாட்டி
யருளுநின தடிகள்போற்று
மடியார்க ளடிபரவு பெருவாழ்வு தருகவிவ்
வடியனேன் விண்ணப்பமே

காலடியி னணிசெருப் புதையொர்கண் ணப்பனற்
கைப்பிரம் படிமாறனற்
கல்லினடி புத்தனல் வில்லினடி பார்த்தனற்
களிகொளடி முடிவில்பொருளே
சேலடிக ணடிதீண்டு செவிமாதர் பரதமிடு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 5

கண்ணார நோக்கியா னந்தநீர் வாரக்
கனிந்துமன மாரவெண்ணிக்
காலார வலம்வந்து தலையால் வணங்கியிரு
கையார வஞ்சலித்துப்
பண்ணார நாவார மூவர்தே வாரம்
பராயணித் தன்பாரநற்
பஞ்சாக் கரஞ்செபித் துணர்வார விழைகின்ற
பரமசுக நிட்டையருள்வாய்
விண்ணார வருகின்ற தேவர்களு மறியாத
மேலான வாரமிர்தமே
வேதங்க ளாரவா ரித்தின்ன முந்தேடி
வேசார நின்றவெளியே
தெண்ணார தாதிமுனி வோர்கள்பா டிப்பரவு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 6

அம்மையப் பாவென் றடைந்தவெனை மகவென்
றணைத்திடற் கைநோகுமோ
வரியகுரு வேயெனுமெ னைச்சிட வென்றோர்மொழி
யருளினல் வாய்நோகுமோ

வெம்மைதீர் தேவென் றிணங்குமெனை யாளா
விழித்திடிற் கண்ணேருமோ
விருப்பொடு வெறுப்புமில் லாதநீ யாயினும்
விரும்பியெனை யாதரிப்பா
யிம்மையே பன்றியின் குட்டிகட் கன்னையா
யினியமுலை தந்தவெந்தா
யியல்கரிக் குருவிக்கு முபதேச குருவே
யிழிந்தமா பாதகனையுஞ்
செம்மையாக் கருணைபுரி தேவாதி தேவனே
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 7

பேதையேன் படுகின்ற சங்கடமி வுலகினிற்
பெரியபா ரதமாமிதைப்
பேசிட வியாசற்கு முடிவுரு தெழுதவோ
பிள்ளையார்க் குங்கைநோகு
மேதையே கூறுவது தந்தத் தெழுத்தாணி
யின்கூரு மேமழுங்கு
மேடாய மேருவும் பற்றுரு விடமென்னி
லேழையே னென்செய்குவேன்
வாதையே படவென்று மலரயன் வகுத்ததோ
மாற்றவொரு வழியில்லையோ
மனமார யான்செய்த கன்மமோ பின்னையொரு
வன்மமோ தன்மமோகாண்
தீதையே போக்கவரு ஞானசஞ் சீவியே
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 8

ஆடுடைய சேவடிக் கன்புடைய சீகாழி
யாளுடைய பிள்ளையார்முன்
பருளுடைய வம்மையார் தருஞான வமுதமுண்
டாயிரம் பேருளாய்ந்தே
தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண்மதி
சூடிபொடி பூசியுள்ளங்
தொடர்வுறக் கவர்கள்வ னென்றுமுத லோதுசீர்த்
தூக்கையா னேதவசமோ
பாடுடைய வடியர்முறை கேட்டுவந் தாதரவு
பண்ணிவினை நீருக்கியெம்
பசுகரண மதுகொண்டு பதிகரண நல்குநின்
பரிசுதெரி வித்ததன்றே
தேடுடைய நன்மருந் தாயெதி ரடைந்திடுந்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 9

நூலமென் மேற்பொறி யெனச்சொல்லு முன்னப்பர்
தோண்மலையி லேபொறித்தாய்
சூலைநோய் தந்துநீ யாண்டசொந் தத்தினவர்
சொல்லரசு சென்றதெந்தா
யோலமென் றெத்தனை விதங்கூவி னேன்சற்
றுவந்துநீ கேட்டதுண்டோ
வுன்றனக் கென்றனு லாவதென் வீணாக
வுனைவெறுத் திடலாகுமோ
வாலமென் வித்திலோ ராயிரக் கூற்றிலொன்
றுமளவை நின்கடைக்க
ணருள்கிடைத் தாலெளிய னடைகின்ற செல்வத்தை
யமரர்களு மறிவார்கொலோ

சீலமெய்ஞ் ஞானியர்க ளெக்காலு மேத்திடுந்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 10

உலகமெனு மடுவினின் மாயையெனு முதலைவா
யுணர்வென்னு மென்னுடையசே
யுற்றுளதை நின்கருணை யென்னுமா ரூசரா
லுடனே யழைத்துதவினாற்
கலகமில் லாதியான் பேரின்ப வீட்டிற்
களிப்புடன் வாழ்ந்திருப்பேன்
கைம்மாறு வேண்டாத கடவுணீ யல்லையோ
கவலைதீர்த் தாண்டுகொள்வாய்
விலகலில் லாதபே ரொளிவீசு வயிரமே
விலையிலா மாணிக்கமே
மேலான பவளமே மாற்றிலாச் செம்பொனே
மிளிர்வலம் புரிமுத்தமே
திலகமென மண்மகட் கிலகவரு நன்மைதரு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 11

வெருவாச வனமேவு நரியெலாங் கொக்காக்கி
மீனவ னடுங்கவீந்து
மெய்யன்ப ராம்வாத வூரருக் கருள்செய்து
வேதத்தி னுஞ்சிறந்த
திருவாச கம்பாடு வித்ததைச் செங்கையாற்
றீட்டிவைத் திட்டபெரியோய்
சிறியனேன் றலையெழுத் தைக்காலி னாலுஞ்
சிதைத்திடவு மெண்ணுவாயோ

கருவாச பவநாச ஞானோப தேசனே
கயிலாச கிரிவாசனே
கருணு விலாசனே சிவகாமி நேசனே
கனகசபை நடராசனே
தெருவாச மலர்மாலை மணிமாலை தோரணத்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 12

ஓங்கருணை யாக்கைய னேநீயு நானுமே
யோங்கருணை யாக்கையனே
யொளியிமய மாதரைய னேநீயு நானுமே
யொளியிமய மாதரையனே
தாங்கவரு மாலேற்ற னேநீயு நானுமே
தாங்கவரு மாலேற்றனே
சந்தனத் தாரணிய னேநீயு நானுமே
சந்தனத் தாரணியனே
தேங்கமல மாமடிய னேநீயு நானுமே
தேங்கமல மாமடியனே
சித்தத் திருக்கும ரனேநீயு நானுமே
சித்தத் திருக்குமரனே
தீங்கரும் பகலச்செய் தீங்கரும் பகலச்செய்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவுமரிவேத னிருவரு முனறியாத
திருவருணகிரிநாதனே. 13

வலமே புரிந்திலே னின்கோயி லுலகின்மிக
வலமே புரிந்துதிரிவேன்
வந்தடியர் தேர்ந்துகொண் டாடிமகிழ் கின்றசை
வந்தடிய னேனறிகிலே

ணலர்மாலை யன்பொடு தொடுத்தணி கிலேன்பிறர்சொ
லலர்மாலை யுடையகொடியே
னஞ்சலி செயேனுனக் கறிஞரஞ் சிடுதீமை
யஞ்சலில் லாதபேதை
குலமுற்ற வாதரித் திடுவினை யெனுமலா
குலமுற்ற கொடியமூடன்
குஞ்சித பதத்தன்பு வருவதெவ் வணமெனக்
குஞ்சிதம் பரவாணனே
திலமமர விடமிலாத் திருவாளர் வளர்கின்ற
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 14

பத்திப் பழம்பழுத் திட்டகற் பகமனையர்
பாற்புக லிலாதுவேப்பம்
பழநாடு காக்கையென வெட்டிப் பழம்போன்ற
பாதகர்கள் பாற்சென் றுகா
லத்திப் பழம்போ லளிந்தபுண் ணுய்நெஞ்ச
மானையுண் விளம்பழமதா
யவர்கள்வாய் வாழைப் பழங்கைகரு னைக்கிழங்
காதல்கண் டுனையடைந்தேன்
முத்திப் பழந்தனையொர் மும்மலப் பழவினை
முடிந்தவர்க் குதவுமுதலே
முன்னைப் பழம்பொருட் கும்பழம் பொருளான
மூர்த்தியே ஞானகுருவே
சித்திப் பழம்வேட்ட செல்வர்யோ கம்பழகு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 15

செக்கோசை போலவே குரலோசை கம்முறச்
சிறுபுத் தகங்களெல்லாந்
தேடிப் படித்துவல் லவராயி னேமென்று
சீரோசை யற்றமூடர்
மிக்கோசை யுற்றவே தாகமத் தோசையின்
விதியறிந் தோதிவல்ல
மேலோர்கண் மேல்விழுந் திடியோசை போல்வாது
விள்வரவ ருறவாகுமோ
வக்கோசை வத்திர மறிந்தவர்கள் கடலோசை
யணையவர கரவோசைமெய்
யன்பரை யழைத்தன் மிடுமோசை முழவோசை
யார்க்கும்வெண் சங்கோசையெண்
டிக்கோசை யுறவோங்கு தேவார வோசைசூழ்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு ணறியாத
திருவருண கிரிநாதனே. 16

வெங்கரா வைப்போல நீரினு ளிருக்கினும்
விளம்பரிய கதியெய்துமோ
வேங்கையைப் போலவே குகையினுட் டங்கினும்
மேலான மோக்கமுறுமோ
பொங்கரா வைப்போன்று நித்தலுங் காற்றைப்
புசிக்கினும் பேறணுகுமோ
பொருகாட்டு ளாடுபோற் றழையெலாந் தின்றே
பொருந்திடினு முத்தியுண்டோ
சங்கரா வென்றுசிவ நீராடி யாலயஞ்
சார்ந்துகற் பூரவாசந்
தனைமருவி நின்பதத் தளிர்நோக்கின் வருமுத்தி
சகலசித் தியும்வாய்க்குமே

சிங்கரா சனையனைய செழுமன்னர் புகழ்கின்ற
 தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
 திருவருண கிரிநாதனே. 17

நாய்வேண்டு நிலையிலா விவ்வுடலை நரிவேண்டு
 நலமிலாக் கழுகுவேண்டு
நாடுமொரு கண்ணுடைய கொடியகாக் கையும்வேண்டு
 நடமாடி யிடுகாட்டுளார்
பேய்வேண்டு மெரிவேண்டு முயிரைநமன் வேண்டுமிப்
 பெற்றியறி யாதுநல்ல
பெண்வேண்டு மண்வேண்டும் வேண்டும்பொ னென்று
 பிச்சுலகி லிச்சைவைத்தேன் [நான்
காய்வேண்டு மோநறுங் கனிவேண்டு மோவெனக்
 காய்வேண்டு மெனுமூடன்யான்
கதிவேண் டுருதவ னெனுவெனைக் கைவிடேல்
 காத்தருளல் வேண்டும்வேண்டுஞ்
சேய்வேண்டு முன்னரே தாய்வேண்டி யுணவருள்வள்
 தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
 திருவருண கிரிநாதனே. 18

ஆலத்தை யமிர்தாக்கி யுண்டுகண் டத்தினி
 லடக்கியோ ரடையாளமா
வாயிரம் பேருளுந் திருநீல கண்டனென
 வருமைநா மந்தரித்தே
ஞாலத்தை வானத்தை மற்றையுல கத்தையு
 நடுங்கா தளித்தநீயே
நாயினேன் கொண்டவஞ் ஞானத்தை நீக்கிமெய்ஞ்
 ஞானத்தை யருளவரிதோ

கோலத்தை மறவாது நினையடியர் நன்மனக்
  கோயிலமர் கின்றபதியே
 கோடாத சிவயோக ருண்ணவரு ளமுதுசொரி
  குறையாத சாந்தமதியே
சீலத்தை யாவர்க்கு மீதென்று காட்டிடுந்
  தென்னருணை வாழ்தெய்வமே
 திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
  திருவருண கிரிநாதனே. 19

எத்திக்கு மன்னையில் லாதவ னெனுநினை
  யியம்புபழி யொழிவதற்கோ
 வெரிவிட நுகர்ந்தவாய் தித்திக்க வினியபிட்
  டின்பொடு புசிப்பதற்கோ
நத்திக் குழைத்தவுமை யறியாது வையையா
  நங்கையைச் சேர்வதற்கோ
 நல்வாத வூரடிக ளழுதடி யடைந்தசெய
  லுடெலா மறிவதற்கோ
பத்திக்கு முதலாய வந்திக்கொ ராளாய்ப்
  படர்ந்துநீ மண்சுமந்தாய்
 பாண்டிய னடித்தவடி யெவ்வுயிரு மேபடப்
  பங்கிட்ட தென்னமாயஞ்
சித்திக்கு முயிர்களுக் குயிரான மூர்த்தியே
  தென்னருணை வாழ்தெய்வமே
 திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
  திருவருண கிரிநாதனே. 20

பெருநா டவஞ்செய்து பெற்றநா ளினுமன்னை
  பெரிதுமகிழ் நாளெந்தநாள்
 பிள்ளையைச் சான்றோ னெனக்கேட்ட நாளென்பர்
  பேயனேன் பிறவிதோறும்

ஒருநா ளெலாமெனைச் சான்றோ னெனக்கேட்டு
மகிழ்தா யொருத்தியுமிராள்
வாணாளை வீணா ளெனக்கழித் தேன்மேலை
வருநாளை யென்னுரைப்பேன்
மருநாண் மலர்க்குழலி யாருடன் சேருநாண்
மாடுபோ லேதூங்குநாள்
வயிறது வளர்க்குநாள் பாவஞ்செய் நாளன்றி
மற்றுநன் னாளுமுண்டோ
திருநா ளிலாதநா ளொருநாளு மில்லாத
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 21

ஆணிப்பொ னம்பலத் தாடியே காளியோ
டாடியே யழலாடியே
யல்கையோ டாடியே சுடலையூ டாடியே
யானிடத் தஞ்சாடியே
பாணிப் பொலிந்தபல் பதிகமும் பாடியே
பலியேற்கு மறைபாடியே
பனியறுகு சூடியே பிள்ளைமதி சூடியே
பதிநீ யெனுநேடியே
கோணிப் பிறங்குமா ணவவனஞ் சாடியே
குலவடிய ரொடுகூடியே
குஞ்சிதத் தாளடி யேமகிழ வெனையாண்டு
கோடிசா ணங்கோடியே
சேணிற் பரந்தசுரர் தேடியே தொழுகின்ற
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவரு முனறியாத
திருவருண கிரிநாதனே. 22

சீவகா ருணியமா சாரநன் னடையன்பு
சீலம்வழு வாதவிர தஞ்
சினமின்மை சத்தியஞ் சாந்தநற் றுனமெய்ச்
சிவசா தனங்கண்முதலா
வாவலாக் கைக்கொண்டு காமாதி துற்குண
மனைத்தையும் விடுத்துள்ளமோ
ரணுவளவு மசையாம லஞ்செழுத் துன்னிநின்
னடிதொழுஞ் செல்வமருள்வாய்
நாவலர் பிரான்விட வரும்பரவை யாரிட
நடந்தருளு மோர்தூதனே
நாதாந்த மீதனே வேதாந்த போதனே
ஞானவடி வாம்பாதனே
தேவரும் பண்ணவரு மண்ணவரு மெண்ணவரு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 23

அன்னையுண் ணுமுலையு மாலயனு மிந்திரனு
மக்கினியு நமனிருதியு
மார்ந்தவரு ணன்வாயு நிதிவளர் குபேரனு
மமர்ந்தோங்கு மீசானனும்
தன்னைநிகர் கவுதமனு மிரவியுஞ் சனகனுந்
தவமுடைய மார்க்கண்டனுஞ்
சாற்றவரு வச்சிராங் கதமாற னும்பெரிய
தகைமைபெறு துருவாசனும்
பின்னையு மனந்தமுனி வரர்தேவர் நரர்களும்
பிரதிட்டை செய்திலிங்கம்
பெட்பினொடு பூசித்து நேசித்து வரமெலாம்
பெற்றபே றென்சொல்லுகேன்

றென்னைகமு கெழில்வாழை கழைசெந்நெல் மிக்குவிளை
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 24

காசினி புகழ்ந்திடுங் கமலையி லுதித்திடக்
கனகசபை கண்டுபோற்றக்
காசியி லிறந்திட வருங்கதிநி னருணையைக்
கருதவரு மென்பதென்னே
பேசினிய வுயிரெலா மெளிதினிற் சொலவரிய
பேரின்ப மெய்தவென்றும்
பெருமநீ செய்தவிவ் வுபகார மதனுக்கொர்
பிறிதுமுப காரமுண்டோ
மாசினிம லானந்த சித்தாந்த சேகரா
வரதஞா னதிவாகரா
மகிழுமென் னன்னையுண் ணாமுலை மனோகரா
வளருந் தயாசாகரா
தேசினி லுயர்ந்தசிவ சங்கரா வரகரா
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவுமரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 25

ஓங்குசிவ கங்கையுண் ணீராடி யஞ்செழுத்
துச்சரித் தொண்பொடியணிந்
தொருமனதொ டிருகரங் கூப்பிநின் றிருவடியை
யுணர்வார வெண்ணியெண்ணிப்
பாங்குமற் றென்றுநோக் காதுநின் மலையையே
பார்த்துரோ மஞ்சிலிர்ப்பப்
பத்துமதி கருவுற்ற மாதென நடந்துமெய்ப்
பரிவின்வலம் வந்தபெரியோர்

தாங்குகயி லாயமலை யடையுநாள் வழியெலாந்
தார்பரப் புவனிந்திரன்
சந்திரன் குடையெடுப் பானிரவி தீபந்
தலைத்தாங்கு வான்பொன்மகள்
தேங்குங்கு மம்பூவு மீவளவர் செல்வர்காண்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 26

அகந்தையுள தக்கன்மக ளென்பதை யகன்றுவரை
யரையன்மக ளாய்க்கயிலையி
லையனை மணமுற்று விழிபொத்தி யதனு
லருங்காஞ்சி மாக்கம்பையார்ந்
துகந்துமண லாலிலிங் கம்பதிட் டித்தேத்தி
யோங்குநின் மாதலத்தி
லுயர்கவுத மாச்சிரம நண்ணிமகி டாசுரனை
யொளிர்துற்கை யாற்றொலைத்துச்
சகந்தழைத் திடமெய்த் தவஞ்செய்தொரு பாகந்
தனைத்தருக வென்றெமதுநற்
றுயுணு முலைகேட்ப வருளியிரு வீருமமர்
தரிசனந் தந்தாளுவாய்
திகந்தமள வும்பரி மளங்குலவு சோலைசூழ்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 27

தவபூசை செய்வோர்க ளறிவும்ய மாகித்
தழைத்தொளிர் மணித்தீபமே
சத்தான தீபமே சித்தான தீபமே
தத்துவ முடித்தீபமே

பவபூசை யணையவர்க் கெட்டாத தீபமே
பாடலுக் கருள்தீபமே
பத்தர்க ளுளத்தினிடை நித்தமிடு தீபமே
பரசுகந் தருதீபமே
யவபூசை நீக்கியொளிர் கார்த்திகைத் தீபமே
யருணசலத் துளோங்கி
யருண்ஞான தீபமே யென்றுசக லரும்வாழ்த்த
வருளுநினை நினைவரந்தா
சிவபூசை குருபூசை யடியர்பூ சையுமல்கு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 28

நன்னிலமு நீர்வளமு மிக்கசெந் நெல்விளைவு
நாடுநக ரும்பொன்மனையு
நண்புபெறு மனைவியுஞ் சுகுணமுள மைந்தரு
நயந்தருங் கல்விமணமும்
மன்னிவ ரிலக்குமி கடாட்சமுந் தன்மமும்
வாய்மையு மனத்தூய்மையும்
வச்சிரத் தேகமு நிறைந்தவா ணுளுநோய்
வாராத பெரியவாழ்வு
நின்னிகரி லாதபொற் பாதங்கண் மறவாத
நேயமுந் தந்திம்மையி
னெறியுற்ற வம்மையின் முத்தியு மகிழ்ச்சியா
நினதுதொண் டர்க்கருளுவாய்
சென்னிமே லஞ்சலித் தபயமிடு மென்னையாள்
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 29

திங்களணி சடைவாழி கருணைபொழி முகம்வாழி
திரிநேத் திரங்கள்வாழி
தீட்டரிய வேதம் பழுத்தசெவ் வாய்வாழி
திகழ்குழைச் செவிகள்வாழி
யங்களம் வாழியெண் டோள்வாழி மழுமா
னணிந்தசெங் கைகள்வாழி
யார்ந்தகொங் கைச்சுவ டிலங்குமார் பகம்வாழி
யழகுபொன் மேனிவாழி
மங்களஞ் சேரடிகள் வாழியுண் ணாமுலை
மகாதேவி வாழிமைந்தர்
வாழியடி யார்வாழி சைவா கமம்வாழி
வள்ளனீ வாழிவாழி
செங்களப சந்தன வசந்தவுற் சவமோங்கு
தென்னருணை வாழ்தெய்வமே
திருமருவு மரிவேத னிருவருமு னறியாத
திருவருண கிரிநாதனே. 30

வாழி

வேறு

வானுலகு மண்ணுலகு பசுவேள்வி மழையுயிர்கள்
வாழி யெங்க
டேனமரும் பொழிலண்ணா மலையுண்ணா முலைஞான
தீபம் வாழி
யானைமுகன் வாழிகச்சி யருட்குமர கோட்டமுத
லணிகொ ளெல்லாத்
தானமும்வா ழருணைவள ராறுமுகக் குருவாழி
தமிழும் வாழி.

அருணகிரிநாதர் ஆசிரிய விருத்தம்
முற்றிற்று.

---

இந்நூல், ஆசிரியரால், ஏவிளம்பி௵ (கி. பி. 1897) அச்சிட்டு வெளியிடப்பட்டது. வெளியிட உதவியவர், காஞ்சிபுரம் ஆடை வாணிகர், ஐயங்கார்குளம் கேசவ முதலியார் மகனார் பொன்னுச்சாமி முதலியார்.